श्री कामाक्ष्यै नमः

मूककविविरचिता

# मूकपञ्चशती

तमिलनुवादयुता

மூககவி இயற்றிய

# மூகபஞ்சசதீ

தமிழ் உரை :
வைத்ய S. V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ
ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர் :
ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேச்வர டிரஸ்ட்
214, டி.டி. கே. சாலை, சென்னை - 600 018

சித்ரபானு - ஐப்பசி -2002

**SRI MOOKA PANCHASATI OF MOOKAKAVI**



1st Edition 1997

2nd Edition 2002

3rd Edition 2003

4th Edition 2006

Price Rs. **100/-**

***COPIES AVAILABLE AT :***

***Sri Vigneshwara Venkateswara Trust***
218, T.T.K. Road, Chennai - 600 018.
Phone : 2499 2155, 2499 2156.

***Dr. S.V. Radhakrishna Sastrigal,***
22, Veereswaram Approach Road,
Srirangam,
Trichy - 620 006.
Ph : 0431 - 2432564.

***Dr. S.V. Radhakrishna Sastrigal,***
315/3-C, III Floor,
Lloyds Complex,
Chennai - 600 014.
Ph : 28130198.

***C. Sitaraman & Co.***
Law Book Sellers & Distributors
73/37, Royapettah High Road, Chennai - 600 014.
Ph : 28111516, 28117069, 28112900.

---

Printed & Bound by : **Jai Ganesh Offset Printers,**
19, Venkataswamy Lane, Santhome,
Chennai - 600 004. Ph : 24934535



SRI KANCHI KAMAKSHI AMMAN

श्रीगुरुभ्यो नमः

श्रीकामाक्ष्यै नमः

மூக கவி இயற்றிய

# மூகபஞ்சஶதீ

## அறிமுகம்

**ஸ்ரீ காமாக்ஷீ தேவி-உலகின் மூலகாரணம்:-** தேவி உலகின் மூலகாரணம். இவளது இச்சையால் உலகம் தோன்றுகிறது. இவளிடமிருந்து, இவளையே ஆதாரமாகக் கொண்டு, இவள் மீது உலகம் தோன்றுகிறது. இவளது தாங்கும் சக்தியால் வாழ்கிறது. இவளது ஒடுக்கும் சக்தியால் மூலப்பொருளாகப் பிரிந்து இவளிடம் மறைகிறது. உண்மையில் இந்தப் படைப்பு ரக்ஷணம் லயம் என்ற மூன்று நிலைகளுக்கும் இவள் நேரிடைச் செயலாளரல்ல. இவள் முன்னிலையில் இவள் ஸாக்ஷியாயிருக்க அம்மூன்றும் நடைெறுகின்றன.

ஸாக்ஷியாக இருப்பதென்பது நடைபெறுகிற செயல்களில் இவள் நேரிடையாகப் பங்கு கொள்ளாதிருத்தலும், அதே சமயம் இவளது அருகாமையின்றி எதுவும் நடைபெறுமையால், செயலின் ஒவ்வொரு நுண்ணியபகுதியிலும் இவளது ஸாக்ஷி நோக்கு இன்றியமையாதிருப்பதும் தான் .

இவளின்றி வேறு ஒரு பொருளுமில்லாதிருந்த பின், படைப்பு தொடங்குகிறது. படைப்பு தொடங்குமுன் இவளிடமிருந்து சிவன் சக்தி என்று இரு தத்துவங்கள் வெளிப்பட்டன. பரம் பொருள் நிலையில், செயலற்றிருந்த இவளிடம், உலகத்தைப்படைப்பது முதலான இச்சையும் ஸங்கல்பமும் யத்தினமும் தனித்தில்லை. காரணமின்றி அவள் உலகமாக விரும்பினாள்.

உலகமென்பது இதற்குமுன் வெளிவராதிருந்து புதிதாக ஒருகாலவரையில் வெளிவந்ததல்ல. இதற்குமுன்னரும் எண்ணற்ற தடவைகளில் தோன்றி வாழ்ந்து இவளிடம் மறைந்து

மூலநிலை பெற்று அதனையும் இழந்து தேவியாக ஆனது தான். பணிபுரியத் தேவையில்லாதிருப்பவனும் விளையாட்டாக ஏதேனும் செய்வதுண்டு.அது போல் தன்னுள் தானாக வேறு பாடின்றி லயித்திருந்த உலகை மீண்டும் வெளிப்படுத்த அவளுக்கு விருப்பம் தோன்றிற்று. கரு உற்ற பெண்ணிற்கு மசக்கை தோன்றுவது போல் இது காறும் விருப்பமென்று ஒன்றைக் கொள்ளாத தேவிக்கு **பலவாக ஆவேன்-அவ்வாறு தோன்றுவேன்** என்ற விருப்பம் தோன்றிற்று. **''तस्यान्तर्मनसि कामः समपद्यत । इदं सृजेयमिति । स ऐक्षत । बहु स्यां प्रजायेयेति ।** என்று அந்நிலையை உபநிடதம் விளக்கும்.

**தேவி-உலகம்-தொடர்பு**-உலகமாகத் தோன்று முன் தேவியின் நிலைகள் மூன்றாகும். 1.**பேரிருக்கை -பரமஸத்தா** - தோற்றமும் மறைவும் வளர்ச்சியும் தேய்வும் பெறாத முக்காலும் நிலைத்த பூர்ண நிலை .பூர்ணஸத்தா: 2. **பேருணர்வு அல்லது பேரறிவு**. ஒரு தனித்த பொருளை அறியும் போதும் உணரும் போதும் அந்தப் பொருளளவிற்கு அறிவு குறுகுகிறது. பார்க்கும் பொருளளவிற்கேற்பப் பார்வை குவிவது போல் இந்தக் குறுகல் அமையும். விரிவதும் அப்படியே. இந்தக் குறுகலும் விரிவும் பார்க்கும் பொருளுக்கேற்ப அமைவதால் சிற்றறிவும் சிற்றுணர்வுமாகிறது. அறிந்த பொருளுக்கேற்ப பார்வையறிவு, கேட்டலறிவு என்று வகைப்படுகிறது. அறியவேண்டிய பொருளோ அறிய விருப்பமோ தேவையோ இல்லாதபோதும் அறிவு-உணர்வு தனித்துள்ளது. அப்போது அது பிற புற உணர்விற்கு உட்படுவதில்லை.அது ஒவ்வொரு ஜீவனிடம் உள்ள பேரறிவு-பேருணர்வு. இதனை பிரஜ்ஞானம் என்பர். பல கோடி ஜீவர்களும் மற்றதும் அடங்கிய உலகிற்கு அப்பாற்பட்டு அதன் மூலகாரணமாயுள்ள தேவியிடம் உள்ள அறிவு அளவீட்டிற்கப்பாற்பட்ட பேருணர்வு.இதனைச் **சித்** அல்லது **சித் சக்தி** என்பர். இது எதனாலும் நிறைவும் குறைவும் பெறாதது.3.**ஆனந்தம்-எல்லையற்ற சுகம்**: இது சிறந்த நிறையுணர்வு.

இம்மூன்றுமாயிருந்த பூர்ணநிலையில் தேவியின் படைப்பு முதலியவற்றிற்கான ஸங்கல்பம் தோன்றியது.அசைவற்றிருந்த

நிலையில் அசைவு தோன்றிற்று. அசைவே உலகமாயிற்று. பரம் பொருளின் சக்தி (ஆற்றல்) வெளிப்பட்டது. இச்சாசக்தி ஜ்ஞானசக்தி கிரியா சக்தி என விரிந்தது. சக்தியால் ஏற்பட்ட அசைவில் அசைகிற பொருள், அதன் அசைவு என்று இரு நிலைகள் வெளிப்பட்டன. தோன்றிய பொருள், அசைவின் ஏற்றத்தாழ்வையொட்டி சரம் அசரம் என்று (சேதனம் அசேதனம் என்று) பிரிந்தது. அசைவு இரு வகையானது. உணர்வுடன் உள்ள அசைவு, உணர்வற்ற அசைவு என. முழுவதும் உணர்வற்றது உலகில் எதுவுமில்லை. வெளிப்படையாக உணர்வைக்காட்டுவது சேதனம். இதில் சித் சக்தி நன்கு பிரதிபலிக்கிறது. அப்படி வெளியுணர்வைக் காட்டாதது அசேதனம். அறிவும் ஆற்றலும் இயக்கமும் தன்னியல்பாகக் கொண்டது-சரம். இது சேதனமாகும். இவற்றை வெளிப்படையாகக் கொள்ளாதது அசரம்-அசேதனம் எனலாம். **சித் சக்தி: சேதநாரூபா ஜடமக்திர் ஜடாத்மிகா** *(லலிதாஸஹஸ்ர)*.

இந்தச் சராசர நிலை ஒரே அளவில் எக்காலமும் நிலைத்திருப்பதில்லை. சர உலகம் தன் இயல்பான அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி நன்கு இயங்கித் தானே நேர்கிற துக்கத்தைத் தவிர்க்கிறது. சுகத்தை நாடிப்பெறுகிறது. சுகத்தைப்பெறவும் துக்கத்தைத் தவிர்க்கவும், சரமானது தனக்கு உபகரணமாக உடலும், கண் முதலியபொறிகள் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என உணர்வைத்தரப்படுத்துகிற உள்ளமும் கொண்டது. அதனுல் பெறுகிற வாய்ப்பால் சுகதுக்க உணர்வைப் பெறுகிறது. அசரத்திற்கு இந்த உபகரணங்களில்லாமையால் சுகதுக்க உணர்வுஅமைவதில்லை. ஆனுல் அதிலும் அசைவு எனும் சக்தி உள்ளிருப்பதால் தன் தன் தன்மையால் பலவகையாக வேறுபடுகிற ஆற்றல் அதனிடமுண்டு. (**ஜடசக்தி:**)

சரமும் அசரமும் அதனுள் பாய்கிற சக்தி அலையின் இயல்பால் எண்ணற்ற வகையில் வேறுபடுகின்றன. அந்த சக்தியை உள்வாங்கிப்பயன்படுத்துகிற உடல்உள்ளம் என்ற கருவிகளின் ஏற்றத்தாழ்வும், சூழ்நிலையும், வாய்ப்பும், ஆற்றல் வெளிப்படுகிற வகையும் வேறுபாட்டிற்குக் காரணமாகின்றன. சூரியனின் ஒளி ஒன்றேயாயினும் அதனைப்பிரதிபலிக்கிற

கண்ணுடியின் தரம், நிலை முதலிய மாறுபாட்டால் பிரதிபலிப்பும் வேறுபடுகிறதல்லவா?

ஒவ்வொரு ஜீவனிடமும் பாய்கிற சக்தி ஒன்றே. முன்வினை தான் ஒவ்வொரு ஜீவனையும் தனித்தனி இருக்கைக்கு ஆட்படுத்துகிறது. ஈச்வராம்சமான சக்தி பெற்றிருந்தும் நிலைமாற்றத்தை ஏற்படுத்துவதில் முன்வினையும் பங்கேற்கிறது.

**துதிப்பவனும் துதிக்கப்பெறுபவளும்**- உடல் உள்ளம் முதலியவை ஜீவனுக்குக் தகுதிக்கேற்பக் கிடைத்த உபகரணங்கள். ஜீவன்ஆத்மா தான். ஆத்மா எந்தக்கட்டிற்கும் உட்படாதவன். எனினும் பல பிறவிகளில் தான் பெற்றிருந்த உபகரணங்களையும் அதனுட்பாய்ந்திருந்த சித்சக்தியையும் முறையற்றுப் பயன்படுத்தியதால் ஆத்மாவாயிருந்தும் கட்டுக்குட்பட்டு சுகதுக்கங்களை மாறி மாறிச்சுவைக்க நேரிட்டது. இந்தசுவைப்பு தன் இயல்பல்ல என்று குருவருளும், தெய்வ அருளும் உணர்த்துகின்றன. இந்தக் கட்டிலிருந்து விடுபட உதவுமாறு, ஆதிபௌதிக நிலையிலும் ஆத்யாத்மிகநிலையிலும் தெய்வத் தொடர்புஇருந்ததை, இருப்பதை, இருக்கப்போவதை உணர்கிறான். அந்தத் தெய்வத் தொடர்பைப் பெறும் வழி பற்றிக் குருவிடமிருந்து தெரிந்து கொள்கிறான்.

அந்தத் தெய்வம் தேவியாகக் காட்சித்தருகிறது. கண்டம் கண்டமாகத் தெரிகிற இந்த உலகமும் தானும் அந்த அகண்டப்பொருளின் துளிகளே. இந்த உலகம் அவளது லீலையின் வெளிப்பாடே. அவள் துக்கக்கலப்பற்ற ஆனந்தமும் எல்லையற்ற பேரறிவும் அழிவற்ற பேரிருக்கையும் தடையற்ற பேராற்றலும் ஒருங்கே இணைந்த வடிவம். தேய்வும் மறைவும் மாறுபாடுமற்ற பூர்ணவடிவம்.

காணமுடியாததையும் கேட்கமுடியாததையும் கூட உணர முடிகிறது. வெளிச்சத்தைக்காணமுடியாது. வெளிச்சத்தால் துலங்குவதைக் கொண்டு வெளிச்சம் இத்தகையது என உணர்கிறோம். நெருப்பு புலப்படாதது. எரிகிறபொருளைக் தான் நாம் காண்கிறோம். விறகு திரி போன்றவை எரிவதனைக் கண்டு எரிக்கின்ற நெருப்பை உணர முடிகிறது. எரிகின்ற பொருள்

எரிந்ததும் அதுமறைவதனையொட்டி நெருப்பும் மறைகிறது. நெருப்பு பற்றிய பொருள் எரியத் தொடங்கியதும் நெருப்பு தெரிகிறது. இப்படி கண்களால் காண முடியாததையும் உள்ளறிவு உணர்கிறது.

எரிகிற பொருளை உணர்வது கண். அவ்வுணர்வு பார்வை. எரிவது சிவந்திருப்பதால் அதனைக் (ரூபத்தைக்) கண் காண்கிறது. நெருப்பின் சூட்டை உணர்வது தோல். சூடு கண்ணிற்குப் புலப்படாதது. ரூபமும் சூடும் இந்திரிய ஜ்ஞானம். ரூபமும் சூடும் கொண்டுள்ளது நெருப்பு தான் என்று உள்ளம் கண்டபின் ஏற்படுகிற உணர்வும், இது ஏற்புடையது, தவிர்க்கத்தக்கதென்றவாறு மதிப்பீடும், அதன் விளைவான ஏற்கவும் தவிர்க்கவும் தூண்டுதலும் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என உள்ளத்தில் அமைந்த பதிவீடுகளின் விளைவு. அந்தப் பதிவீட்டில் ரூபமோ சூடோ தனித்தில்லை. இது **விஜ்ஞானம்**. வெளியேயிருந்து உள்ளே வருவதையும் உள்ளே வந்ததற்கேற்ப வெளியே நடக்க வேண்டிய செயல்பாட்டிற்கான தூண்டுதலையும் முனைவையும் தருவது பிறந்தபோதே ஜீவனுடன் தோன்றிய அவித்யை என்ற ஆவரணம் பெற்ற பிரஜ்ஞானம். முந்தையவினை முதல் இந்த க்ஷணத்து வினை வரை இந்த பிரஜ்ஞானத்தை மறைக்கின்ற ஆவரணமாகின்றன. இந்த ஆவரணம் பிரஜ்ஞானத்தை அழிக்காது, மாற்றாது. ஆனால் தவறான தூண்டுதலைத் தந்து தவறான வெளிச்செயல் புரிய வாய்ப்பளிக்கும்.

இந்த பிரஜ்ஞானமே எங்கும் நீக்கமற நிரம்பியுள்ள சித் சக்தியின் ஓரம்சம். இதன் ஒளிக்கதிர்களே சேதனா (உள்ளுணர்வு) புத்தி (அறிவு) தூக்கம், பசி, நிழல், ஆற்றல், பொறுமை, இனவேறுபாடு, வெட்கம், அமைதி, ஆர்வம், மேனிஒளி, செழிப்பு, நடைமுறை, நினைவு, பரிவு, மன நிறைவு, தன்னுள் அடக்குதல், நீக்கமற நிரம்புதல், புலனுணர்வு, உள்ளறிவு, கல்வியறிவு, அனுபவ அறிவு, சுய அறிவு என்று பல்வேறாக வெளிப்படுகின்றன.

கண்டம் கண்டமாகப் பிரிந்து உணர்த்துகிற சித் சக்தி இந்த ஜீவனளவில் இவனிடம் ஒருங்கிணைந்த பிரஜ்ஞான சித்

சக்தியாக விளங்குகிறாள். உலகெங்கும் பரவியும் உலகின் ஒவ்வொரு நிலையை ஸாக்ஷியாகக் கண்காணித்தும் தாயாகப் பரிவுடன் தோற்றம் வாழ்வு மறைவு என்ற நிலைகளில் துணைநின்றும் உதவுபவளும் இந்த பூர்ணசித் சக்தியே.

காரணப்பொருள் காரியமாக உருவாகும் போது காரணமான மூலப்பொருள் உலகியல்பின் படி தன் அளவில் குறையும். 100 கிராம் அளவுள்ள மூலப்பொருளான தங்கம் 10கிராம் அளவுள்ள மோதிரமாக மாறியதும் இரண்டும் வெவ்வேறு பொருளாவதும் மூலப்பொருள் 90கிராம் அளவுள்ளதாகக் குறைவதும் காணப்படுகிறது.தேவியான சித் சக்தி மூலப்பொருள் நிலையிலும் அளவிட முடியாதவள். உலகமாக வெவ்வேறு பொருளாக மாறிய பின்னரும் அளவீட்டிற்குஉட்படாத பூர்ணநிலை. மாறுபாட்டிற்கும் நிறை குறைகளுக்கும் ஆட்படாதவள்.

ஒன்றை விட்டு மற்றொன்று அகன்றால் தான் வேறுபாடு தோன்றும். ஆகாசத்தைவிட்டு எதுவும் அகலாததால் ஆகாயம் வெவ்வேறாகாதது; மாறாதது. அதைப்போல், அவளின்றி ஓரணுவும் தனித்தில்லை. வேறுபாடும் மாறுபாடும் இடம்பெறாதநிலைஇது.

எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவள் அவள்.இங்கு இவ்வண்ணம் இப்போது இருப்பாள் என்ற வரையறையற்றவள். உலகின் உள்ளும் புறமும் ஒவ்வொரு அணுவின் உள்ளும் புறமும் இருப்பவள். அததாகவும் இருப்பவள். அதனால் நிறைவே- பூர்ணமே அவள் இயல்பு.

உலகைப்படைக்க உதவிய அவளது விளையாட்டு மற்றொருவிதமாகவும் விளையாடுகிறது. உருவகப்படுத்த இயலாத அவளது இயல்பு உலக இயல்பிற்கு மாறானது. உலகில் ஒவ்வொன்றையும் உருவகப்படுத்த முடியும். உருவகப்படுத்த இயல்வதால் தான் தனித்தனியாக காணப்படுகிறது. தெய்வமாக அவளை உணர்ந்தால் தான் ஆத்மா தன்னிலை உணரும். ஆத்மா தன் நிலையில் இருந்தால் தான் விடுபடும்.ஜீவனான ஆத்மாவின் சக்தி அளவிற்குட்பட்டது. தன்னைத் தனித்து உணர அதனால் இயலாது.தெய்வம் இதற்கு உதவவேண்டும். தெய்வத்தின் பூர்ண

நிலை தனித்து ஒருவனுக்காக இயங்க இயலாது. தெய்வமானது இதற்கென மற்றொரு விளையாட்டில் இறங்குகிறது. அது அதற்கு இறக்கம் தான்.

தேவி தாயாகி உலகைத் தோற்றுவித்தாள். தன்னைத் தன் சிசுவிற்குத் தானே பரிவால் 'அம்மா! பார்!' என்று மொழியறியாத அதனிடம் சைகை காட்டி அறிமுகப்படுத்திக் கொள்கிற தாய் போல், தான் ஈன்ற இவ்வுலகம் தன்னைக் கண்டு களிக்கும்படி தானே பரிவுடன் இறங்கி நாம ரூபங்களைப்பெற்று, தன்னைத் தானே வெளிப்படுத்தி அன்பிற்குகந்தவளாகி தன் காட்சியை நினைத்தபோது நினைத்த இடத்தில் காணத் தருகிறாள். வாக்கிற்கும் எண்ணத்திற்கும் அறிவிற்கும் உணர்விற்கும் என்றும் அப்பாற்படுபவள் இன்று காஞ்சி என்ற நகரில் காமாக்ஷி என்ற பெயரில் காமகோடி என்ற பீடத்தின் மீதமர்ந்தவளாக, நான்கு கைகள் முதலிய அவயவ அமைப்பும் பாசம் அங்குசம் வில் அம்பு என்ற ஆயுதஅமைப்பும் அவளை அடையாளம் காட்ட, பிரும்மா சங்கரர் விஷ்ணு துர்வாஸர் ஹயக்ரீவர் அகஸ்தியர் லோபாமுத்ரை ஆசாரிய பகவத் பாதர் அவரது வழி வந்த மூகசங்கரேந்திரஸரஸ்வதி என்ற மூககவி முதலானோர் தாம் கண்டுணர்ந்தவாறு, **இதோ உன் தெய்வம் காமாக்ஷி ! இவளை இவ்வாறு அணுகி அவள் உள்ளத்தில் இடம் பெறுவாய்** எனச் சுட்டிப் பரிவுடன் வாத்ஸல்யத்துடன் வழிகாட்டி அறிமுகப்படுத்த, நம் முன் தோன்றுகிறாள். இவ்வாறே மதுரையில் மீனாக்ஷி, காசியில் விசாலாக்ஷி, கோல்ஹாபூரில் மஹாலக்ஷ்மி என்றவாறு பல இடங்களிலும் தோன்றி நித்ய வாஸத்தால் அருள்புரிகிறாள். अस्ति, भाति, प्रियं, रूपं, नाम என்ற ஐவகை விளக்கம் பெறுகிறாள் என்பர்.

தந்தைமையை உள்ளடக்கித் தாய்மையை வெளிப்படுத்துகிற காமாக்ஷியே தான், தாய்மையை உள்ளடக்கி தந்தை-குரு என்ற இரு நிலைகள் வெளிப்படுத்துகிற தக்ஷிணாமூர்த்தி ஆகிறாள். இடத்தில் தான் நின்று, சிவனை வலத்தில் கொண்டு சிவனைப் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிற அர்த்தநாரீச்வரர், தன்னைப் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிற அர்த்தநரேசுவரீ, தன் மற்றொரு

உருவகமான நாராயணனை இடத்தில் கொண்ட சங்கரநாராயணன் என்றவாறு தன்னைக்காண்பவரின் உள்ளத்தில் தெய்வத்தன்மையில் வேற்றுமையுணர்வு துலங்காதவாறு சிவ-சக்தி-ஐக்யத்தை வெளிப்படுத்துகிருள்.

சக்தியின் அலைபாயாத நிலை பிரகாசமாகும். துலக்க வேண்டிய பொருளும் துலக்கத்தை வேண்டுபவனுமற்ற நிலையிலுள்ள துலக்கத்தை இயல்பாகக் கொண்டது பிரகாசம். சந்திரனுக்கும் வானுக்கும் பூமிக்கும் இடையேயுள்ள நிலா போல் இது. இது சிவபெருமானின் இயல்பு. அலைபாய்கிற சக்தி விமர்சமாகும். துலக்க வேண்டிய பொருளும் துலக்கத்தை வேண்டுபவனுமுள்ள போது துலக்கமாகஉள்ள நிலை இது. துலக்கமும் துலக்குவதும் வேறுபட்டதல்ல. பிரகாசநிலையிலோ விமர்சநிலையிலோ உள்ள துலக்கத்தில் ஒன்றுக்கொன்று வேறுபடவில்லை. அங்கு இது பிரகாசம், இது விமரிசம் என்ற வேறுபாடில்லை. துலக்கப்படும் பொருளும் அதனைத் துலக்கவேண்டுபவனும் உள்ள போது பிரகாசம் தன் சுயநிலையிலிருந்து தானே இறங்கி, விளக்கம் தருவதான விமரிசநிலையை அடைகிறது. தன்மையில் வேற்றுமையில்லாத போது ஒன்றே. இரண்டல்ல.

மகனோடு இணையத்தந்தையாவதும் மனைவியுடன் இணையக் கணவனுவதும் பெற்றோருடன் இணைய மகனுவதும் வேறுபாட்டை உணர்த்தினுலும் தன்நிலையில் அவனே என்று உணர்வதும் ஒப்பக் கூடியதே. சிவன் சக்தி என்றிரு தத்துவங்களாகவும், தக்ஷிணாமூர்த்தி காமாக்ஷி என்ற ஒரே காட்சிப் பொருளாகவும்அர்த்தநாரீச்வரர் சங்கர நாராயணர் என்று ஒன்றில் இரண்டாகவும் சிவமாகவோ சக்தியாகவோ ஒரே தத்துவமாகவும் உணர்வதில் காண்பவனின் ருசியில்பேதம் உள்ளதே தவிர வஸ்துவில்பேதமில்லை.

காமேச்வரனை ஸ்படிகநிறமுள்ளவராக அமர்த்தி அவர் மடியில் காமேசுவரியை செம்மேனியளாக அதே ஆக்ருதியும் கைகளும் ஆயுதங்களும் கொண்டவளாக அமர்த்தி, ஸ்படிகத்தில் செம்மையைப்பரவ விட்டு இரண்டாக- ஒன்ருகப் பாவனை செய்வர். மனச்சலிப்பின்றி பொழுதொருவண்ணமாக வியப்பும்

ஆனந்தமும் அடங்காத அவாவும் அலைமோதக் கண்டு களிக்கச்செய்யவே இந்த அவதாரம்-இறங்கிவருதல்.

பரம்பொருள் ஆணு பெண்ணு? மனிதன் ஆணுகவோ பெண்ணுகவோ அறிமுகமாவதைத் தான் மதிப்பான் . ஆண் வடிவில் கண்ணனுகவும் பெண் வடிவில் லலிதையாகவும் பரம் பொருள் வடிவேற்றது எனப் புராணம் விளக்கும். பெண்ணையோ ஆணையோ தனது உரிமைப்பொருளாக போகப்பொருளாக, உணர்வது காமத்தின் கடை நிலை அல்லது பசு நிலை. உடலழகும் உள்ளத்தழகும் ஆத்ம அழகும் காட்ட வந்த தேவி திரிபுரஸுந்தரி. பசு உணர்ச்சியை நீக்க வல்ல அருள் வடிவம். அதனுல் வேதமும் உபநிஷதமும் நித்யயுவதிகளான உஷா, அதிதி, துர்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, கங்கா, யமுநா, ஸரஸ்வதீ நதி, உமா, ஹைமவதி, காயத்ரீ எனப் பல அழகுமிக்க தேவதைகளை அறிமுகப்படுத்துகின்றன. அவை சிருங்கார ரஸ தேவதைகள். விரஸ உணர்ச்சிக்கு அவை இடம்தராதவை. உணர்வின் மேம்பாட்டிற்கே அழைத்துச் செல்பவை. அவர்களிடத்துள்ள பெண்மையில், அழகும் உல்லாசமும் தாய்மையும் கருணையும் பெருமையும் எங்கும் எப்போதும் எவருக்கும் எவ்வாறும் உதவுகிற பரிவும் வெளிப்படுகின்றன. பருத்த மார்பகமும் மெலிந்த இடையும் பருத்த இடுப்புப் பகுதியும் தாய்மையின் கோலங்கள். பரிவும் ஆர்வமும் காட்டுகிற நீண்ட கண்கள், சுருண்ட கேசங்கள், அன்ன நடை, உதட்டினுள் அடங்கிய புன் சிரிப்பு, கொடி போன்ற அவயவ மென்மை, நறுமணம், புதிது புதிதாகக்காட்டுகிற பொலிவு முதலியவை அலுப்பிற்கும் சலிப்பிற்கும் அவமதிப்பிற்கும் இடம்தராத தெய்விக அழகின் அடையாளம்.

மனத்தில்தாழ்வுணர்ச்சியோ இகழ்வுணர்ச்சியோ கூச்சமோ இன்றி இந்த அழகை ரசிக்கமுடியும். சிற்பி பெண் வடிவை முழுப்பொலிவுடன் செதுக்கும் போது காம விகாரத்திற்கு உட்படுவதில்லை. தெய்வீக அழகை - நிலைத்து நிற்கப்போகிற அழகை அவன் சிற்பத்தில் வடிக்கிறுன். கணத்துக்கணம் மாறுகிற-அழிகிற-தேய்கிற அழகை அல்ல. தெய்வபாவனையுடன் அழகை ரசிக்க முற்பட தெய்வம் தன் முழு

அழகையும் உணர்த்தும். அழகும் பிரியமும் ஆனந்தமுமே தெய்விகம் தான்.

தேவிக்கு மூன்று உருவகங்கள் உண்டு. ஸ்தூலம், ஸூக்ஷ்மம், வாஸநாமயம் என. காமாக்ஷியாக, மீனாக்ஷியாக, துர்காவாக, பார்வதியாக அவள் உரிய வடிவமைப்புடன் காட்சிதருவது-ஸ்தூலம். விக்ரஹமும் படமும் ஏனையதும் அதன் வெளிக்கோலம். இந்த தேவியையே அசரமான கல்லாகவும் காகிதமாகவும் பார்க்காமல் சேதனமாக மனத்தினுள் தியானத்தில் காண்பதும் ஸ்தூலவடிவமே. மனத்தால் சேதனமாக உருவகப்படுத்த உதவவே கல்லாலும் உலோகத்தாலும் விக்ரக அமைப்பு.

இந்த விக்ரகத்தினுள்ளே, யோகிகளும் ஜ்ஞானிகளும் மந்திரபலத்தாலும் தியானபலத்தாலும் சைதன்யம் பரவி நிற்கும்படி பிரதிஷ்டைமுதலிய தந்திரங்களைச் செய்ய, தெய்வதரிசனம் செய்ய வழிதெரிந்தவனுக்கு அங்கே தெய்வமே விளையாடுவது தெரியும். இது ஸூக்ஷ்ம உருவம்.

யோகியும் ஜ்ஞானியும், தான் வழிபடுகிற விக்ரகத்திலேயே உலகின் தாயை, சிவசக்தியை, பரம்பொருளை, தன் இதயத்திலுள்ள ஆத்மாவை எல்லாமானவளை உணர்வது வாஸநாமயமான உருவம். இந்தப்பேருணர்வில் ஸ்தூல உருவமும் ஸூக்ஷ்ம உருவமும் மறைந்துவிடாது.இவை பொய்யான வடிவம்;தான் உணர்வதே ஸத்யம் என்ற விமர்சமும் இராது. எல்லாம் ஸத்யம் என்ற உணர்வும், ஒன்றே ஸத்யம் என்ற உணர்வும் ஒன்றையொன்று பாதிப்பதில்லை.

பருத்த இடுப்பும் மார்பகமும் சிறுத்த இடையும் புன்முறுவலும் அருள்நோக்கும் மென்மையும் மனிதப்பெண்வடிவமும் தெய்வீக அவயவங்களும் ஆயுதங்களும், சிவனது காமத்துக்கு ஈடுகொடுத்தலும், சிவனை மயக்குவதும் சிவனது ஆத்மாவாக நின்று இயங்குதலும், பரப்ரும்ஹமஹிஷியாயிருப்பதும் பரப்ரும்ஹமாகவே இருப்பதும் எதுவும் சேராச் சேர்க்கையல்ல. எல்லாம் அவளிடம் பொருந்தும். தெய்வத்தன்மையை உணர, உணர, அவளிடம்

நெருங்க, நெருங்க, எல்லா சந்தேகங்களும் தானே விலகும். பொருந்தாததென நினைத்ததெல்லாம் பொருந்தி நிற்பதுடன் அந்தப்பொருத்தமே தான் அழகு என்ற உணர்வும் வலுப்படும். மனமும் புத்தியும் சித்தமும் அவளிடம் பொருந்தும். அஹங்காரம் அவளது பேரஹங்காரத்தில் கடலில் நதிகள் போல் கலந்து பராஹந்தையாக மாறும். ''சிவனாகிறேன், தேவியாகிறேன். தேவி என்னுள் எல்லாமாகக் கலந்தாள். எல்லாம் அவளுடன் இணைந்து தேவிதான் உள்ளாள்'' என்ற பரவசம் ஏற்படும்.

அது எப்படி? மூக கவியின் அனுபவவாக்கு அதனைப் படிப்படியாக நிரூபிக்கிறது.

**காஞ்சியும் தேவியும்:** உருவகத்திற்கு உட்படாதிருந்த சிவனும் சக்தியும், தக்ஷனின் தவத்தின் விளைவாக மாப்பிள்ளையும் பெண்ணும் ஆனார்கள். சிவனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ளவே தக்ஷன் பெண்ணைக் கோரினான். தாக்ஷாயணி சிவனின் மனைவியானாள். தக்ஷனிடம் 'சிவனும் தனது மருமகன்' என்ற இறுமாப்பு தலையிட்டது. தாக்ஷாயணி தக்ஷனின் பெண் என்ற நிலையைத் துறந்து யோகாக்கினியால் தன் சக்தி நிலைபெற்றாள். சக்தியுடன் வாழ்ந்த உடலில் தெய்வீகத்தன்மை குறையாததால், சிவன் அதனைத் தோளில் சுமந்தார். உலகின் ரக்ஷணத்திற்காக விஷ்ணு சக்தியுடன் வாழ்ந்த உடலைக் கண்டம் கண்டமாக வெட்டிப் புண்யக்ஷேத்திரமாகவேண்டிய இடங்களில் பதித்தார். அவை அனைத்தும், எண்ணற்ற சக்தி பீடங்களாயின. மக்களுக்கு 51 பீடங்கள் அறிமுகப்பட்டன. அவற்றில் ஒட்யாண பீடம், ஜாலந்தர பீடம், காமகோடி பீடம், பூர்ணகிரி பீடம் என்ற நான்கு அதிக சக்தி பெற்றன.

உலகின் நாபிப்பகுதியான காஞ்சியில் தேவியின் நாபிப்பகுதி விழுந்தது. வியஷ்டியில் அது மணிபூரகம் என்ற இச்சா சக்தி ஸ்தானம். இச்சையே செயற்படும் போது காமமாக முதலில் விரிவடைகிறது. விருப்பம் வெளிப்பட அவா ஆயிற்று. அதுவே அழுத்தம் பெற பற்று ஈர்ப்பு என்ற இருமுனைத்தாக்குதல் பெற்று ராகம் ஆயிற்று. மேலும் அது வலிவு பெற அது இன்றி வாழ முடியாது என்ற வேட்கையாக திருஷ்ணா ஆயிற்று.

இச்சா சக்தியே எண்ணமாக சொல்லாகவெளிப்பட வாக்பவமாகிறது. இச்சா சக்தி உள்ளடங்க காம கூடமாகிறது. செயல்பட சக்தி கூடமாகிறது. இச்சை தான் செயலாக மாறத் திட்டமிட, ஞான சக்தி வடிவம் பெறுகிறது. திட்டமிட்டதை செயல்படுத்த கிரியா சக்தியாகிறது.

மூலாதாரத்தில் இச்சையாகவோ ஞானமாகவோ கிரியையாகவோ வெளிப்படாதிருந்த சக்தி, மணிபூரம் முதல் அநாஹதம் வரையுள்ள காம கூடத்தில் இச்சா சக்தி - ஜ்ஞான சக்தி - கிரியா சக்தியாக உருப்பெறுகிறது. இச்சக்திகள் ஸூக்ஷ்மமாக வெளிப்படுமிடம் வாக்பவ கூடம். ஸ்தூலமாக வெளிப்படுமிடம் சக்தி கூடம்.

காமகூடமான நாபிஸ்தானத்தில், காமபீடம் அமைந்துள்ளது. காஞ்சியில் காமகோடி பீடம் அமைந்துள்ளது. காமாக்ஷி அமர்ந்துள்ள இடமே காம பீடம். பீடம் அமைந்துள்ள இடமே காஞ்சீபுரம். காஞ்சியென்பது இடுப்பைச்சுற்றிப் பெண்கள் அணியும் சங்கிலி வடிவுள்ள இடுப்பணி. ஒட்டியாணமும் காஞ்சி எனப்படும். நாபியில் காஞ்சீ, காஞ்சியில் நாபி, அங்கே காமம் எனும் பீடம், காம பீடத்தில் காமாக்ஷி என்றொரு அமைப்பு.

தர்மம் அர்த்தம் காமம் என மூன்று புருஷார்த்தங்கள். (அறம், பொருள், இன்பம் என இதனைக் கூறுவர்)கடைசியிலுள்ள காமமே சிறந்த புருஷார்த்தம் என்பர். புருஷன் என்பவன் உடலையும் உள்ளத்தையும் தன் வசத்தில் கொண்டு மேன்மை ஒன்றையே நாடுபவன். அவனது நாட்டத்திற்குரிய பொருள் அந்த மூன்றும். அந்த நாட்டமுள்ள ஆணும் பெண்ணும் புருஷனே. சிசுவாக, தாயின் வயிற்றிலிருந்து வெளிப்பட்டதும் இந்த வாழ்க்கை தொடங்கிக் கடைசி மூச்சுடன் முற்றுப்பெறுகிறது.ஆனால் முன் பிறவிகளில் வாழ்ந்தவகை காரணமாகவே தாயின் வயிற்றினுள் புகுந்து பிறந்த ஜீவன், மற்றொரு தாயின் வயிற்றுனுள் புகவே மூச்சை விடுகிறான். இந்த வாழ்க்கைத் தொடரைக் காப்பதே காமம் தான். மறுபடி பிறக்காதிருக்க வழிகோலுவதும் இந்தக்காமம் தான். பிறக்காமலிருக்கும்படி கடைசி க்ஷணம் வரை தேவியின் திருவடிகளைச் சரணமடையச் செய்வதும் காமம் தான்.

காமத்திற்கு நல்வாய்ப்பு தரவே, அர்த்தம் என்ற புருஷார்த்தம். நல்வாய்ப்பும். காமமும் நல்வழியில் செல்லும்படி கட்டுப்படுத்தவே தர்மம் என்ற புருஷார்த்தம். தர்மத்திற்கு முரண்படாத காமமே தன் விபூதி எனக் கண்ணன் கீதையில் பெருமை விளக்கம் தருகிறார். உலகியல்லையும் ஒட்டித் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் முரண்படாத காமமே தெய்வீகக் காமம். இந்தத் தெய்வீகக் காமத்தைக் கண்ணுகப்பாதுகாப்பவள் காமாக்ஷி. இத்தகையக் காமத்தின் எல்லையாக, காமத்தால் அடையக் கூடிய பலனுக உள்ளவள் காம கோடி (கோடி-எல்லை-நுனி-பலன்).

காமத்திற்கோ அர்த்தத்திற்கோ பயன்படாத தர்மம் வீணே. காமத்திற்கோ தர்மத்திற்கோ பயன்படாத அர்த்தமும் வீணே. பற்றற்றதுறவியும் தேவியின் திருவடிகளை மோக்ஷத்திற்கான காமத்துடன் பற்றுகிறான். முமுக்ஷா என்ற முக்திக்கான காமமும் காமம் தான். முக்தி ஈனுபலன் தருவதால் இவள் காமகோடியாகிறாள். நற்பிறவிபெறுவதற்கான காமம் ஒருகோடியில், நான்காவதான முக்தியைப் பெறுவதற்கான காமம் மறுகோடியில். அகாமகாமம் இது.

உலகைப் படைப்பதற்கான தேவியின் விருப்பமும் ஒரு காமம் தானே! तस्यान्तर्मनसि कामः समपद्यत इदं सृजेयमिति । சிவன் சக்தி என்ற இரு தத்துவங்களைத் தொடர்ந்து ஸதாசிவன் என்ற மூன்றும் தத்துவம். இதுவே ஸருஷ்டிக்கான காமமாக அனுக்கிரகமாக மாறுகிற சக்தியைத் துணை கொண்டது.லீலாஸ்ருஷ்டப்ரம் ஹாண்டமண்டலா. இந்த லீலை ஸதாசிவானுக்ரஹத்தின் விளைவு. இது தான் உலகின் ஆதியான காமம். இது தேவியின் அருள் நோக்கால் விளைந்ததென அந்த காமத்தைக் கண்ணில் கொண்டவள் காமாக்ஷி. காமத்தின் முதலாவதும் இறுதியும் இருகோடிகள். ஆதிகாமமும் அவளுக்கு ஒரு கோடி-ஒரு நோக்கம் ஆனதால் அவள் காமகோடி ஈக்ஷணஸ்ருஷ்டாண்ட கோடிகா (திரிசதீ)

உலகப்படைப்பிற்கான தேவியின் விருப்பமே காமனின் உருவமாயிற்று. படைப்பிற்கு மூலம் மனமும் இந்திரியங்களும். அவை கரும்பு வில்லும் புஷ்பபாணமுமாயின. காமத்தின்

விரிவில் மதம் உட்படும். சிவனிடம் அது தகாத ஸமயத்தில் பயன்பட்டதால் நெற்றிக் கண்ணுகிற ஞானத்தால் காமம் எரிக்கப்பட்டுச் சாம்பலானது. தேவர்களுக்கு விருப்பமெனக் காமன் செயல்பட்டதும் அழிந்தான்.

தேவி சிவனிடமுள்ள தனது ஆழ்ந்த அன்பைக் கண்களால் வெளிப்படுத்தினுள். அதனுல் காமாக்ஷி. அவளது ஆழ்ந்த அன்பை உணர்ந்த சிவன் தானே தேவியின் அன்பு வடிவமாகி காமனுன ஈசனுக காமேசனுக ஆனுர். தேவி அந்த அன்பைக் கண்களால் ஏற்றுத் தானும் காமேசியாக காமாக்ஷியாக ஆனுள். இருவர் உள்ளமும் இணைந்ததும் காமன் மன்மதனுக (மனத்தைக் கடைபவனுக) ஆனுன். சிவனுக்குத் தன்னிடமிருந்த கோபத்தை முற்றிலும் அகற்றித் தேவியிடம் அவரது அன்பை வளர்த்து சிவனேத் தேவிக்கு வசமாக்கினுன். **ஹரநேத்ராக்னி ஸந்தக்த்த காமஸஞ்ஜீவநெளஷதி:। காமபூஜிதர ।**

தேவிக்குக் காமனிடம் வாத்ஸல்யம் பெருகிற்று. அவனேத் தன் கண்களில் கொண்டாள். காமனின் லக்ஷ்யமான சிவனே வெற்றி கொள்வதும் நிறைவேறிற்று. அதனுல் சிவஜித் க்ஷேத்ரம் என்று காஞ்சிக்குப் பெயர் வந்தது. கைலாஸத்தில் சிவனிடம் தோற்று மாய்ந்த காமன் காஞ்சியில் தன் காமத்தின் கோடியை லக்ஷ்யத்தை அடைந்தான். அதனுல் இது காமபீடம், காமகோடி பீடம்.

காமம் என்ற புருஷார்த்தம் இருவகையில் ஜீவனேச் செயலில் ஈடுபடுத்துகிறது. 1.**பிரவிருத்தி**- மனம் போன போக்கில் செயல்படுவதைத்தடுத்து நற்பணிகளில் ஆர்வமும் ஈடுபாடும் தந்து இறைப்பணியாகப் பணிகளே அமைத்துத் தருவது பிரவிருத்தியாகும். 2.**நிவிருத்தி**- மனத்தைக் கட்டுபடுத்தி உலகாயதமான செயல்களில் ஈடுபடாமல் தடுத்து-மடை மாற்றி-உள் நோக்கச் செய்து, மனமும் புத்தியும் தன் செயலிழக்கச், சித்தம் எப்போதும் ஆத்மாவுடன் கூடி விளேயாடுகின்ற தேவியிடம் பதிய, போக்கற்ற நிலே உண்டாகிறது. இது நிவிருத்தி. சித்தத்தினுள் பிரும்ஹ தத்துவத்தின் அருகாமையில் ஆனந்தமும் அமைதியும் நிலவ, நிவிருத்தி வழியில் அமைந்த காமம் உதவுகிறது. இதில்

காமாக்ஷியாக காம கோடியாக காமகோடி காமாக்ஷியாகத் துலங்குகிருள்.

இவ்வாறு தேவியைப் பல கோணங்களில் கண்டு களித்த மூக கவி தன் அனுபவத்தை ஐநூறு சுலோகங்களால் விளக்குகிருர். அனுபவத்தால் மட்டுமே உணரத்தக்க தரிசனத்தைத் தேவி தன் தாம்பூலஸாரமளித்து அருள் புரிந்ததால் வாக்காலும் கவிதையாலும் விளக்க முடிகிறது. ஆத்மாவைக் கண்டுணர்ந்தவனே கவி. அனுபவ நிலையில் ஊமையாயிருந்த கவி, குரு நிலையில் கவியாகிருர்.

முதல் நூறு சுலோகங்கள் ஆர்யாவிருத்தத்தில் அமைந்தவை. மனத்தில் எளிதில் பதியத்தக்க சொற்கட்டு ஆர்யா என விருத்தம். தேவியும் ஆர்யா-வழிபாட்டிற்குரிய பெருமாட்டி. உயர்ந்த நடை முறையாலும் சீலத்தாலும் நன்மதிப்புக்குரியவளானதால் ஆர்யா. அவளைப் பற்றிய சதகம் ஆழ்மனத்தில் பதியப்பதிய ரஸமாக ஆனந்தமாக சொல்வதற்குரிய உணர்வுக்கும்மாளமாக வடி வெடுக்கும்.

தேவியின் பேரழகும் சிவபெருமானிடம் அவள் கொண்டுள்ள ஈடிணையற்ற அன்பும், தவத்தால் சிவனது அன்பைப் பெறத் தேர்ந்தெடுத்த காஞ்சியின் கம்பையாற்றங்கரையும், சிவனைப் பெற்ருனந்திக்கின்ற எதிர்பார்வையில் ஆற்று வெள்ளத்திலிருந்து சிவனைக் காக்க மார்பகமும் வளையணிந்த கைகளும் அழுந்தக் கட்டியணைத்தலும், அதனை உள்ளன்புடன் ரஸித்து ஏற்று மார்பகத்தின் அழுத்தமும் வளையல்களின் அழுத்தமும் தன்னிடம் பதிந்துள்ளதை அன்பின் பேரடையாளமாக இன்றளவில் தன் லிங்கத்திருமேனியில் உலகத்தின் கண்களில் படும் படித் தாங்கி நிற்பதும், சிவனுக்கு அவளிடமுள்ள என்றும் குறையாத மோகமும் இவற்றிற்குமப்பால், தாயான தேவியின் கருணையும் தனித்த பேராளுமை காட்டுகிற ஈசுவரி நிலையும் ஒவ்வொரு சுலோகத்திலும் போட்டியிட்டு வெளிப்படுவதையும் உணர்ந்து அவ்வுணர்வுகளில் தானையும் தனதையும் இழந்து தேவியை எங்கும் எதிலும் எல்லாமாயும் உணர்கிற பெரு நிலை அடைவோம்.

**காமாக்ஷீ**- காரணபரசித்ரூபா எனத் தேவியை ஸ்ரீமூககவி அறிமுகப்படுத்துகிறார். பரப்ரம்ஹ நிலையில் 'உலகம்' என்பதைப் பற்றி சலனம் ஏற்படுகிறது. அது சக்தியாகி பரசித் சக்தியாகிறது. பல கோடிகல்பங்கள் என்ற எண்ணத்திற்கப்பாற்பட்ட காலவரையில் நடு நடுவில் பலவாக ஆவதற்கான ஸங்கல்பமாக அது உருவெடுக்கும். இந்த ஸங்கல்பங்களில் ஒன்றின் சலனத் தொடர்பில் இந்த உலகம் தோன்றிற்று.

உலகின் தோற்றம், காப்பு, லயம் என்ற தொடர் தொடங்குவதற்கான சலனம் பரசித் வடிவில் ஏற்பட்டது. தேவி மஹாலக்ஷ்மி என்ற தோற்றம் பெற்றாள். தன்னிடமிருந்து மூன்று இரட்டையர்களை வெளிப்படுத்தினாள். சிவன் - ஸரஸ்வதி, விஷ்ணு-கௌரி, பிரும்மா லக்ஷ்மீ என. மூன்று இரட்டைகளிடத்தும், ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் என்ற பொறுப்பைத்தந்தாள். லயமடைந்ததைத் தான் படைக்கமுடியும். படைப்பிற்கு குட்பட்டதைத் தான் லயப்படுத்த முடியும், அதனால் ஸரஸ்வதியைப் பிரும்மனின் சக்தியாகவும் லக்ஷ்மியை விஷ்ணுவின் சக்தியாகவும், கௌரியைச் சிவனின் சக்தியாகவும் அமைத்தாள். லயசக்தியான ஸரஸ்வதி பிரும்மாவிற்கு மூலப்பொருளைத்தந்தாள். படைப்பு சக்தியான லக்ஷ்மி காப்புப்பொறுப்புள்ள விஷ்ணுவின் சக்தியானாள். காப்பு சக்தியான நாராயணி (கௌரி) சிவனின் சக்தியானாள். மும்மூர்த்திகளும் மூன்று சக்திகளும் தேவியின் உலகத்தினை நோக்கிச் செயல்படுகிற பரசித் சக்தியின் தோற்றங்களே.

விஷ்ணுவின் சக்தியாயிருந்த லக்ஷ்மி பாற்கடலின் மகளாகி, பிருகுவின் 'மகளாகி விஷ்ணுவின் மனைவியென்ற புதுநிலை பெறுகிறாள்.

இவ்வாறு கௌரியும் தக்ஷனின் தவத்தின் பயனாக தக்ஷனின் மகளாகி சிவ சக்தி என்ற நிலைவிட்டுச் சிவனின் மனைவியாக தாக்ஷாயணி என்று ஸதி என்று புதுப்பெயர் பெறுகிறாள். தன் கணவரான சிவனிடம் தன் தந்தை தக்ஷன் தவறாக நடந்ததாகக் காரணம் காட்டித் தன் உடலை யோகாக்கினியில் மறைத்துப் பிறப்பிற்கு ஏற்ற வேறிடம் தேடி இமவானின் தவத்தின் பயனாக அவரது மனைவியான மேனாவிடம் இமவானின் பெண்ணாக

மறுபடி தோன்றுகிறாள். பார்வதி, கிரிஜா என்று தன்னை மலைமகளாகவே உலகின் முன் நிறுத்துகிறாள். பரப்பிரும்மத்தினுள் மறைந்து தனித்தன்மை கொண்டாடாதிருந்த சக்தியே இவ்வாறு தனித் தன்மையை உறுதிப்படுத்திக் கொள்கிறது.

சிவனது அனுமதிபெறாமல் சிவத்துவேஷியான தந்தை தக்ஷனின் யாகத்தைக் காணவந்ததாலும், கோபத்தின் வசமாக உயிர் நீத்ததாலும் இரண்டு புது நிலைகளுக்குச் சக்தி உட்படுகிறாள். யோகமுறையில் உயிர் நீத்த தாக்ஷாயணியின் உடலைப் பித்தனாகித் தோளில் சிவன் சுமந்து திரிய, விஷ்ணு சிவனைப் பின் தொடர்ந்து அவ்வுடலைச் சக்கிரத்தால் சிறு சிறு துண்டாக வெட்டி யெறிய, அவளது ஒவ்வொரு உடற்பகுதியையும் பாரத வர்ஷத்தின் 51 பகுதிகள் சக்திக் குவியலாக ஏற்க, அந்தந்த பீட சக்தியாகத் தேவி தோன்றினாள். அதில் காஞ்சியில் விழுந்த பகுதி தேவியின் நாபி. பூமி கோமாதா வடி வெடுத்த போது அவளது கருவறை முதல் நாபி வரை உள்ளபகுதி காஞ்சீ. பூமியின் நாபியில் பராசக்தியின் நாபி விழுந்ததால் காஞ்சி ஒரு பீடசக்தி அமைந்த க்ஷேத்திரமாகியது. காஞ்சியின் பீடசக்தியும் அவளே. **காஞ்சீபுரஸீம்நி காம பீட கதா** என்று ஸ்ரீ மூகர் அறிமுகப்படுத்துகிறார்.

சிவனது அனுமதியின்றி தக்ஷயாகத்தில் கலந்து கொண்டதும், அவ்வாறே உயிர் நீத்ததுமான ஸம்பவத்தால் பார்வதியாகப் பிறந்த சக்தி தவமிருந்து பலஇடையூறுகளைத் தாண்டித்தான் சிவனது மனைவியானாள். இவளது தவம் நீண்டு நடந்தும் சிவனது அருட்பார்வை தேவியின் மீது படத் தாமதித்ததால் தேவர்களால் தூண்டப்பெற்ற மன்மதன் தேவர்களுக்கு உதவுவதற்காக, ஆனால் தன் திறமையில் ஆணவமும் கொண்டு, சிவனது மனத்தில் கனிவை உண்டாக்க முயன்று சிவனின் கோபாக்கினியில் சாம்பலானான். தேவி தன்தவத்தின் மூலம் சிவனது அருள் பெற்று மன்மதனுக்கு உயிர் தந்து **''ஹரநேத்ராக்னிஸந்தக்த்த - காம ஸஞ்ஜீவனௌஷதி''யாக - காம ஜநகாபாங்க வீக்ஷணாவாக** ஆகிறாள்.

தன் தவத்தின் பயனுகச் சிவனின் மனைவி என்ற நிலையைப் பெற்ற தேவி மன்மதனின் அருளால் சிவனின் காதலியாக சிவனது பாதியைப்பெற்று அர்த்தநரேச்வரியாகிறுள். காதலும் ஊடலும் கூடி சிவனைத்தன் கால்களில் விழச் செய்கிறுள். தானும் சிவனது திருவடிகளில் விழுந்து கலக்கிறுள்.

இந்தக் காதலின் விளைவாகச் சிவனின் மடி மீது ஏகபோகமாக அமர்ந்தவள் அன்பின் தடுமாற்றத்தில் சிவனது இருகண்களைப்பொத்துகிறுள் விளையாட்டாக. சிவனது கண்களான ஸூர்யனும் சந்திரனும் மறைக்கப்பட, இறைவி வகுத்த உலகியல்பிற்கு மீறி உலகை இருள் சூழ்கிறது. விளையாட்டாக நிகழ்ந்த இந்தச் செயலுக்குப் பரிஹாரமாகத் தவத்தில் ஈடுபட்ட பார்வதி, காத்தியாயன ரிஷியின் தவத்தின் பயனுக அவரது மகளாகிக் 'காத்யாயனி' ஆகிறுள்.

காத்தியாயனரது வழிகாட்டலில் தவத்தின் முறையறிந்தவளாகக் காஞ்சியை அடைகிறுள். காத்யாயனர் அவளிடம், யோகதண்டம், ஜபமாலை, தீபஸ்தம்பம், புலித்தோல், புத்தகம், வறுத்த பயறு, கங்கை மணல், கங்கைநீர், குடை, விசிறி, சாமரம், ஊசி ஆகியவற்றை அளித்துக் காஞ்சிக்கு வழிகாட்டுகிறுர் ''ஸத்யவிரதக்ஷேத்ரம் என்ற காஞ்சியை அடைந்ததும் இவை உருமாறும். அதனைக் கொண்டே காஞ்சியை அடையாளம் கண்டு, அங்கே தவம்புரிவாய்'' என்று காத்யாயனர் கூறியபடி தேவி காஞ்சியை அடைந்ததும், ஜபமாலை பில்வமாலையாக, புலித்தோல் ஸோமவிருத்தமாக, குடை நாகாபரணமாக, கங்கைமணல் லிங்கமாக, குடம் அதன் ஆதார பீடமாக, யோகதண்டம் திரிசூலமாக, விசிறி கிளியாக, புத்தகம் காமதேனுவாக, வறுத்த பயிறு முளைத்த பயருக, சாமரங்கள் இரு தோழிகளான ஜயாவும் விஜயாவுமாக மாறிடவே, இது தான் தவத்திற்கு உரிய இடம் எனக் கண்டாள். புகழ் பெற்ற மாமரத்தின் அடியில் ஊசி மீது நின்று, தவமிருந்தாள்.

இதற்கு முன் நிகழ்ந்த பிரளயத்தில் லயமடைய விருப்பதை ஒருமாவிதையாக்கி, பிரளயக்கடலின் ஆழத்தில் சிவன் வைத்தார். அது முளைத்து நான்கு துளிர்களாக வெளிப்படுத்தி அவற்றை பிரளயக்கடலின் மீது மிதக்கவிட, அதனை

அடையாளமாகக் கொண்டு சிரஞ்ஜீவியான மார்கண்டேயர் இலையின் மூலத்தைத் தேடி விதையைக் கண்டு அதில் ஆனந்தத்துடன் வீற்றிருந்த சிவபெருமானைக் கண்டானந்தித்தார். பிரளய காலத்தில் உருவழியாதிருந்த அந்த ஒத்தை மாமரமே பிரளயம் மறைந்ததும் ஏகாம்ரமாகத் தழைத்தது. அதன் கிளைகளே வேதங்கள். தவத்தின் பயனாகச் சிவனை மணந்து ஏகாம்ர நாயகியானாள்.

உலகமாக மாறவிருந்த பரசித்ரூபிணீயான பராசக்தியும் அங்கிருந்த பிலத்தில் தவமிருந்தாள். அந்தத்தவம் உலகின் தோற்றம் காப்பு லயம் என்ற மூன்றும் சீராக நிகழ்வதற்காகவே. அதற்கு அவள் தேர்ந்த இடம், காஞ்சியிலுள்ள பிலம். அவளது தவத்திற்கு உதவியதே சிதக்னிகுண்டம்,

காமனை சிவனது கோபாக்னிக்கு இரையாக்கிய வரலாறு முன் வந்துள்ளது. காமத்தின் மாற்றுருவமே கோபம். காமத்தின் வசமாக விரும்பாதமுரண்பாடே கோபமாகிறது. கோபம் வந்த காரணத்தை உற்று நோக்கும் போது, தன் காமம் தன்னை வசப்படுத்த முற்பட்டதால் ஏற்பட்டபின் விளைவே தன் கோபம் என உணர்ந்த சிவன் திருமணத்திற்கு உட்படுகிறார். அதனால் காமனிடம் வந்த கோபத்தின் பின்விளைவை மாற்றத்தேவியின் அன்பாணைக்குட்பட்டு மன்மதனைத்திரும்ப வாழவைக்கிறார். ஆனால் முன் வந்த கோபத்தின் விளைவு மன்மதனின் சாம்பலில் மீதமிருந்தது. அதனைச் சித்ரகர்மனின் கைச்சிற்பம் பண்டாஸுரனாக உருவெடுக்கச் செய்தது. அவனது அஸுரத் தன்மை எல்லையை மீற, அவனை அழிக்க சிதக்னிகுண்டத்தில் தோன்றிய பரா சக்தி, லலிதா, காமேச்வரி என்ற பெயரில் பண்டாஸுரனை அழிக்கிறாள். இந்த லலிதாவிற்குத் துணைவராக சிவபெருமான் காமேசுவரராகிறார்.

மறுபடி பந்தகன் என்ற அசுரனை அழிக்க வந்த பராசக்தி காஞ்சியில் தான் வசித்து வந்த பிலாகாசத்தின் வாயிலில் பந்தகனின் உடலைப் புதைத்து ஜயஸதம்பம் நாட்டினாள்.

அதே பராசக்தி தான் செய்த அருட் செயலைத் துதிக்கவந்த பிரும்மனின் வேண்டுகோளை ஏற்று, நான்கு புஜமுள்ள சியாமகாமாக்ஷியாகவும் இருபுஜங்களுள்ள ஹேம

காமாக்ஷியுமாக விக்கிரகவடிவில் தோன்றிக் காஞ்சீபுரத்து நாயகியாக நித்யோத்ஸவம் கண்டு அருள்பாலிக்கிறாள்.

சிவனையும் பார்வதியையும் மணக் கோலத்தில் காணத்தேவர்களுக்கு உதவவந்த மன்மதன் சாம்பலானான். ஆனால் அவன் செய்த உதவி உலகிற்குக் கந்தனைத் தந்தது. தேவர்களின் எதிரியான தாரகன் முதலானோர் அழியத் தேவர்கள் மேன்மையுற்றனர். இந்தப் பணியில் நஷ்டமுற்றது மன்மதனின் மனைவியான ரதி ஒருவளே. தேவியின் அருளால் மன்மதன் உயிர் பெற்று ரதிக்கு மகிழ்ச்சி தந்தாலும், சிவனிடம் பெற்ற தோல்வியில் வருந்திநின்ற மன்மதனுக்கு அருள்புரியத் தேவி தன் கண்களில் அவனுக்கு இடம் தந்து சிவனை மன்மதனுக்கு வசப்படுத்தி, காஞ்சிக்கே சிவஜித் க்ஷேத்திரம் என்ற புகழைத் தந்தாள். சிவனின் பிரதானமான க்ஷேத்திரம் சிவன் மன்மதனிடம் தோற்ற இடமானது. மன்மதன், தான் வெற்றி கொண்டதாக இறுமாப்பு அடையாமல் ''எனக்கு இவர்களே தாய் தந்தையர்'' என காமேச்வரி காமேச்வரர் என்று காமனுக்கு ஈசுவரியும் ஈசுவரனும் என்று ஐக்யபாவனையுடன் பன்னிரு தேவி உபாஸகர்களில் ஒருவனாக வழிபட்ட க்ஷேத்திரமும் காஞ்சியே.

ஏகாம்ரநாதரைத் தன் மணாளனாக்கிக் கொண்ட பார்வதியிடம் தன் அம்சத்தைச் செலுத்தி அவளுக்கும் தனக்கே உரித்தான காமாக்ஷி என்ற பெயரைத் தந்து காமாக்ஷி தேவீ ஸநாத ஸ்ரீமதேகாம்ர நாதர் என்ற நிலையையும் அருளினாள். இதனைக் காட்டவே ஸசாமர ரமாவாணீ ஸவ்ய தக்ஷிணஸேவிதா என்ற கோலத்தில் ஸரஸ்வதிக்கும் லக்ஷ்மிக்கும் இடையே இடம் பெற்றவளாகத் தோன்றி ஏகாம்ரநாதரை பிரும்மாவின் வேண்டுகோளுக்கிணங்க ஆண்டிற்கு ஒருமுறை பங்குனி உத்தரத்தன்று திருக்கல்யாண உற்சவம் கண்டு களிக்கிறாள்.

மன்மதனுக்கு ஈசனாகச் சிவபெருமான் மாறுமுன் மற்றொரு அற்புதம் நிகழ்ந்தது. மன்மதனின் குறையுறாத மனத்தாழ்வைப் போக்க முயன்ற தேவி, தன் கையிலுள்ள அம்பையும் வில்லையும் தந்து சிவனுடன் போரிடமன்மதனை அனுப்பினாள். தேவியின் அருள்துணையுடன் போருக்குச் சென்றதால் சிவன் போரில் களைத்துத் தன் ஒளியிலிருந்து கோடிக்கணக்கான

ருத்திரர்களைப்படைத்து காமனுடன் போர்புரிய அனுப்பினர். காமன் தேவியின் அருளால் தன்னிடமிருந்து கோடிக்கணக்கான காமர்களைத் தோற்றுவித்து சிவனது ருத்திரகோடி மீது வெற்றிகொண்டதும் சிவன் தன் தோல்வியை ஒத்துக் கொள்ளச் சமரசம் ஏற்பட்டதும். ருத்திரகோடி ஏகாம்ரநாதரிடம் அடங்க, காமகோடி பிலாகாசத்தினுள் அடங்கியது. அதனால் ஏகாம்ரநாதரது ஆலயம் ருத்ரகோடி என்றும் காமாக்ஷியின் ஆலயம் காமகோடி என்றும் பெயர் பெற்றது. தேவி காமகோடி காமாக்ஷியானாள்.

காமாக்ஷி. உலகைப் படைத்துக்காத்து மறைத்து மறுபடி படைப்பதென உலக இயக்கத்தைத் தொடர்ந்து நடத்துபவள். இடக்கண்ணிலிருந்து வாமா என்ற சக்தியும் பிரும்மா என்ற படைப்புப்பொறுப்பாளரும் தோன்றினர். வலக்கண்ணிலிருந்து ஜ்யேஷ்ட்டா என்ற சக்தியும் காப்பின் பொறுப்பாளரான விஷ்ணுவும் தோன்றினர். நெற்றிக் கண்ணிலிருந்து ரௌத்ரி என்ற சக்தியும் லயத்தின் பொறுப்பாளரான ருத்திரரும் தோன்றினர். க என்ற பிரும்மாவையும் 'அ' என்ற ருத்திரரையும் ம என்ற விஷ்ணுவையும் கண்களிலிருந்து தோற்றுவித்ததால் காம- அக்ஷி ஆனாள். க+அ=கா+ம+அக்ஷி. இவர்களது துணைவியரை கா, ஆ, மா என்று அழைப்பதுண்டு. மூன்றுதேவியரையும் கண்களில் கொண்டதாலும் அவள் காமாக்ஷி ஆனாள் என்பதும் உண்டு.

தந்திரங்களில் காமாக்ஷியின் வடிவை மஹாலக்ஷ்மீ என்றே குறிப்பிடுவர். 'ப்ராங்முகீ தத்ர வர்தேஹம் மஹாலக்ஷ்மீ ஸ்வரூபிணீ என லலிதோபாக்கியானம் கூறும். தேவியின் மந்திரம் நகரம் சக்கிரம் முதலியவற்றை ஸ்ரீவித்யை, ஸ்ரீநகரம், ஸ்ரீ சக்கிரம் என்றே குறிப்பிடுவர். ஹேமகாமாக்ஷியே இந்தவடிவம் என்பர். அது, வாணீ, லக்ஷ்மீ உமா என்ற மூன்றும் ஒன்றானதே. அதன் விரிவாக்கமே **ஸசாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிணஸேவிதா** என்ற உத்ஸவவிக்ரகவடிவம். சாரதையும் ரமாவும் தேவியின் கண்கள் என **சாரதா ரமா நயனே** என்று ஸ்ரீமுத்து ஸ்வாமி தீக்ஷிதர் பாடுகிறார். (சாரதையாலும் ரமாவாலும் திருமணக்கோலத்தில் அழைத்துச் செல்லப்படுபவள் என்றும்பொருள் கூறுவர்.) ''திருமகள் வலக்கண், வாக்கின் சேயிழை இடக்கண்.

ஞானப்பெருமகள் நுதற்கண்ணுகப் பெற்று, வான் செல்வம் கல்வி அருமை வீடளிப்பாள்'' எனப் பரஞ்சோதி முனிவர் அனுபவிப்பார்.

ஸ்ரீகாமகோஷ்டமாகிய இவ்வாலயத்தில் ஐந்து காமாக்ஷிகள் விளங்குகின்றனர். 1.ஸ்ரீ காமகோடி காமாக்ஷீ, 2. ஸ்ரீ தபஸ் காமாக்ஷீ, 3. ஸ்ரீஹேமகாமாக்ஷீ, 4. அரூபகாமாக்ஷீ, 5. உத்ஸவ காமாக்ஷீ.

**1.காமகோடி காமாக்ஷீ**- காயத்ரீ மண்டபத்தில், ஸ்ரீ காமகோடி பீடம் எனப்பெறும் ஸ்ரீ சக்ரத்தின் முன் தென் கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கிருள். கரும்புவில், புஷ்பபாணம், பாசம், அங்குசம் ஏந்திய திருக்கரங்களுடன் பஞ்சபிரும்ஹாஸனத்தின் மீது யோகாஸனத்தில் அமர்ந்திருக்கிருள். இவள் தானே இவ்வடிவில் தோன்றிய ஸ்வயம்பூ. இது அவளது ஸ்தூலவடிவம். எதிரிலுள்ள ஸ்ரீசக்ரத்தில் ஸூக்ஷ்ம வடிவில் உள்ளாள்.

**2. பிலாகாசம்** - காமகோடி காமாக்ஷியின் வலப்புறத்தில் பிலாகாசமாகிய குகையில் பிரும்ம சக்தியாகப் பரவி நிற்கிருள். ஐப்பசி மாதத்துப் பூரநக்ஷத்திரத்தன்று பந்தகாஸுரனேயும் பண்டனேயும் மாய்க்க வெளிப்பட்டாள். இதன் துவாரத்தில் தவக் காமாக்ஷியின் அருள் உருவமுள்ளது. இவளே கைலாஸத்திலிருந்து சிவனேக்குறித்துத் தவம் செய்ய காஞ்சிவந்தவள். காசியில் அன்னபூர்ணாவாகப் பஞ்சத்தைப் போக்கியவள். காத்யாயனரின் மகளாக வந்தவள். கங்கைமணலேலிங்கவடிவிலாக்கி, ஏகாம்ரேசனேக்குறித்துத் தவமிருந்து மணந்தவள். பிரளய காலத்தில் மாவிதையாகப் பிரளயக்கடலினடியில் இருந்து மரமாகி வேதமே நான்கு கிளேகளாக வளர்ந்தவர் பரமசிவன், ஏகாம்ர ஈசனெனப் பெயர் கொண்டவர். பார்வதியின் தவக்கோலமே தவக்காமாக்ஷி என்பர். ஏகாம்ர சிவனே மணந்து அம்மரத்திலேயே இருவரும் மறைந்து நிற்கின்றனர் என்பர்.

**3. அரூபகாமாக்ஷி** எனும் அஞ்ஜன காமாக்ஷீ, காமகோடி காமாக்ஷியின் இடப்புறத்து கோஷ்டத்தில் வடக்கு நோக்கி அமர்ந்துள்ளாள். அரூபலக்ஷ்மி, காமகலே என்றும் பெயர்.

சாபத்தால் அழகை இழந்த மஹாலக்ஷ்மிக்கு அழகு தந்து ஸௌந்தரிய லக்ஷ்மி யாக்கியவள் என்பர். மஹாலக்ஷ்மியே சாபமடைந்து அழகிழந்த நிலேயே இது என்பதும் உண்டு. காமாக்ஷி ஸந்நிதியில் பெற்ற குங்குமத்தை இவள் மீது தலே முதல் கால்வரை சார்த்திப் பின்னர் பிரஸாதமாகக் ஏற்பர்.

4. **ஹேமகாமாக்ஷி** *(பங்காரு காமாக்ஷி என்ற பெயரும் உண்டு). தமிழ் நாட்டில் முஸ்லீம் அரசர்களில் தாக்கலுக்குப் பயந்து புகழ்பெற்ற வாக்கேய காரரான ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் குடும்பத்தினரின் வழிகாட்டலில் ஆராதகர்கள் தஞ்சைக்குக் கொண்டு செல்ல, அங்கிருந்த அரசரின் பாதுகாப்பில் கோயில் கொண்டுள்ளாள். காமாக்ஷி தன் நெற்றிக் கண்ணிலிருந்து இவளேத் தோற்று வித்துப் பிரும்மாவிடம் தந்து ஆராதிக்க ஆணேயிட்டாள். ஏகாம்பிகை என்றும் பெயருண்டு. பிரும்மா நடத்திவந்த ஏகாம்ர நாதரின் திருக்கல்யாணத்திற்காகக் காமாக்ஷியால் தன்னிடமிருந்து தோற்று விக்கப்பெற்றவள் என்பர்.*

5. **உத்ஸவகாமாக்ஷி**- *இவள் அம்பாளின் போகமூர்த்தி என்பர். உத்ஸவங்களில் தங்கரதம் முதலியவற்றில் வலம் வருபவள். லக்ஷ்மியும் வாணியும் இவளது துணேவிகள். கிருதயுகம் என்ற ஸத்யயுகத்தில் அத்திரிகுமாரரான துர்வாஸரும் திரேதாயுகத்தில் தௌமியரும் துவாபரத்தில் கல்ப ஸூத்திரம் எழுதிய பரசுராமரும் வழிபட்டனர். தாம் வழிபட்ட முறையை குருசிஷ்ய பரம்பரைமூலம் தொடர்ந்து பரப்பினர்.*

*ஸ்ரீ சங்கரபகவத்பாதர்கள் பாரதவருஷத்தை வலம் வரும் போது பிலாகாசத்தில் தவம் புரிகிற தவக் காமாக்ஷி, பிரும்மாவால் பிரதிஷ்டைபெற்று ஆகாசபூபதியாலும் அவரது புதல்வரும் கணேசரின் அவதாரமுமான துண்டீரகணபதியும் ஆராதித்து பர்வோத்ஸங்களால் வழிபட்டுவந்த மூல காமாக்ஷி, ஹேமகாமாக்ஷி, வாணீ ரமாஸேவித காமாக்ஷி என்ற நால்வரையும் தரிசித்துவழிபட்டார்கள். ஸௌந்தரியலஹரீ முதலிய துதிகளால் துதித்தார்கள். துர்வாஸரால் வழிகாட்டப்பெற்று, காஞ்சியைத் துன்புறுத்திவந்த தீய சக்திகளே அடக்கி, காமாக்ஷியின் உக்கிரசக்தியையும் ஸௌமிய அருள்*

சக்தியாக்க ஸ்ரீ சக்ரராஜத்தைத் தேவியின் முன் உருவகப்படுத்தி வழிபாட்டு முறையைச் சீராக்கி, ஸர்வஜ்ஞ பீடத்தில் அமர்ந்து காமகோடி காமராஜம் காமபீடம் என்று புகழ்பெற்ற பீடசக்தியைத் தன் குரு பீடத்தின் அதீச்வரியாக்கி ஸ்ரீ சாரதாமடம் அமைத்து ஸ்ரீஸுரேச்வரர், ஸ்ரீஸர்வஜ்ஞாத்மா என்ற மகான்களைக் ஜகத்குரு பீடத்தலைவர்களாக்கி ஸ்ரீகாமகோடி ஸாம்ராஜ்யத்தைக் காஞ்சியில் நிறுவினார்கள். அவர்கள் அமைத்த ஜகத்குருபரம்பரையில் வந்த ஸ்ரீமூகசங்கரேந்திரஸரஸ்வதீ ஸ்ரீசரணர்களே மூகபஞ்சசதீ இயற்றிய ஸ்ரீமூககவி, ருக்வேதம் ஓதுகிற குடும்பத்தில் பிறந்த ஊர் பெயர் அறிமுகமாகாத பிறவியிலேயே ஊமை, (அதனால் செவிடனுயுமிருப்பான்) சாடையாலேயே உலகுடன் பழகநேர்ந்தவன், உற்றார் உறவினரது இகழ்ச்சிக்கு ஆட்பட்டவன், ஆலயச் சூழ்நிலையில் தேவியைக்காண்கிற அநாதைச் சிறுவனாக வலம் வந்தவன், தேவியின் விக்ரக அழகில் ஆழ்ந்தவன், அதனைச் சைதன்யமுள்ள தாயாக, கருணையே வடிவானவளாக தேஜோமயமாகக் கண்டவன், ஒரு நாள் உள்ளத்தில் உணர்ச்சி பொங்கத் 'தாயே' என்று கூப்பிடமுயன்றவன் தன் தகுதிக் குறைவை நினைத்துக் குன்றி அழுதவன். இவன் முன் தாயான தேவி கன்னியாகக் காட்சிதந்து தன் திருவாயிலிருந்த தாம்பூலக்கலவையை அவனது திறந்தவாயில் உமிழ மூகரும் மஹாகவியும் ஜகத்குருவுமானார். 1600 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சி மூககவியின் மூகபஞ்சசதியின் மூலம் நம் முன் காணப்பெறுகிறது. அவர் பெரும் கவியானாலும் தம்மை மூகன் என்றே அறிமுகப்படுத்திக் கொள்கிறார். (ஆர்யா சதகம் 38,57, ஸ்துதி சதகம் 11,54,58)

தேவியின் அருளால் வாக்சித்தியும் தெய்வதரிசனமும் பெற்ற இவர் கி.பி. 398ம் ஆண்டில் ஸ்ரீ காமகோடிபீடத்தின் இருபதாவது ஆசாரியராக 39 ஆண்டுகள் திகழ்ந்து கி.பி.437ல் தாத்ரு வருஷம் சிராவணபௌர்ணமியில் சித்தி பெற்றார்கள் எனக் காஞ்சீபீடத்து வரலாறு கூறுகின்றது.

மந்திரம், தந்திரம், யந்திரம், கிரியை, சரியை, யோகம், குண்டலினீ, அத்வைதானுபவம், சிவ-சக்தி ஐக்யானுஸந்தானம், ஸ்ரீவித்யை எனப்பல படிகளில் ஆழ்ந்த உபாஸகருக்கான முடிந்த

முடிவான கருத்து இந்த சதகங்களில் ஆங்காங்கு தெளிந்த சொற்றொடரால் விளக்கப்பெறுவதைக் காணலாம்.

காஞ்சியில் முக்கிய லீலையாகத் தேவி காட்டியது சிவனுடன் தனது காதலும் அன்பும் ஊடலும் கலந்த விநோத விளையாட்டுகளே ! மன்மதனின் சத்துரு என்றும் திரிபுரம் எரித்தவர் என்றும் சிவபெருமானை அடிக்கடி நினைவூட்டி, அவர் வசமிழந்து தேவியிடம் பணிந்துநிற்கும் கோலத்தைக் காமாக்ஷி மூகருக்குக் காட்டியிருப்பாள். தான் சிவனிடம் அடங்கி கற்புக்கரசியாகப் பணிந்து வாழ்வதையும் காட்டியிருப்பாள். அதனால் இந்த 500 சுலோகங்களிலும் பெரும்பாலும் மன்மதனிடம் தேவி காட்டிய பரிவு விளக்கப்பெறுகிறது. காமாக்ஷி ! தாயே ! என்று அவர் 300 சுலோகங்களில் விளித்துத் தேவியிடம் தன் உள்ளக்கிடக்கையைத் தெரிவித்துக் கொள்கிறார்.

காஞ்சி நகரும் கம்பைநதிக்கரையும் தேவியின் மனத்திற்கு மிகவும் பிடித்த இடம் என்பதை பெரும்பாலான சுலோகங்கள் விளக்குகின்றன. காமகோடி, காமபீடம் என்ற பீடச் சிறப்பும் பலஇடங்களில் காண்கின்றன.

தனக்குக் குருவாக (ஆர்யா 56,60,83,97, பாதாரவிந்த71) குலதைவதமாக (ஆர்யா 63) அவர் காமாக்ஷியைக் காண்கிறார். தேவியால் பாதுகாக்கப் பெறத் தனக்கு உரிமை உண்டு (ஆர்யா 71) என்கிறார். அவளிடமே தான் லயமடைவதை உணர்கிறார். (ஆர்யா-72) தனது ஏக்கத்தையும் எதிர்பார்வையையும் பல சுலோகங்களால் தேவியிடம் தெரிவிக்கிறார்.

இந்த சதகங்களை பக்தியுடன் தெய்வநிலை உணர்வுடன் படிக்கும் போது நாமும் மூகரின் நிலையிலிருந்து சொல்வதாக, மூகர் நமக்குப் பிரதிநிதியாகத் தேவியிடம் விண்ணப்பிப்பவராக, தேவியை நேரில் கண்டுகளிப்பவராக இருப்பதை உணர முடிகிறது.

श्रीगुरुभ्यो नमः

श्रीकामाक्ष्यै नमः

मूककविना विरचिता

# मूकपञ्चशती

## (१) आर्याशतकम्

மூக கவி இயற்றிய

# மூகபஞ்சஶதீ

## (1) ஆர்யாசதகம்.

कारणपरचिद्रूपा काञ्चीपुरसीम्नि कामपीठगता ।
काचन विहरति करुणा काश्मीरस्तबककोमलाङ्गलता ॥ १ ॥

காரண பரசித்ரூபா காஞ்சீபுரஸீம்நி காமபீடகதா ।
காசன விஹரதி கருணா காஶ்மீர ஸ்தபக கோமளாங்கலதா ॥ 1

*காஞ்சீபுரத்தின் எல்லையினுள் காம பீடத்தில் அமர்ந்தவளாக, காச்மீரத்துக் குங்குமப்பூங்கொத்து போன்ற மேனி நிறமும் கொடி போன்று துவள்கிற மென்மைமிக்க அவயவங்களும் உள்ளவளாக, உலகமனைத்திற்கும் ஆதி காரணமூலப் பொருளான - உலகிற்கு அப்பாற்பட்ட - மேம்பட்ட - சித்வடிவினளாக, கருணையே உருவான ஒருவள் விளையாடுகிறாள்.*

*ஜீவனிடம் துலங்குகிற அறிவு தேவியின் சித்சக்தியின் துளி. ஜீவனிடம் மூன்றுவிதமாக சித்சக்தி துலங்குகிறது. (1)* இந்திரியஜ்ஞானம், *கண் முதலிய பொறிகள் மூலம் பெறுவது. (2)* விஜ்ஞானம் *- பொறிகளால் பெற்றதை மனம் ஏற்று அறிவிடம் சேர்த்து சித்தத்தின் நினைவாற்றலில் பரிசோதித்துத் தேர்ந்த அறிவு. இவ்விரண்டும் (ஜ்ஞானமும் விஜ்ஞானமும்)* கரணஜ்ஞானம். *கல்வியாலும் பயிற்சியாலும் பெறுகிற அறிவும்*

இதிலடங்கும். (3) **பிரஜ்ஞானம்** - ஜீவாத்மாவின் இயல்பான சுய அறிவு, ஒவ்வொரு பிறவியிலும் தொடர்வது. முன் வாஸனைக்கலப்பிருந்தால் அஜ்ஞானம். வாஸனக்ஷயம் ஏற்பட சுத்த ஜ்ஞாநம். இது தனி ஜீவனின் வ்யஷ்டி ப்ரஜ்ஞானம். ஜீவஸமஷ்டியின் பிரஜ்ஞாநம் என்பது, சித்ஶக்தியின் உருவகம்.

தேவியிடமுள்ள சித்ஶக்தி உலகிலும் பிரதிபலிக்கிறது. படைப்பவரான ப்ரம்ஹா, அவரது துணைவி ஸரஸ்வதி, காப்பவரான விஷ்ணு, அவரது துணைவி லக்ஷ்மீ, லயமடையச் செய்பவரான ருத்ரர், அவரது துணைவியான கௌரி என்ற அறுவரும் சித் ஶக்தியின் அம்சங்களே. **''ஸ்ருஷ்டிகர்த்ரீ ப்ரம்ஹரூபா, கோப்த்ரீ கோவிந்தரூபிணீ, ஸம்ஹாரிணீ ருத்ரரூபா''** (ல.ஸ) இவற்றைக்கட்டுப்படுத்துகிற ஈஶ்வரரும் ஸதாஶிவரும் சித்ஶக்தியின் அம்சங்களே. **''திரோதானகரீஈஶ்வரீ , ஸதா ஶிவா அனுக்ரஹதா''** (ல.ஸ.) இந்த சித் ஶக்தி **சித்** என்ற பரம் பொருளின் விமர்சநிலை. இவ்வைந்து பணிகளுக்கும் அப்பாற்பட்ட ப்ரகாஶ நிலையே **பரா சித்**. ஸாக்ஷியாக அந்தர்யாமியாக பரமாத்மாவாக ஆத்மாவாகத் தோன்றுகிற சித்திற்கும் மூலகாரணம். **காரண பரசித்ரூபா.**

தோற்றம் காலம் தேசம் குணம் என்ற எந்த குறிப்பீட்டிற்கும் உட்படாத அந்த பரசித்தே மெல்லியலாளாக, காஞ்சீயில் காமபீடத்தில் அமர்ந்துள்ளவளாகத் தோன்றுகிருள். இதற்கு அவளது லீலையும் ஜீவனின் அத்ருஷ்டமும் ஜீவனிடம் அவள் கொண்டுள்ள கருணையும் காரணம். கருணைதான் தாயான அவளது இயல்பு. தர்மத்திற்கும் தர்மிக்குமிடையே வேற்றுமை உணரப்படும்போதே தனித்து உணரமுடியாத நிலைகாரணமாக, இரண்டும் ஒன்றே என்ற உணர்வும் வரலாம். அதனுல் அவள் கருணையே காமாக்ஷி என்ற தோற்றம்.

தேவியின் மேனி செம்மையே உருவானது. விளக்கமற்ற மூல (அவ்யக்த) ஒளி நிறமற்றது. அது ப்ரகாஶம். அதுவே விளக்கத்திற்கு உட்படும் போது செம்மை என்ற விமர்சம். **''நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத்ப்ரம்ஹாண்ட மண்டலா''. (1)**

कंचन काञ्चीनिलयं करधृतकोदण्डबाणसृणिपाशम् ।
कठिनस्तनभरनम्रं कैवल्यानन्दकन्दमवलम्बे ॥ २ ॥

**கஞ்சன காஞ்சீ நிலயம் கரத்த்ருத கோதண்டபாண ஸ்ருணிபாஶம் ।**
**கடினஸ்தனபர நம்ரம் கைவல்யானந்த கந்தம் அவலம்பே ॥ 2**

*வில்லும் அம்பும் அங்குசமும் பாசமும் கைகளில் தாங்கியுள்ளதும், இறுகிய மார்பகத்தின் சுமையால் முன்புறம் தாழ்ந்ததும் காஞ்சியில் மறைந்துள்ளதும் எந்தக்குறிப்பீடுமற்ற பேரானந்தக் கிழங்குமானதொன்றை அண்டிநிற்கிறேன்*

*ஸ்ரீலலிதா காமேஶ்வரீ ஸ்ரீமாதா என்ற பலநாமங்கள் காமாக்ஷீ தேவியைக் குறிக்கும். வில்லும் அம்பும் கீழிருகைகளிலும் அங்குசமும் பாசமும் மேலிருகைகளிலும் கொண்டவள். மனமே வில். இந்திரியங்கள் மூலம் பெறுபவையும் இந்திரியங்களின் மூலதத்துவமுமாகிய ஶப்தம் ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் (ஒலி, தொடுஉணர்ச்சி, உருவம் நிறம், சுவை, மணம்) என்ற ஐந்தும் அம்புகள். ராகநிலையடைந்த இச்சையே பாசம். இச்சையானது காமமாக ராகமாக த்ருஷ்ணாவாக விரிவடைந்தபின் அதற்குத் தடைநேரின் கோபமாக க்ரோதமாக மன்யுவாக விரிவடையும். (இச்சை எனும் விருப்பம் வலிவடைந்து தீராத அவா என்ற ராகமாகி, அதுவும் வலிவடைய திருஷ்ணா என்ற வேட்கையாகிறது. கோபம் வலிவடைய வெறி நிலையில் க்ரோதமாகி ஆழ்மனத்திலுள்ள கோபமான மன்யுவாகிறது.) இச்சைக்கு விரும்பியபொருள் பெறுவதும், விரும்பியதைப் பெற்றதும் மனமடங்கி மறுபடி விருப்பமின்றி அவா இன்றி, பற்றின்றி, வேட்கையின்றி நிறைவு பெறுவதும் இருமுனைகள். பாஶத்திற்கும் இருமுனைகள். அது ஆயுதமாகும் போது இருமுனைகளும் கைவிரல்களில் அடங்கிநிற்கும். க்ரோதமாகும் போது, கோபத்திற்குக் காரணமாவதை உற்றுநோக்கி, (ஆகாரம்) அதனைத்துறட்டியால் யானையை அடக்குவதுபோல் அடக்குகிற அங்குசம். இதுவாஸனாமயமான தேவியின் தத்துவ சரீரம்.*

*ஆநந்தமே சிருங்காரம் தொடங்கி ப்ரும்மானந்தம் வரை விரிகிறது. ப்ரும்ஹானந்த ஸப்ரம்ஹசாரி என காமஸுகத்தை*

அலங்கார ஶாஸ்த்ரம் கூறும். இறுகிய மார்பகச் சுமையால் தளர்ந்த நிலை சிருங்காரமாயினும் ப்ரம்மானந்தமாகிறது. ஸுகமனைத்தும் தன்னைக்காட்டினும் வேறுபட்டதொன்றைக் காரணமாக எதிர்பார்க்கும். உணவால் சுகம், உறவால் சுகம் என. ஆத்மநிலை உணர்வு ஒன்று தான் தன்னைக் காட்டிலும் வேறுபட்டதொன்றை எதிர்பாராத சுகம். கேவலன் - தனிப்பட்டவன் - ஆத்மா ஒன்று தான். வேறு ஒருமூலப்பொருளையும் காரணமாகக் காட்டாதது. அதன் நிலை கைவல்யம். அதனால் பெறுவது ஆத்மாவாக உணர்வதான ஆனந்தம். கிழங்கு வேர் என்று மூலத்திற்கு இருநிலைகள் உண்டு. வேரிலிருந்து வெளிக்கிளம்பியது மட்டும் சுவைக்கத் தகும். கிழங்கும் கிழங்கிலிருந்து வெளியானதும் சுவைக்கத் தகும். அதுபோல் இங்கு ஆனந்தம் வேறு, கிழங்கு வேறு என்ற நிலைஇல்லை. கிழங்கும் ஆனந்தமே. அதிலிருந்து முளைத்த தண்டு காய்கனி இலை என அனைத்தும் ஆனந்தமே. இந்த ஆனந்தமாகிய இறுகிய ஆனந்தகனக் கிழங்கு தேவி. சிற்றின்பமும் பேரின்பமும் பெற - போகமும் மோக்ஷமும் பெறத் தேவி அருள் புரிகிறாள்

சிவபெருமானுக்கும் பார்வதிக்குமிடையே கைலாஸத்தில் சிறு மனத்தாங்கல். சிவபெருமானது மடி மீது லீலையாக அமர்ந்த அம்பிகை பெருமானது கண்களைப் பொத்தினாள். ஸூர்யனும் சந்திரனுமான இருகண்களும் மறைய உலகில் இருள் சூழ்ந்தது. உடன் நெற்றிக்கண்ணான அக்நி மூலம் உலகம் ஒளிபெற்றது. கணநேரம் உலகிற்குத் துன்பம் நேரக்காரணமான தேவி ப்ராயஶ்சித்தமாக தவம்புரிய பூலோகம் வந்து காத்யாயனரின் பெண்ணாக வளர்ந்து காஞ்சியில் மாவடியில் சிவபிரானின் அடையாளமாக லிங்கம் அமைத்துக் கம்பை நதிக்கரையில் வழிபட்டாள். தன் தவநிலை கலையாதிருக்க, காஞ்சி நகரின் காம கோட்டத்தின் அடியில் உள்ள பிலத்தில் தங்கித் தவமியற்றினாள். பிலாகாசத்தில் மறைந்து தவமியற்றியதால் காஞ்சீ நிலயம் - காஞ்சீயில் மறைந்திருந்தவள் ஆனாள். (2)

चिन्तितफलपरिपोषणचिन्तामणिरेव काञ्चिनिलया मे।
चिरतरसुचरितसुलभा चित्तं शिशिरयतु चित्सुधा[1]धारा॥ ३॥
சிந்தித பல பரிபோஷண சிந்தாமணிரேவ காஞ்சிநிலயா மே।
சிரதரஸுசரித ஸுலபா சித்தம் ஶிஶிரயது சித் ஸுதா[2]தாரா॥ 3

*விரும்பி நாடியதை நிறைவுறச் செய்து அதன் பலனை விரும்பியதையே தருவதில் அவள் சிந்தாமணி ரத்தினம். நீண்ட நாட்கள் தொடர்ந்து நற்பணியாக அவளை வழிபடுவதால் மட்டும் எளிதில் அணுகக் கூடியவள். சித் ஶக்தி என்ற பேரறிவாற்றலையும் பேருணர்வையும் அமுததாரையாக (பரமசுகமாக) உலகெங்கும் பரவச் செய்பவள். காஞ்சியில் மறைந்துள்ளவள். அவள் என் உள்ளத்தைக்குளிரச் செய்யட்டும்.*

*அம்பாள் காஞ்சியில் பிலாகாஶமாக மறைந்திருந்தவள் ப்ரும்மதேவனின் வழிபாட்டில் மகிழ்ந்தாள். ப்ரும்மா இந்த வழிபாட்டைத் தொடர்ந்து நடத்த விரும்பினார். அம்பாளுக்கு அர்ச்சித்த ஒரு தாமரைப் பூவை வானில் வீசினார். அது வானில் சென்று அங்கு மலர்ந்து பூமியைத் திரும்ப அடைந்ததும் மானிட உருக்கொண்டது. ஆகாச பூபதி எனப்பெயரிட்டு அவனிடம் பிரும்மா காஞ்சீமண்டலத்தின் ஆட்சியை ஒப்படைத்தார். ஆகாசபூபதி நாட்டில் பரவியிருந்த துர்பிக்ஷத்தைப் போக்கவும் தனக்கு நன்மகன் பிறக்கவும் விரதமிருந்தான். நாட்டில் காலத்தே மழைபெய்தது. விநாயகப்பெருமானின் அம்சத்தில் அவருக்கு நன்மகன் பிறந்தான். மகிழ்ச்சியுற்ற அரசன் துண்டீரன் என்று அவனுக்குப் பெயரிட்டான். அன்னதானம் செய்தான். ஸுமங்கலிப்பெண்களின் இடையே காமாக்ஷியும் அமர்ந்து உணவருந்தினாள். உடன் அன்னதானப் பந்தலுக்கு வெளியே பொன்மாரி பெய்தது.*

*உணவு தயாரிப்பதற்கென அரிசியைக்களையும் போது ராணியின் கை வளையிலிருந்த ஒருதங்கமணி அரிசியுடன் கலந்து அன்னமாகிப் பந்தியிலமர்ந்த தேவியின் இலையை அடைந்து அவள் வயிற்றினுள் சென்றதால் பொன்மாரி பெய்ததாக*

 *1. चित्सुखा 2. சித்ஸுகா*

*சிசுவாயிருந்த துண்டீரன் விளக்கி அன்னை உண்ட இலையைத் தவழ்ந்து சென்று காட்டினான். அந்த இலைக்கருகில் அமர்ந்து உண்ட பெண்மணி மறைந்ததை உணர்ந்த அரசன் தேவியே தன் விருப்பத்தை நாடியதற்கு அதிகமாக வழங்கிய சிந்தாமணி என உணர்ந்தான். அவனும் அவனது மகனான துண்டீரனும் பேரரசர்களாகி மிகச்சிறப்புடன் காமாக்ஷியை வழிபட்டுவந்தனர்.*

*குண்டலினீயோக முறையில் மூலாதாரத்தில் கனன்று கொண்டிருக்கிற சக்தியை எழுப்பி ஆஜ்ஞை வரை கடக்கச்செய்து ஸஹஸ்ராரகமலத்தில் சிவதத்துவத்துடன் இணைக்க அந்த சிவ சக்தியோகம் அமுத தாரையாகி உடல் முழுவதும் பரவிப்பேரானந்தம் தரும். அந்த சித்சக்தியின் அமுதப் பெருக்கே தேவி.* **சித்ஸுதாதாரா.** *(3)*

**कुटिलकचं कठिनकुचं कुन्दस्मितकान्ति कुङ्कुमच्छायम् ।**
**कुरुते विहृतिं काञ्च्यां कुलपर्वतसार्वभौमसर्वस्वम् ॥ ४ ॥**

**குடிலகசம் கடினகுசம் குந்தஸ்மிதகாந்தி குங்குமச்சாயம் ।**
**குருதே விஹ்ருதிம் காஞ்ச்யாம் குலபர்வத ஸார்வபௌம**
**ஸர்வஸ்வம் ॥ 4**

*சுருண்ட கேசங்கள் கொண்டது, இறுகிய மார்பகம் கொண்டது, முல்லையைப்போல் வெளுத்த புன் சிரிப்பால் அழகானது, குங்குமப்பூபோன்று சிவந்தமேனி நிறமுள்ளது, குலபர்வதங்களின் பேரரசரான ஹிமவானின் அனைத்துச் செல்வமுமான அது காஞ்சியில் விளையாடுகிறது*

*முல்லைப்பூபோல் வெளுத்த புன் சிரிப்பு. உதடு பிரியாமல் முகம் முழுதும் மலர்ந்து ஒலியற்றுபாவனையால் வெளிப்படுவது* **மந்த ஸ்மிதம்.** *கள்ளமும் கபடுமற்ற சிரிப்பு. உள்ளத்து ஆனந்தப்பெருக்கை முகம் காட்டும் அழகு இது. மஹேந்திரம், மலயம், ஸஹ்யம், சுக்திமான், ருக்ஷம், விந்தியம், பாரியாத்ரம், ஹிமவான் என்ற எட்டு குலபர்வதங்கள் பூமியைச் சிதறிப்போகாமல் தாங்குகின்றன. ஹிமவானை (இமயமலையை)*

*இவற்றிற்குத் தலைவனாகப் ப்ரும்மா நியமித்தார். சிவனுக்கு மனைவியாக விருக்கின்ற உமாவைப் பெற்றுத் தந்ததே இந்த நியமனத்திற்குக் காரணம். (4)*

पञ्चशरशास्त्रबोधनपरमाचार्येण दृष्टिपातेन।
काञ्चीसीम्नि कुमारी काचन मोहयति कामजेतारम्॥ ५॥

பஞ்சஶர ஶாஸ்த்ர போதன பரமாசார்யேண த்ருஷ்டிபாதேன।
காஞ்சீ ஸீம்நி குமாரீ காசன மோஹயதி காமஜேதாரம்॥ 5

*காஞ்சீயின் எல்லையினுள் ஒரு குமாரி காமசாஸ்திரத்தைப் போதிப்பதில் பேராசிரியராகிய தன் கடைக்கண் நோக்கால் காமனை வென்றவரையே மயக்குகிறாள்.*

*தாமரை, அசோகம், மா, நவமல்லிகை, நீல அல்லி என்ற ஐந்து பூக்கள் மன்மதனது பாணங்களாயின. முன்னர் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கச் சிவன்மீது அந்தபாணங்களைச் செலுத்தியபோது மன்மதன் சிவனது நெற்றிக்கண் நெருப்பால் அழிந்தான். தேவி அவனைச் சிவனருளால் உயிரூட்டினாள். உடலற்று அனங்கனான அவனைத் தன்கண்களில் தேவி கொண்டாள். அவளது கடைக்கண் நோக்கு மன்மதனுக்கே காம சாஸ்திரத்தின் உட் பொருளைப் போதித்தது. காமனையே எரித்துக் காமனை வென்றவராகப் புகழ்பெற்றவரை அந்தக் கண்பார்வை மயக்கியது. அவளது பார்வையின் மீதேறிச் சிவனின் மனத்தினுள் காமத்தைப்புகுத்திய பெருமை காமனுக்குக்கிட்டியது. (5)*

परया काञ्चीपुरया पर्वतपर्यायपीनकुचभरया।
परतन्त्रा वयमनया पङ्कजसब्रह्मचारिलोचनया॥ ६॥

பரயா காஞ்சீபுரயா பர்வதபர்யாய பீனகுசபரயா॥
பரதந்த்ரா வயமனயா பங்கஜ ஸப்ரம்ஹசாரிலோசனயா। 6

*மலைக்கு ஈடான பருத்த மார்பகத்தால் நிறைந்தவள். தாமரையை ஒத்த கண்களுள்ளவள், காஞ்சீயைத் தன் ஆட்சி நகராகக்*

கொண்டவள். அனைத்திற்கும் மேம்பட்டவளான அவளால் நாம் தன்நிலை (வசம்) இழந்தோம்.

அவளைக் கண்ட பேரானந்தத்தில் கரைந்து, தான் தனது என்ற உணர்வை இழந்தோம். (6)

ऐश्वर्यमिन्दुमौलेः ऐकात्म्यप्रकृति काञ्चिमध्यगतम् ।
ऐन्दवकिशोरशेखरं ऐदंपर्यं चकास्ति निगमानाम् ॥ ७ ॥

ஐம்ஶ்வர்யம் இந்துமௌலே: ஐகாத்ம்ய ப்ரக்ருதி
காஞ்சிமத்த்யகதம் ।
ஐந்தவகிஶோர ஶேகரம் ஐதம்பர்யம் சகாஸ்தி நிகமானாம் ॥ 7

சந்திரனைச் சூடிய சிவபெருமானுடன் இரண்டறக்கலந்திணைந்த சக்தி, சிவபெருமானின் பேராளுமையின் வடிவம். வேதங்களின் உட்பொருள், இளஞ்சந்திரனைத் தன் சிரஸில் சூடிக்கொண்டது, அத்தகைய தொன்று காஞ்சியின் நடுவே அமர்ந்து காட்சி தருகிறது.

சிவன் சக்தியின்றி இயங்கமாட்டார். சிவனைப் பிரிந்து சக்தி இயங்கமாட்டாள். இருவராயினும் எண்ணத்திலும் சொல்லிலும் செயலிலும் ஒன்றானவர்கள். சிவனது பேராளுமை எனும் ஈச்வரநிலை சக்தியால் வெளிப்படுகிறது. இருவரின் ஒற்றுமை பிறை சூடியதாலும் வெளிப்படுகிறது.(7)

श्रितकम्पासीमानं शिथिलितपरमशिवधैर्यमहिमानम् ।
कलये पाटलिमानं कञ्चन कञ्चुकितभुवनभूमानम् ॥ ८ ॥

ஶ்ரிதகம்பா ஸீமானம் ஶிதிலித பரமஶிவ தைர்ய மஹிமானம் ।
கலயே பாடலிமானம் கஞ்சன கஞ்சுகித புவன பூமானம் ॥ 8

கம்பையாற்றின் கரையில் அமர்ந்தது, சிவபெருமானின் பெருமைமிக்க மன உறுதியை தளர்த்தியது, அனைத்து புவனங்களையும் தன் சட்டையாக்கிக் கொண்டது, இத்தகைய வெண்சிவப்பு நிறமுள்ளதொன்றை உள்ளத்தில் உருவகப்படுத்துகிறேன்.

சிவபெருமானது கண்களை விளையாட்டாகத் தன் கைகளால் மூடிய குற்றத்தின் கழுவாயாகச் சிவனைவிட்டுப்பிரிந்த தேவி

*காஞ்சியில் கடுந்தவத்தில் ஆழ்ந்தாள். சிவன் அவளறியாமல் பின் தொடர்ந்து அவளது தவநிலை உறுதியைச் சோதிக்கத் தன் தலையிலுள்ள கங்கையைக் காஞ்சியில் வெள்ளமாக ஓடச்செய்தார். தேவி அதனைக்கண்டு உடல் நடுங்கினுள். கம்பத்தை (நடுக்கத்தை)த்தந்ததால் அந்த ஆறு கம்பா நதி எனப் பெயர்பெற்றது. ஆற்று வெள்ளத்தைத் தடுக்கத் தன் சக்திகளில் ஒருவளைத் தேவி ஏவினுள். அவள் பிரளயபந்தினி என்ற காளியாகித் தனது கையிலிருந்த கபாலத்தில் அதனை அடக்கினுள். சிவபெருமான் கபாலத்தில் அடங்கிய வெள்ளத்தை மீண்டும் பெருக்கெடுத்தோடச் செய்தார். நாராயணன் விசுவரூபம் எடுத்து ஆகாயத்தில் முடியும், கழுத்தில் சந்திரனுமாக வானளாவ நின்றும் தடுக்க இயலாத போது சிவனது அருள்வேண்டும்படி தேவியைத் தூண்டினுர். (நிலாத்துண்டப் பெருமாள்.) வேறுவழியின்றிக் கங்கை மணலாலான சிவலிங்கத்தைத் தேவி மார்புறத் தழுவிக் காத்துக் கொண்டே சிவனை வழிபட்டு மணாளனாக்கிக் கொண்டாள். பின் அந்த கம்பையாற்றங்கரையையே தன் இருப்பிடமாக்கிக் கொண்டனள்.*

புவனங்கள் *14. ஜீவனது 5 கோசங்கள் போல் விராட் புருஷனுக்குப் புவனங்கள் கோசங்கள். சட்டை ஆளை மறைக்கும். தேவியின் தத்துவம் வெளிப்படையாகத் தெரியாமலிருக்க புவனம் அவள்மீது சட்டையாக மறைக்கிறது. சட்டையான உலகம் தெரியும் வரை தேவி புலப்படமாட்டாள். (8)*

आद्दतकाञ्चीनिलयां आद्यां आरूढयौवनाटोपाम्।
आगमवतंसकलिकां आनन्दाद्वैतकन्दलीं वन्दे ॥ ९ ॥

ஆத்ருத காஞ்சீநிலயாம் ஆத்யாம் ஆரூடயௌவனடோபாம்।
ஆகமவதம்ஸ கலிகாம் ஆனந்தாத்வைதகந்தலீம் வந்தே ॥ 9

*காஞ்சீயில் உறைவதில் பேரார்வமுள்ளவள். யௌவனத்தின் ஆரம்பநிலையால் மதர்த்தவள். உபநிடதங்களாகிய பூமொட்டுகள் சூடிய அழகி, இரண்டற்றிருப்பதால் வேறொன்றை உணராதபேரானந்தம் தன்னிடம் துளிர்விடச் செய்தவள். உலகின் முன்னவருக்கும் முன்னவள். அவளை வணங்குகிறேன்.*

*வளர்ச்சியைக் காட்டுகிற பாலியமோ தேய்வைக் காட்டுகிற முதுமையோ கண்டிராதவள்.* ''**தருணீ**'' ''**நித்யயௌவநா**'' '**பூர்ணா**' *நிரம்பியவள். (லஸ.) (9)*

तुङ्गाभिरामकुचभरशृङ्गारितमाश्रयामि काञ्चिगतम्।
गङ्गाधरपरतन्त्रं शृङ्गाराद्वैततन्त्रसिद्धान्तम्॥ १० ॥

துங்காபிராம குசபர ஶ்ருங்காரிதம் ஆஶ்ரயாமி காஞ்சிகதம் ।
கங்காதர பரதந்த்ரம் ஶ்ருங்காராத்வைத தந்த்ர ஸித்தாந்தம் ॥ 10

*மேடிட்டு அழகுற்ற மார்பகத்தால் சிருங்காரம் மேலிடச் செய்தது, காஞ்சீயில் அமர்ந்தது, கங்கையைத்தாங்கிய சிவனிடம் தன்னியல்பை இழந்தது, சிருங்காரத்தால் மன ஒற்றுமையுடன் இணைந்துவாழ வகை கூறுகிற காம சாஸ்த்ரத்தின் உட்கருத்தாக விளங்குவது. இத்தகைய தொன்றைப்பற்றி நிற்கிறேன்.*

*கங்காதரனிடம் தன் வசமிழந்த தேவி தன் சிருங்காரத்தால் கங்காதரனையும் வசமிழக்கச் செய்கிறாள். பேரானந்தம் தருகிற - அத்வைத அனுபவம் தருகிற காமசாஸ்த்ரத்தின் உட்கருத்துமாகிறாள். ஸஹஸ்ராரகமலத்தில் தேவி சிவனுடன் ஸமரஸபாவனையுடன் விளையாடுகிறாள். ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே (ஸௌ.ல.) (10)*

काञ्चीरत्नविभूषां कामपि कंदर्पसूतिकापाङ्गीम्।
परमां कलामुपासे परशिववामाङ्कपीठिकासीनाम्॥ ११ ॥

காஞ்சீரத்னவிபூஷாம் காமபி கந்தர்ப ஸூதிகாபாங்கீம் ।
பரமாம் கலாமுபாஸே பரஶிவ வாமாங்க பீடிகாஸீனாம் ॥ 11

*காஞ்சீநகரின் ரத்தின அணி, மன்மதனைத் தோற்றுவிக்கின்ற கடைக்கண்பார்வையுள்ளவள். பரம்பொருளின் பேரியக்கத்திற்கான பரா சக்தியாகிய கலை, பரமசிவனின் இடதுமடியைத் தனக்குப் பீடமாக்கி அதன் மீது அமர்ந்தவள். அந்த ஒருவளை வழிபடுகிறேன்.*

*உலகமாகிய பெண்ணின் ஒட்டியாணம் காஞ்சீ. காஞ்சீக்கு ஒட்டியாணம் காமாக்ஷி. சிவகோபத்தால் அழிந்த காமனை*

*மறுபடிபெற்றெடுத்த பெருமை அவளது கடைக்கண் நோக்கிற்கு உண்டு. (11)*

कंपातीरचराणां करुणाकोरकितदृष्टिपातानाम्।
केलीवनं मनो मे केषांचिद्भवतु चिद्विलासानाम्॥ १२॥

கம்பாதீர சராணும் கருணுகோரகித த்ருஷ்டிபாதாணும் ।
கேளீவனம் மணே மே கேஷாஞ்சித் பவது சித்விலாஸாணும் ॥12

*கம்பைக் கரையில் உலா வருபவை, கருணை மொட்டிட்டு வெளிப்படுகிற பார்வை கொண்டவை, அத்தகையதொரு சித்சக்தியின் வெளிப்பாடுகளில் சிலவற்றிற்காவது என்மனம் விளையாட்டுத்தோட்டமாகட்டும்.*

*சித்சக்தியின் விளையாட்டுகள் எண்ணற்றவை. அவையனைத்தையும் கண்டுகளிக்க என்மனத்தால் இயலாது. சிலவற்றையாவது காண தேவி அருளட்டும். (12)*

आम्रतरुमूलवसतेः आदिमपुरुषस्य नयनपीयूषम्।
आरब्धयौवनोत्सवं आम्नायरहस्यमन्तरवलम्बे॥ १३॥

ஆம்ரதருமூல வஸதே: ஆதிம புருஷஸ்ய நயன பீயூஷம் ।
ஆரப்த யௌவனேத்ஸவம் ஆம்ஞயரஹஸ்யம்
அந்தரவலம்பே ॥ 13

*மாமரத்தினடியில் வசிக்கிற அந்த ஆதிபுருஷனது கண்களுக்கு அமுதமானதும் யௌவனத்தின் கொண்டாட்டத்தைத் தொடங்கியுள்ளதும் உபநிடதங்களின் உட்பொருளுமானதொன்றை உள்ளத்தில் இறுகப்பிடித்துள்ளேன்.*

*உலகமனைத்தும் பிரளயத்தில் கரைந்த போது, மறுபடி உலகம் தோன்ற சிவன் அதன் மூலக்கருவை ஒருமாங்கனியின் விதையிலிட்டுவைத்தார். பிரளயஜலத்தில் அந்த விதை மரமாகி நான்கு வேதங்களும் அதன் கிளையாகித் தழைத்துவளர்ந்தது. பிரளய ஜலத்தில் ஈசனின் லீலையைக் காணமூழ்கிய*

*மார்க்கண்டேயர் மாமரத்தின் கிளைகள் வழியே வேரைச் சென்றடைந்தார். வேருக்குள் புகுந்தவரின் எதிரே முருகப்பெருமான் மாம்பழம் சுவைத்துக்கொண்டிருந்தார். பிரளய காலத்திலும் நாசமடையாதபடி காஞ்சீநகரைத் தேவி காப்பாற்றுவதைக் கந்தன் தெரிவித்தார். பிரளயஜித் - பிரளயத்தை வென்றது என்ற அந்நகருக்குச் சிறப்புப்பெயர். அந்த மாமரம் பிரளயத்தில் அழியாத சிவனின் வடிவம். மஹாத்ரிபுர ஸுந்தரீ நாதனான காமேச்வரன் தான் அதன் விதையும் வேரும். அது ஒன்றே பிரளயத்தில் நிலைத்ததால் அது ஏகாம்ரம். அதன் நாதன் ஏகாம்ர நாதனாகிய பரமன். அவரே உலகின் ஆதிபுருஷன். அதன் அடியில் பதியின் யோகத்தை எதிர்நோக்கியவாறு இளமையின் தொடக்கத்தில் காணப்படுகின்ற உல்லாசத்துடன் தேவி தவம்புரிகிறாள். (13)*

अधिकाञ्चि परमयोगिभिरादिमपरपीठसीम्नि दृश्येन ।
अनुबद्धं मम मानसं अरुणिमसर्वस्वसंप्रदायेन ॥ १४ ॥

அதிகாஞ்சி பரமயோகிபிராதிம பர பீடஸீம்நி த்ருச்யேன ।
அனுபத்தம் மம மானஸம் அருணிம ஸர்வஸ்வ ஸம்ப்ரதாயேன ॥ 14

*காஞ்சீயில் மாபெரும் யோகிகளால் ஆதியான உயர்ந்த காமகோடிபீடத்தில் காணத்தக்கதாக, செம்மை நிரம்பி வழிகிறதாக, தொடர்ந்து வழிபடுவர்களால் உணரப்பெற்றதாக உள்ளதுடன் என்மனம் பிணைக்கப்பெற்றுள்ளது.*

*கருணை, இச்சாசக்தி, காமம், சிருங்காரரஸம் என அனைத்தும் செந்நிறத்துடன் விளங்குபவை. சிவதத்துவமான பிரகாசத்தின் விமர்சம் செம்மையே.* "லௌஹித்யம் தத் விமர்ஶ: ஸ்யாத்". (14)

अङ्कितशङ्करदेहां अङ्कुरितोरोजकङ्कणाश्लेषैः ।
अधिकाञ्चि नित्यतरुणीं अद्राक्षं काञ्चिदद्भुतां बालाम् ॥ १५ ॥

அங்கித ஶங்கர தேஹாம் அங்குரிதோரோஜ
கங்கணச்லேஷை: ।
அதிகாஞ்சி நித்யதருணீம் அத்ராக்ஷம் காஞ்சித் அத்புதாம்
பாலாம் ॥ 15 -

*மொட்டிட்ட மார்பகத்தின் நுனியாலும் வளையலாலும் சிவபெருமானது லிங்கவடிவில் அடையாள மிட்டவளும் என்றும் யுவதியும் வியப்புக்குரியவளுமானதொரு இளம்பெண்ணை காஞ்சீயில் கண்டேன்.*

*மாவடியில் கங்கைமணலாலான லிங்கவடிவில் சிவபெருமானை வழிபட்டுத் தவத்திலிருந்த தேவி கம்பா நதியின் வெள்ளத்தால் லிங்க உரு சிதையுமோ என்று பயந்து மார்பால் அணைத்துக் காத்தாள். நாரதர் சிவனது மனத்தைக் கவர பஞ்சபாணமந்த்ரங்களைத் தேவிக்கு உபதேசிக்க, தேவி அந்த மந்த்ரத்தை ஜபித்துத் தவம் செய்தாள். சிவன் மந்த்ரபலத்தால் தன்நிலை சரிவதை உணர்ந்து தவத்தைத் தடுக்க, சிரசில் உள்ள கங்கையைக் கம்பையாக்கி வெள்ளமாக ஓடச் செய்தார். தேவியின் மார்பக அணைப்பு, சிவனைத் தேவியின் பால் ஈர்ப்புகொள்ளச் செய்தது. அணைப்பால் மணல் லிங்கத்தில் ஏற்பட்ட பதிப்பை இன்றும் மறையாமல் காத்து, தேவியின் அன்பணைப்பை நினைவுபடுத்திக் கொள்கிறார். (15)*

मधुरधनुषा महीधरजनुषा नन्दामि सुरभिबाणजुषा।
चिद्वपुषा काञ्चिपुरे केलिजुषा बन्धुजीवकान्तिमुषा॥ १६ ॥

மதுரதனுஷா மஹீதரஜனுஷா நந்தாமி ஸுரபி பாணஜுஷா ।
சித்வபுஷா காஞ்சிபுரே கேளிஜுஷா பந்துஜீவ காந்திமுஷா ॥ 16

*இனிய வில் கொண்டதும், மலையிடம் பிறந்ததும், மணமிக்க அம்புள்ளதும் சித்சக்தியை உடலாகக் கொண்டதும் செம்பரத்தம்பூவின் நிறப்பொலிவைத் திருடிக்கொண்டதும் காஞ்சீபுரத்தில் கேளிக்கை கொண்டதுமானதொன்றால் ஆனந்தம் அடைகிறேன்.*

*வில் இனிய கரும்பு. அம்போ மணமிக்க செந்தாமரை, செங்கழுநீர். சிவந்த ஆம்பல், செவ்வல்லி, ஒட்டுமாம்பூ, என்ற பூக்கள். மேனி செம்பரத்தம் பூவின் நிறம். செம்மையே உருவான சித்சக்தியின் தோற்றம். மனக்களிப்பிற்கு வேறு என்ன தேவை ? (16)*

मधुरस्मितेन रमते मांसलकुचभारमन्दगमनेन ।
मध्येकाञ्चि मनो मे मनसिजसाम्राज्यगर्वबीजेन ॥ १७ ॥

மதுர ஸ்மிதேன ரமதே மாம்ஸல குசபார மந்தகமனேன ।
மத்த்யே காஞ்சி மனோ மே மனஸிஜ ஸாம்ராஜ்ய கர்வ பீஜேன ॥ 17

*காஞ்சீயின் நடுவே இனிய புன்சிரிப்புடன் பருத்த மார்பகச் சுமையால் தளர்ந்த மென்னடை கொண்டது. மன்மதன் தனது பேராட்சியில் கர்வமடையக்காரணமானது. அதில் என்மனம் களிப்புடன் ஈடுபடுகிறது.*

*மன்மதன் தேவியின் கருணைக்கு உரியவனுனதும் அவன் ஆட்சி தடையற்று நடந்தது. முன் சிவனிடம் பெற்ற தோல்வியால் குனிந்த அவனது தலை தேவியின் அழகால் சிவனைவென்ற மகிழ்ச்சியில் நிமிர்ந்தது. (17)*

धरणिमयीं तरणिमयीं पवनमयीं गगनदहनहोतृमयीम् ।
अम्बुमयीं इन्दुमयीं अंबां अनुकम्पं आदिमां ईक्षे ॥ १८ ॥

தரணிமயீம் தரணிமயீம் பவனமயீம் ககன தஹன
ஹோத்ருமயீம் ।
அம்புமயீம் இந்துமயீம் அம்பாம் அனுகம்பம் ஆதிமாம்
ஈக்ஷே ॥ 18

*கம்பைநதிக்கரையொட்டி, பூமி ஸூர்யன் வாயு ஆகாயம், அக்நி, வேள்வி புரிபவர், ஜலம், சந்த்ரன் என எட்டு உருவங்களில் காட்சிதருகிற ஆதித்தாயைக் காண்கிறேன்.*

*தேவி உலகமாகத் தானே தோன்றினுள். உலகத்தின் மூலப்பொருளானவை பூமி, ஜலம், அக்நி, வாயு, ஆகாசம் என்ற*

*ஐந்து பூதங்கள். இவை ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களாயின. சலநம் காலத்திற்கு உட்பட்டது. காலத்தைக் கட்டுப்படுத்துபவர் ஸூர்யனும் சந்த்ரனும். பௌதிகமான உலகிற்கும் காலத்திற்கும் நல்லிணைப்பு தருவது வேள்வி. வேள்விபுரிந்து உலகத்திற்கும் தெய்வநிலைக்கும் தொடர்பை ஏற்படுத்துபவரே மாந்தருள் உயர்ந்தவர். அவரும் தேவியின் வடிவானவரே. இந்த எட்டும் சிவனுக்கும் தேவிக்கும் மூர்த்திகள் என்பர். தேவியின் உருவத்தை இந்த எட்டிலும் காணலாம். (18)*

लीनस्थिति मुनिहृदये ध्यानस्तिमितं तपस्यदुपकम्पम् ॥
पीनस्तनभरमीडे मीनध्वजतन्त्रपरमतात्पर्यम् ॥ १९ ॥

லீன ஸ்த்திதி முனிஹ்ருதயே த்யான ஸ்திமிதம் தபஸ்யத்
உபகம்பம் ।
பீனஸ்தனபரம் ஈடே மீனத்த்வஜ த்ந்த்ர பரம தாத்பர்யம் ॥ 19

*வெளித் தொடர்பற்ற முனிவர் உள்ளத்தில் மறைந்துள்ளதும் கம்பையருகே தியானத்தில் அசைவற்று தவத்தில் ஈடுபட்டதும், பருத்த மார்பகம் கொண்டதும் காம சாஸ்த்ரத்தின் உட்பொருளுமானதொன்றைத் துதிக்கிறேன்.*

*இந்திரியங்களும் மனமும் வெளிநோக்கின்றி உள்ளடங்குவதே முனிவரின் இயல்பான மௌனம். மனம் அடங்கியதும் தியாநம் கூட, உடல் முதலியவற்றின் அசைவு நின்று தவம் கூடுகிறது. மனச்சலநமே உருவான காமசாஸ்த்ரத்தின் உட்பொருள் மஹாகாமமான முக்தியின்முறைகளிலும் தேர்ந்துள்ளது. (19)*

श्वेता मन्थरहसिते शाता मध्ये च वाङ्मनोतीता ।
शीता लोचनपाते स्फीता कुचसीम्नि शाश्वती माता ॥ २० ॥

ம்வேதா மந்த்தர ஹஸிதே மாதா மத்த்யே ச வாங்மனோதீதா ।
மீதா லோசனபாதே ஸ்ப்பீதா குசஸீம்னி மாம்வதீ மாதா ॥ 20

*இனிய புன் சிரிப்பில் வெண்ணிறமுள்ளவள், இடையில் சிறுத்தவள். சொல்லிற்கும் எண்ணத்திற்கும் உட்படாதவள். பார்வையில் குளிர்ந்தவள். மார்பகத்தில் புஷ்டிமிக்கவள். இவள் என்றும் நிலைத்துள்ள என் தாய். (20)*

पुरतः कदा नु करवै पुरवैरिविमर्दपुलकिताङ्गलताम् ।
पुनतीं काञ्चीदेशं पुष्पायुधवीर्यसरसपरिपाटीम् ॥ २१ ॥

புரத: கதா நு கரவை புரவைரி விமர்த புளகிதாங்கலதாம் ।
புனதீம் காஞ்சீதேசம் புஷ்பாயுத வீர்ய ஸரஸபரிபாடீம் ॥ 21

*சிவபெருமானது இறுகிய அணைப்பால் புல்லரித்த மென் மேனியாள், பூவை ஆயுதமாகக் கொண்ட மன்மதனின் வீர்யத்தைச் சுவைக்கிற நடைமுறை கொண்டவள். காஞ்சீயைப் புனிதப்படுத்துபவள். அவளை எப்போது என்முன் கொள்வேன் ? (காண்பேன் ?)*

*அவளது ஒவ்வொரு செயலிலும் சுவைமிக்க காமனின் பீடுநடை தெரிகிறது. (21)*

पुण्या कापि पुरन्ध्री पुंखित कन्दर्प संपदा वपुषा ।
पुलिनचरी कंपायाः पुरमथनं पुलकनिचुलितं कुरुते ॥ २२ ॥

புண்யா காபி புரந்த்ரீ புங்க்கித கந்தர்ப ஸம்பதா வபுஷா ।
புலிந சரீ கம்பாயா: புரமதநம் புலக நிசுலிதம் குருதே ॥ 22

*கம்பையின் மணல் திட்டுகளில் நடமாடுகிற புனிதமான குலஸ்திரீ அவள். மன்மதனின் செயல் நிறைவனைத்தையும் வேகமாகவெளிக்கொணர்கிற உடல் அமைப்பால், முப்புரம் எரித்தவனைப் புல்லரிப்பு செறிந்தவனாகச் செய்கிறாள்.*

*குலாங்கநா ஸதாசிவபதிவிரதா என்று புகழ்பெற்ற நற்குலத்துப்பெண். ஆற்றுமணலில் ஒய்யாரமாக நடந்து சிவனை மயக்குகிறாள். உடல் உள்ளம் காரணசரீரம் என்ற முப்புரமும் தூய்மைபெற அவற்றைச் சிவபெருமான் சுட்டெரிக்கிறார்.*

*திரிபுராரி திரிபுரதஹனர் என்று, இரும்பும் வெள்ளியும் தங்கமுமான வானில் செல்கிற மூன்று கோட்டைகளைப் பிற உதவி எதுவுமின்றி சிரிப்பால் சுட்டெரித்த வீரரான அவரை மயக்கியவள். (22)*

तनिमाद्वैतवलग्नं तरुणारुणसंप्रदायतनुलेखम् ।
तटसीमनि कंपायाः तरुणिमसर्वस्वं आद्यं अद्राक्षम् ॥ २३ ॥

தனிமாத்வைத வலக்னம் தருணாருண ஸம்ப்ரதாய தனுலேகம் ।
தடஸீமனி கம்பாயா: தருணிம ஸர்வஸ்வம் ஆத்யம்
அத்ராக்ஷம் ॥ 23

*மெலிவைத் தன் இயல்பாகக் கொண்ட இடையுள்ளது. இளம்ஸூர்யனின் செம்மையைத் தன் வம்சவழி உரிமையாகக் கொண்ட கோடுபோன்ற மெல்லியமேனி கொண்டது. இளமையின் பூரிப்பின் உருவம், அந்த ஆதிப்பொருளைக் கம்பைக்கரையில் கண்டேன். (23)*

पौष्टिक कर्मविपाकं पौष्पशरं सविधसीम्नि कम्पायाः ।
अद्राक्षं आत्तयौवनं अभ्युदयं कञ्चिदर्धशशिमौलेः ॥ २४ ॥

பௌஷ்டிக கர்ம விபாகம் பௌஷ்பஶரம் ஸவிதஸீம்னி
கம்பாயா: ।
அத்ராக்ஷம் ஆத்தயௌவனம் அப்ப்யுதயம் கஞ்சித்
அர்த்தஶஶிமௌளே: ॥ 24

*மன்மதன் தன் வளர்ச்சிக்கும் செழிப்பிற்குமாகப் புரிந்த நற்கருமங்களின் பலனானதும் சந்திரனைச் சூடியவரின் இளமைநிறைந்த பாக்கியமுமான அந்த ஆதிப்பொருளைக் கம்பைக்கரையில் கண்டேன்.*

*மன்மதன் தன் பெருமை நன்கு விளங்குவதன் பொருட்டுச் செய்த வேள்வியின் பலனோ இவள் ? அவளது அழகு இவ்வாறு சிந்திக்கத் தூண்டுகிறது. (24)*

संश्रितकाञ्चीदेशे सरसिजदौर्भाग्यजाग्रदुत्तंसे ।
संविन्मये विलीये सारस्वतपुरुषकारसाम्राज्ये ॥ २५ ॥

ஸம்ஶ்ரித காஞ்சீ தேஶே ஸரஸிஜ தௌர்பாக்ய ஜாக்ரத் உத்தம்ஸே ।
ஸம்வின்மயே விலீயே ஸாரஸ்வத புருஷகார ஸாம்ராஜ்யே ॥ 25

*அது காஞ்சீயைத் தன் இருப்பிடமாகக் கொண்டது. தாமரையின் பாக்யக்குறைவிற்குக் காரணமானவனை (சந்த்ரனை)க் கேச அணியாகக் கொண்டது. பேரறிவின் வடிவம் ஸரஸ்வதியின் சொல் வலிமையைத்தன் அரசுரிமையாகக் கொண்டது. அதனில் நான் லயமடைகிறேன்.*

*ஸரஸ்வதி வீணையில் பாட, அதைத் தேவி கேட்டுப் பாராட்ட அந்தப் பாராட்டுச்சொல் தேனூகிக் காதில் விழ, தனது பாட்டும் வீணையின் இனிய நாதமும் அதில் அமிழ்ந்து விட்டதாக ஸரஸ்வதி உணர்ந்ததும் வீணையை உறையில் இட்டாள். ஸரஸ்வதியின் சொல்லாட்சியை தேவியின் திருவடி அலம்பிய நீர் தரும். (25)*

मोदितमधुकरविशिखं स्वादिमसमुदायसारकोदण्डम् ।
आदृतकाञ्चीखेलनं आदिमं आरुण्यभेदमाकलये ॥ २६ ॥

மோதித மதுகர விஶிகம் ஸ்வாதிம ஸமுதாய ஸார கோதண்டம் ।
ஆத்ருத காஞ்சீக்கேலனம் ஆதிமம் ஆருண்யபேதம் ஆகலயே ॥26

*தேனீக்களுக்கு இனிதான பாணங்கள் (பூக்கள்) கொண்டது, இனிப்பின் செறிவைச் சாரமாகக்கொண்ட (கரும்பு) வில் ஏற்றது. காஞ்சீயில் விளையாடுவதில் ஆர்வமிக்கது. செம்மையின் சீரிய கலவை வடிவான அந்த ஆதிப்பொருளை உள்ளத்தில் உருவகப்படுத்துவேன். (26)*

उररीकृतकाञ्चिपुरीं उपनिषदरविन्दकुहरमधुधाराम् ।
उन्नम्रस्तनकलशीं उत्सवलहरीं उपास्महे शम्भोः ॥ २७ ॥

உரரீக்ருத காஞ்சி புரீம் உபநிஷதரவிந்த குஹர மது தாராம் ।
உன்னம்ர ஸ்தனகலஶீம் உத்ஸவலஹரீம் உபாஸ்மஹே
ஶம்ப்போ: ॥ 27

*காஞ்சீயைத் தன் உரிமையாக உறுதிசெய்து கொண்டவள். உபநிடதமாகிற தாமரையின் நடுவிலிருந்து பெருகுகிற தேன் தாரையானவள். மேடிட்டுச் சிறு கலசம் போன்றுள்ள மார்பகம் உள்ளவள். மங்களத்தின் தோற்றுவாயான சிவபெருமானின் கொண்டாட்ட அலையானவள். அவளை வழிபடுவோம். (27)*

एणशिशुदीर्घलोचनं एनःपरिपन्थि सन्ततं नमताम् ।
एकाम्रनाथजीवितं एवंपददूरमेकं अवलम्बे ॥ २८ ॥

ஏண ஶிஶு தீர்க்கலோசனம் ஏன: பரிபந்த்தி ஸந்ததம் நமதாம் ।
ஏகாம்ரநாத ஜீவிதம் ஏவம்பததூரம் ஏகம் அவலம்பே ॥ 28

*மான்குட்டியின் கண்களைப்போல் (பரபரப்பு மிக்க) நீண்டகண்கள் உள்ளது. தன்னை வணங்கியவரின் தீவினைக்கு எப்போதும் தடையாயிருப்பது. ஏகாம்ரநாதரின் உயிரானது. இவ்வண்ணமிருப்பாள் எனச் சொல்ல முடியாதது. அதனைப் பற்றுக் கோலாகக் கொண்டுள்ளேன்.*

'' ஏவமித்யாகமாபோத்த்யா'', ''ஏதத்ததித்யநிர்தேச்யா.''
*(ல.த்ரி) (28)*

स्मयमानमुखं काञ्चीमयमानं कमपि देवताभेदम् ।
दयमानं वीक्ष्य मुहुर्वयमानन्दामृताम्बुधौ मग्नाः ॥ २९ ॥

ஸ்மயமான முகம் காஞ்சீமயமானம் கமபி தேவதாபேதம் ।
தயமானம் வீக்ஷ்ய முஹுர் வயம் ஆனந்தாம்ருதாம்புதௌ
மக்னா: ॥ 29

*மென்மையுடன் சிரித்த முகம் கொண்டதும், காஞ்சீயை வந்தடைந்ததும் பரிவு காட்டுவதுமான ஒரு சிறந்த தேவதையை அடிக்கடி கண்டு களித்து நாம் ஆனந்த அமுதக்கடலில் மூழ்கி விட்டோம். (29)*

कुतुकजुषि काञ्चिदेशे कुमुदतपोराशिपाकशेखरिते।
कुरुते जनो मनोऽयं कुलगिरिपरिबृढकुलैकमणिदीपे॥ ३०॥

குதுகஜுஷி காஞ்சிதேஶே குமுத தபோராஶி பாக ஶேகரிதே ।
குருதே ஜநோ மனோऽயம் குலகிரி பரிப்ருட குலைக மணிதீபே ॥ 30

*காஞ்சீதேசத்திலிருக்க ஆர்வமுள்ளதும், அல்லிப்பூவின் தவக்குவியலின் பலனாகக்காட்சி தருகிற சந்த்ரனைத் தலையிலணிந்ததும், குலபர்வதங்களின் சிறந்த தலைவனின் குலத்திற்கு ஒரே விளக்காக ஒளி தருவதுமானதொன்றில் இவன் மனத்தைச் செலுத்துகிறான் (30)*

वीक्षेमहि काञ्चिपुरे विपुलस्तनकलशगरिमपरवशितम्।
विद्रुमसहचरदेहं विभ्रमसमवायसारसंनाहम्॥ ३१॥

வீக்ஷேமஹி காஞ்சிபுரே விபுல ஸ்தனகலஶ கரிம பரவஶிதம் ।
வித்ரும ஸஹசர தேஹம் விப்ரம ஸமவாய ஸார ஸன்னாஹம் ॥ 31

*பருத்த மார்பகத்தின் கனத்தால் தன்னிலை இழந்து குனிந்ததும், பவழம்போன்ற மேனி கொண்டதும், இளமையின் பரபரப்புடன் காமலீலையில் ஆயத்தமானதுமானதொன்றைக் காஞ்சீயில் காண்கிறோம். (31)*

कुरुविन्दगोत्रगात्रं कूलचरं कमपि नौमि कम्पायाः।
कूलङ्कषकुचकुम्भं कुसुमायुधवीर्यसारसंरम्भम्॥ ३२॥

குருவிந்த கோத்ர காத்ரம் கூலசரம் கமபி நௌமி கம்பாயா: ।
கூலங்கஷ குசகும்பம் குஸுமாயுத வீர்ய ஸார ஸம்ரம்ப்பம் ॥ 32

*மாணிக்கம் போன்ற மேனி நிறம்கொண்டதும் கம்பையின் கரையில் நடமாடுவதும் இருவிலாப்புறம்வரை பரவிய மார்பகம் கொண்டதும் மன்மதனின் முழுத்திறமையின் வேகத்துடன் காண்பதுமான தொன்றை வணங்குகிறேன். (32)*

कुड्मलितकुचकिशोरैः कुर्वाणैः काञ्चिदेशसौहार्दम्।
कुङ्कुमशोणैर्निचितं कुशलपथं शंभुसुकृतसंभारैः ॥ ३३ ॥

குட்மளித குச கிஶோரை: குர்வாணை: காஞ்சிதேஶ
ஸௌஹார்தம் ।
குங்கும ஶோணை: நிசிதம் குசல பதம் ஶம்புஸுக்ருத
ஸம்ப்பாரை: ॥ 33

*மொட்டு போன்று இளமை நிரம்பிய ஸ்தநங்களுடையதும், காஞ்சீதேசத்தில் மிகுந்த நட்பு கொண்டதும், குங்குமப்பூவின் அடர்ந்த செம்மை கொண்டதும், சிவபெருமானின் புண்யக்குவியலுமானதொன்றுடன் நமது க்ஷேமம் இறுக இணைக்கப்பட்டிருக்கிறது. (33)*

अङ्कितकचेन केनचिदन्धङ्करणौषधेन कमलानाम्।
अन्तः पुरेण शम्भोरलंक्रिया कापि कल्प्यते काञ्च्याम्॥ ३४ ॥

அங்கித கசேன கேனசித் அந்தங்கரணௌஷதேன கமலானும் ।
அந்த: புரேண ஶம்ப்போ: அலங்க்ரியா காபி கல்ப்யதே
காஞ்ச்யாம் ॥ 34

*தாமரை இதழைக் குவியச் செய்கிற மருந்தான சந்திரனால் அடையாளமிடப்பட்ட கேசங்கள் உள்ள (பிறை சூடிய) சிவபெருமானின் மனைவியால் காஞ்சீ அழகூட்டப்படுகிறது. (34)*

उररीकरोमि [1] सन्ततमूष्मलफालेन लालितं पुंसा।
उपकम्पमुचितखेलनं उर्वीधरवंशसंपदुन्मेषम्॥ ३५ ॥

உராரீகரோமி [2]ஸந்ததம் ஊஷ்மல பாலேன லாலிதம் பும்ஸா ।
உபகம்பம் உசிதகேலனம் உர்வீதர வம்ஶ ஸம்பத்
உன்மேஷம் ॥ 35

---

1. ऊरीकरोमि 2. *ஊரீகரோமி*

*நெருப்பை நெற்றியில் கொண்ட ஆண்மகனுல் சீராட்டப்பெறுவதும் கம்பையின் அருகே விளையாட்டில் ஈடுபட்டதும் மலையரசனின் வம்சத்தின் செழிப்பை விளங்கச் செய்வதுமான தொன்றைத் த்யானிக்கிறேன். (35)*

अङ्कुरितस्तनकोरकं अङ्कालङ्कारं एकचूतपतेः ।
आलोकेमहि कोमलं आगमसंलापसारयाथार्थ्यम् ॥ ३६ ॥

அங்குரித ஸ்தனகோரகம் அங்காலங்காரம் ஏக சூதபதே : ॥
ஆலோகேமஹி கோமளம் ஆகம ஸம்லாப ஸார யாதார்த்த்யம் ॥ 36

*மொட்டுபோன்று ஸ்தனங்களுள்ளதும் மென்மை மிக்கதும் வேதவாக்கின் உட்கருத்தான ஸத்யமும் ஏகாம்ரநாதரின் மடியின் அலங்காரமுமான தொன்றை எதிரில் காண்கிறோம். (36)*

पुञ्जितकरुणमुदञ्चितशिञ्जित मणिकाञ्चि किमपि काञ्चिपुरे ।
मञ्जरितमृदुलहासं पिञ्जरतनुरुचि पिनाकिमूलधनम् ॥३७ ॥

புஞ்ஜித கருணம் உதஞ்சித ஶிஞ்ஜித மணி காஞ்சி கிமபி காஞ்சிபுரே ।
மஞ்ஜரித ம்ருதுள ஹாஸம் பிஞ்ஜர தனுருசி பிஞகி மூலதனம் ॥ 37

*கருணைநிரம்பியதும், ஒட்டியாணத்திலுள்ள ரத்தினச் சலங்கையொலி கொண்டதும், கொத்து கொத்தாகவெளிவருகிற புன்சிரிப்புள்ளதும், பொன்போன்றமேனியுடையதும், பிநாகம் என்ற வில்லேந்தியவரின் மூலதனமுமானதொன்று காஞ்சீபுரத்தில் விளங்குகிறது (37)*

लोलहृदयोऽस्मि शम्भोः लोचन युगलेन लेह्यमानायाम् ।
लालितपरमशिवायां लावण्यामृततरङ्गमालायाम् ॥ ३८ ॥

லோல ஹ்ருதயோऽஸ்மி ஶம்ப்போ: லோசன யுகளேன லேஹ்யமானுயாம் ।
லாலித பரமஶிவாயாம் லாவண்யாம்ருத தரங்க மாலாயாம் ॥ 38

*சிவனின் இருகண்களால் நக்கி நக்கிப்பருகப்படுவதும் பரமசிவனை உல்லாஸப்படுத்துவதுமானதொரு அழகின் அமுத அலை வரிசையில் என் மனம் ஈடுபட்டுள்ளது. (38)*

**मधुकरसहचरचिकुरैः मदनागमसमयदीक्षितकटाक्षैः ।**
**मण्डितकम्पातीरैः मङ्गलकन्दैर्ममास्तु सारूप्यम् ॥ ३९ ॥**

மதுகர ஸஹசர சிகுரை: மதநாகம ஸமயதீக்ஷித கடாக்ஷை: ।
மண்டித கம்பா தீரை: மங்கள கந்தைர் மமாஸ்து ஸாரூப்யம் ॥ 39

*வண்டுகள் போன்ற கருத்த கேசங்களுள்ளதும், காம சாஸ்த்ரத்தின் முறைகளில் முனைந்த கடைக் கண்பார்வை கொண்டதும் கம்பைக் கரைக்கு அழகு தருவதும் மங்களத்தின் கிழங்குமானதொன்றுடன் ஸமமான உருவம் எனக்கு ஏற்படட்டும்.*

*ஆழ்ந்த பக்தியுடன் வழிபடுவர் தாம் வழிபடுகிற தேவதையின் வடிவம் பெறுவர். இது ஸாரூப்யம் என்ற முக்திநிலை. (39)*

वदनारविन्दवक्षोवामाङ्कतटीवशंवदीभूता ।
पुरुषत्रितये त्रेधा पुरन्ध्रिरूपा त्वमेव कामाक्षि ॥ ४० ॥

வதநாரவிந்த வக்ஷோவாமாங்க தடீ வஶம்வதீ பூதா ।
புருஷ த்ரிதயே த்ரேதா புரந்த்ரி ரூபா த்வமேவ காமாக்ஷி ॥ 40

*காமாக்ஷி ! மும்மூர்த்திகளான ப்ரும்மா விஷ்ணு சிவன் ஆகியவர்களிடத்தில் முறையே தாமரை போன்ற முகம், மார்பு, மடி என்ற இடத்தினுள் அடங்கிய பதிவிரதையாக நீயே உள்ளாய்.*

*ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் பார்வதியுமாகத் தோன்றுபவள் காமாக்ஷியே. (40)*

बाधाकरीं भवाब्धेः आधाराद्यम्बुजेषु विचरन्तीम् ।
आधारीकृतकाञ्चीं बोधामृतवीचिमेव विमृशामः ॥ ४१ ॥

பாதாகரீம் பவாப்த்தே: ஆதாராத்யம்புஜேஷு விசரந்தீம் ।
ஆதாரீக்ருத காஞ்சீம் போதாம்ருத வீசிமேவ விம்ருஶாம: ॥ 41

*வாழ்வாகிற துன்பக் கடலின் அலைமோதலைத் தடுப்பதும், மூலாதாரம் முதலிய தாமரை போன்ற சக்ரங்களில் நடமாடுவதும், காஞ்சீயைத் தன் ஆதாரமாகக் கொண்டதுமானதொரு பேரறிவாகிற அமுதஅலையை ஆராய்வோம். (காண்போம்.)*

*பிறப்பும் இறப்பும் துன்பமிக்க வாழ்வின் நிலைகளும் கடல்போல் திரும்பத் திரும்ப அலையாக மோதுவதாலும் அதிலிருந்து மீள்வது எளிதற்றிருப்பதாலும் வாழ்வைக் கடல் ஸம்ஸாரக்கடல் பிறவிக்கடல் என்பர். குண்டலினி என்ற சக்தியாக மூலாதாரம் ஸ்வாதிஷ்டாநம், மணிபூரகம் அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞை என்ற ஆறு தாமரைபோன்ற ஸ்தானங்களில் தேவி ஏறி இறங்குகிறாள். (41)*

कलयाम्यन्तः शशधरकलयाङ्कितमौलिं अमलचिद्वलयाम् ।
अलयां आगमपीठीनिलयां वलयाङ्कसुन्दरीं अम्बाम् ॥ ४२ ॥

கலயாம்யந்த: ஶஶதர-கலயாங்கித மௌளிம் அமல சித்வலயாம் ।
அலயாம் ஆகமபீட- நிலயாம் வலயாங்கஸுந்தரீம் அம்பாம் ॥ 42

*முயலைத் தாங்குகிற சந்த்ரனின் பிறையைத் தலையணியாக்கிக் கொண்டவளும் தூய சித் சக்தியின் சுழல்வடிவமும், லயம் எனும் மறைவற்றவளும், வேதமாகிற பீடத்தின் மறைபொருளும், வளையல் பூண்ட அழகியும் அணைத்துச் சீராட்டுகிறவளுமான தாயை உள்ளத்தில் கொள்கிறேன். (கண்டு ரசிக்கிறேன்)*

*சந்திரனின் நடுவே காண்கிற இருள்திட்டை மானாகவும் முயலாகவும் உருவகப்படுத்துவர். சித் சக்தி சுழன்று சுழன்று திரும்பத்திரும்பக் கிளம்பிய இடத்தில் சேரும். தாமரை இதழ்களாக இதனைச் சித்திரிப்பர். அலை அலையாக வெளிநோக்கிப்பாய்வதும் உண்டு. பெற்றெடுக்கிறதாய் - ஜனனீ. பத்துமாதங்கள் - வயிற்றினுள் அடக்கிவளர்ப்பவள் மாதா. துன்பத்திலும் இன்பத்திலும் கட்டியணைத்துப் பாதுகாப்பவள்*

அம்பா (அம்மா). தாதிபோல் உபசரிப்பவள் தாத்ரீ. தன்னுள் வளர்ந்தது தனித்துவாழ்கிற நிலைபெற்றதும் அதனைப் பெற்று வெளிப்படுத்துபவள் ப்ரஸவித்ரீ என்று தாயின் பலநிலைகளைச் சுட்டிக்காட்டுகிறபெயர்கள் உண்டு. (42)

शर्वादि परमसाधकगुर्वानीताय कामपीठजुषे।
सर्वाकृतये शोणिमगर्वाय समर्प्यते हृदयम् ॥ ४३ ॥

ஶர்வாதி பரம ஸாதக-குர்வானீதாய காமபீடஜுஷே।
ஸர்வாக்ருதயே ஶோணிம-கர்வாய ஸமர்ப்யதே ஹ்ருதயம் ॥ 43

பரமசிவன் முதலான சிறந்த ஸாதகர்களான குருக்களால் அழைத்துவரப்பட்டுக் காமபீடத்தில் அமர்ந்த, அனைத்து உலகின் வடிவான, செம்மையின் மதர்ப்பிற்கு இதயம் காணிக்கையாக்கப்படுகிறது.

தேவியின் தத்துவம் உணர்ந்து வழிபடும் முறைகளைக் கண்டாராய்ந்து நடைமுறைக்குக் கொணர்ந்தவர் ஸாதகர். தாம் பெற்றுள்ளதை மற்றவருக்குப் போதிப்பதில் ஆர்வமும், கூட இருந்து வழிகாட்டுகிற பண்பும், தவறான வழியில் செல்பவரைப் பொறுப்புடனும் பரிவுடனும் தடுத்து நேர் வழியில் அழைத்துச் செல்வதும், தன் கடமை எனக் கொண்டு, ஆர்வத்துடன் கடமையாற்றுபவர் குரு. ஸ்ரீ வித்யாமார்க்கத்தில் இத்தகைய குருக்களில் பன்னிருவரைச் சிறந்தவர்களாகக் குறிப்பிடுவர். அவர்களில் முதல்வர் ஶிவன். மற்றவர் விஷ்ணு, ப்ரும்மா, மன்மதர், ஸ்கந்தர், நந்தி, இந்த்ரன், மனு, சந்த்ரன், குபேரன், அகஸ்தியர், துர்வாஸர் என. (43)

समया सांध्यमयूखैः समया बुद्ध्या सदैव शीलितया।
उमया काञ्चीरतया न मया लभ्येत किं नु तादात्म्यम् ॥ ४४ ॥

ஸமயா ஸாந்த்ய மயூகை: ஸமயா புத்த்யா ஸதைவ ஶீலிதயா।
உமயா காஞ்சீரதயா ந மயா லப்யேத கிம் நு தாதாத்ம்யம் ॥ 44

ஸந்தியா காலத்து ஸூர்யகிரணங்களுக்கொப்பான மேனி நிறம் கொண்டவள், ஸமநிலைபெற்ற உள்ளுணர்வால் எப்போதும்

*வழிபடப் பெறுபவள், காஞ்சியில் ஆர்வத்துடன் வசிப்பவள், அந்த உமையுடன் ஐக்யத்தை என்னால் பெறமுடியுமா ?*

*புறநோக்கில் ஆர்வமடங்கி மனமும் புத்தியும் ஒரு நிலைப்பட்டால் தான் உள்ளுணர்வில் அலைமோதாத ஸமநிலை நேரும். அப்போது தான் த்யாநமும் ஸமாதியும் கூடும். (44)*

जन्तोस्तव पदपूजनसंतोषतरङ्गितस्य कामाक्षि ।
बन्धो यदि भवति पुनः सिन्धोरम्भस्सु बम्भ्रमीति शिला ॥ ४५ ॥

ஜந்தோஸ்தவ பதபூஜன-ஸந்தோஷ தரங்கிதஸ்ய காமாக்ஷி ।
பந்தோ யதி பவதி புன: ஸிந்தோரம்பஸ்ஸு பம்ப்ரமீதி ஶிலா ॥ 45

*காமாக்ஷி ! உன் திருவடிகளை வழிபடுவதில் அலைபாய்கிற மகிழ்ச்சி பெற்ற ஜீவனுக்கும் ஸம்ஸாரபந்தம் உண்டெனில் கடல் நீரில் பாறுங்கல் சுழன்று மிதக்கும். (45)*

कुण्डलि कुमारि कुटिले चण्डि चराचरसवित्रि चामुण्डे ।
गुणिनि गुहारिणि गुह्ये गुरुमूर्ते त्वां नमामि कामाक्षि ॥ ४६ ॥

குண்டலி குமாரி குடிலே சண்டி சராசரஸவித்ரி சாமுண்டே ।
குணினி குஹாரிணி குஹ்யே குருமூர்த்தே த்வாம் நமாமி
காமாக்ஷி ॥ 46

*வளையமிட்டு வக்ரமாக குமாரியாக மூலாதாரத்திலுள் வசிக்கிற குண்டலினீ ஶக்தியே ! (குண்டலமெனும் காதணிபூண்டவளே ! குமரியே ! வக்ர நடைகொண்டவளே) கோபித்து எதிலும் அடங்காதவளே ! சரமும் அசரமுமான இவ்வலகைப் பெற்றதாயே ! சண்டனையும் முண்டனையும் அழித்த சாமுண்டாதேவியே ! ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களுள்ளவளே ! (நற்குணங்கள் உள்ளவளே) உள்ளத்தில் மறைந்துள்ள அஜ்ஞான இருளின் எதிரியே ! மறைந்துள்ளவளே ! (ரகசிய மானவளே) குருவடிவினளே ! உன்னை வணங்குகிறேன்.*

*குணங்கள் மூன்று. ஸத்வகுணத்தில் அவளது வெளிப்பாடு - இச்சா ஶக்தி, வாமா ஶக்தி, ப்ரும்மா, ஸரஸ்வதி என்ற நால்வர்.*

*ரஜோகுணத்தில் - ஜ்ஞான ஶக்தி, ஜ்யேஷ்ட்டா ஶக்தி, விஷ்ணு, லக்ஷ்மீ என்ற நால்வர். தமோகுணத்தில் - கிரியா ஶக்தி, ரௌத்ரீ ஶக்தி, ருத்ரன், கௌரீ என்ற நால்வர். குணங்கள் ஒன்றாக இணைந்த ஸமஷ்டியில் அம்பிகா சாந்தா ஈஶ்வரன் மாயை என்ற நால்வர். இவர்கள் அனைவரையும் தன் சிறப்பாகக் கொண்டமையால் தேவி குணிநீ; குண்டலினீ சக்தி மூலாதாரத்தில் உறங்கும்போது பாலையாக வளையமிட்டுப்படுப்பாள். (குண்டலீ) மூலாதாரத்தைவிட்டு வெளியேறும் போது குமாரியாக (குமாரீ) பாம்புபோல் வளைந்து வளைந்து ஊர்ந்து செல்வாள். (குடிலா). பிறருக்கு அடங்காமையும் எளிதில் கோபவசமாவதும் உக்கிரமான நடைமுறையும் கொண்டவள் சண்டீ, சண்டிகை. (46)*

अभिदाकृतिर्भिदाकृतिरचिदाकृतिरपि चिदाकृतिर्मातः ।
अनहन्ता त्वमहन्ता भ्रमयसि कामाक्षि शाश्वती विश्वम् ॥ ४७ ॥

அபிதாக்ருதிர் பிதாக்ருதி ரசிதாக்ருதிரபி சிதாக்ருதிர் மாத: ।
அநஹந்தா த்வமஹந்தா ப்ப்ரமயஸி காமாக்ஷி ஶாஶ்வதீ
விஶ்வம் ॥ 47

*காமாக்ஷி, தாயே! நீ வேறுபாடற்ற ஒரே வடிவம் கொண்டவள். வேறுபடுகிற பல வடிவங்கள் கொண்டவள், சேதனமற்றுத் தோன்றுபவள், சேதனம் மிக்க வடிவம் கொண்டவள், 'நான்' என்ற கர்வமில்லாதவள், 'நான்' என்று தன்சிறப்பை வெளிப்படுத்துபவள். இவ்வாறு (முரண்பாட்டால்) நீ உலகைக்குழப்புகிறாய்.*

*தேர்ந்த நடிகை போன்று பலவேஷங்களில் அந்த அந்த பாத்திரமாகவே தோன்றுவதால் இந்தக்குழப்பம். (47)*

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टं च युवतिबिम्बोष्ठम् ॥ ४८ ॥

ஶிவ ஶிவ பஶ்யந்தி ஸமம் ஶ்ரீ காமாக்ஷீ கடாக்ஷிதா: புருஷா: ।
விபினம் பவனம் அமித்ரம் மித்ரம் லோஷ்டம் ச
யுவதிபிம்போஷ்ட்டம் ॥ 48

*சிவ ! சிவ ! (இது என்ன விந்தை ?) ஸ்ரீகாமாக்ஷியால் கடாக்ஷிக்கப்பட்ட ஜீவர்கள், காட்டையும் வீட்டையும், எதிரியையும் நண்பனையும், யுவதியின் கோவை போன்று சிவந்த உதட்டையும் ஓட்டாஞ்சல்லியையும் சமமாகப்பார்க்கிறார்களே!*

*பிரியம் பிரியமல்லாததென்று வேற்றுமையுணர்வே இல்லாததால் இரு நேர் எதிராக வேறுபாடுள்ளதிலும் வேற்றுமையைக் காண்பதில்லை. வீட்டில் உயர்வும் விருப்பமும் இல்லை. காட்டில் தாழ்வும் வெறுப்புமில்லை. (48)*

**कामपरिपन्थि कामिनि कामेश्वरि कामपीठमध्यगते।**
**कामदुघा भव कमले कामकले कामकोटि कामाक्षि ॥ ४९ ॥**

**காம பரிபந்த்தி காமினி காமேஸ்வரி காமபீட மத்த்ய கதே ।**
**காமதுகா பவ கமலே காமகலே காமகோடி காமாக்ஷி ॥ 49**

*மன்மதனின் எதிரியான சிவபெருமானின் மனமுவந்தவளே ! காமேச்வரீ ! காமபீடத்தின் நடுவில் அமர்ந்தவளே ! செல்வதேவதையே ! காமகலைவடிவினளே! காமகோடி காமாக்ஷியே ! விருப்பத்தைப் பால்போல் சுரக்கிற காமதேனுவாக ஆவாய்.*

*தேவர்களின் வேண்டுகோளின்படி சிதக்னிகுண்டத்தில் தோன்றிய தேவி, அனைத்து உலக அரசியாகப் பொறுப்பேற்றுப் பண்டனை மாய்க்க முற்பட்டாள். அரசியாக, ஓர் ஆண்துணை (கணவர்) தேவை. கையிலிருந்த மணமாலையை வானில் வீசி எறிய அது மஹாதேவனின் கழுத்தில் விழுந்தது. அவர் காமேஸ்வரராக தேவிபோல் நான்குகைகளில் வில் அம்பு பாசம் அங்குசம் தரித்து தேவிக்குச் சமமான ஆடை அணி தோற்றம் கொண்டவராகத் தேவியை மணந்ததும் தேவி ஸ்ரீபுரத்தில் ஸ்ரீமஹாராஜ்ஞியாகப் பட்டமேற்றாள். காமேச்வரியானாள். காமரான காமேச்வரரைத் தன் உள்ளத்தினுள் பதித்துக் கொண்டு காமகோடியானாள். காமாக்ஷி ஆலயத்தினுள் காமாக்ஷி வீற்றிருக்கின்ற ஸ்தாநத்திற்கும் காயத்ரீ மண்டபத்திற்கும் கீழே உள்ள மஹாபிலமும் காமகோடியாகும். அதன் மீதமர்ந்தவளானதால் காமகோடிகாமாக்ஷி. விரும்பியதைவிடக்*

கோடிமடங்கு அருள்பவளாக காமகோடி. இங்கு, விரும்பிச்செய்த எந்த நற்பணியும் கோடிமடங்காகி அதற்கான பலனைத் தரும் என்பதால் காமகோடி.

காமகலா - அம்பிகையின் ஸூக்ஷ்மவடிவம் அது, ஸ்ரீவித்யாமந்திரத்தின் மூன்று கூடங்களை இணைக்கின்ற ஹ்ரீம் என்ற மாயா பீஜங்களிலுள்ள மூன்று பிந்துக்களும் ஆதிஎழுத்தான ஹகாரத்தின் வரி வடிவத்தின் கீழ்ப்பாதியான திரிகோணமுமாகும். அதை வரைய அது காம கலா உருவமாகிறது.

நெற்றியில் ஒருபிந்து, இருஸ்தனங்களிடத்தில் இரு பிந்துக்கள், அமர்ந்துள்ள தேவியின் இடுப்பும் அதற்குக்கீழுள்ள முன் பகுதியும் திரிகோணமாக அமைக்க தேவியின் காமகலா வடிவம் புலனாகும். ஸௌந்தரியலஹரியில் **'முகம் பிந்தும் க்ருத்வா'** என்ற ஶ்லோகத்தில் பகவத்பாதர்கள் இந்த வடிவத்தை விளக்குகிறார்கள். குண்டலினியும் உலகமும் மற்றதும் அந்த காமகலையின் விரிவு தான் என்பதை பாஸ்கரராயர் வரிவஸ்யா ரஹஸ்யத்தில் விளக்குகிறார். காமாக்ஷி ஆலயத்தில் லக்ஷ்மீ தேவி அவளது விபூதியாக அம்சமாக ஸௌந்தரிய லக்ஷ்மியாக ஸ்ரீமஹாவிஷ்ணுவால் உபாசிக்கப் பெறுபவளாக, அரூபகாமாக்ஷியான காமகலாதேவியின் அருளால் ஸௌந்தரியாக விளங்குகிறாள். காமாக்ஷியின் வலப்புறத்தின் கோஷ்டத்தில் ஸௌந்தரியலக்ஷ்மியும் நாராயணனும், (கள்வப்பெருமானும்) இடப்புறத்தில் காமகலாவான அரூபகாமாக்ஷியும் காணப்பெறுகின்றனர். (49)

मध्येहृदयं मध्येनिटिलं मध्येशिरोऽपि वास्तव्याम्।
चण्डकरशक्रकार्मुकचन्द्रसमाभां नमामि कामाक्षीम्॥ ५० ॥

மத்த்யே ஹ்ருதயம் மத்த்யே நிடிலம் மத்த்யே ஶிரோऽபி
வாஸ்தவ்யாம் ।
சண்டகர ஶக்ர கார்முக சந்த்ரஸமாபாம் நமாமி
காமாக்ஷீம் ॥ 50

*இதயத்தின் நடுவிலும் நெற்றியின் நடுவிலும் தலையின் நடுவிலும் முறையே ஸூர்யன், இந்த்ரனின் வில், சந்திரன் இவர்களின் ஒளி கொண்டவளாக உள்ள காமாக்ஷியை வணங்குகிறேன்.*

**'' ஶிரஸ் ஸ்த்திதா சந்த்ரநிபா பாலஸ்த்தா இந்த்ரதநு: ப்ரபா. ஹ்ருதயஸ்த்தா ரவிப்ரக்க்யா** *(ல.ஸ.) குண்டலினீ சக்திஸாதனையில் ஈடுபடுபவனிடம் அந்த சக்தி தலையில் ஸஹஸ்ராரகமலத்தில் சந்திரனைப் போன்றும், நெற்றியில் ஆஜ்ஞா சக்ரத்தில் வானவில் போன்றும் இதயத்தில் அநாஹத சக்ரத்தில் சூரியனைப் போன்றும் ஒளியுடன் உணரப் பெறுகிறாள்.(50)*

अधिकाञ्चि केलिलोलैः अखिलागमयन्त्रतन्त्रमन्त्रमयैः ।
अतिशीतं मम मानसं असमशरद्रोहिजीवनोपायैः ॥ ५१ ॥

அதிகாஞ்சி கேளி லோலை: அகிலாகம யந்த்ர தந்த்ர மந்த்ர மயை: ।
அதிஶீதம் மம மானஸம் அஸமஶரத்ரோஹி ஜீவனோபாயை: ॥ 51

*மன்மதனின் எதிரியான சிவனுக்கு உயிரின் ஆதாரமும் எல்லா வேதங்களும் யந்திரமும் தந்திரமும் மந்திரமும் தன்வடிவாகக் கொண்டவளும் காஞ்சீயில் விரும்பி லீலை புரிபவளுமான தேவியால் என் மனம் மிகவும் குளிர்ந்துள்ளது.*

*மன்மதனுக்கு 5 பாணங்கள். 5 ஒரு விஷம எண். அதனால் விஷம சரன் அஸமசரன் என்று மன்மதனுக்குப் பெயர். தேவி லீலையால் பலவாகக் காட்சி தருவதால் பன்மையில் அவள் குறிப்பிடப்பெறுகிறாள். (51)*

नन्दति मम हृदि काचन मन्दिरयन्ती निरन्तरं काञ्चीम् ।
इन्दुरविमण्डलकुचा बिन्दुवियन्नादपरिणता तरुणी ॥ ५२ ॥

நந்ததி மம ஹ்ருதி காசன மந்திரயந்தீ நிரந்தரம் காஞ்சீம் ।
இந்து ரவி மண்டலகுசா பிந்துவியன் நாத பரிணதா தருணீ॥ 52

சூரிய சந்திர மண்டலங்களைத் தன் ஸ்தனங்களாகக் கொண்டவளும், பிந்து, ஆகாசம், நாதம் என்று பரிணாமம் பெற்றவளும், காஞ்சீயைத் தனது இடையறுத வாஸ ஸ்தலமாகக் கொண்டவளுமான தேவி என் உள்ளத்தில் ஆனந்தத்துடன் இருக்கிறாள்.

சந்திரனும் ஸூர்யனும் தேவியின் தாடங்கமாக, கண்களாக, ஸ்தனங்களாக விளங்குகின்றனர். உலகின் மூலப்பொருள் பிந்து. ஆகாசமும் நாதமும் பிந்துவிலிருந்து தோன்றியவை. ஆகாசமானது, வாயுமுதலிய மற்ற நான்கிற்கும் மூலப்பொருள். நாதமானது, எழுத்தின் மூலப்பொருள். எல்லாவற்றிற்கும் மூலமான தேவியிடம் ஏற்பட்ட பரிணாம நிலைகளே இவை. (52)

शम्पालतासवर्णं संपादयितुं भवज्वरचिकित्साम् ।
लिम्पामि मनसि किञ्चन कम्पातटरोहि सिद्धभैषज्यम् ॥ ५३ ॥

ஶம்பா லதா ஸவர்ணம் ஸம்பாதயிதும் பவஜ்வர சிகித்ஸாம் ।
லிம்பாமி மனஸி கிஞ்சன கம்பாதடரோஹி ஸித்த்த
பைஷஜ்யம் ॥ 53

ஸம்ஸாரம் எனும் நோய்க்கான சிகித்ஸையைப் பெறுவதற்காக மனத்தில் கம்பைக்கரையில் முளைத்துள்ள மின்னல் கொடியின் நிறம் கொண்ட ஸித்த மருந்தைப் பூசிக் கொள்கிறேன்.

பிறப்பும் வாழ்வும் இறப்பும் தொடர்ந்து வருவதால் அதுவே நோயாகிறது. அதற்கான சிகித்ஸை தேவி. முன் பலருக்குப் பலவாறு பலதடவை பயன்படுத்தி அவளது நோய் தீர்க்கிற திறமை அவளிடம் இயல்பாக அமைந்துள்ளதால், முடிவான பலன் அனுபவத்திலுள்ளதால் அவள் ஸித்தமான மருந்து. அவள் நம்மிடம் ஒட்டவும் நாம் அவளிடம் ஒட்டவும் உள்ளத்தில் லேபம் என்ற பூச்சு பயன்தரும். தேவியை உள்ளும் புறமுமிருக்கச் செய்கிறேன். (53)

अनुमितकुचकाठिन्यां अधिवक्षःपीठं अङ्गजन्मरिपोः।
आनन्ददां भजे तां आनङ्गब्रह्मतत्त्वबोधिसिराम ॥ ५४ ॥

அனுமித குச காடின்யாம் அதிவக்ஷ: பீடம் அங்கஜன்மரிபோ: ।
ஆனந்ததாம் பஜே தாம் ஆனங்க ப்ரம்ஹ தத்வ போதி
ஸிராம் ॥ 54

*ஊகித்து அறியத்தக்க மார்பகத்தின் கடினத்தன்மை கொண்டவள், மன்மதனின் எதிரியின் உள்ளத்தில் ஆனந்தமளிப்பவள். மன்மதன் கண்டுபிடித்த பரம்பொருள் தத்துவத்தின் ஸாரத்தை விளக்குகிற மந்திரசக்தி கொண்டவள். இவளை வழிபடுகிறேன்.*

*தேவியை மந்திரவடிவில் உபாஸிப்பவர்களில் மன்மதனுக்கு சிறப்பான இடம். காமராஜகூடம் காமராஜபீடம் காமராஜபீஜம் என மன்மதன் பெயர் கொண்ட பல நிலைகள் உண்டு.* **'காமபூஜிதா' காமஸேவிதா** *(ல.ஸ.) மன்மதனை ருஷியாகக் கொண்ட ஸ்ரீவித்யாமந்திரம் புகழ்பெற்றது. மன்மதப்ரம்ஹவித்யா என்று பெயர்.*

*மனத்தில் (எண்ணத்தில்) காமத்தை ஏற்படுத்துவதால், மனஸிஜன் என்றும் உடலில் (உறவளவில்) காமத்தை ஏற்படுத்துவதால் சரீரஜன் அங்கஜன் என்றும் மன்மதனைக் கூறுவர். (54)*

ऐक्षिषि पाशाङ्कुशधरहस्तान्तं विस्मयार्हवृत्तान्तम् ।
अधिकाञ्चि निगमवाचां सिद्धान्तं शूलपाणिशुद्धान्तम् ॥ ५५ ॥

**ஐக்ஷிஷி பாஶாங்குஶதரஹஸ்தாந்தம் விஸ்மயார்ஹ**
**வ்ருத்தாந்தம் ।**
**அதிகாஞ்சி நிகமவாசாம் ஸித்த்தாந்தம் ஶூலபாணி**
**ஶுத்த்தாந்தம் ॥ 55**

*பாசத்தையும் அங்குசத்தையும் கைகளின் நுனியில் கொண்டதும் வியப்புக்குரிய நடைமுறை கொண்டதும் வேதவாக்யங்களின் முடிந்த முடிவுமான சூலமேந்திய சிவனின் அந்தப் புரப்பெண்ணை காஞ்சியில் கண்டேன். (55)*

आहितविलासभङ्गीं आब्रह्मस्तम्बशिल्पकल्पनया ।
आश्रितकाञ्चीं अतुलां आद्यां विस्फूर्तिमाद्रिये विद्याम् ॥ ५६ ॥

ஆஹித விலாஸ பங்கீம் ஆப்ரம்ஹ ஸ்தம்ப ஶில்ப கல்பனயா ।
ஆஶ்ரித காஞ்சீம் அதுலாம் ஆத்யாம் விஸ்பூர்த்திம் ஆத்ரியே
வித்யாம்॥ ॥ 56

*பிரும்மாமுதல் புழுவரை, சில்பம் செதுக்குவதுபோல் அழகாகப் படைப்பதில் தன் கைவண்ணத்தைக் காட்டுபவளும் ஈடற்றவளும் அசையாப் பரம்பொருளின் முதல் உணர்வுத்துடிப்புமான காஞ்சியில் தங்கியுள்ள பேரறிவைச் சார்ந்து நிற்கிறேன்.*

*பிரும்மம் தன் நிலையிலிருந்து படைப்பு முதலியதை ஸங்கல்பித்து சக்தியைத் தன்னை விட்டுப் பிரித்து தர்மீ - தர்மம், பிரகாசம் - விமர்சம், சிவன் - சக்தி என்று தன்னை விளக்கிக் கொண்டு ஸ்ப்புரணம் - ஸ்பந்தம் - ஸ்ப்பூர்த்தி என்ற உணர்வுத்துடிப்பை முன்னிட்டு வியக்த நிலைக்கு வந்தது. அது பேருணர்வான சித்சக்தியின் முதல் வெளிப்பாடு. அது தேவியின் விமர்சநிலை. (56)*

मूकोऽपि जटिलदुर्गतिशोकोऽपि स्मरति यः क्षणं भवतीम् ।
एको भवति स जन्तुर्लोकोत्तरकीर्तिरेव कामाक्षि ॥ ५७ ॥

மூகோऽபி ஜடில துர்கதி ஶோகோऽபி ஸ்மரதி ய: க்ஷணம்
பவதீம் ।
ஏகோ பவதி ஸ ஜந்துர் லோகோத்தர கீர்த்திரேவ காமாக்ஷி ॥ 57

*காமாக்ஷியன்னையே ! உன்னை ஒரு நொடிநேரம் நினைக்கின்ற ஊமையும் சிக்கல் சிடுக்குமிக்க கேடுற்று வருந்துபவனும் எளிதில் மாந்தரால் பெறுவதற்கரிய புகழ்பெற்றவனாக ஆவான்.*

*பிறவி ஊமையானதால் ஊர் பெயரறிவிக்க இயலாத நிலையிலிருந்த தான் கவியாகிப் புகழ்பெற்றுக் காம*

*கோடிபீடத்தாசாரியராகத் திகழ்ந்ததையும் தேவியின் கருணை தனக்குத் துணைநின்றதையும் நினைவு கூறுகிறார். (57)*

पञ्चदशवर्णरूपं कञ्चन काञ्चीविहारधौरेयम्।
पञ्चशरीयं शंभोर्वञ्चनवैदग्ध्यमूलं अवलम्बे ॥ ५८ ॥

பஞ்சதஶ வர்ண ரூபம் கஞ்சன காஞ்சீ விஹார தௌரேயம்।
பஞ்ச ஶரீயம் ஶம்போ: வஞ்சன வைதக்த்ய மூலம்
அவலம்பே ॥ 58

*சிவபெருமானை ஏமாற்றுவதற்கான மன்மதனிடம் கண்ட திறமைக்கு மூலமும், காஞ்சியில் லீலைபுரிவதில் முன் நிற்பதும் பதினைந்தெழுத்துள்ள மந்திரவடிவானதுமானதொன்றைப் பிடிப்பாகக் கொள்கிறேன்.*

*தேவியின் மந்திரம் 15 அட்சரங்கள் கொண்டதால் பஞ்சதசீ, பஞ்சதசாக்ஷரீ. அதில் முதல் ஐந்து அக்ஷரங்கள் வாக்பவகூடம். அது தேவியின் முகம். அடுத்து ஆறெழுத்துகள் காமராஜ கூடம். தேவியின் நடுஉடல். அடுத்து நான்கெழுத்துக்கள் - சக்திகூடம், இடுப்பின் கீழ்ப்பகுதி. மந்திரமயமான தேவியின் வடிவம் இது.* ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூபமுகபங்கஜா. கண்ட்டாத: கடி பர்யந்த மத்த்ய கூடஸ்வரூபிணீ. சக்தி கூடைகதாபந்நகட்ய தோபாக தாரிணீ. மூலகூடத்ரயகளேவரா. *(ல.ஸ.) (58)*

परिणतवतीं चतुर्धा पदवीं सुधियां समेत्य सौषुम्नीम्।
पञ्चादशदर्णकल्पितपदशिल्पां तां नमामि कामाक्षीम् ॥ ५९ ॥

பரிணதவதீம் சதுர்த்தா பதவீம் ஸுதியாம் ஸமேத்ய
ஸௌஷும்னீம்।
பஞ்சாஶதர்ண கல்பித பதஶில்பாம் தாம் நமாமி காமாக்ஷீம் ॥ 59

*ஞானிகளின் ஸுஷும்நா நாடிவழியே (பரா முதலிய) நான்கு பரிணாமங்களை அடைந்து 51 அட்சரங்களாலான பதங்களின் அமைப்பானவளான காமாக்ஷியை வணங்குகிறேன்.*

*வாக்கு எனும் சக்தி பேச்சாகிவெளிவருகிறது. அந்த சக்தி மூலாதாரத்திலிருந்து எழுவது பராவாக. அதன் பின் பச்யந்தீ, மத்த்யமா. என்ற பரிணமமடைந்து சொல்லாகத் தொண்டையிலிருந்தும் வெளியேறுகிறது. அந்தநிலை வைகரீ. சக்தி பரவுவது ஸுஷும்னையின் வழியே.* 'பரா ப்ரத்யக்சிதீ ரூபா பச்யந்தீ பரதேவதா ! மத்த்யமா வைகரீரூபா.'' (ல.ஸ) (59)

आदिक्षन्मम गुरुराडादिक्षान्ताक्षरात्मिकां विद्याम् ।
स्वादिष्ठचापदण्डां नेदिष्ठामेव कामपीठगताम् ॥ ६० ॥

ஆதிக்ஷன் மம குருராட் ஆதி க்ஷாந்தாக்ஷராத்மிகாம் வித்யாம் ।
ஸ்வாதிஷ்ட்ட சாபதண்டாம் நேதிஷ்ட்டாமேவ காமபீடகதாம் ॥ 60

*என்குருநாதர் அமுதல் க்ஷவரை உள்ள அக்ஷரவடிவிலான வித்தியையை, காமபீடத்திலமர்ந்த இனிய வில்தடியைக் கொண்ட அருகிலுள்ள தேவியாகக் காட்டி உபதேசித்தார். (60)*

तुष्यामि हर्षितस्मरशासनया काञ्चिपुरि कृतासनया ।
स्वासनया सकलजगद्भासनया कलितशम्बरासनया ॥ ६१ ॥

துஷ்யாமி ஹர்ஷிதஸ்மரஶாஸநயா காஞ்சிபுரி க்ருதாஸநயா ।
ஸ்வாஸநயா ஸகல ஜகத்ப்பாஸநயா கலித ஶம்பராஸநயா ॥ 61

*மன்மதனைக்கட்டுப்படுத்திய சிவனை மகிழ்வித்தவளும் காஞ்சீபுரத்திலமர்ந்தவளும் தன்னிடம் தானே நிலைத்திருப்பவளும், எல்லா உலகையும் (தன்மாயையால்) புலப்படச் செய்தவளும், மன்மதனைத் உருவாக்கியவளுமான தேவியால் ஆனந்தமடைகிறேன்.*

*உலகிற்கு ஆதாரமான தேவி தனக்கென ஒரு ஆதாரமும் கொள்ளாதவள். தன் நிலையிலேயே நிலைத்திருப்பவள். சம்பரன் என்பவன் அசுரன். மன்மதன் அவனை வென்றான்-சம்பராஸனன். (61)*

प्रेमवती कम्पायां स्थेमवती यतिमनस्सु भूमवती ।
सामवती नित्यगिरा सोमवती शिरसि भाति हैमवती ॥ ६२ ॥

ப்ரேமவதீ கம்பாயாம் ஸ்த்தேமவதீ யதிமனஸ்ஸு பூமவதீ।
ஸாமவதீ நித்யகிரா ஸோமவதீ ஶிரஸி பாதி ஹைமவதீ॥ 62

*ஹிமவானின் பெண்ணான தேவி கம்பையில் அன்புள்ளவள். துறவிகளின் மனத்தில் கட்டுப்பட்டு நிலைத்திருப்பவள். வேதத்தால் புகழப்பெற்றவள். தலையில் சந்திரனை அணிந்தவள். இப்படி விளங்குகிறாள். (62)*

कौतुकिना कम्पायां कौसुमचापेन कीलितेनान्तः ।
कुलदैवतेन महता कुड्मलमुद्रां धुनोतु नः प्रतिभा ॥ ६३ ॥

கௌதுகினா கம்பாயாம் கௌஸும சாபேன கீலிதேனாந்த:।
குலதைவதேன மஹதா குட்மள முத்ராம் துனோது ந:
ப்ரதிபா ॥ 63

*கம்பை நதியில் ஆர்வமுள்ளவள். மன்மதனால் சிருங்காரம் நிரம்பிய மனமுள்ளவள். பெரிய குலதைவதம். அவளால் என் அறிவு மொட்டிட்டு மலரட்டும். (63)*

केनापि मिलितदेहा यूना [1] स्वाहासहायतिलकेन ।
सहकारमूलदेशे संविद्रूपा कुटुम्बिनी रमते ॥ ६४ ॥

கேனாபி மிளித தேஹா யூனா [2] ஸ்வாஹாஸஹாய திலகேன।
ஸஹகார மூலதேஶே ஸம்வித்ரூபா குடும்பினீ ரமதே॥ 64

*ஸ்வாஹா தேவியின் பதியான அக்னியை நெற்றியில் பொட்டாகக் கொண்ட ஒரு இளம் வாலிபனுடன் மாமரத்தின் அடியில் இணைந்தவள், ஞானமே வடிவானவள், குடும்பத்துப்பெண்ணாக அவள் மனமகிழ்வுடன் வாழ்கிறாள். (64)*

---

1. यूना केनापि मिलद्देहा 2. *யூநா கேநாபி மிலத் தேஹா.*

कुसुमशरगर्वसंपत्कोशगृहं भाति काञ्चिमध्य[1]गतम् ।
स्थापितमस्मिन्कथमपि गोपितमन्तर्मया मनोरत्नम् ॥ ६५ ॥

குஸுமஶர கர்வ ஸம்பத்கோஶக்ருஹம் பாதி காஞ்சிமத்த்ய [2] கதம் ।
ஸ்தாபிதம் அஸ்மின் கதமபி கோபிதம் அந்தர்மயா மனோரத்னம் ॥ 65

*மன்மதனுடைய கர்வம் என்ற செல்வநிறைவின் பொக்கிஷம். காஞ்சியின் நடுவே இருப்பது, இதனுள் என்னால் எப்படியோ என்மனமாகிய ரத்தினம் மறைத்து வைக்கப்பட்டுள்ளது. (65)*

दग्धषडध्वारण्यं दरदलितकुसुम्भसंभृतारुण्यम् ।
कलये नव तारुण्यं कम्पातटसीम्नि किमपि कारुण्यम् ॥ ६६ ॥

தக்த்த ஷடத்த்வாரண்யம் தரதளித குஸும்ப்ப ஸம்ப்ருதாருண்யம் ।
கலயே நவ தாருண்யம் கம்பா தடஸீம்னி கிமபி காருண்யம் ॥ 66

*கம்பா நதிக்கரையில் ஆறு அத்த்வாக்கள் என்ற காட்டைச் சுட்டெரித்ததும், சிறிது மலர்ந்து விரிந்த குசும்பாப்பூவின் சிகப்பைக்கொண்டதும், கருணைவடிவெடுத்ததுமான ஒரு புது இளமையை மனத்தில் உருவகப்படுத்துகிறேன்.*

*1.* ஆறு அத்த்வாக்கள் - *உபாஸனைவழிகள். (1)* வர்ண அத்த்வா - 'அ' *முதல்* 'க்ஷ' *வரையிலான எழுத்துக்கள் (2)* பதாத்த்வா - *எழுத்திணைந்த பொருளுள்ள சொல்வடிவானவை.* மந்த்ராத்த்வா *தனித்த அக்ஷரங்களோ பதங்களோ தனித்து சக்திமிக்கவை என உணர்ந்த ருஷிகள் மந்திரங்களாகத் தொகுத்துத்தந்துள்ளவை.* இந்த *மூன்றும் வாக்காகி தெய்வத்தன்மையை விளக்குபவை. (4)* கலாத்த்வா - *நிவிருத்தி, பிரதிஷ்ட்டா, வித்யா, சாந்தி, சாந்த்யதீதா என்ற கலைகள்.*

*2.* देश *3. தேஶ*

*நிவிருத்தி என்ற பிரம்ஹகலே. பிரதிஷ்டை என்ற விஷ்ணுகலே, வித்யா என்ற ருத்ரகலே, சாந்தி என்ற ஈச்வரகலே, சாந்த்யதீதா என்ற ஸதாசிவகலே, இவற்றின் விளக்கம் (5)* **புவன கலா** *- ஆகாசம் வாயு அக்னி ஜலம் பூமி என்ற ஐந்தின் விளக்கம். (6)* **தத்துவாத்த்வா** *- சிவன் முதல் பூமி ஈருன 36 தத்வங்களுக்கான விளக்கம். முதல் மூன்ருல் தத்துவபுவனங்களே அறிந்து கலேயாகிய ஈசுவரநிலேயை அடைவதற்கான மார்க்கங்கள் இவை. இவைகள் பாதையே தவிர அடையவேண்டிய இடமல்ல. பாதையிலேயே மனம் உழன்று கொண்டிராமல் பாதையைக் கடந்து தேவியைக் காண வேண்டும். அதஞல் அவள்* **ஷடத்த்வாதீத ரூபிணீ.** *(லஸ) ஆறு அத்த்வாக்களாகிய காட்டை எரிப்பவளும் அவளே. (66)*

**अधिकाञ्चि वर्धमानां अतुलां करवाणि पारणां अक्ष्णोः ।**
**आनन्दपाकभेदां अरुणिमपरिणामगर्वपल्लविताम् ॥ ६७ ॥**

**அதிகாஞ்சி வர்த்தமாஞும் அதுலாம் கரவாணி பாரஞும் அக்ஷ்ணோ: ।**
**ஆனந்த பாக பேதாம் அருணிம பரிஞம கர்வபல்லவிதாம் ॥ 67**

*காஞ்சியில் வளர்ந்தோங்கி வருவது, இணேயற்றது, முழுப்பரிணாமமடைந்த ஆனந்தத்தின் பல்வேறு நிலேகளாயிருப்பது, முதிர்ந்த செம்மையின் செறுக்கின் துளிர், இவ்வுருவைக் கண்களுக்கு விருந்தாக்குகிறேன்.*

**பிரியம்** *:- விரும்பியதைப் பெற்ற புற இன்பம்.* **மோதம்** *இன்பம் தருகிற உள்ளத்து மகிழ்ச்சி.* **பிரமோதம்** *- மகிழ்ச்சியால் பெற்ற மன நிறைவு,* **ஆனந்தம்** *- கிடைத்ததற்கு மாருக வேறொன்றோ, மறுபடி அதுவேயோ திரும்பக் கிட்டிஞலும் வேண்டாமென மறுக்கிற அளவில் ஆனந்த நிறைவு என்று ஆனந்தத்தின் பல்வேறு நிலேகள். சரீரசுகம், மனச்சுகம், புத்திசுகம், சித்த சுகம், ஆத்மசுகம் என ஆனந்தம் பரிணாமமடைகிறது. (67)*

बाणसृणिपाशकार्मुकपाणिममुं कमपि कामपीठगतम्।
एणधरकोणचूडं शोणिमपरिपाकभेदमाकलये ॥ ६८ ॥

பாண ஸ்ருணி பாஶ கார்முக பாணிம் அமும் கமபி காமபீடகதம் ।
ஏணதர கோண சூடம் ஶோணிம பரிபாக பேதம் ஆகலயே ॥ 68

*அம்பு, துறட்டி, பாசம், வில் இவற்றைக் கையில் ஏந்தியது, காமபீடத்தில் அமர்ந்துள்ளது, சந்திரனின் பிறையைச் சூடியது, செம்மையின் பல்வேறு நிலைகளை உணர்த்துவது என்றுள்ளதொன்றைத் தியானிக்கிறேன். (68)*

किं वा फलति ममान्यैः बिम्बाधरचुम्बिमन्दहासमुखी।
संबाधकरी तमसां अम्बा जागर्ति मनसि कामाक्षी ॥ ६९ ॥

கிம் வா பலதி மமான்யை: பிம்பாதர சும்பி மந்தஹாஸமுகீ ।
ஸம்பாதகரீ தமஸாம் அம்பா ஜாகர்தி மனஸி காமாக்ஷீ ॥ 69

*வெவ்வேறு பொருளை நாடுவதால் எனக்கு என்ன கிட்டவிருக்கிறது ? கோவைப்பழம் போன்ற உதடுகளை முத்தமிடுகிற மெல்லிய புன்சிரிப்புள்ள முகமுள்ளவளும், அறியாமை எனும் இருட்டை அகற்றுபவளுமான அன்னை காமாக்ஷி என் உள்ளத்தில் விளங்குகிறாள். (69)*

मञ्चे सदाशिवमये परशिवमयललितपौष्पपर्यङ्के।
अधिचक्रमध्यमास्ते कामाक्षी नाम किमपि मम भाग्यम् ॥ ७० ॥

மஞ்சே ஸதாஶிவமயே பரஶிவ மய லலித பௌஷ்ப பர்யங்கே ।
அதிசக்ரமத்த்யம் ஆஸ்தே காமாக்ஷீ நாம கிமபி மம பாக்யம் ॥ 70

*ஸதாசிவனாகிய கட்டிலின் மீது, பரமசிவனாகிற அழகிய பூவிரிப்பின் மீது ஸ்ரீ சக்ரத்தின் நடுவே காமாக்ஷி எனும் எனது பெரும் பாக்கியம் உருவெடுத்து அமர்ந்துள்ளது.*

*ஸ்ரீ சக்கிரத்தின் நடுவே உள்ள முக்கோணம் ஸர்வானந்த மயசக்கிரம். அதில் ஸதாசிவதத்துவம் கட்டிலாகி உள்ளது.*

*அதனை பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன் என்ற நால்வர் காலாகித்தாங்குகின்றனர் கட்டிலின் மீதுள்ள மெத்தை முதலிய விரிப்புகளாகிப் பரமேசுவரன் தேவியைத் தாங்குகிறுர். அதில் அமர்ந்த காமேச்வரரின் மடியில் காமேச்வரியான தேவி அமர்ந்துள்ளாள். (70)*

लक्ष्योऽस्मि [1] कामपीठीलासिकया घनकृपाम्बुराशिकया।
श्रुतियुवतिकुन्तलीमणिमालिकया तुहिनशैलबालिकया॥ ७१ ॥

லக்ஷ்யோ஽ஸ்மி [2] காமபீடீலாஸிகயா கனக்ருபாம்பு ராஶிகயா।
ஶ்ருதியுவதி குந்தளீமணிமாலிகயா துஹினஶைல பாலிகயா॥ 71

*காமபீடத்தில் நர்த்தனம் புரிபவள், செறிந்த கருணைக்கடலானவள், வேதமாகிறயுவதி தன் கூந்தலில் அணிந்த ரத்ன மாலை, பனி மலையின் குமரி, இவளால் பார்க்கப்படத் தக்கவனுக உள்ளேன்.*

*ரக்ஷ்யோ஽ஸ்மி என்ற பாடமுண்டு. காப்பற்றத்தக்கவனுக உள்ளேன். (71)*

लीये पुरहरजाये माये तव तरुणपल्लवच्छाये।
चरणे चन्द्राभरणे काञ्चीशरणे नतार्तिसंहरणे॥ ७२ ॥

லீயே புரஹரஜாயே மாயே தவ தருண பல்லவச்சாயே।
சரணே சந்த்ராபரணே காஞ்சீஶரணே நதார்திஸம்ஹரணே॥ 72

*முப்புரங்களை அழித்தவரின் மனைவியே! மாயையே! சந்திரனை ஆபரணமாகக் கொண்டவளே, காஞ்சியில் இருப்பிடம் கொண்டவளே! வணங்கியவரின் துயரைத் துடைப்பவளே! உனது இளந்துளிர் போன்ற திருவடிகளில் லயமடைகிறேன். (72)*

मूर्तिमति मुक्तिबीजे मूर्ध्नि स्तबकितचकोरसाम्राज्ये।
मोदितकम्पाकूले मुहुर्मुहुर्मनसि मुमुदिषाऽस्माकम्॥ ७३ ॥

---

1. रक्ष्योऽस्मि 2. ரக்ஷ்யோ஽ஸ்மி.

மூர்த்திமதி முக்திபீஜே மூர்த்னி ஸ்தபகித சகோர ஸாம்ராஜ்யே।
மோதித கம்பா கூலே முஹுர் முஹுர் மனஸி
முமுதிஷா<sup>s</sup>ஸ்மாகம் ॥ 73

*முக்திக்கு வித்தானதும், சகோரப்பறவைக்கு உயிரான சந்திரனை மொட்டுப்போல் சிரஸில் அணிந்ததும், கம்பா நதிக்கரையில் வசிக்க இசைந்ததுமான அதனிடம் மன நிறைவு அடிக்கடி ஏற்படுகிறது.*

*சகோரம் எனும் பறவை நிலவைத்தான் உண்டுவாழும். (73)*

वेदमयीं नादमयीं बिन्दुमयीं परपदोद्यदिन्दुमयीम्।
मन्त्रमयीं तन्त्रमयीं प्रकृतिमयीं नौमि विश्वविकृतिमयीम्॥ ७४॥

வேதமயீம் நாதமயீம் பிந்துமயீம் பரபதோத்யத் இந்துமயீம்।
மந்த்ரமயீம் தந்த்ரமயீம் ப்ரக்ருதிமயீம் நௌமி விஶ்வ
விக்ருதிமயீம் ॥ 74

*வேதம், நாதம், பிந்து, பராகாசத்தில் உதித்த சந்திரன், மந்திரம், தந்திரம் , உலகின் மூலப்பொருளான மூலப்ரக்ருதி, அதன் பரிணாமமாக உலகாக விரிகிற விக்ருதி, இவற்றையே வடிவாகக் கொண்ட தேவியை வணங்குகிறேன்.*

*தேவி பரவெளியானவள். அதில் அமுதகிரணம் கொண்ட சந்திரன் எழுந்தது. அந்த நிலவு உலகின் மூலமான பிந்துவாக, அதன் விரிவான நாதமாக - உருப்பெற்ற வேதமாக, ஆகாயம் முதலியதின் மூலப்பொருளான பிரக்ருதியாக, அதன் பரிணாமமான மஹத், அஹங்காரம், பஞ்சபூதங்கள் என்ற விக்ருதியாகப் பல நிலைகள் பெற்றது. இவையனைத்தும் தேவியே. (74)*

पुरमथनपुण्यकोटी पुञ्जितकविलोकसूक्तिरसधाटी।
मनसि मम कामकोटी विहरतु करुणाविपाकपरिपाटी॥ ७५॥

புரமதன புண்யகோடீ புஞ்ஜித கவிலோக ஸூக்தி ரஸதாடீ।
மனஸி மம காமகோடீ விஹரது கருணா விபாக பரிபாடீ॥ 75

*முப்புரங்களை அழித்தவனின் நல்வினைப்பயனானவள், கவிகளின் நல்வாக்குகளின் உட்பொருளான ரஸப்பெருக்கின் செறிவானவள், பழுத்தகருணையின் செயல்முறை யானவள், இந்தக் காமகோடி என் உள்ளத்தில் விளையாடட்டும். (75)*

कुटिलं चटुलं पृथुलं मृदुलं कचनयनजघनचरणेषु।
अवलोकितं अवलम्बितं अधिकम्पातटममेयमस्माभिः ॥ ७६ ॥

குடிலம் சடுலம் ப்ருதுளம் ம்ருதுளம் கச நயன ஜகன சரணேஷு।
அவலோகிதம் அவலம்பிதம் அதிகம்பாதடம் அமேயம்
அஸ்மாபி: ॥76

*கூந்தலில் சுருட்டையும் கண்களில் தளுக்கும், இடுப்பில் பருமனும், திருவடிகளில் மென்மையும் கொண்டதொன்று கம்பைக்கரையருகே நம்மால் காணப்பெற்றது. உடன் பிடிப்பாகப் பற்றிக் கொள்ளப்பட்டது. (76)*

प्रत्यङ्मुख्या दृष्ट्या प्रसाददीपाङ्कुरेण कामाक्ष्याः।
पश्यामि निस्तुलमहो पचेलिमं किमपि परशिवोल्लासम् ॥ ७७ ॥

ப்ரத்யங் முக்க்யா த்ருஷ்ட்யா ப்ரஸாத தீபாங்குரேண
காமாக்ஷ்யா:।
பச்யாமி நிஸ்துலமஹோ பசேளிமம் கிமபி
பரசிவோல்லாஸம் ॥ 77

*காமாக்ஷியின் அருள் - சுடரொளியின் துணை கொண்டு, உள்நோக்கு பெற்று இணையற்ற கனிந்த பரம சிவனின் ஒரு உல்லாஸப்பொருளைக்காண்கிறேன்.*

*இயல்பாக வெளியே தாவுகிற மனத்தின் சஞ்சலமடங்க, ஆத்மதத்துவம் தெளிவாகத் தெரிகிறது.* ''பஹிர்முக ஸுதுர்லபா, அந்தர் முகஸமாராத்த்யா''. *(லஸ) உள்நோக்கைப் பெறவும் உள்நோக்க உள்ளொளி பரவச்செய்யவும் அவள் அருளேதுணை.*

சிவஜ்ஞானப்ரதாயினீ - *(லஸ) பரமசிவனுடன் உல்லாசம் கொள்கிற தேவியின் தர்சனமே பெரும்பயன். (77)*

**विद्ये विधातृविषये कात्यायनि कालि कामकोटि कले।**
**भारति भैरवि भद्रे शाकिनि शांभवि शिवे स्तुवे भवतीम्॥ ७८॥**

**வித்யே விதாத்ரு விஷயே காத்யாயனி காளி காமகோடி கலே।**
**பாரதி பைரவி பத்ரே ஶாகினி ஶாம்பவி ஶிவே ஸ்துவே**
**பவதீம்॥ 78**

*உலகைப்படைப்பவனின் சக்தியான வித்யையே ! (ஸரஸ்வதியே) காத்யாயனியே ! காளியே ! காமகோடிகலேயே ! பாரதியே ! பைரவியே ! பத்திரையே ! சாகினியே ! சாம்ப்பவியே ! சிவையே ! உன்னைத்துதிக்கிறேன்.*

*பிரும்மா படைப்பின் முறையறியாமல் திகைத்து நின்றபோது, தேவியின் சுத்தவித்யா எனும் அம்சம் வாணியாகி அவரது துணைவியானாள். சிவனின் கண்களை மறைத்த குற்றத்தின் கழுவாயாகத் தவம் செய்யப் புறப்பட்டதும், வழியில் காத்யாயனர் என்ற முனிவரின் மகளாகி அவரிடம் தவம் புரிவதைப் பற்றி அறிந்து, அவர் தந்த தவஉபகரணங்களுடன் காஞ்சியையடைந்தாள்.* **(காத்யாயனீ)**

*கருநிறம் கொண்ட அவள்* **காளி.** *சராசரத்தை ஆட்டிப்படைக்கிற காலனம் என்ற சக்தியுள்ளவள். மதுவையும் கைடபனையும் மாய்க்க விஷ்ணுவிற்கு உதவிய மஹாமாயை, கம்பை நதிவெள்ளத்தைத் தடுக்க பிரளயபந்தினி என்ற மாதாவானவள், சண்டமுண்டர்களை அழித்ததனுல் சாமுண்டா என்ற சிறப்புப்பெயர் பெற்றவள். பிரளயகாலத்தில் தாண்டவமாடுகிற சிவனின் ஸாக்ஷியாக நின்றவள். என்று காளிக்குப்பல கோலங்கள் உண்டு.*

*உள்ளுணர்வான வித்தியை சொல்வடிவமும் மொழி வடிவும் பெற்ற நிலை* **பாரதீ.** *அஸிதாங்கர் முதலிய பைரவர்களின் சக்தியான* **பைரவீ** *திரிபுரபைரவீ முதலிய மந்திரங்களின் தியான வடிவம்.* **பத்ரா** *என்ற பத்திரகாளி மங்களம் தருகிற காளியின் ஸௌம்ய உருவம் .*

*சாகினீ என்ற ஸாகினீ எனும் யோகினீ மூலாதாரத்தில் ஐந்து முகங்களுடன் பூமிதத்துவ தேவதையானவள். சாம்ப்பவீ என்ற பரசம்புவின் சக்தி சுத்தஜ்ஞானத்தை அருள்பவள். யோகவழியில் உள்நோக்கும் திறனைத் தருபவள். இவையனைத்தும் அன்னை காமாக்ஷியின் உருவகங்களே. (78)*

मालिनि महेशचालिनि काञ्चीखेलिनि विपक्षकालिनि ते।
शूलिनि विद्रुमशालिनि सुरजनपालिनि कपालिनि नमोऽस्तु॥ ७९॥

மாலினி மஹேஶசாலினி காஞ்சீகேலினி விபக்ஷகாலினி தே।
ஶூலினி வித்ருமஶாலினி ஸுரஜன பாலினி கபாலினி
நமோऽஸ்து॥ 79

*மாலினியே! மஹேசனுடன் உலாவருபவளே! காஞ்சியில் லீலை புரிபவளே! எதிரிகளை அழிப்பவளே! சூலினியே! பவழத்தாலான அணிகளைத் தரித்தவளே! தேவர்களைக் காப்பவளே! கபாலமேந்திய சிவனின் துணைவியே! உனக்கு நமஸ்காரம்.*

*'அ' முதல் 'க்ஷ' வரையிலான அட்சரங்களின் கூட்டு சக்தி மாலினீ. இந்த அக்ஷரங்களையே மாலையாகக் கொண்டவள். துர்க்கையின் ஒரு தோற்றம் சூலினீ. சூலம் ஏந்தியவள். சூலம் ஏந்திய சிவனின் துணைவியும் சக்தியுமாவாள். (79)*

देशिक इति किं शङ्के तत्तादृक्तव नु तरुणिमोन्मेषः।
कामाक्षि शूलपाणेः कामागमतन्त्र [1]यज्ञदीक्षायाम्॥ ८०॥

தேஶிக இதி கிம் ஶங்கே தத் தாத்ருக் தவ நு தருணிமோன்மேஷ:।
காமாக்ஷி ஶூலபாணே: காமாகம தந்த்ர [2] யஜ்ஞ
தீக்ஷாயாம்॥ 80

*காமாக்ஷியே! காம சாஸ்திர முறைகளையறிவதை வேள்வியாக ஏற்ற சிவனுக்கு அதில் தகுதிபெற வழிகாட்டியாகத் சிவனுக்கு தீக்ஷை*

1. समय 2. ஸமய.

*தருகிற குரு உனது அந்த தனிச்சிறப்புற்ற இளமையின் மலர்ச்சியே என்று நான் ஊகிக்கிறேன்.*

*தேவியின் அழகும் இளமையுமே சிவனிடம் காமத்தைத்தூண்டுகின்றன. (80)*

वेतण्डकुम्भडम्बरवैतण्डिककुचभरार्तमध्याय।
कुङ्कुमरुचे नमस्यां शङ्करनयनामृताय रचयामः ॥ ८१ ॥

வேதண்ட கும்ப்ப டம்பர வைதண்டிக குச பரார்த மத்யாய ।
குங்கும ருசே நமஸ்யாம் ஶங்கர நயனாம்ருதாய ரசயாம: ॥ 81

*யானையின் மத்தகம் தேவியின் ஸ்தனங்களுடன் விதண்டையாகப் போட்டி இட, ஸ்தனங்கள் விம்மிப் பருக்க, அதன் சுமையால் துயருற்ற இடுப்புள்ளதும், குங்குமப்பூவின் நிறம் கொண்டதும், சங்கரனின் கண்களுக்கு அமுதவிருந்தாயுமானதற்கு வணக்கம் செய்வோம். (81)*

अधिकाञ्चितमणिकाञ्चनकाञ्चीं अधिकाञ्चि काञ्चिदद्राक्षम्।
अवनतजनानुकम्पां अनुकम्पाकूलं अस्मदनुकूलाम् ॥ ८२ ॥

அதிகாஞ்சித மணிகாஞ்சன காஞ்சீம் அதிகாஞ்சி காஞ்சித்
அத்ராக்ஷம் ।
அவனத ஜனானுகம்பாம் அனுகம்பாகூலம் அஸ்மத்
அனுகூலாம் ॥ 82

*ரத்னங்கள் அதிகம் பதித்த தங்க ஒட்டியாணம் பூண்டவளும் தன்னை வணங்கியவர்களிடம் பரிவுள்ளவளும் நமக்கு அனுகூலமானவளுமான ஒருவளைக் காஞ்சியில் கம்பை நதிக்கரையில் கண்டேன். (82)*

परिचितकम्पातीरं पर्वतराजन्यसुकृतसंनाहम्।
परगुरुकृपया वीक्षे परमशिवोत्सङ्गमङ्गलाभरणम् ॥ ८३ ॥

பரிசித கம்பாதீரம் பர்வத ராஜன்ய ஸுக்ருத ஸன்னாஹம் ।
பரகுரு க்ருபயா வீக்ஷே பரமஶிவோத்ஸங்க மங்களாபரணம் ॥ 83

*கம்பாதீரத்தில் உலாவப்பழகியதும், மலையரசனின் புண்ணியச் செறிவும், பரம சிவனின் மடிக்கு மங்களமான அணியுமானதைப் பரமகுருவின் அருளால் காண்கிறேன்.(83)*

दग्धमदनस्य शंम्भोः प्रथीयसीं ब्रह्मचर्यवैदग्धीम् ।
तव देवि तरुणिमश्रीचतुरिमपाको न चक्षमे मातः ॥ ८४ ॥

தக்த்த மதனஸ்ய ஶம்ப்போ: ப்ரதீயஸீம் ப்ரம்ஹசர்ய வைதக்தீம் ।
தவ தேவி தருணிமஸ்ரீ சதுரிம பாகோ ந சக்ஷமே மாத: ॥ 84

*தாயான தேவியே ! மன்மதனை எரித்த சிவனது புகழ் மிக்க பிரும்மசரியச் சிறப்பை உனது அழகுச் சிறப்பின் தேர்ந்த திறமை ஸஹித்துக்கொள்ளவில்லை. (பொறுத்துக் கொள்ளவில்லை.)*

*காமனை எரித்ததன் மூலம் சிவன் தனது பிரும்மசரியச் சிறப்பை வெளிப்படுத்தினார். தேவி தன் அழகின் மலர்ச்சியின் துணைகொண்டு அவரைத் தளர்த்தி மணாளனாக்கிக் கொண்டாள். (84)*

मदजलतमालपत्रा वसनितपत्रा कराद्दतखनित्रा ।
विहरति पुलिन्दयोषा गुञ्जाभूषा फणीन्द्रकृतवेषा ॥ ८५ ॥

மதஜல தமால பத்ரா வஸனித பத்ரா கராத்ருத கனித்ரா ।
விஹரதி புலிந்தயோஷா குஞ்ஜாபூஷா பணீந்த்ர க்ருதவேஷா ॥ 85

*யானைமதநீரும் தமால இலை (பச்சிலை)யும் குழைத்துத் திலகமிட்டவள், இலைகளாலான ஆடையுடுத்தியவள், மண் வெட்டியைத் (தோளில்) சுமப்பவள், குந்துமணியாலான மாலை பூண்டவள், பாம்புகளை அணிகளாகப் பூண்டவள், இந்தக் கோலத்தில் தோன்றிய வேட்டுவப்பெண்ணாகத் தேவி உலா வருகிறாள்.*

*மாதங்கீ, கிராதீ, சியாமளா, ஆர்யா என்று புகழ்பெற்ற உருவம். ஆர்யாஷ்டகம், சியாமளாதண்டகம் முதலியவற்றால் அறிமுகம் பெற்றவள். ஸ்ரீசைலத்தில் ஆதிகிராதியாக அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்திரம் வழங்கவேடன் வேஷத்தில்*

வந்த சிவனது துணைவியாக வேடப்பெண்களின் குறைதீரக் குந்துமணி சோழி மயில் பீலிகை, சங்கு, இலையாடை இவற்றையணிந்த வேடுவப்பெண்ணாக வந்தவள். அடுத்து தேவியின் வேறு சிறப்புகள். (85)

अङ्के शुकिनी गीते कौतुकिनी परिसरे च गायकिनी।
जयसि सविधेऽम्ब भैरवमण्डलिनी श्रवसि शङ्खकुण्डलिनी॥ ८६ ॥

அங்கே ஶுகினீ கீதே கௌதுகினீ பரிஸரே ச காயகினீ।
ஜயஸி ஸவிதே<sup>s</sup>ம்ப பைரவமண்டலினீ ஶ்ரவஸி ஶங்க்க
குண்டலினீ॥ 86

மடியில் கிளியை வைத்து மகிழ்பவள், கீதத்தில் ஆர்வமிக்கவள், பாடுபவர்கள் சூழ நிற்பவள், பைரவர்களால் சுற்றிவரப்பட்டவள், காதுகளில் சங்காலான அணி பூண்டவள், தாயே, நீ இவ்வாறு வெற்றிக்களிப்புடன் உள்ளாய். (86)

ஜய மாதங்க தநயே ! ஜய ஸங்கீத ரஸிகே ஜய லீலாசுகப்ரியே ! (சியாமளாதண்டகம்)

प्रणतजनतापवर्गा कृतबहु[1]सर्गा ससिंहसंसर्गा।
कामाक्षि मुदितभर्गा हतरिपुवर्गा त्वमेव सा दुर्गा॥ ८७ ॥

ப்ரணத ஜனதாபவர்கா க்ருதபஹு[2]ஸர்கா ஸஸிம்ஹ ஸம்ஸர்கா।
காமாக்ஷி முதித பர்கா ஹதரிபுவர்கா த்வமேவ ஸா துர்கா॥ 87

காமாக்ஷியே ! தன்னை வணங்கியவருக்கு முக்தி தருபவளும், பலவகைப்பட்ட உயிரினங்களைப்படைத்தவளும், சிங்கத்துடன் இருப்பவளும் சிவனை மகிழ்விப்பவளும் எதிரிக்கூட்டத்தை அழித்தவளுமான துர்க்கை நீயே !

க்ருதரணஸர்கா என்ற பாடமுண்டு. போரில் ஆர்வமிக்கவள். சரபேசுவரரின் இருசக்திகளில் துர்க்கையும் ஒருவள். (87)

1. रण सर्गा 2. ரணஸர்கா

श्रवणचलद्वेतण्डा समरोद्दण्डा धुतासुरशिखण्डा ।
देवि कलितान्त्रषण्डा धृतनरमुण्डा त्वमेव चामुण्डा ॥ ८८ ॥

ஶ்ரவண சலத் வேதண்டா ஸமரோத்தண்டா
துதாஸுரஶிகண்டா ।
தேவி கலிதாந்த்ரஷண்டா த்ருத நரமுண்டா த்வமேவ
சாமுண்டா ॥ 88

*தேவி ! காதுகளை முன்னும் பின்னும் அசைக்கிற யானைகள் உள்ளவளும் போரில் மும்முரமாக ஈடுபடுபவளும் அசுரரின் தலைகளைப் பந்தாடுபவளும் எதிரிகளின் குடல்களை உறுவி மாலையாக அணிந்தவளும், மனிதனின் வெட்டிய தலையைக் கைகளில் ஏந்தியவளுமான சாமுண்டா நீயே !*

*சண்டனையும் முண்டனையும் அழித்த காளி சாமுண்டா (88)*

उर्वीधरेन्द्रकन्ये दर्वीभरितेन भक्तपूरेण ।
गुर्वीं अकिञ्चनार्तिं खर्वीकुरुषे त्वमेव कामाक्षि ॥ ८९ ॥

உர்வீதரேந்த்ர கன்யே தர்வீபரிதேன பக்த பூரேண ।
குர்வீம் அகிஞ்சனார்திம் க்கர்வீகுருஷே த்வமேவ காமாக்ஷி ॥ 89

*மலையரசரின் மகளே ! காமாக்ஷியே ! உணவுபடைக்கக் கரண்டியில் எடுத்த அன்னக்குவியலால், ஏழைகளுக்குப் பெருந்துயரளிக்கிற பசிக்கொடுமையைப் போக்கிய அன்னபூர்ணா நீயே. (89)*

ताडितरिपुपरिपीडन भयहरणनिपुणहलमुसला ।
क्रोडपति भीषणमुखी क्रीडसि जगति त्वमेव कामाक्षि ॥ ९० ॥

தாடிதரிபுபரி பீடனபயஹரண நிபுண ஹலமுஸலா ।
க்ரோடபதி பீஷண முகீ க்ரீடஸி ஜகதி த்வமேவ காமாக்ஷி ॥ 90

*காமாக்ஷியே ! எதிரியைத்தாக்குவதன் மூலம் எதிரிகளின் துன்புறுத்தலால் ஏற்பட்ட பயத்தைப் போக்குவதில் தேர்ந்த*

*ஏர்க்காலேயும் உலக்கையையும் கொண்டவளும் பெரும் பன்றியின் பயங்கர முக அமைப்பைக் கொண்டவளுமாக நீயே உலகில் விளையாடுகிறாய்.*

*இவள் வாராஹீ எனும் தண்டநாதா. லலிதா தேவியின் சேனைத்தலைவி. (90)*

स्मरमथनवरणलोला मन्मथहेलाविलासमणिशाला ।
कनकरुचिचौर्यशीला त्वमम्ब बाला कराब्जधृतमाला ॥ ९१ ॥

ஸ்மரமதன வரணலோலா மன்மத ஹேலாவிலாஸ மணிஶாலா ।
கனகருசி சௌர்யஶீலா த்வமம்ப பாலா கராப்ஜ த்ருதமாலா ॥ 91

*மன்மதனை மாய்த்தவரை மணாளனாகவரிப்பதில் ஆர்வமுள்ளவளும் மன்மதலீலையால் உண்டான களிப்பிற்கு ஏற்ற ரத்தின மாளிகையானவளும் தங்கத்தின் ஒளியைப் பறிப்பதை இயல்பாகக் கொண்டவளும், தாமரை போன்ற கைகளில் மணாளனை வரிப்பதற்கான மணமாலை தாங்கியவளுமான பாலா நீ.*

*ஸ்வயம்வரா பார்வதி, கன்யாகுமாரி என்ற தோற்றமிது. (91)*

विमलपटी कमलकुटी पुस्तकरुद्राक्षशस्तहस्तपुटी ।
कामाक्षि पक्ष्मलाक्षी कलितविपञ्ची विभासि वैरिञ्ची ॥ ९२ ॥

விமலபடீ கமலகுடீ புஸ்தக ருத்ராக்ஷ ஶஸ்த ஹஸ்தபுடீ ।
காமாக்ஷி பக்ஷ்மலாக்ஷீ கலித விபஞ்சீ விபாஸி வைரிஞ்சீ ॥ 92

*காமாக்ஷியே ! தூய ஆடை அணிந்தவள், தாமரையில் குடியிருப்பவள், புத்தகமும் ருத்திராக்ஷமாலேயும் தாங்குகிற அழகிய உள்ளங்கை உள்ளவள், இமைமயிர் செறிந்த கண்களுள்ளவள், அழகிய வீணை ஏந்தியவள், பிரும்மாவின் பத்தினி, இந்த ஸரஸ்வதி தேவியாக நீ விளங்குகிறாய். (92)*

कुङ्कुमरुचिपिङ्गं असृक्पङ्किलमुण्डालिमण्डितं मातः ।
जयति तव रूपधेयं जपवटपुस्तकवराभयाब्जकरम् ॥ ९३ ॥

குங்குமருசி பிங்கம் அஸ்ருக்பங்கில முண்டாலி மண்டிதம் மாத: ।
ஜயதி தவ ரூபதேயம் ஜபவட புஸ்தக வராபயாப்ஜகரம் ॥ 93

*குங்குமப்பூ போன்று சிவந்ததும், ரத்தம் தோய்ந்த தலைமுண்டங்களின் வரிசையை மாலையாகப் பூண்டதும், ஜபமாலை, புத்தகம் ,வரம், அபயம் இவற்றைத் தாங்கிய கைகள் உள்ளதுமான உன் வடிவு வெற்றியுடன் விளங்குகிறது.*

*திரிபுரா என்ற தோற்றமிது.(93)*

कनकमणि कलितभूषां कालायस कलहशीलकान्तिकलाम् ।
कामाक्षि शीलये त्वां कपालशूलाभिरामकरकमलाम् ॥ ९४ ॥

**கனக மணி கலித பூஷாம் காலாயஸ கலஹ ஶீல காந்திகலாம் ।**
**காமாக்ஷி ஶீலயே த்வாம் கபால ஶூலாபிராம கரகமலாம் ॥ 94**

*காமாக்ஷிதேவி ! தங்கமும் ரத்தினங்களுமிழைத்த அணிகள் பூண்டவளும், எஃகின் கருநிறத்துடன் போட்டியிடுகிற மேனி நிறம் கொண்டவளும், கபாலமும் சூலமும் தரித்த அழகிய தாமரை போன்ற கைகளுள்ளவளுமான உன்னை உள்ளத்தில் கொண்டுள்ளேன்.*

*அதர்வணபத்திரகாளி என்ற பிரத்யங்கிரா தேவி இவள். (94)*

लोहितिमपुञ्जमध्ये मोहितभुवनं मुदा निरीक्षन्ते ।
वदनं तव कुचयुगलं काञ्चीसीमां च केऽपि कामाक्षि ॥ ९५ ॥

லோஹிதிம புஞ்ஜ மத்த்யே மோஹித புவனம் முதா நிரீக்ஷந்தே।
வதனம் தவ குசயுகளம் காஞ்சீஸீமாம் ச கேऽபி காமாக்ஷி ॥ 95

*காமாக்ஷியே ! குவிந்த சிவப்பொளிமண்டலத்தின் இடையே, உலகை மயக்குகின்ற உன் முகத்தையும் இருஸ்தனங்களையும் ஒட்டியாணம் பூணுமிடத்தையும் சிலர்மட்டும் கண்டுகளிக்கின்றனர்.*

*காமகலையின் தியான வடிவம் இது. செவ்வொளிமண்டலத்தின் இடையே முக்கோண வடிவில் (ஃ)*

மூன்று புள்ளிகள். மேலுள்ள புள்ளி தேவியின் முகம். கீழுள்ள புள்ளிகள் இருஸ்தனங்கள். கீழ்நோக்கிய திரிகோணம் அதன்கீழ். அது இடுப்புப்பகுதி. ''முகம் பிந்தும் க்ருத்வா'' (ஸௌ.ல) என்ற சுலோகத்தில் இது விளக்கம் பெறுகிறது. (95)

जलधिद्विगुणितहुतवहदिशादिनेश्वरकलाश्विनेयदलैः ।
नलिनैर्महेशि गच्छसि सर्वोत्तरकरकमलदलं अमलम् ॥ ९६ ॥

ஜலதி த்விகுணித ஹுதவஹ திஶா திநேஶ்வர
கலாஶ்விநேயதளை: ।
நளிநைர் மஹேஶி கச்சஸி ஸர்வோத்தர கரகமலதளம் அமலம் ॥ 96

4-6-10-12-16-2 என்று எண்ணுள்ள இதழ்களுள்ள தாமரைகளால் (ஸுஷும்னையை) கடந்து எல்லாவற்றிற்கும் மேலாக அப்பழுக்கற்ற ஆயிரம் இதழ் தாமரையை நீ அடைகிறாய்.

எண்களைக்குறிப்பிடுகிற முறைகளில் இது ஒன்று. ஜலதி - கடல் 4. ஹுதவஹத்வயம் - அக்னி 3- அதன் இரண்டு -6. திசா - திக்கு10. திநேச்வரர் - ஆதித்யர் 12. கலா 16, அச்விநீ தேவர்கள்-2. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞை என குண்டலினீ சக்தி ஸுஷம்நாநாடி மூலம் ஏறும் போது தங்குமிடங்கள். இவை முறையே 4-6-10-12-16-2 என்ற எண்ணுள்ள இதழ்கள் கொண்ட தாமரைமலர் போன்றவை, இவை எல்லாவற்றிற்கும் மேல் ஆயிரம் இதழ்கள் கொண்டதான ஸஹஸ்ராரசக்கிரம். தேவி குண்டலினியாக மூலாதாரத்தில் எழுந்தவள் ஆறு சக்கிரங்களைக் கடந்து ஸஹஸ்ராரம் சென்று சிவனுடன் இணைகிறாள். (96)

सत्कृतदेशिकचरणाः सबीजनिर्बीजयोगनिश्रेण्या ।
अपवर्गसौधवलभीं आरोहन्त्यम्ब केऽपि तव कृपया ॥ ९७ ॥

ஸத்க்ருத தேசிக சரணா: ஸபீஜ நிர்பீஜ யோக நிச்ரேண்யா ।
அபவர்க ஸௌத வலபீம் ஆரோஹந்த்யம்ப கேऽபி தவ
க்ருபயா ॥ 97

*வழிகாட்டியாகிற குருநாதரின் திருவடிபற்றியவர் ஸபீஜம் நிர்பீஜம் என்ற யோகப்படிகளில் ஏறி முக்தி என்ற மாளிகையின் உப்பரிகையை அடைகிறார்கள்.*

*யோகவழியில் சென்று தியானமும் ஸமாதியும் பழகியவர்கள், தியானம் செய்பவர் - தியானிக்கும் பொருள் - தியானம் என்ற திரிபுடி உணர்வுடன், தேவியைக் காண்பது ஸபீஜத்தியானம். ஸவிகல்பகம், ஸாலம்பனம், ஸவிசேஷம், ஸம்ப்ரஜ்ஞாதம் என்று பல பெயர்களில் இதனைக் குறிப்பிடுவர். இந்தத் தியானஸித்தி ஏற்பட்டுக் குருவருளால் இதில் ஆழம் காண்பர். தியானிக்கும் தன்னை மறந்து தியானித்தபொருளையும் தியானத்தையும் தனித்து உணராமல் பேருணர்வு மட்டுமே உணர்கிற ஸமாதி நிலை நிர்பீஜம் எனப்படும். அதிலிருந்து வேறொன்றும் கிளைக்காமல் அதனிடமே அடங்கும் நிலை இது. நிர்விகல்பகம், நிராலம்பனம், நிர்விசேஷம், அஸம்ப்ரஜ்ஞாதம் எனக்குறிப்பிடுவர். இந்த நிலையின் வெளிப்பாடே முக்தி. (97)*

अन्तरपि बहिरपि त्वं जन्तुततेरन्तकान्तकृदहंते ।
चिन्तित सन्तानवतां सन्ततमपि तन्तनीषि महिमानम् ॥ ९८ ॥

அந்தரபி பஹிரபி த்வம் ஜந்துததேரந்தகாந்த க்ருதஹந்தே ।
சிந்தித ஸந்தானவதாம் ஸந்ததமபி தந்தனீஷி மஹிமானம் ॥ 98

*யமனுக்கு யமனான பரமசிவனின் 'நான்' என்ற அஹங்கார உணர்வானவளே ! நீ எல்லா உயிரினத்தின் உள்ளும் புறமும் இருந்து இடையறாது உன்னை நினைப்பவர்களின் மேனிலையைத் தொடர்ந்து விரிவாக்கிக் கொண்டிருக்கிறாய்.*

*எண்ணமாகவோ ஆற்றலாகவோ அலையலையாக வெளிப்படாமல் சக்தி உள்ளடங்கிய பிரும்மநிலையிலிருந்து, சக்தி தனித்து விமர்சமாக வெளிப்படுகிறாள். அப்போது சிவனிடம் 'தான்' என்ற அஹந்தையும் 'தனது' சக்தி என்ற மமதையும் உருவாகின்றன. சிவனின் அஹந்தையானது, சக்தி தன்னை அவளது மமதைக்குள் அடக்குவதால் தான் நிறைவு பெறுகிறது. எனது இல்லாதபோது 'நான்' என்ற உணர்வு ஏற்படாது. சிவனது அஹங்காரத்தை உருவாக்கியவள் தேவி. (98)*

कलमञ्जुलवागनुमितगलपञ्जरशुकग्रहौत्कण्ठ्यात्।
अम्ब रदनाम्बरं ते बिम्बफलं शम्बरारिणा न्यस्तम्॥ ९९॥

கலமஞ்ஜுள வாகனுமித கல பஞ்ஜர
ஶுகக்ரஹௌத்கண்ட்யாத்।
அம்ப ரதனும்பரம் தே பிம்ப பலம் ஶம்பராரிணா ந்யஸ்தம்॥ 99

*மிகவும் இனிய அதன் குரலால் கிளி ஒன்று தொண்டையாகிற கூட்டில் இருப்பதை ஊஹித்து அதனைப்பிடிக்கிற ஆர்வத்துடன் சம்பரன் என்ற அசுரனை மாய்த்த மன்மதனால் உன் உதடாகிற கோவைப்பழம் வைக்கப்பட்டுள்ளது.*

*பற்களை ஆடைபோன்று உதடுகள் மறைக்கின்றன. (ரதன - அம்பரம்). தேவியின் சிவந்த உதடுகள் கோவைப்பழமாகத் தெரிகின்றன. தேவியின் குரல் கொஞ்சுகிற கிளியாக - தொண்டை என்கிற கூட்டிலிருப்பதைப் பிடிக்க மன்மதன் கோவைப்பழத்தைக் காட்டுகிறான். கிளி அதனைக் கண்டு வெளிவரும் போது அதனைப்பிடிக்க மன்மதன் காத்து நிற்கிறான். தன் வழிபடுதெய்வமான தேவி தன்னுடன் பேசுவாளோ என்ற எதிர்பார்ப்பில் மன்மதன் உள்ளான். (99)*

जय जय जगदम्ब शिवे जय जय कामाक्षि जय जयाद्रिसुते।
जय जय महेशदयिते जय जय चिद्गगनकौमुदीधारे॥ १००॥

ஜய ஜய ஜகதம்ப ஶிவே ஜய ஜய காமாக்ஷி ஜய
ஜயாத்ரிஸுதே।
ஜய ஜய மஹேஶதயிதே ஜய ஜய சித்ககன கௌமுதீ
தாரே॥ 100

*உலகின் தாயே! மங்களமானவளே! நீ வெல்க! வெல்க! காமாக்ஷியே! வெல்க! வெல்க! மலைமகளே! வெல்க! வெல்க! மஹேசனுக்கு இனியவளே! வெல்க! வெல்க! சித் எனும் பரவெளியில் பெருகும் நிலவின் பொழிவானவளே! வெல்க! வெல்க! (100)*

आर्याशतकं भक्त्या पठतां आर्याकटाक्षेण ।
निःसरति वदनकमलाद्वाणी पीयूषधोरणी दिव्या ॥ १०१ ॥

ஆர்யா சதகம் பக்த்யா படதாம் ஆர்யா கடாக்ஷேண ।
நிஸ்ஸரதி வதனகமலாத் வாணீ பீயூஷதோரணீ திவ்யா ॥
101

*பக்தியுடன் இந்த ஆர்யா சதகத்தைச் சொல்பவர்களுக்கு, ஆர்யா என்ற தேவியின் கடைக்கண் பார்வையால் தாமரைபோன்ற (அவர்களது) வாயிலிருந்து தெய்வத்தன்மை கொண்ட வாக்கு அமுத தாரைபோல பெருகும்.*

*ஆர்யா சதகம் கடாக்ஷ சதகத்திற்கு அழைத்துச் செல்கிறது. இதனை* 'ஆர்யா கடாக்ஷேண' *என்ற சொல் உணர்த்துகிறது. (101)*



SREE BANGARU KAMAKSHI AMMAN - THANJAVUR

श्री गुरुभ्यो नमः ।

श्री कामाक्ष्यै नमः ।

# मूकपञ्चशती

## २. कटाक्षशतकम्

# மூகபஞ்சசதீ

## 2. கடாக்ஷ சதகம்

முன்னுரை: - பஞ்சசதியின் முதல் சதகமான ஆர்யா சதகத்தில் தேவியின் முழுஉருவம் போற்றப்பட்டது. பின்வருகிற நான்கு சதகங்களில் விளக்கவிருக்கிற கடாக்ஷம், திருவடிகள், புன் சிரிப்பு, அவளது துதி என்ற நான்கின் ஸாரமும் அதில் விளக்கப்பட்டன. இனி அவை தனித்து விரிவாக விளக்கப்படுகின்றன. இரண்டாவது கடாக்ஷ சதகம். கடாக்ஷத்தின் பெருமை இதில் விளக்கம் பெறுகிறது.

கடாக்ஷம்: - கடைக்கண் பார்வை. அருளேயும் கருணையையும் பொழிவது அதன் இயல்பு. உள்ளத்தின் மாசு அகற்றி அறிவைத் தெளிய வைப்பது, தாபமகற்றிக் குளிர்விப்பது என்பவை கடாக்ஷத்தின் சிறப்பாற்றல். அறியாமை என்ற இருள் அகன்றால் தான் அறிவு தெளியும். பிறவியால் ஊமையான சிறுவன் தனது தாயான தேவியின் அருள் பெற்றதால் சொல்லின் செல்வனை கவியாக மாறியதையும் தன் அறிவு மாசற்றுத்தெளிந்து தேவியின் பரமமான தத்துவநிலேயை அதன் விந்தைக்குரிய கோலங்களுடன் காண்பதையும் தனக்கே உரிய தெளிவும் எளிமையும் நிரம்பிய சொற்களால் விளக்குகிறார்.

मोहान्धकारनिवहं विनिहन्तुमीडे

मूकात्मनामपि महाकवितावदान्यान् ।

श्रीकाञ्चिदेशशिशिरीकृतिजागरूकान्

एकाम्रनाथतरुणीकरुणावलोकान् ॥ १

மோஹாந்த்தகார நிவஹம் வினிஹந்தும் ஈடே
மூகாத்மனும் அபி மஹாகவிதாவதான்யான் ।
ஸ்ரீ காஞ்சிதேஶ ஶிஶிரீக்ருதி ஜாகரூகான்
ஏகாம்ரநாத தருணீ கருணாவலோகான் ॥ 1

*ஊமையும் கவிச் செம்மலாக அருள்புரிகிற வள்ளல்களும் ஸ்ரீகாஞ்சீதேசத்தைக் குளிர்விப்பதில் விழிப்புடன் உள்ளவையுமான ஏகாம்ரநாதனின் இளம்மனைவியின் கருணைக் கடாக்ஷங்களை (என்) மோகமாகிற இருள் குவியலையகற்றுவதற்காகத் துதிக்கிறேன்.*

*மனத்தில் உள்ள எண்ணமனைத்தையும் சொல்லாக வடித்துத் தேவியிடம் அர்ப்பணம் செய்கிறார். அறியாமையின் பெரும் பின்விளைவு பொருளின் உண்மைநிலை உணராத மோகமே. இந்த மோகம், இல்லாததை இருப்பதாகவும், இருப்பதை இல்லாததாயும் மாற்றிக் காட்டும். உண்மையை மறைக்கும். மனத்தை நிலை கொள்ள இயலாதபடி குழப்பும். மோகம் ஒரு பேரிருள். அதனை நீக்குவதையே முதலில் எதிர்பார்க்கிறார். (1)*

मातर्जयन्ति ममताग्रहमोक्षणानि
माहेन्द्रनीलरुचिशिक्षणदक्षिणानि ।
कामाक्षि कल्पितजगत्त्रयरक्षणानि
त्वद्वीक्षणानि वरदानविचक्षणानि ॥ २

மாதர் ஜயந்தி மமதாக்ரஹமோக்ஷணானி
மாஹேந்த்ர நீல ருசி ஶிக்ஷண தக்ஷிணானி ।
காமாக்ஷி கல்பித ஜகத்த்ரய ரக்ஷணானி
த்வத் வீக்ஷணானி வரதான விசக்ஷணானி ॥ 2

*காமாக்ஷி ! உன் பார்வைகள் 'எனது' என எல்லாவற்றையும் பற்றுகிற மமதையின் பிடியிலிருந்து விடுவிப்பவை. (கருவிழியிலிருந்து வெளிப்படுவதால்) இந்திர நீலக்கல்லின் ஒளிக்குத் தன் நிலையைப் போதிப்பதில் திறமை பெற்றவை. மூவுலகையும் காக்க வழி வகுத்தவை. விரும்பியதை வழங்குவதில் தேர்ந்தவை. அவை ஓங்கிவிளங்குகின்றன.*

*நீலரத்தினம் ''தான் தான் ஒளி மிக்கது'' எனக் கர்வம் கொண்டது ''என் எதிரே உன் ஒளி தாழ்ந்தது தான்'' எனப் பார்வை உணர்த்துகிறது. 'எனது' என்ற மமதையின் பிடி விலகினால் அஹந்தையின் பிடி தானே தளரும். (2)*

आनङ्गतन्त्रविधिदर्शितकौशलानां
आनन्दमन्दपरिघूर्णितमन्थराणाम् ।
तारल्यमम्ब तव ताडितकर्णसीम्नां
कामाक्षि खेलति कटाक्षनिरीक्षणानाम् ॥ ३

ஆனங்க தந்த்ர விதி தர்ஶித கௌஶலானாம்
ஆனந்த மந்த பரிகூர்ணித மந்த்தராணாம் ।
தாரள்யம் அம்ப தவ தாடித கர்ணஸீம்னாம்
காமாக்ஷி கேலதி கடாக்ஷ நிரீக்ஷணானாம் ॥ 3

*தாயே காமாக்ஷி! காம லீலைகளின் விதிமுறைகளில் தன் திறமையைக் காட்டுபவை, ஆனந்தத்தின் மென்மையுள்ள சுழற்சியால் மென்னடை புரிபவை. காதின் ஓரத்தைத் தட்டுபவை. அந்த உன் கடைக்கண்பார்வைகளின் தளதளப்பு இனிது விளையாடுகிறது. (3)*

कल्लोलितेन करुणारसवेल्लितेन
कल्माषितेन कमनीयमृदुस्मितेन ।
मामञ्चितेन तव किञ्चन कुञ्चितेन
कामाक्षि तेन शिशिरीकुरु वीक्षितेन ॥ ४

கல்லோலிதேன கருணாரஸ வேல்லிதேன
கல்மாஷிதேன கமனீய ம்ருதுஸ்மிதேன ।
மாம் அஞ்சிதேன தவ கிஞ்சன குஞ்சிதேன
காமாக்ஷி தேன ஶிஶிரீகுரு வீக்ஷிதேன ॥ 4

*காமாக்ஷியே! உனது பார்வை, கருணை எனும் நீரின் கொந்தளிப்பால் பேரலை வீசிக்கொண்டிருக்கிறது. அழகிய புன்சிரிப்பு (கண்களில் தெரிவதால்) செந்நிறமும் வெண்ணிறமும் கலந்தும்*

*சிறிது வளைந்தும் குறுகியும் காண்கிறது. அதனால் என்னைக் குளிர்விப்பாய். (4)*

*மனத்தின் குமுறலும் தாபமும் குறையத் தேவியின் பார்வையின் குளிர்ச்சி உதவுகிறது. கருணை சிகப்பு, புன்னகை வெளுப்பு, கண்களில் இரண்டும் வெளிப்படுவதால் நிறக்கலப்பு நேர்கிறது. (4)*

**साहाय्यकं गतवती मुहुरर्जुनस्य**
**मन्दस्मितस्य परितोषितभीमचेता: ।**
**कामाक्षि पाण्डवचमूरिव तावकीना**
**कर्णान्तिकं चलति हन्त कटाक्षलक्ष्मी: ॥ ५**

ஸாஹாய்யகம் கதவதீ முஹுரர்ஜுனஸ்ய
மந்தஸ்மிதஸ்ய பரிதோஷித பீம சேதா: ।
காமாக்ஷி பாண்டவ சமூரிவ தாவகீனா
கர்ணாந்திகம் சலதி ஹந்த கடாக்ஷலக்ஷ்மீ: ॥ 5

*உன் கடாக்ஷத்தின் அழகாகிய லக்ஷ்மீ, புன்சிரிப்பாகிற அர்ஜுனனுக்கு உதவுவதாக, பீமனாகிற சிவனின் மனத்தை மகிழ்விப்பதாக, பாண்டவரின் ஸேனைபோல், கர்ணனாகிய காதின் அருகே செல்கிறது.*

*அர்ஜுனன் பீமன் கர்ணன் என்பவை இருபொருளுள்ள சொற்கள், புன்சிரிப்பு வெள்ளை. அர்ஜுனனும் வெள்ளை. பீமன்-பீமஸேனனும் சிவபெருமானும். பீமசங்கரர் என்ற ஜோதிர்லிங்கம் புகழ் பெற்றது. பதினொரு ருத்ரர்களில் ஒருவர் பீமர். கர்ணன் குந்தியின் பிள்ளையாயினும் மற்ற குந்தியின் பிள்ளைகளின் கொடும் விரோதி. பாண்டவஸேனை கர்ணனை வெல்ல அவன் அருகே செல்கிறது. கடாக்ஷம் காதின் அருகே செல்கிறது. பாண்டவர் ஸேனைபோன்றது தேவியின் கடாக்ஷ அழகு. பாண்டவர் ஸேனை அர்ஜுனனுக்கு உதவ, பீமனை மகிழ்விக்க, கர்ணனை நோக்கிச்செல்வது போல், தேவியின் கடாக்ஷ அழகு வெண்ணிறமுள்ள புன் சிரிப்பிற்கு உதவ, சிவனின் மனம் குளிர, காதின் அருகே செல்கிறது. (5)*

अस्तं क्षणान्नयतु मे परितापसूर्यं
आनन्दचन्द्रमसं आनयतां प्रकाशम् ।
कालान्धकारसुषमां कलयन् दिगन्ते
कामाक्षि कोमलकटाक्षनिशागमस्ते ॥ ६

அஸ்தம் க்ஷணான் நயது மே பரிதாபஸூர்யம்
ஆனந்த சந்த்ரமஸம் ஆனயதாம் ப்ரகாசம் ।
காலாந்த்தகார ஸுஷமாம் கலயன் திகந்தே
காமாக்ஷி கோமள கடாக்ஷ நிஶாகமஸ் தே ॥ 6

*உன் அழகிய கடாக்ஷமாகிற இரவின் வருகை திக்கின் எல்லையில் காரிருள் அழகைப் பரப்பி, உள்ளத்துத் தாபமெனும் சூரியனை நொடியில் மறையச் செய்யட்டும். ஆனந்தமெனும் சந்திரனை வெளியே கொணரட்டும்.*

*இரவு வருமுன்னே திசைகளின் எல்லையில் இருள் பரவுகிறது. சூரியனின் தாபம் மறைகிறது. நிலவின் ஒளி பரவுகிறது. கடாக்ஷமும் அவ்வாறே அறியாமை இருளை எல்லையில் கொண்டு விடுகிறது. தாபத்தை மறையச் செய்கிறது. நிலவு போன்ற ஆனந்தம் வெளிப்படுகிறது. (6)*

ताटङ्कमौक्तिकरुचाङ्कुरदन्तकान्तिः
कारुण्यहस्तिपशिखामणिनाऽधिरूढः ।
उन्मूलयत्वशुभपादपं अस्मदीयम्
कामाक्षि तावककटाक्षमतङ्गजेन्द्रः ॥ ७

தாடங்க மௌக்திக ருசாங்குர தந்த காந்தி:
காருண்ய ஹஸ்திப ஶிகாமணிநாऽதிரூட: ।
உன்மூலயத்வஶுப பாதபம் அஸ்மதீயம்
காமாக்ஷி தாவக கடாக்ஷ மதங்கஜேந்த்ர: ॥ 7

*காமாக்ஷியே ! உன் அழகிய கடாக்ஷமெனும் யானைக்கூட்டத்தலைவன், தாடங்கங்களிலுள்ள முத்துக்களின் ஒளிக்கதிரையே தன் தந்தங்களின் காந்தியாகக் கொண்டு, கருணை*

என்ற யானைப்பாகன் அதன்மீது ஏறியமர்ந்து செலுத்த, எங்களுடைய தீவினைகளான மரத்தை வேருடன் பிடுங்கி எறியட்டும்.

கடாக்ஷமெனும் யானை, காதுவரை நீண்டதால் தாடங்கங்கள் வரை நீண்ட அதன் தந்தங்கள். கருணையே கடாக்ஷத்தின் பாகன். அவனது ஏவலில் துன்பம் விளைவிக்கிற பாப மரம் வேருடன் களையப்படுகிறது. (7)

छायाभरेण जगतां परितापहारी
ताटङ्करत्नमणितल्लजपल्लवश्रीः ।
कारुण्यनाम विकिरन् मकरन्दजालं
कामाक्षि राजति कटाक्षसुरद्रुमस्ते ॥ ८

ச்சாயாப்பரேண ஜகதாம் பரிதாபஹாரீ
தாடங்க ரத்ன மணிதல்லஜ பல்லவஸ்ரீ: ।
காருண்யநாம விகிரன் மகரந்த ஜாலம்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷஸுரத்ருமஸ் தே ॥ 8

காமாக்ஷியே ! உன் கடாக்ஷமெனும் கற்பகமரம், தன் நிழலால் உலகின் தாபத்தைப் போக்குகிறது. தாடங்கங்களின் ரத்தின ஒளிக்கதிர்களே அதன் துளிர்கள். கருணை எனும் மகரந்தத்தூளை எங்கும் வாரி இறைப்பதாக விளங்குகிறது.

வண்டு பூவிலுள்ள மகரந்தத்தூளை மட்டும் உறுஞ்சித் தன் சொள்ளு நீரில் கலந்து தேனாக மாற்றுகிறது. கடாக்ஷமெனும் கற்பகமரத்தில் கருணை எனும் மகரந்தத்தூள் உள்ளது. பக்தன் தன் பக்தியாகிய வாய் நீரில் அவள் கருணை எனும் மகரந்தத்தைக் கலந்து ஆனந்தத்தேனாக்கிப் பருகுகிறான். கல்பகமரத்து மகரந்தமானதால் விரும்பியபடி அந்த ஆனந்தம் வடிவெடுக்கிறது. (8)

सूर्याश्रय प्रणयिनी मणिकुण्डलांशु-
लौहित्यकोकनद कानन माननीया ।
यान्ती तव स्मरहराननकान्ति सिन्धुं
कामाक्षि राजति कटाक्षकलिन्दकन्या ॥

ஸௌர்யாஶ்ரய ப்ரணயினீ மணிகுண்டலாம்ஶு-
லௌஹித்ய கோகனத கானன மானனீயா ।
யாந்தீ தவ ஸ்மரஹரானன காந்திஸிந்தும்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷ களிந்த கன்யா ॥ 9

*காமாக்ஷியே ! உன் கடாக்ஷமாகிற யமுனை நதி, சூர்யனை அணுகுவதில் (சூரியனை ஆசிரயமாகக்கொண்ட சிவபெருமானிடம்) அன்பு கொண்டவளாக, ரத்தின குண்டலங்களின் ரத்தினங்களின் செந்நிறமாகிய செந்தாமரைக் கூட்டத்தால் நன்மதிப்பிற்குகந்தவளாக, மன்மதனின் எதிரியான சிவனது முக ஒளியாகிய கடலை அடைபவளாக விளங்குகிருள்.*

*களிந்தனின் மகள் யமுனை. முன்னர் யமனின் ஸகோதரியாக ஸூரியனின் புத்திரியாகவுமிருந்தவள். அதனுல் ஸூரியனை நெருங்குவதில் அவளுக்கு அதிகப்பிரியம், கடலை நோக்கிச் செல்பவள். தேவியின் கடாக்ஷம் ஸூர்ய மண்டலத்திலுள்ள பரமேசுவரனை அன்புடன் நோக்கும். அவரது முக மண்டலத்தைச் சென்றடையும். (9)*

प्राप्नोति यं सुकृतिनं तव पक्षपातात्
कामाक्षि वीक्षणविलासकलापुरंध्री ।
सद्यस्तमेव किल मुक्तिवधूर्वृणीते
तस्मान् नितान्तमनयोरिदमैकमत्यम् ॥ १०

ப்ராப்னோதி யம் ஸுக்ருதினம் தவ பக்ஷபாதாத்
காமாக்ஷி வீக்ஷணவிலாஸகலாபுரந்த்ரீ ।
ஸத்யஸ் தமேவ கில முக்திவதூர் வ்ருணீதே
தஸ்மான் நிதாந்தம் அனயோரிதம் ஐகமத்யம் ॥ 10

*காமாக்ஷியே ! எப்போது உன் பரிவின் காரணமாக நற்பணி புரிந்தவரிடம் கடாக்ஷத்தின் ஒரு பகுதியான லக்ஷ்மி என்ற குலமகள் சென்றடைகின்ருளோ, அப்போதே அவரை முக்தி எனும் மணப்பெண்ணும் கணவனுக வரிக்கிருளே ! அதனுல் இவர்களிடையே உள்ள ஒற்றுமை வியப்பதற்குரியவாறு அதிகம் தான்.*

*கடாக்ஷம் வாழ்வின் போகவிரிவையும் முக்தியையும் தருகிறது, போகமுள்ள இடத்தில் முக்தி வராது. முக்தியுள்ள இடத்தில் போகம் என்பதைச் சிந்திக்கவே இயலாது. இம்மையில் பெருவாழ்வும் மறுமையில் மோக்ஷமும் தேவியின் கடாக்ஷத்தின் அரிய விளைவுகள். (10)*

यान्ती सदैव मरुतामनुकूलभावं
भ्रूवल्लिशक्रधनुरुल्लसिता रसार्द्रा ।
कामाक्षि कौतुकतरङ्गितनीलकण्ठा
कादम्बिनीव तव भाति कटाक्षमाला ॥ ११

**யாந்தீ ஸதைவ மருதாம் அனுகூலபாவம்**
**ப்ப்ரூவல்லி ஶக்ரதனுருல்லஸிதா ரஸார்த்ரா ।**
**காமாக்ஷி கௌதுக தரங்கித நீலகண்ட்டா**
**காதம்பினீவ தவ பாதி கடாக்ஷமாலா ॥** 11

*காமாக்ஷியே ! உன் கடாக்ஷ வரிசையாகிற மாலை, மேக வரிசையாகிற மாலையை ஒத்துள்ளது. எப்போதும் மருத் எனும் தேவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறுகிறது. புருவக்கொடியாகிற மின்னலால் ஒளிர்கிறது. கருணையெனும் நீர் நிரம்பி ஈரமாகியுள்ளது. நீலகண்டனாகிற மயிலை அலைபாய்கிற மகிழ்ச்சியடையச் செய்வது.*

*கடாக்ஷம் மேகவரிசை போலுள்ளது. மேகம் மின்னலால் ஒளிகூடி, மயில் கூத்தாடக்காரணமாக நீரால் ஈரமாகிக் காணப்படும். கடாக்ஷமும் தேவர்களின் அனுகூலம் பெற்று, புருவத்தின் அழகால் ஒளிர்ந்து, கருணைப்பெருக்குடன் நீலகண்டருக்கு அலைபாய்கிற மகிழ்ச்சி தருகிறது. (11)*

गङ्गाम्भसि स्मितमये तपनात्मजेव
गङ्गाधरोरसि नवोत्पलमालिकेव ।
वक्त्रप्रभासरसि शैवलमण्डलीव
कामाक्षि राजति कटाक्षरुचिच्छटा ते ॥ १२

கங்காம்ப்பஸி ஸ்மிதமயே தபனாத்மஜேவ
கங்காதரோரஸி நவோத்பல மாலிகேவ ।
வக்த்ர ப்ரபாஸரஸி சைவல மண்டலீவ
காமாக்ஷி ராஜதி கடாக்ஷ ருசிச்சடா தே ॥ 12

*காமாக்ஷியே! உன் புன் சிரிப்பாகிற கங்கை நீரில் உன் கடாக்ஷ ஒளி வீச்சு யமுனை போல் பாய்கிறது. பரமசிவனதுமார்பில் புது அல்லிமாலைபோல் பரவுகிறது. உன் முக ஒளியாகிற ஓடையில் பாசிக்கொத்தாக விளங்குகிறது.*

*புன் சிரிப்பும் கங்கை நீரும் கங்காதரரின் மார்பும் தேவியின் முக ஒளியும் வெண்மையுடன் பிரகாசிப்பவை. யமுனையும் அல்லிமாலையும் பாசிக்கொத்தும் கடாக்ஷமும் கருநிறமுள்ளவை. வெண்ணிறமுள்ளதில் கருநிறம் கொண்டது பாயும் போது உள்ள மாறுபாடுகள் ரஸமானவை, வியப்பிற்குரியவையும் கூட. சூரியனின் மகளான யமுனை தபநாத்மஜா. குளிர்ந்த கங்கை நீரில் சூரியகுமாரியான சூட்டையே இயல்பாகக்கொண்ட யமுனை சேர்வதும், வியப்பிற்குரியதே. (12)*

संस्कारतः किमपि कन्दलितान् रसज्ञा-
केदारसीम्नि सुधियामुपभोगभाग्यान् ।
कल्याणसूक्तिलहरीकलमाङ्कुरान् नः
कामाक्षि कन्दलयतु त्वदपाङ्गमेघः ॥ १३

ஸம்ஸ்காரத: கிமபி கந்தலிதான் ரஸஜ்ஞா-
கேதாரஸீம்னி ஸுதியாம் உபபோகபாக்யான் ।
கல்யாண ஸூக்தி லஹரீ கலமாங்குரான் ந:
காமாக்ஷி கந்தலயது த்வத் அபாங்க மேக: ॥ 13

*காமாக்ஷியே! உன் கடாக்ஷமாகிற மேகம் எமது நாக்குகளாகிற வயலினுள், செய் நேர்த்தியும் பழக்கமும் காரணமாக உருவாகி, நல்லோர்கள் பயன்படுத்துவதற்குரிய நிலையையே பாக்யமாகக் கொண்ட மங்களமிக்க நல்லுரை வரிசையாகிற பயிர்முளைகளைச் செழுமையுடன் வளரச் செய்யட்டும்.*

*முன் பல பிறவிகளில் சேர்ந்த நற்கருமங்களின் ஸம்ஸ்காரமே இப்பிறவியில் செய்நேர்த்தியும் பழக்கமுமாகிப் பேச்சை உருவாக்குகிறது. அதில் தேவியின் கடாக்ஷம் பதியும் போது மங்களமிக்க ஸூக்திகளாகி, நல்லோர்களும் உவந்து அவற்றை ஏற்கச் செய்கிறது. அதுவே பெரும் பாக்கியம். (13)*

चाञ्चल्यमेव नियतं कलयन्प्रकृत्या
मालिन्यभूः श्रुतिपथाक्रमजागरूकः ।
कैवल्यमेव किमु कल्पयते नतानां
कामाक्षि चित्रमपि ते करुणाकटाक्षः ॥ १४

**சாஞ்சல்யமேவ நியதம் கலயன் ப்ரக்ருத்யா**
**மாலின்யபூ: ஶ்ருதிபதாக்ரமஜாகரூக: ।**
**கைவல்யமேவ கிமு கல்பயதே நதானாம்**
**காமாக்ஷி சித்ரமபி தே கருணா கடாக்ஷ: ॥** 14

*காமாக்ஷி ! உன் கருணை ததும்புகிற கடாக்ஷம், இயல்பாக நிலையற்று அலைபாய்வதையே எப்போதும் செய்து கொண்டிருந்தும், அழுக்கின் தோற்றுவாயாக இருந்தும், காது வழியை (வேதவழியை) ஆக்கிரமிப்பதிலேயே கருத்துடன் ஈடுபட்டிருந்தும், கைவல்யம் எனும் மோக்ஷத்தையே உன் அடிபணிந்தோருக்கு அமைத்துத் தருவது எப்படி ! விந்தையாயுள்ளது.*

*நிலையற்ற பார்வை நிலைத்தநிலைக்கும், அழுக்கின் இருப்பிடம் நித்ய சுத்தமான கைவல்ய நிலைக்கும், வேதவழியை மீறியது வேதம்காட்டுகிற நிலைக்கும் உதவாதே என்று ஆச்சரியம். விழிக்கு நிலைத்திராமை இயல்பு. கருவிழியானதால் கருப்பு அழுக்கானது, பீளை முதலிய அழுக்கிற்கும் இடம். காதுவரை செல்வது - நீள்வது அதன் இயல்பு, வியப்பதற்கொன்றுமில்லை. கருணைமிக்க தேவியின் கடாக்ஷத்தின் தனிச்சிறப்பு முக்தி தருவதே. (14)*

संजीवने जननि चूतशिलीमुखस्य
संमोहने शशिकिशोरकशेखरस्य ।

संस्तंभने च ममताग्रहचेष्टितस्य
कामाक्षि वीक्षणकला परमौषधं ते ॥ १५

ஸஞ்ஜீவனே ஜனனி சூதசிலீமுகஸ்ய
ஸம்மோஹனே சசி கிசோரக சேகரஸ்ய ।
ஸம்ஸ்தம்பனே ச மமதாக்ரஹ சேஷ்டிதஸ்ய
காமாக்ஷி வீக்ஷணகலா பரமௌஷதம் தே ॥ 15

*காமாக்ஷி ! உன் பார்வையின் சிறப்பு மாம்பூவை அம்பாகக் கொண்ட மன்மதனை உயிர் பிழைக்கவைத்ததிலும், சந்திரப்பிஞ்சைச்சூடிய சிவனை மயக்குவதிலும், மமதையின் ஆவேசமாகிய பிசாசின் சேஷ்டையைத் ஸ்தம்பிக்கச் செய்வதிலும் பெருமருந்தாகியுள்ளது.*

*எல்லாவற்றிலும் 'எனது' 'எனது' என்கிற எண்ணப்பிசாசு தவருக நடக்க வழிவகுக்கிறது. பிசாசின் நடைமுறைகளைத் தடைசெய்வது தான் அதற்கான மருத்துவம். (15)*

नीलोऽपि रागमधिकं जनयन्पुरारेः-
लोलोऽपि भक्तिमधिकां द्रढयन् नराणाम् ।
वक्रोऽपि देवि नमतां समतां वितन्वन्
कामाक्षि नृत्यतु मयि त्वदपाङ्गपातः ॥ १६

நீலோऽபி ராகம் அதிகம் ஜனயன் புராரே:
லோலோऽபி பக்திம் அதிகாம் த்ரடயன் நராணும் ।
வக்ரோऽபி தேவி நமதாம் ஸமதாம் விதன்வன்
காமாக்ஷி ந்ருத்யது மயி த்வத் அபாங்கபாத: ॥ 16

*காமாக்ஷி ! தான் கறுத்த தெனினும் சிவனிடம் செம்மையை (ஆசையை) ஏற்படுத்துகின்றதும், தான் அலைபோல் பரபரத்தாலும் மாந்தரின் பக்தியை அசையாது நிலைக்கச் செய்வதும், கோணலாயினும் வணங்குபவருக்குச் சமநிலையை ஏற்படுத்துவதுமான உன் கடாக்ஷம் என்னிடம் நடனமாடட்டும்.*

*ஆசை சிவப்பானது, கடைக்கண்பார்வை சாய்ந்த பார்வை. நேர்ப்பார்வையல்ல. (16)*

कामद्रुहो हृदययन्त्रणजागरूका
कामाक्षि चञ्चलदृगञ्चलमेखला ते ।
आश्चर्यमम्ब भजतां झटिति स्वकीय-
संपर्क एव विधुनोति समस्तबन्धान् ॥ १७

காமத்ருஹோ ஹ்ருதய யந்த்ரண ஜாகரூகா
காமாக்ஷி சஞ்சல த்ருகஞ்சல மேகலா தே ।
ஆஶ்சர்யம் அம்ப பஜதாம் ஜடிதி ஸ்வகீய
ஸம்பர்க ஏவ விதுனோதி ஸமஸ்த பந்த்தான் ॥ 17

*தாயே ! காமாக்ஷி ! காமனின் எதிரியான சிவனின் உள்ளத்தைக் கட்டுப்படுத்துவதில் விழிப்புடன் உள்ள உனது அலைபாய்கிற கடைக்கண் பார்வையாகிய சரடு (நூற்கயிறு) தன் தொடர்பாலேயே வழிபடுபவரின் எல்லாக் கட்டுகளையும் விரைவில் நீக்குகிறதே ? விந்தை யல்லவா ?*

*கணவருக்குக் கட்டுப்போடுகிற கயிறு பக்தரின் கட்டை அகற்றுகிறது. (17)*

कुण्ठीकरोतु विपदं मम कुञ्चितभ्रू-
चापाञ्चितः श्रितविदेहभवानुरागः ।
रक्षोपकारमनिशं जनयन् जगत्यां
कामाक्षि राम इव ते करुणाकटाक्षः ॥ १८

குண்ட்டீ கரோது விபதம் மம குஞ்சிதப் ப்ரூ-
சாபாஞ்சித: ஶ்ரித விதேஹ பவானுராக: ।
ரக்ஷோபகாரமனிசம் ஜனயன் ஜகத்யாம்
காமாக்ஷி ராம இவ தே கருணாகடாக்ஷ: ॥ 18

*காமாக்ஷி ! ராமனைப்போன்ற கருணை மிக்க உன் கடாக்ஷம், வில்போல் வளைந்த புருவம் கொண்டது (புருவம் போல் வளைந்த வில்*

*கொண்டது.) தன்னை அண்டி நிற்கிற விதேஹபவனுன மன்மதனிடத்தில் (விதேஹபவையான சீதையிடத்தில்) தொடர்ந்து அன்பு கொண்டது. எப்போதும் உலகின் ரக்ஷை என்ற உபகாரம் செய்வது (ரக்ஷஸ் என்ற ராக்ஷஸருக்கு அபகாரம் செய்வது). அது எனக்கு நேர்கிற விபத்துக்களை பயனற்றுப் போகச் செய்யட்டும்.*

*(1) வளைந்தபுருவமும் வில்லும். (2) மன்மதன் மனத்தில் தோன்றுபவன் - மனஸிஜன். உடலில் தோன்றுபவனல்ல. அதனுல் விதேஹஜன். ஸீதை விதேஹ அரசனிடம் தோன்றியவள் (3) தேவிக்கு மன்மதன் அன்புக்குரியவன். ராமனுக்கு ஸீதை அன்புக்குரியவள் (4) ரக்ஷா - உபகாரம் செய்பவள்தேவி, ரக்ஷா - அபகாரம் செய்பவன் ராமன். இருவரும் கருநிறம் என்ற ஒற்றுமை, இந்தச்சொல் சிலேடைக்கு இடம் தந்தது. (18)*

श्रीकामकोटि शिवलोचनशोषितस्य
शृङ्गारबीजविभवस्य पुनः प्ररोहे।
प्रेमाम्भसार्द्रमचिरात्प्रचुरेण शङ्के
केदारमम्ब तव केवलदृष्टिपातम् ॥ १९

ஸ்ரீ காமகோடி ஶிவலோசன ஶோஷிதஸ்ய
ஶ்ருங்கார பீஜ விபவஸ்ய புன: ப்ரரோஹே ।
ப்ரேமாம்ப்பஸார்த்ரம் அசிராத் ப்ரசுரேண ஶங்கே
கேதாரம் அம்ப தவ கேவல த்ருஷ்டிபாதம் ॥ 19

*ஸ்ரீ காமகோடியே ! சிவனின் கண்களால் வறுபட்ட (முளைக்க இயலாதிருந்த) சிருங்காரமாகிய சிறந்த விதையை மறுபடிதுளிர்க்கச்செய்ய உன் கடாக்ஷமே அன்பெனும் நீரால் நன்கு விரைவில் ஈரமடைந்த நல்வயலானதென ஊகிக்கிறேன்.*

*நெருப்பில் வறுபட்ட விதை முளைக்காது. இந்த வயலும் நீரும் தன் தனிச்சிறப்பால் விதைமுளைக்க உதவியது விந்தையே ! (19)*

माहात्म्यशेवधिरसौ तव दुर्विलंघ्य-
संसारविन्ध्यगिरि कुण्ठनकेलिचुञ्चुः ।
धैर्याम्बुधिं पशुपतेश्चुलुकीकरोति
कामाक्षि वीक्षणविजृम्भणकुम्भजन्मा ॥ २०

மாஹாத்ம்ய ஶேவதிரஸௌ தவ துர்விலங்க்ய-
ஸம்ஸார விந்த்ய கிரி குண்ட்டன கேளி சுஞ்சு: ।
தைர்யாம்புதிம் பஶுபதேஶ்சுலுகீ கரோதி
காமாக்ஷி வீக்ஷண விஜ்ரும்ப்பணகும்ப்பஜன்மா ॥ 20

*காமாக்ஷி ! உன் கடைக்கண்பார்வை வீச்சாகிற அகஸ்தியர் உனது பெருமைகளின் களஞ்சியம். தாண்ட இயலாத ஸம்ஸாரமாகிய விந்திய மலை தலை குனிவதை வேடிக்கையாகச் சிறப்புடன் நிகழ்த்தியவர். பசுபதியின் தைரியமாகிய கடலை உள்ளங்கையிலடங்கிய நீர்த்துளியாக்கியவர். (20)*

पीयूषवर्षशिशिरा स्फुटदुत्पलश्री -
मैत्री निसर्गमधुरा कृततारकाप्तिः ।
कामाक्षि संश्रितवती वपुरष्टमूर्तेः
ज्योत्स्नायते भगवति त्वदपाङ्गमाला ॥ २१

பீயூஷ வர்ஷ ஶிஶிரா ஸ்ப்புடத் உத்பலஶ்ரீ-
மைத்ரீ நிஸர்க மதுரா க்ருத தாரகாப்தி: ।
காமாக்ஷி ஸம்ஶ்ரிதவதீ வபுரஷ்டமூர்தே:
ஜ்யோத்ஸ்னயதே பகவதி த்வத் அபாங்க மாலா ॥ 21

*காமாக்ஷி ! உன் கடாக்ஷ வரிசை, அமுதமழையால் குளிர்ந்தது. அன்றே மலர்ந்த அல்லிப்பூவின் அழகுடன் நட்பு பூண்டதும், இயல்பாகவே இனியதும், நக்ஷத்திர மண்டலம் வரை பரவி நிற்பதுமான அது, எட்டுப்பொருட்களைத்தன் வடிவாகக் கொண்ட சிவனது உடலைத் தன்னிருப்பாகக் கொண்ட நிலவாகிவிட்டது.*

*கடாக்ஷம் நிலவாகியது. தாரகா - நக்ஷத்திரம், கருவிழி. சிவனுக்கு ஐந்து பூதங்களும் (பூமி, நீர், அக்னி, வாயு, ஆகாசம்)*

*சூரியனும் சந்திரனும் வேள்வி புரிபவனும் வடிவங்கள். நிலவு போல் கடாக்ஷமும் அமுதத்தால் குளிர்ந்தது. அல்லியின் நிறமான கருப்பு கடாக்ஷத்தின் நிறம். இது அல்லியுடன் நட்பு கொண்டதன் அடையாளம். நிலவு நட்சத்திரமண்டலம் வரை பரவியது. கடைக்கண் பார்வை கருவிழி ஓரம் செல்லும் வரை நீளும். (21)*

अम्ब स्मरप्रतिभटस्य वपुर्मनोज्ञं
अम्भोजकाननमिवाञ्चितकण्टकाभम् ।
भृङ्गीव चुम्बति सदैव सपक्षपाता
कामाक्षि कोमलरुचिस्त्वदपाङ्गमाला ॥ २२

அம்ப ஸ்மர ப்ரதிபடஸ்ய வபுர் மனோஜ்ஞம்
அம்ப்போஜ கானனம் இவாஞ்சித கண்டகாபம் ।
ப்ருங்கீவ சும்பதி ஸதைவ ஸபக்ஷபாதா
காமாக்ஷி கோமளருசிஸ் த்வத் அபாங்கமாலா ॥ 22

*தாயே ! காமாக்ஷி ! மென்மைமிக்க ஒளி கொண்ட உன் கடாக்ஷ வரிசை, மனத்திற்கு இனியதும் தாமரைக்குவியல் போல் முள்போன்ற மயிர் கூச்சுகொண்டதுமான மன்மதனின் எதிரியான சிவனது உடலை, வண்டுபோல் எப்போதும் பரிவுகொண்டவளாக ஓயாமல் முத்தத்தால் மொய்க்கிறாள்.*

*தாமரைக்குளத்தை பத்மவனம் என்பர். தாமரை அடர்ந்துள்ளதால், குளம் காடாகிறது. தாமரைத் தண்டில் முட்கள் போன்று முண்டுகள் இருக்கும். மாந்தரின் மயிர்சிலிர்ப்பு அதற்கு ஒப்பானது. தேவியின் முத்தமழையால் சிவனது உடல் எப்போதும் மயிர் சிலிர்க்கும். வண்டுமொய்ப்பது போல் தேவி முத்தமிடுகிறாள். (22)*

केशप्रभापटलनीलवितानजाले
कामाक्षि कुण्डलमणिच्छविदीपशोभे ।
कम्रे कटाक्षरुचिरङ्गतले कृपाख्या
शैलूषकी नटति शंकरवल्लभे ते ॥ २३

கேசப்ரபாபடல நீல விதாணஜாலே
காமாக்ஷி குண்டலமணிச்சவி தீபஶோபே ।
கம்ரே கடாக்ஷருசிரங்கதலே க்ருபாக்க்யா
ஶைலூஷகீ நடதி ஶங்கரவல்லபே தே ॥ 23

*சங்கரரை இனிது ஆட்கொண்ட மனதிற்கினிய மனைவியான காமாக்ஷியே ! உன் கிருபையாகிற நடிகை கேச ஒளிப்படலமாகிற நீலநிறமுள்ள மேல் விரிப்புகொண்டதும், குண்டலத்தின் ரத்தின ஒளியாகிற தீபத்தால் ஒளிர்வதும் மிக அழகியதுமான அழகிய கடாக்ஷமாகிற நடன அரங்கில் ஆடுகிறாள்.*

*கிருபை நடிகை. கடாக்ஷம் நடன அரங்கம். இங்கு தீப ஒளி -குண்டலங்களின் ரத்தின ஒளி. மேல் விரிப்பாக - அரங்கின் விதானமாக கேசங்களின் கரிய சோபை. (23)*

अत्यन्तशीतलमतन्द्रयतु क्षणार्धं
अस्तोकविभ्रममनङ्गविलासकन्दम् ।
अल्पस्मिताद्दतमपारकृपाप्रवाहं
अक्षिप्ररोहमचिरान् मयि कामकोटि ॥ २४

அத்யந்த ஶீதளம் அதந்த்ரயது க்ஷணார்த்தம்
அஸ்தோக விப்ப்ரமம் அனங்கவிலாஸகந்தம் ।
அல்ப ஸ்மிதாத்ருதம் அபாரக்ருபா ப்ரவாஹம்
அக்ஷிப்ரரோஹம் அசிரான் மயி காமகோடி ॥ 24

*காமகோடியே ! மிகவும் குளிர்ந்ததும், மிகவும் அழகுள்ளதும், மன்மதலீலையின் வேர்க்கிழங்கும், மெல்லிய புன் சிரிப்புள்ளதும் கரைகாணாதகருணைப் பெருக்குமான உன் கடாக்ஷம் விரைவில் என்னிடம் அரைநொடி நேரமாவது தங்கி இளைப்பாறட்டும். (சோர்வு அகற்றிக் கொள்ளட்டும்.) (24)*

मन्दाक्षरागतरलीकृतिपारतन्त्र्यात्
कामाक्षि मन्थरतरां त्वदपाङ्गदोलाम् ।
आरुह्य मन्दं अतिकौतुकशालि चक्षुः
आनन्दमेति मुहुरर्धशशाङ्कमौलेः ॥ २५

மந்தாக்ஷராக தரளீக்ருதி பாரதந்த்ர்யாத்
காமாக்ஷி மந்தரதராம் த்வத் அபாங்கதோலாம் ।
ஆருஹ்ய மந்தம் அதிகௌதுகஶாலி சக்ஷு:
ஆனந்தமேதி முஹுர் அர்த்த ஶஶாங்க மௌளே: ॥ 25

*காமாக்ஷி ! உனது கடைக்கண் பார்வையின் அழகால், தளர்ந்து தன்னிலை இழந்தமையால், அதிகக் குறுகுறுப்புடன் உள்ளவரும் சந்திரனின் பாதியைத் தன் தலையில் சூடிய வருமான பரமசிவனின் கண், மிகவும் மெதுவாக முன்பின்னுமாடுகிற உனது கடாக்ஷமாகிற ஊஞ்சலில் மெள்ள ஏறி அடிக்கடி ஆனந்தத்தைப் பெறுகிறது*

*ஆசையால் முன்னும், வெட்கத்தால் பின்னும் ஆடுகிறது இந்த ஊஞ்சல்.*

त्रैयम्बकं त्रिपुरसुन्दरि हर्म्यभूमिः
अङ्गं विहारसरसी करुणाप्रवाहः ।
दासाश्च वासवमुखाः परिपालनीयं
कामाक्षि विश्वमपि वीक्षणभूभृतस्ते ॥ २६

த்ரையம்பகம் த்ரிபுரஸுந்தரி ஹர்ம்யபூமி:
அங்கம் விஹாரஸரஸீ கருணப்ரவாஹ: ।
தாஸாஶ்ச வாஸவமுகா: பரிபாலனீயம்
காமாக்ஷி விஶ்வமபி வீக்ஷண பூப்ப்ருதஸ் தே ॥ 26

*திரிபுரஸுந்தரியே ! காமாக்ஷியே ! உன்பார்வையாகிய அரசனுக்குப் பரமசிவனின் மேனி அரண்மனையாகும். உனது கருணைப்பெருக்கு விளையாட்டுக்கான நீச்சல் குளமாகும். இந்திரன் முதலான தேவர்கள் பணியாட்கள். உலகம் முழுவதும் உன் ஆளுகைக்குட்பட்ட ராஜ்யம். (26)*

वागीश्वरी सहचरी नियमेन लक्ष्मीः
भ्रूवल्लरीवशकरी भुवनानि गेहम् ।
रूपं त्रिलोकनयनामृतमम्ब तेषां
कामाक्षि येषु तव वीक्षणपारतन्त्री ॥ २७

வாகீஶ்வரீ ஸஹசரீ நியமேந லக்ஷ்மீ:
ப்ப்ரூவல்லரீ வஶகரீ புவனனி கேஹம் ।
ரூபம் த்ரிலோக நயனம்ருதம் அம்ப தேஷாம்
காமாக்ஷி யேஷு தவ வீக்ஷண பாரதந்த்ரீ ॥ 27

*தாயே ! காமாக்ஷி ! எவர்களிடம் உன்பார்வைக்கு வசமாகிற நிலை தோன்றுகிறதோ, அவர்களுக்குக் கட்டாயமாக வாகீச்வரியான ஸரஸ்வதி கூடநிற்கிற தோழியாவாள். லக்ஷ்மியோ புருவஜாடையையொட்டி நடப்பாள். பதினன்கு உலகங்களும் அவர்களின் இருப்பிடமாகும். அவர்களது வடிவழகோ மூவுலகின் கண்களுக்கும் அமுதமாகும். (27)*

माहेश्वरं झटिति मानसमीनं अम्ब
कामाक्षि धैर्यजलधौ नितरां निमग्नम् ।
जालेन शृङ्खलयति त्वदपाङ्गनाम्ना
विस्तारितेन विषमायुधदाशकोऽसौ ॥ २८

மாஹேஶ்வரம் ஜடிதி மானஸமீனம் அம்ப
காமாக்ஷி தைர்யஜலதௌ நிதராம் நிமக்னம் ।
ஜாலேன ஶ்ருங்க்கலயதி த்வதபாங்க நாம்னு
விஸ்தாரிதேன விஷமாயுத தாஶகோऽஸௌ ॥ 28

*தாயே ! காமாக்ஷி ! தைரியக்கடலில் ஆழ்ந்து மூழ்கிய பரமேசுவரின் மனமாகிய மீனை இந்த மன்மதனுகிய செம்படவன் உன்கடைக்கண் பார்வை என்ற விரிவாக வீசப்பட்ட வலையால் கட்டிப்போடுகிறுன். (28)*

उन्मथ्य बोधकमलाकरं अंब जाड्य -
स्तम्बेरमं मम मनो विपिने भ्रमन्तम् ।
कुण्ठीकुरुष्व तरसा कुटिलाग्रसीम्ना
कामाक्षि तावक कटाक्षमहाङ्कुशेन ॥ २९

உன்மத்ய போதகமலாகரம் அம்ப ஜாட்ய -
ஸ்தம்பேரமம் மம மனோவிபினே ப்ப்ரமந்தம் ।

குண்ட்டீகுருஷ்வ தரஸா குடிலாக்ரஸீம்ஞ
காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹாங்குஸேன ॥ 29

*தாயே ! காமாக்ஷி ! எனது அறிவாகிய தாமரைக் குளத்தைக் கலக்கி என் மனமாகிய காட்டில் சுற்றிக்கொண்டிருக்கிற அறியாமையாகிற யானையை வளைந்த நுனியுள்ள உன் கடாக்ஷமெனும் பெருந்துறட்டியால் விரைவாக அடக்குவாய். (29)*

उद्वेल्लितस्तबकितैर्ललितैर्विलासैः
उत्थाय देवि तव गाढकटाक्षकुञ्जात् ।
दूरं पलाययतु मोहमृगीकुलं मे
कामाक्षि सत्वरमनुग्रह केसरीन्द्रः ॥ ३०

உத்வேல்லித ஸ்தபகிதைர் லலிதைர் விலாஸை:
உத்த்தாய தேவி தவ காட கடாக்ஷகுஞ்ஜாத் ।
தூரம் பலாயயது மோஹ ம்ருகீகுலம் மே
காமாக்ஷி ஸத்வரம் அனுக்ரஹ கேஸரீந்த்ர: ॥ 30

*காமாக்ஷி தேவியே ! உனது அருளாகிற பெருஞ்சிங்கம் பிடறிமயிரை உலுப்பிக்கொண்டு அழகிய நடையுடன் உன் கடாக்ஷமாகிற அடர்ந்த புதரிலிருந்து வெளியாகி என் அறியாமையாகிற பெண்மானினத்தை விரைவாகத் தூரத்தில் விரட்டியடிக்கட்டும். (30)*

स्नेहार्द्रितां विदलितोत्पलकान्तिचोरां
जेतारमेव जगदीश्वरि जेतुकामः ।
मानोद्धतो मकरकेतुरसौ धुनीते
कामाक्षि तावककटाक्षकृपाणवल्लीम् ॥ ३१

ஸ்னேஹார்த்ரிதாம் விதளிதோத்பல காந்தி சோராம்
ஜேதாரமேவ ஜகதீஸ்வரி ஜேதுகாம: ।
மாஞேத்த்ததோ மகரகேதுரஸௌ துனீதே
காமாக்ஷி தாவக கடாக்ஷக்ருபாண வல்லீம் ॥ 31

*உலகின் ஈசுவரியான காமாக்ஷியே ! தன்மானம் மிக்க இந்த மன்மதன். தன்னை வென்ற சிவனையே வெல்ல விரும்பியவனாக, நட்புநெய்பூசியதும் மலர்ந்த நீல அல்லிப்பூவின் ஒளியைத் திருடுவதுமான உன் கடாக்ஷமாகிய மெல்லிய பட்டாக்கத்தியை சுழற்றிவீசுகிறான். (31)*

श्रौतीं व्रजन्नपि सदा सरणिं मुनीनां
कामाक्षि संततमपि स्मृतिमार्गगामी ।
कौटिल्यमम्ब कथमस्थिरतां च धत्ते
चौर्यं च पङ्कजरुचां त्वदपाङ्गपातः ॥ ३२

ஶ்ரௌதீம் வ்ரஜன்னபி ஸதா ஸரணிம் முனீனாம்
காமாக்ஷி ஸந்ததமபி ஸ்ம்ருதி மார்க்க காமீ ।
கௌடில்யம் அம்ப கதம் அஸ்திரதாம் ச தத்தே
சௌர்யம் ச பங்கஜருசாம் த்வத் அபாங்கபாத: ॥ 32

*தாயே ! காமாக்ஷி ! உன்கடைக்கண்பார்வை எப்போதும் வேதவழியைப் பின்பற்றுகிறது. முனிவர்களின் ஸ்மிருதிகளின் வழியையும் அனுசரிக்கிறது. இருந்தும் வக்கிரத் தன்மையையும் நிலை கொள்ளாமையையும் தாமரையின் அழகைத் திருடுவதையும் ஏன் தன் இயல்பாகக் கொள்கிறது ?*

*வேதத்தையும் ஸ்மிருதிகளையும் பின்பற்றுகிற கடைக்கண் பார்வை தனது கொள்கைக்கு மாறாக வக்கிரமாவதும் நிலை கொள்ளாததும் பிறரது உரிமைப் பொருளைக் கையாடுவதும் தவறல்லவா ? என்பதொரு சிலேடையாக நிந்தாஸ்துதி. பார்வை காதுவரை நீள்வதால் சுருதி (காது) மார்க்கத்தை அனுசரிக்கிறது. பக்தனைப்பற்றிய நினைவையொட்டிச் செயல் புரிவதால் ஸ்மிருதி (நினைவு) மார்கத்தை அனுசரிக்கிறது என்பதே கருத்து. (32)*

नित्यं श्रुतेः परिचितौ यतमानमेव
नीलोत्पले निजसमीप निवासलोलम् ।
प्रीत्येव पाठयति वीक्षणदेशिकेन्द्रः
कामाक्षि किन्नु तव कालिमसंप्रदायम् ॥ ३३

நித்யம் ஶ்ருதே: பரிசிதெள யதமானமேவ
நீலோத்பலம் நிஜஸமீப நிவாஸ லோலம் ।
ப்ரீத்யைவ பாடயதி வீக்ஷண தேசிகேந்த்ர:
காமாக்ஷி கிம் நு தவ காளிம ஸம்ப்ரதாயம் ॥ 33

*காமாக்ஷியே ! தினமும் சுருதிகளின் பழக்கத்தைப் பெறுவதற்கு முயல்கின்றதும் தன் அருகிலிருப்பதில் ஆர்வமுள்ளதுமான நீல உத்பலத்திற்கு உன் பார்வையாகிற குரு நாதர், அன்புடன் காளிமஸம்பிரதாயத்தைப்போதிக்கிறாரோ ?*

*காளிமஸம்பிரதாயம் - இருண்ட துர்மார்கம். தன் அருகில் வசித்து வேதபரிசயத்தைப்பெற வந்த மாணவனுக்கு துன்மார்க்க உபதேசம் எப்படிப்பொருந்தும் ? இதுவும் நிந்தாஸ்துதியே. நீல உத்பலம் கருநிறமுள்ளது. சுருதியான காதுடன் அன்புடன் பழகவிரும்பி அதனருகில் வசிக்கவிரும்பியதால் அதனைக் காதின் மேல் செருகிக் கொள்வர். அதற்கே கருநிறம் பெற வழியை - காளிமஸம் பிரதாயத்தைக் கரிய விழி ஆசிரியனாகிப் பழக்குகிறது என்பதே கருத்து. கரு நீல நிறமுள்ள உத்பலத்தை விடக் கருவிழி கறுத்துள்ளது. (33)*

भ्रान्त्वा मुहुः स्तबकितस्मितफेनराशौ
कामाक्षि वक्त्ररुचि संचयवारिराशौ ।
आनन्दति त्रिपुरमर्दन नेत्रलक्ष्मीः
आलम्ब्य देवि तव मन्दमपाङ्गसेतुम् ॥ ३४

ப்ப்ராந்த்வா முஹு: ஸ்தபகித ஸ்மிதபேனராஶெள
காமாக்ஷி வக்த்ரருசி ஸஞ்சய வாரிராஶெள ।
ஆனந்ததி த்ரிபுரமர்தன நேத்ரலக்ஷ்மீ:
ஆலம்ப்ய தேவி தவ மந்தம் அபாங்கஸேதும் ॥ 34

*தேவி ! காமாக்ஷி ! திரிபுரம் அழித்த பரமசிவனது பார்வையாகிய லக்ஷ்மி, அடுக்கடுக்காக வெளிப்படுகிற உன் புன் சிரிப்பாகிற நுரைகளுடன் கூடிய உன் முககாந்தியாகிற கடலில் நீந்திக்களைத்து. உனது கடைக்கண் ஆகிய அணைக்கட்டை மெல்லப்பிடித்துக் (கரை ஏறிக் களைப்பு நீங்கி) ஆனந்தப்படுகிறாள்.*

*தேவியின் முக அழகு கடல்போல் பொங்கி எழுகிறது. வெண்ணிறமுள்ள புன் சிரிப்பு திட்டுதிட்டாக நுரைபோன்று கடலில் மிதக்கிறது. சிவனது பார்வை வெகுநேரம் கடலில் நீந்திக்களைத்து கண்களாகிய அணைக்கட்டைப்பிடித்துக் கொண்டதும் பார்வை அங்கேயே நிலைத்தது. ஆனந்தத்தை உணர்ந்தது. (34)*

श्यामा तव त्रिपुरसुन्दरि लोचनश्रीः
कामाक्षि कन्दलितमेदुरतारकान्तिः ।
ज्योत्स्नावती स्मितरुचापि कथं तनोति
स्पर्धामहो कुवलयैश्च तथा चकोरैः ॥ ३५

ஶ்யாமா தவ த்ரிபுரஸுந்தரி லோசன ஶ்ரீ:
காமாக்ஷி கந்தளிதமேதுர தார காந்தி: ।
ஜ்யோத்ஸ்னாவதீ ஸ்மிதருசாபி கதம் தனோதி
ஸ்பர்த்தாமஹோ குவலயைஶ்ச ததா சகோரை: ॥ 35

*திரிபுரஸுந்தரி ! காமாக்ஷி ! உன் கண்களின் அழகு இரவுபோல் இளமை நிறைந்த யுவதிபோல் விளங்குகிறது. தளதளப்பும் புஷ்டியும் கருநிறமும் கொண்ட கருவிழி நக்ஷத்ரம் போல் ஒளிர்கிறது. புன் சிரிப்பு என்ற நிலவு அதில் மிளிர்கிறது. ஆனால் கருநெய்தல் பூவுடனும் சகோரப்பறவைகளுடனும் போட்டியிடுகிறது. இது விந்தை யல்லவா ?*

*இரவும் நிலவும் நக்ஷத்திர ஒளியும் சேர்ந்து, சகோரப்பறவையையும் கருநெய்தல் பூவையும் மகிழ்விப்பவை. இரவில் நிலவைக்கண்டதும் கருநெய்தல் பூ மலரும். சகோரப்பறவை நிலவை உண்டு மகிழும். தேவியின் கண் அழகாகிய இரவில் புன் சிரிப்பாகிற நிலவு வீசுகிறது. கருவிழியாகிய நக்ஷத்ரம் மின்னுகிறது. நெய்தல் பூவிற்கும் சகோரத்திற்கும் மகிழ்ச்சிதரக்கூடிய சூழ்நிலை இருந்தும் கருமையில் பூ அழகா ? கண்விழி அழகா ? சகோரப்பறவையின் பார்வை அழகா ? என்ற போட்டி ஏன் ? ஒன்றை மற்றொன்று*

*விஞ்சுவதற்கு ஏன் முற்படுகின்றன ? நட்பு நிலவவேண்டியிருக்கப் பகை வெளிப்படுகிறதே ! (35)*

कालाञ्जनं च तव देवि निरीक्षणं च
कामाक्षि साम्यसरणिं समुपैति कान्त्या ।
निश्शेषनेत्रसुलभं जगतीषु पूर्वं
मन्ये त्रिनेत्रसुलभं तुहिनाद्रिकन्ये ॥ ३६

காலாஞ்ஜனம் ச தவ தேவி நிரீக்ஷணம் ச
காமாக்ஷி ஸாம்யஸரணிம் ஸமுபைதி காந்த்யா ।
நிஶ்ஶேஷ நேத்ர ஸுலபம் ஜகதீஷு பூர்வம்
மன்யே த்ரிநேத்ர ஸுலபம் துஹிநாத்ரிகன்யே ॥ 36

*பனிமலை மகளே ! தேவி ! காமாக்ஷி ! கருத்த மையும் உன் பார்வையும் காந்திஅளவில் ஸமநிலை பெறும். ஆனால் முதலாவதான மை எல்லாக்கண்களுக்கும் கிடைக்கும். உன்பார்வை முக்கண்ணனான சிவனது மூன்றுகண்களுக்கு மட்டும் கிடைக்கக் கூடியது.*

*விழியோரம் ஒதுங்கிய கருவிழியைக் கருத்த கண்மையுடன் ஒப்புநோக்க இரண்டும் சமம். ஆனால் தேவியின் கடைவிழி பரமசிவனுக்கு மட்டும் சொந்தம். கருத்த கண்மை உலகின் எல்லாப் பெண்களுக்கும் சொந்தம். (36)*

धूमाङ्कुरो मकरकेतनपावकस्य
कामाक्षि नेत्ररुचिनीलिमचातुरी ते ।
अत्यन्तमद्भुतमिदं नयनत्रयस्य
हर्षोदयं जनयते हरिणाङ्कमौलेः ॥ ३७

தூமாங்குரோ மகரகேதன பாவகஸ்ய
காமாக்ஷி நேத்ரருசி நீலிம சாதுரீ தே ।
அத்யந்தம் அத்புதம் இதம் நயனத்ரயஸ்ய
ஹர்ஷோதயம் ஜனயதே ஹரிணாங்கமௌளே: ॥ 37

*காமாக்ஷியே ! மன்மதன் என்ற அக்கினிக்கு உன்கண்களில் ஒளிர்கிற கருப்பின் சிறப்பு புகைக்கொடிபோல். சந்திரனைச் சிரஸில் தரித்த பரம சிவனது மூன்று கண்களுக்கும் ஆனந்த எழுச்சியை இது தருகிறதே ! விந்தை யல்லவா ?*

*புகை கண்களைத் துன்புறுத்தும். சிவனது கண்கள் இந்தப் புகையால் ஆனந்தப்படுகின்றன. அது எப்படி ? நெருப்பிற்குப் புகை கொடி. கொடி தூரத்தில் பறந்தாலும் அதன் உடமையாளன் யார் என்பதை அறிவிக்கும், கீழே உள்ள நெருப்பைப் புகை தெரிவிப்பதால் புகை நெருப்பின் கொடி, சந்திரனின் நடுவில் தெரிகிற இருட்டுத்திட்டு மான்போல் உள்ளதால் மானை அடையாளமாகக் கொண்டதை ஹரிணாங்கன் மிருகாங்கன் என்ற பெயர்களால் குறிப்பிடுவர். மீனைக் கொடியில் கொண்டவன் மன்மதன் என்பதால், அவன் மீனகேதனன், மகரத்வஜன். (37)*

आरम्भलेशसमये तव वीक्षणस्य
कामाक्षि मूकमपि वीक्षणमात्रनम्रम् ।
सर्वज्ञता सकललोकसमक्षमेव
कीर्तिः स्वयंवरणमाल्यवती वृणीते ॥ ३८

ஆரம்ப லேஶ ஸமயே தவ வீக்ஷணஸ்ய
காமாக்ஷி மூகமபி வீக்ஷணமாத்ர நம்ரம் ।
ஸர்வஜ்ஞதா ஸகல லோக ஸமக்ஷமேவ
கீர்தி: ஸ்வயம்வரண மால்யவதீ வ்ருணீதே ॥ 38

*காமாக்ஷியே ! உன்பார்வைபட்டால் போதுமென்ற பாவனையுடன் வணங்கி நிற்கிற ஊமையையும் உன் பார்வை படத் தொடங்கும் நொடியிலேயே, உலகத்தினர் எல்லோர் முன்னிலையிலேயே, ஸர்வஜ்ஞ (எல்லா மறிந்த) நிலை எனும் கன்னிப்பெண், புகழ் என்ற ஸ்வயம் வரமாலையை ஏந்தி வரிக்கிறாள்.*

*நன்கு கற்றறிந்தவனுக்கும் ஸர்வஜ்ஞநிலை கடும் உழைப்பாலும் பெற எளிதல்லாதது. ஆனால் பிறவியிலேயே ஊமையானவன் சிறிதும் கற்றறியாதவன். உன் பார்வை*

லேசாகப்பட்டதென்பதால், ஸர்வஜ்ஞநிலை பெரும்புகழுடன் அவனைத் தானே சென்றடைகிறது. மூககவி தன் அனுபவத்தை விளக்குகிறார். (38)

कालाम्बुवाह इव ते परितापहारी
कामाक्षि पुष्करमधः कुरुते कटाक्षः ।
पूर्वः परं क्षणरुचा समुपैति मैत्रीं
अन्यस्तु सन्ततरुचिं प्रकटीकरोति ॥ ३९

காலாம்புவாஹ இவ தே பரிதாபஹாரீ
காமாக்ஷி புஷ்கரம் அத: குருதே கடாக்ஷ: ।
பூர்வ: பரம் க்ஷணருசா ஸமுபைதி மைத்ரீம்
அன்யஸ்து ஸந்ததருசிம் ப்ரகடீகரோதி ॥ 39

காமாக்ஷியே ! உனது கடாக்ஷம் கார்மேகம் போல் மக்களின் தாபத்தைப் போக்குகிறது. அது பிரளயகாலத்துப் பெருமழை பெய்கிற புஷ்கர மேகத்தையும் தாழ்த்திவிடும். கார்மேகமோ ஒரே நொடிநேரம் துடிக்கிற மின்னல் ஒளியுடன் நட்பு கொள்கிறது. உன்பார்வையோ எப்போதுமுள்ள பேரொளியை வெளிப்படுத்துகிறது.

பார்வைக்கு உவமைப்பொருள் மேகம். உவமிக்கும் பொருளைவிட உவமைப்பொருள் பலமடங்கு உயர்ந்ததாக இருக்கும். இங்கோ உவமைப்பொருளான கார்மேகம் நொடிநேரத்து ஒளி கொண்டது. பார்வையோ கோடிசூர்யஒளிகொண்டது. தாபத்தைக் குறைப்பதிலும் கார்மேகம் எங்கே ? பிரளயகாலத்தில் உலகத்தையே நீரில் கரைக்கின்ற புஷ்கரமேகத்தையும் தாழ்த்தக்கூடிய தேவியின் பார்வை எங்கே ? (39)

सूक्ष्मेऽपि दुर्गमतरेऽपि गुरुप्रसाद-
साहाय्यकेन विचरन्नपवर्गमार्गे ।
संसारपङ्कनिचये न पतत्यमुं ते
कामाक्षि गाढमवलम्ब्य कटाक्षयष्टिम् ॥ ४०

ஸூக்ஷ்மேऽபி துர்கமதரேऽபி குருப்ரஸாத
ஸாஹாய்யகேன விசரன் அபவர்கமார்கே ।
ஸம்ஸார பங்க நிசயே ந பதத்யமும் தே
காமாக்ஷி காடம் அவலம்ப்ய கடாக்ஷயஷ்டிம் ॥ 40

*காமாக்ஷி ! மிக மிகக்குறுகியதும் எளிதில் கடக்க முடியாததுமான முக்திப்பாதையில் குருவின் திருவருளின் உதவிகொண்டு செல்பவன், இந்த உன்கடாக்ஷமெனும் ஊன்றுகோலை நன்கு பிடித்துக் கொண்டதால், ஸம்ஸாரம் எனும் புதைச்சேற்றில் விழுவதில்லை.*

*குருவருளால் செல்பவன் தேவியின் அருளால் சேற்றில் விழாமல் காப்பாற்றப்படுகிறான். (40)*

कामाक्षि संततमसौ हरिनीलरत्न-
स्तम्भे कटाक्षरुचिपुञ्जमये भवत्याः ।
बद्धोऽपि भक्तिनिगलैर्मम चित्तहस्ती
स्तम्भं च बन्धमपि मुञ्चति हन्त चित्रम् ॥ ४१

காமாக்ஷி ஸந்ததமஸௌ ஹரிநீலரத்ன-
ஸ்தம்ப்பே கடாக்ஷருசி புஞ்ஜமயே பவத்யா: ।
பத்த்தோऽபி பக்தி நிகளைர் மம சித்தஹஸ்தீ
ஸ்தம்பம் ச பந்தமபி முஞ்சதி ஹந்த சித்ரம் ॥ 41

*காமாக்ஷி ! என் சித்தமாகிற யானை உனது கடாக்ஷ ஒளித்திரளாகிய இந்திர நீல ரத்தினத்தாலான தூணில் பக்தி எனும் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டுள்ளது. அப்போதே அது தூணையும் கட்டையும் விட்டுவிட்டுச் செல்கிறது. விந்தையல்லவா ?*

*யானை முன்னர் அஜ்ஞான மென்ற தூணில் வினைப்பயன் என்ற சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தது. பக்தியால் உன்கடாக்ஷத்தில் கட்டு பெற்றதும் அஜ்ஞானத்தூணிலிருந்த வினைக்கட்டு அகன்றுவிட்டது. (41)*

कामाक्षि कार्ष्ण्यमपि संततमञ्जनं च
बिभ्रन्निसर्गतरलोऽपि भवत्कटाक्षः ।
वैमल्यमन्वहमनञ्जनतां च भूयः
स्थैर्यं च भक्तहृदयाय कथं ददाति ॥ ४२

காமாக்ஷி கார்ஷ்ண்யமபி ஸந்ததம் அஞ்ஜனம் ச
பிப்ப்ரன் நிஸர்க தரளோऽபி பவத் கடாக்ஷ: ।
வைமல்யம் அன்வஹம் அனஞ்ஜனதாம் ச பூய:
ஸ்த்தைர்யம் ச பக்த ஹ்ருதயாய கதம் ததாதி ॥ 42

*காமாக்ஷி ! உன் கடாக்ஷம் இயல்பாகக்கருநிறம் கொண்டது, எப்போதும் கண்மை இட்டுக்கொள்கிறது. எப்போதும் சலித்துக்கொண்டேயிருக்கிறது. எனினும் உன்னிடம் பக்தி செலுத்துகிற இதயத்திற்கு அப்பழுக்கற்ற நிலையை அதிக அளவில் எப்படித்தருகிறது ?*

*இயல்பாகக் கறுத்துள்ள அழுக்கு மலம். மை தடவிக்கொள்வது வலிய ஒட்டிக்கொண்ட செயற்கையான அழுக்கு - லேபம் அல்லது அஞ்சனம். மலமும் அஞ்சனமும் உள்ளதொன்று மலமற்ற நிலையை (வைமல்யத்தை)யும் அஞ்சனமற்ற நிலை (அநஞ்ஜநதா)யையும் தருவது எங்ஙனம் ? கடாக்ஷத்தின் வெளித்தோற்றம் கறுத்தது. உள்ளே உள்ள சுய உருவம் கருணை. நிர்மல-நிரஞ்சன நிலையை இயல்பாகப்பெற்றது. பக்தனுடைய பக்தி கருமையை ஏற்காமல் கருணையை மட்டும் பெறச் செய்கிறது. (42)*

मन्दस्मितस्तबकितं मणिकुण्डलांशु-
स्तोमप्रवालरुचिरं शिशिरीकृताशम् ।
कामाक्षि राजति कटाक्षरुचेः कदम्बं
उद्यानमम्ब करुणाहरिणेक्षणायाः ॥ ४३

மந்தஸ்மித ஸ்தபகிதம் மணிகுண்டலாம்ஶு-
ஸ்தோம ப்ரவாள ருசிரம் ஶிஶிரீக்ருதாஶம் ॥

காமாக்ஷி ராஜதி கடாக்ஷருசே: கதம்பம்
உத்யானமம்ப கருணா ஹரிணேக்ஷணாயா:॥ 43

*தாயே காமாக்ஷி ! உன் கடாக்ஷத்தின் ஒளிக்குவியலாகிற கதம்பவனம், புன்சிரிப்பாகிற பூங்கொத்துகளுள்ளது, ரத்தின குண்டல ஒளியாகிற இளந்துளிர்களால் அழகானது, திசைகளனைத்தையும் (எல்லாவிடங்களையும்) குளிரச்செய்வது, (உள்ளத்தின் ஆசைகளையும் நிரப்பிக் குளிரச் செய்வது). அது கருணை எனும் இளம் பெண் விளையாடுகிற தோட்டமாகியது.*

*கருணை ததும்ப, புன்சிரிப்பால் கண்கள் விரிய, குளிர்ந்த பார்வை எங்கும் பரவ, தேவி அருள் புரிகிறாள். (43)*

कामाक्षि तावककटाक्षमहेन्द्रनील-
सिंहासनं श्रितवतो मकरध्वजस्य ।
साम्राज्यमङ्गलविधौ मणिकुण्डलश्रीः
नीराजनोत्सवतरङ्गितदीपमाला ॥ ४४

காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹேந்த்ர நீல-
ஸிம்ஹாஸனம் ஶ்ரிதவதோ மகரத்வஜஸ்ய ।
ஸாம்ராஜ்ய மங்கள விதௌ மணிகுண்டலஶ்ரீ:
நீராஜனோத்ஸவ தரங்கித தீபமாலா ॥ 44

*காமாக்ஷி ! உன் கடாக்ஷமாகிற நீலரத்னத்தாலான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்த மன்மதனது சக்கிரவர்த்திபட்டாபிஷேகத்திற்கான நடைமுறையில், உன் ரத்தின குண்டலத்தின் ஒளி, மங்களதீபத்திற்கான அடுக்கு தீபமாக ஒளிர்கிறது. (44)*

मातः क्षणं स्नपय मां तव वीक्षितेन
मन्दाक्षितेन सुजनैरपरोक्षितेन ।
कामाक्षि कर्मतिमिरोत्करभास्करेण
श्रेयस्करेण मधुपद्युतितस्करेण ॥ ४५

மாத: க்ஷணம் ஸ்னபய மாம் தவ வீக்ஷிதேன
மந்தாக்ஷிதேன ஸுஜனைரபரோக்ஷிதேன ।
காமாக்ஷி கர்ம திமிரோத்கர பாஸ்கரேண
ஶ்ரேயஸ்கரேண மதுப த்யுதி தஸ்கரேண ॥ 45

*தாயே ! காமாக்ஷி ! உன் பார்வை மென்மையும் நாணமும் கொண்டமையால் தாழ்ந்துள்ளது. நல்லோர்களால் நேரிடையாக உணரப்பெற்றது, கர்மவினையாகிற இருளை சூர்யன் போல் அழிப்பது, மேன்மையளிப்பது, வண்டின் கருமையைத் திருடியது, அந்தப்பார்வையால் என்னைக் கணநேரம் நீராட்டுவாயாக. (45)*

प्रेमापगापयसि मज्जनमारचय्य
युक्तः स्मितांशुकृत भस्मविलेपनेन ।
कामाक्षि कुण्डलमणिद्युतिभिर्जटालः
श्रीकण्ठमेव भजते तव दृष्टिपातः ॥ ४६

ப்ரேமாபகா பயஸி மஜ்ஜனம் ஆரசய்ய
யுக்த: ஸ்மிதாம்ஶு க்ருத பஸ்மவிலேபனேன ।
காமாக்ஷி குண்டல மணி த்யுதிபிர் ஜடால:
ஸ்ரீ கண்டமேவ பஜதே தவ த்ருஷ்டிபாத: ॥ 46

*காமாக்ஷி ! அன்பெனும் ஆற்றுநீரில் நீராடி, புன்சிரிப்பாகிற வெண்ணிற விபூதிபூசி உன் குண்டலத்து ரத்தின ஒளிக்கதிர்களாகிய சடை பூண்ட உன் பார்வை (என்ற ருஷி) சிவனையே வழிபடுகிறது.*

*கடாக்ஷம் சிவனைப் பெறத்தவமிருக்கிறது. நீராடுதலும் விபூதி பூசுதலும் சடையும் தவசியின் அடையாளம். (46)*

कैवल्यदाय करुणारसकिङ्कराय
कामाक्षि कन्दलित विभ्रमशङ्कराय ।
आलोकनाय तव भक्तशिवङ्कराय
मातर्नमोऽस्तु परतन्त्रितशङ्कराय ॥ ४७

கைவல்தாய கருணாரஸ கிங்கராய
காமாக்ஷி கந்தளித விப்ப்ரம ஶங்கராய ।

ஆலோகனாய தவ பக்த ஶிவங்கராய
மாதர் நமோऽஸ்து பரதந்த்ரித ஶங்கராய ॥ 47

*தாயே ! காமாக்ஷி ! முக்தி அளிப்பதும், கருணையைத் தன் பணியாளராகக் கொண்டதும் மலர்ச்சியுடன் வெளியாகிறலீலைகளால் உலகிற்கு நன்மை புரிவதும், பக்தர்களுக்கு மங்களம் தருவதும் சிவனை வசப்படுத்தியதுமான உனது பார்வைக்கு நமஸ்காரம். (47)*

साम्राज्य मङ्गलविधौ मकरध्वजस्य
लोलालकालिकृततोरणमाल्यशोभे ।
कामेश्वरि प्रचलदुत्पलवैजयन्ती-
चातुर्यमेति तव चञ्चलदृष्टिपातः ॥ ४८

ஸாம்ராஜ்ய மங்கள விதௌ மகரத்த்வஜஸ்ய
லோலாலகாலிக்ருத தோரண மால்ய ஶோபே ।
காமேஶ்வரி ப்ரசலத் உத்பல வைஜயந்தீ-
சாதுர்யம் ஏதி தவ சஞ்சல த்ருஷ்டிபாத: ॥ 48

*காமேசுவரியே ! ஆடுகின்றகூந்தல் நுனிகளின் வரிசையாகிய தோரணமாலையால் அழகியவளே ! மன்மதனின் ஸாம்ராஜ்யபட்டாபிஷேக மங்களச்சடங்கில், உன்னுடைய அசைந்தாடுகின்ற பார்வை, அசைந்தாடுகின்ற நீலோத்பல வெற்றிமாலையின் அழகைப் பெறுகின்றது. (48)*

मार्गेण मञ्जुकचकान्तितमोवृतेन
मन्दायमानगमना मदनातुरासौ ।
कामाक्षि दृष्टिरयते तव शङ्कराय
सङ्केतभूमिं अचिरादभिसारिकेव ॥ ४९

மார்கேண மஞ்ஜு கச காந்தி தமோவ்ருதேன
மந்தாயமான கமனா மதனாதுராஸௌ ।
காமாக்ஷி த்ருஷ்டிரயதே தவ ஶங்கராய
ஸங்கேத பூமிம் அசிராத் அபிஸாரிகேவ ॥ 49

*காமாக்ஷியே ! ரகசியமாகக் குறிப்பிட்ட இடத்திற்குச் செல்கிற அபிஸாரிகை போல், அழகிய கருங்கூந்தலாகிய இருட்டில் மறைந்தவழியே, மெதுவாக (பிறரறியாமல்) நடந்து செல்பவளாக, காமத்தால் பரபரப்புற்றவளாக, உன்பார்வை சங்கரனை அடைகின்றது.*

*ரகசியமான இடத்தைத் தேர்ந்தெடுத்துக் காதலனைச் சந்திக்கச் செல்பவள் அபிஸாரிகை (அவிசாரி). இருட்டும் பயமும் வெட்கமும் நடையை மந்தப்படுத்த, காமவேகம் நடையைத் துரிதப்படுத்துகிறது. (49)*

व्रीडानुवृत्तिरमणीकृतसाहचर्या
शैवालितां गलरुचा शशिशेखरस्य ।
कामाक्षि कान्तिसरसीं त्वदपाङ्गलक्ष्मीः
मन्दं समाश्रयति मज्जनखेलनाय ॥ ५०

வ்ரீடானு வ்ருத்தி ரமணீக்ருத ஸாஹசர்யா
ஶைவாலிதாம் களருசா ஶஶிஶேகரஸ்ய ।
காமாக்ஷி காந்திஸரஸீம் த்வத் அபாங்கலக்ஷ்மீ:
மந்தம் ஸமாஶ்ரயதி மஜ்ஜன கேலனாய ॥ 50

*காமாக்ஷியே ! உனது கடாக்ஷலக்ஷ்மீ, (அழகு) லஜ்ஜை என்கிற தோழி பின்தொடர, ஜலக்ரீடைக்காக, சிவபெருமானின் கழுத்தின் பிரதிபலிப்பால் பாசிபடர்ந்தது போலான சிவனின் முக காந்தியாகிற ஓடைக்குச் செல்கிறாள்.*

*சிவனது கழுத்தில் விஷத்தின் நீலம் படர்ந்ததால் நீலகண்டனானார். சிவனது முக ஒளியின் கீழே கழுத்து நீலமாகிற பாசிபடர்ந்துள்ளது. சிவனது முகத்தைத் தேவி வெட்கத்துடன் பார்க்கிறாள். (50)*

काषायमंशुकमिव प्रकटं ददानो
माणिक्यकुण्डलरुचिं ममताविरोधी ।
श्रुत्यन्तसीमनि रतः सुतरां चकास्ति
कामाक्षि तावककटाक्षयतीश्वरोऽसौ ॥ ५१

காஷாயம் அம்ஶுகமிவ ப்ரகடம் ததாநோ
மாணிக்ய குண்டலருசிம் மமதாவிரோதீ ।
ஶ்ருத்யந்த ஸீமனி ரத: ஸுதராம் சகாஸ்தி
காமாக்ஷி தாவக கடாக்ஷ யதீஶ்வரோऽஸௌ ॥ 51

*காமாக்ஷி ! உன் கடாக்ஷமாகிற சிறந்த துறவி, உன் மாணிக்க குண்டலத்தின் ஒளியைத் துவராடை போல் பலரறிய உடுத்தியவராக, மமதையின் எதிரியாக, காதோரமாக உள்ள உபநிஷதக்கருத்தில் ஈடுபட்டவராக, நன்கு விளங்குகிறார்.*

*கடாக்ஷம் ஒரு துறவி. அவரது துவராடை சிகப்பு ரத்தினக் கற்கள் பதித்த குண்டலத்தின் ஒளி. சுருதி - காது, வேதம். சுருதிகளின் அந்தமான உபனிடதம் அவரது காதோரம். காதோரம் வரை செல்கிற பார்வை - உபனிடதம் வரை செல்கிறதுறவி. (51)*

पाषाण एव हरिनीलमणिर्दिनेषु
प्रम्लानतां कुवलयं प्रकटीकरोति ।
नैमित्तिको जलदमेचकिमा ततस्ते
कामाक्षि शून्यमुपमानं अपाङ्गलक्ष्म्याः ॥ ५२

பாஷாண ஏவ ஹரி நீலமணிர் திநேஷு
ப்ரம்லானதாம் குவலயம் ப்ரகடீ கரோதி ।
நைமித்திகோ ஜலத மேசகிமா ததஸ்தே
காமாக்ஷி ஶூன்யமுபமானம் அபாங்கலக்ஷ்ம்யா: ॥ 52

*காமாக்ஷியே ! நீலரத்னம் ஒருகல் தான். கருநெய்தல் பூ பகலில் வாடும். மேகத்தில் காணப்படுகிற கருமையோ இயல்பானதல்ல. செயற்கையானது. அதனால் உன்கடாக்ஷ அழகிற்கு ஈடானபொருளில்லை.*

*கடாக்ஷத்திற்கு உபமானமாக எதைச் சொல்வது ? நீல ரத்னமோ கல். கருநெய்தலோ வாடும். மேகத்தின் கருமை நிலைத்ததல்ல - இயல்புமல்ல. கடாக்ஷமோ உயிர்துடிப்பு மிக்கது. எந்நேரமும் வாடாதது. நிலைத்த கருப்புநிறமுள்ளது. (52)*

शृङ्गारविभ्रमवती सुतरां सलज्जा
नासाग्रमौक्तिकरुचा कृतमन्दहासा ।
श्यामा कटाक्षसुषमा तव युक्तमेतत्
कामाक्षि चुम्बति दिगम्बरवक्त्रबिम्बम् ॥ ५३

ப்ஶ்ருங்கார விப்ப்ரமவதீ ஸுதராம் ஸலஜ்ஜா
நாஸாக்ர மௌக்திகருசா க்ருத மந்தஹாஸா ।
ஶ்யாமா கடாக்ஷ ஸுஷமா தவ யுக்தம் ஏதத்
காமாக்ஷி சும்பதி திகம்பர வக்த்ர பிம்பம் ॥ 53

*காமாக்ஷி ! உன் கடாக்ஷ அழகாகிய இளம்யுவதி, சிருங்கார சேஷ்டைகள் மிக்கவளாக, மிகவும் வெட்கமுள்ளவளாக, மூக்கின் நுனியில் தொங்குகிற முத்தால் புன்சிரிப்புள்ளவளாக, திகம்பரனுன சிவனின் கோவைப்பழம் போன்று சிவந்த முகத்தை முத்தமிடுகிருள். இதுபொருத்தமே,*

*ஆடையின்றி ஆண்டியாகச் சுற்றுவதால் திக்குகளேயே ஆடையாகக் கொண்டவர் சிவன், முத்துபோன்ற சிரிப்புடன் அம்பிகையின் பார்வை சிவனிடம் பதிந்துள்ளது. கடாக்ஷம் சிவனை முத்தமிட்டதுபோல். (53)*

नीलोत्पलेन मधुपेन च दृष्टिपातः
कामाक्षि तुल्य इति ते कथमामनन्ति ।
शैत्येन निन्दति यदन्वहमिन्दुपादान्
पाथोरुहेण यदसौ कलहायते च ॥ ५४

நீலோத்பலேன மதுபேன ச த்ருஷ்டிபாத:
காமாக்ஷி துல்ய இதி தே கதம் ஆமனந்தி ।
ஶைத்யேன நிந்ததி யதன்வஹம் இந்து பாதான்
பாதோருஹேண யதஸௌ கலஹாயதே ச ॥ 54

*காமாக்ஷி ! உன் பார்வை கருநெய்தல் புஷ்பத்துடனும் வண்டோடும் ஸமமானதென்று எப்படிக் கூறுகிருர்கள் ? தினமும் தன்குளிர்ச்சியால், கடாக்ஷம் சந்திரனது கிரணங்களை இகழ்கிறதே ! தாமரையோடும் தினமும் சண்டையிடுகிறதே !*

*கருநெய்தல் பூவின் மலர்ச்சிக்கு உதவுவதால் அந்தப் பூவைவிட சந்திரன் உயர்ந்தவன். சந்திரனது குளிர்ச்சிவெளித்தாபத்தை மட்டும் அகற்றும். கடாக்ஷம் உள் தாபத்தையும், ஆத்யாத்மிக - ஆதிபௌதிக - ஆதிதைவிகமான தாபத்தையும் அகற்றும். சந்திரனேயே இகழ்கிற கடாக்ஷம் சந்திரனுக்குக் கீழான நெய்தல் பூவுடன் ஸமம் என எப்படிக் கூறலாம் ? வண்டு தாமரையைப் புகலிடமாக உணவேற்குமிடமாக அடைகிறது. வண்டைவிட உயர்ந்த தாமரையைக் கடாக்ஷம் தன்மென்மையாலும் அழகாலும் தோற்கடிக்கிறது. வண்டோடு கடாக்ஷம் ஸமமென எப்படிக் கூறலாம் ? கருநெய்தல் பூவும் வண்டும் கறுப்பு நிறம் என்ற ஓரம்சத்தில் ஈடாகலாம் என்று கூறுவதும் சரியல்ல. (54)*

ओष्ठप्रभापटलविद्रुममुद्रिते ते
भ्रूवल्लिवीचिसुभगे मुखकान्तिसिन्धौ ।
कामाक्षि वारिभरपूरणलम्बमान-
कालाम्बुवाहसरणिं लभते कटाक्षः ॥ ५५

ஓஷ்ட்ட ப்ரபா படல வித்ரும முத்ரிதே தே
ப்ப்ரூவல்லி வீசி ஸுபகே முக காந்தி ஸிந்த்தௌ ।
காமாக்ஷி வாரி பர பூரண லம்பமான-
காலாம்புவாஹ ஸரணிம் லபதே கடாக்ஷ: ॥ 55

*காமாக்ஷியே ! உனது முககாந்தி, கடலாக உள்ளது. உன் உதடுகளின் சிவப்பே பவழக் கொடிகள். உனது புருவநெரிப்பே கடலின் அலை. இந்த முககாந்திக்கடலில் தண்ணீர் நிரப்பிக்கொள்ளத்தழைந்து இறங்கிய கருமேகம் போன்ற நிலையை உன்கடாக்ஷம் பெறுகிறது. (55)*

मन्दस्मितैर्धवलिता मणिकुण्डलांशु-
संपर्कलोहितरुचिस्त्वदपाङ्गधारा ।
कामाक्षि मल्लिकुसुमैर्नवपल्लवैश्च
नीलोत्पलैश्च रचितेव विभाति माला ॥ ५६

மந்த ஸ்மிதைர்த்தவளிதா மணிகுண்டலாம்ஶு-
ஸம்பர்க லோஹித ருசிஸ் த்வத் அபாங்க தாரா ।
காமாக்ஷி மல்லி குஸுமைர் நவபல்லவைஶ்ச
நீலோத்பலைஶ்ச ரசிதேவ விபாதி மாலா ॥ 56

*காமாக்ஷி ! மல்லிகைப்பூவாலும் சிவந்த இளந்துளிர்களாலும் கருநெய்தல்பூவாலும் அமைத்த மாலே போல், புன் சிரிப்பால் வெளுத்து, ரத்ன குண்டல ஒளி கலந்த சிகப்பு ஒளியுடன் உன் கடாக்ஷ வீச்சு காணப்படுகிறது.*

*உன் கடாக்ஷம் கருநெய்தல் போன்று கருத்தது. உன் புன் சிரிப்பு மல்லிப்பூ போன்று வெளுத்தது, காதணியின் மாணிக்ய ரத்ன ஒளியோ சிவந்தது. (56)*

कामाक्षि शीतलकृपारसनिर्झराम्भः -
संपर्कपक्ष्मलरुचिस्त्वदपाङ्गमाला ।
गोभिः सदा पुररिपोरभिलष्यमाणा
दूर्वाकदम्बकविडम्बनमातनोति ॥ ५७

காமாக்ஷி ஶீதள க்ருபாரஸ நிர்ஜ்ஜராம்ப: -
ஸம்பர்க்க பக்ஷ்மலருசிஸ் த்வத் அபாங்கமாலா ।
கோபி: ஸதா புரரிபோ: அபிலஷ்யமாணா
தூர்வா கதம்பக விடம்பனம் ஆதனோதி ॥ 57

*காமாக்ஷி ! உன் கடாக்ஷ வரிசை, குளிர்ந்த தயையின் ஸாரமாகிற நீர்வீழ்ச்சியின் நீரின் தொடர்பால் தழைத்த அருகம்புல் பத்தைபோல் விளங்குகிறது. புல்லே நாடி வருகிற பசுமாடு போன்ற சிவபெருமானின் கண்களால் நாடப்பெறுகிறது.*

*குளிர்ந்த நீர் வீழ்ச்சியின் நீரால் பசுமை நிரம்பிய அருகம்புல். புல்லேநாடிவருகிற (கோ) பசுபோல் சிவனது கண்கள். கடாக்ஷம் புல்பத்தை போல் பசுமையும் மென்மையும் கொண்டது. (57)*

हृत्पङ्कजं मम विकासयतु प्रमुष्णन्
उल्लासमुत्पलरुचेस्तमसां निरोद्धा ।

दोषानुषङ्गजडतां जगतां धुनानः
कामाक्षि वीक्षणविलासदिनोदयस्ते ॥ ५८

ஹ்ருத் பங்கஜம் மம விகாஸயது ப்ரமுஷ்ணன்
உல்லாஸமுத்பலருசேஸ் தமஸாம் நிரோத்த்தா ।
தோஷானுஷங்க ஜடதாம் ஜகதாம் துனன:
காமாக்ஷி வீக்ஷண விலாஸ தினோதயஸ்தே ॥ 58

*காமாக்ஷி ! உன் பார்வையின் அழகாகிற பகல் (ஸூர்ய) உதயவேளே, கருநெய்தல் பூவின் ஒளியை மங்கச் செய்வதாக இருட்டைத் தடைசெய்வதாக (உள்ளத்து இருளாகிய அஜ்ஞானத்தை நீக்குவதாக) இரவின் தொடர்பால் ஏற்படுகிற அயர்வை நீக்குவதாக (பாபவினைத் தொடர்பால் நேர்ந்த செயலாற்றல் குறையை நீக்குவதாக) என் இதயமாகிய தாமரையை மலரச் செய்யட்டும்.(58)*

चक्षुर्विमोहयति चन्द्रविभूषणस्य
कामाक्षि तावककटाक्षतमःप्ररोहः ।
प्रत्यङ्मुखं तु नयनं स्तिमितं मुनीनां
प्राकाश्यमेव नयतीति परं विचित्रम् ॥ ५९

சக்ஷுர் விமோஹயதி சந்த்ர விபூஷணஸ்ய
காமாக்ஷி தாவக கடாக்ஷ தம: ப்ரரோஹ: ।
ப்ரத்யங் முகம் து நயனம் ஸ்திமிதம் முனீனாம்
ப்ராகாஶ்யமேவ நயதீதி பரம் விசித்ரம் ॥ 59

*காமாக்ஷி ! உனது கடாக்ஷமாகிய இருட்டடிப்பு சந்திரனை அணிந்த சிவனது கண்களை மறைக்கிறது. ஆனால், உள்நோக்கில் முனைந்த சலனமற்ற முனிவர்களின் (அறிவுக்) கண்ணை வெளிச்சத்திற்கு அழைத்துச் செல்கிறது என்பது விந்தையே.*

*பரமசிவனைக்கண் தெரியாமல் இருட்டில் மயங்கி தேவியின் வசமாகும்படி செய்கிற பார்வை முனிவரின் மனத்தில் இருள்விலகச்செய்து உள்நோக்கைத் தந்து ஆத்மஜோதியைக் காணச் செய்கிறது. கடாக்ஷத்தின் கருமை, இரு மாறுபட்ட நிலைகளைத் தருகிறது. (59)*

कामाक्षि वीक्षणरुचा युधि निर्जितं ते
नीलोत्पलं निरवशेषगताभिमानम् ।
आगत्य तत्परिसरं श्रवणावतंस-
व्याजेन नूनमभयार्थनं आतनोति ॥ (६०)

காமாக்ஷி வீக்ஷணருசா யுதி நிர்ஜிதம் தே
நீலோத்பலம் நிரவஶேஷ கதாபிமானம் ।
ஆகத்ய தத் பரிஸரம் ஶ்ரவணாவதம்ஸ-
வ்யாஜேன நூனம் அபயார்த்தனம் ஆதனோதி ॥ 60

*காமாக்ஷி ! உன் பார்வை ஒளியால், போரில் தோற்ற கருநெய்தல் பூ முற்றிலும் தன்மானமிழந்து கண்களின் அருகே வந்து காதில் செருகிய பூவணியாகி, அபயத்தை வேண்டுகிறது. (61)*

आश्चर्यमम्ब वदनाभ्युदयावलम्बी[1]
कामाक्षि चञ्चलनिरीक्षणविभ्रमस्ते ।
धैर्यं विधूय तनुते हृदि रागबन्धं
शंभोस्तदेव विपरीततया मुनीनाम् ॥ ६१

ஆஶ்சர்யமம்ப வதனாப்யுதயாவலம்பீ[2]
காமாக்ஷி சஞ்சல நிரீக்ஷண விப்ப்ரமஸ்தே ।
தைர்யம் விதூய தனுதே ஹ்ருதி ராகபந்தம்
ஶம்போஸ் ததேவ விபரீததயா முனீனாம் ॥ 61

*தாயே காமாக்ஷி ! உன் முகத்தின் சிறப்பை (மன்மதனே) ஆதாரமாகக் கொண்ட சஞ்சலமான உன்பார்வையின் அழகு, சிவனது இதயத்தில் இருந்த தைரியத்தைக் குலைத்து அன்புப்பிணைப்பை ஏற்படுத்துகிறது. முனிவர்களுக்கு இதற்கு மாறுபட்டுத் தைரியத்தைத் தந்து உலகபந்தத்தை நீக்குகிறது. இது விந்தையே ! (61)*

---

*1.* मदनाभ्युदयावलंब: *2.மதநாப்ப்யுதயாவலம்ப:*

जन्तोः सकृत्प्रणमतो जगदीड्यतां च
तेजस्विता च निशितां च मतिं सभायाम्।
कामाक्षि माक्षिकझरीमिव वैखरीं च
लक्ष्मीं च पक्ष्मलयति क्षणवीक्षणं ते ॥ ६२

ஜந்தோ: ஸக்ருத் ப்ரணமதோ ஜகதீட்யதாம் ச
தேஜஸ்விதாம் ச நிஶிதாம் ச மதிம் ஸபாயாம் ।
காமாக்ஷி மாக்ஷிக ஜரீமிவ வைகரீம் ச
லக்ஷ்மீம் ச பக்ஷ்மளயதி க்ஷண வீக்ஷணம் தே ॥ 62

*காமாக்ஷி ! உனது கணநேரப்பார்வையானது, ஒரு தடவை வணங்கிய மனிதனுக்கு உலகால் புகழப்படுவதையும், ஒளி நிறைவையும் கூர்மையுள்ள அறிவையும், ஸபையில் தேனருவிபோன்ற பேச்சு வன்மையையும் செல்வத்தையும் செழிப்புறச் செய்கிறது. (62)*

कादम्बिनी किमयते न जलानुषङ्गं
भृङ्गावली किमुररीकुरुते न पद्मम्।
किं वा कलिन्दतनया सहते न गङ्गां
कामाक्षि निश्चयपदं न तवाक्षिलक्ष्मीः ॥ ६३

காதம்பினீ கிமயதே ந ஜலானுஷங்கம்
ப்ருங்காவளீ கிமுரரீகுருதே ந பத்மம் ।
கிம் வா களிந்ததனயா ஸஹதே ந கங்காம்
காமாக்ஷி நிஶ்சயபதம் ந தவாக்ஷிலக்ஷ்மீ: ॥ 63

*காமாக்ஷி ! மேகவரிசை ஜலத்தோடு இணைப்பைப் பெறவில்லையா ? வண்டுக்கூட்டம் தாமரையில் ஒன்றவில்லையா ? யமுனை கங்கையைப் பொறுத்துக்கொள்ள வில்லையா ? உன் பார்வை எனும் லக்ஷ்மி ஏன் ஸ்திர நிலையைப் பெறவில்லை ?*

*ஓட்டமும் சஞ்சலமுமே அழகல்ல. சலனத்தையே இயல்பாகக் கொண்டதும் கூட இறுதியில் நிலைத்துநிற்க விரும்பும். மேகமாகித் தடையற்றவானில் சுற்றிய மேகம்*

*மழைத்துளியாகி நீர் நிலையை அடைந்து நிலைபெறுகிறது. வண்டு மகரந்தத்திற்கு ஆங்காங்கு சுற்றிவிட்டு இறுதியில் தாமரையில் நிலைபெறுகிறது. யமுனை தன் தனித்தன்மையை இழந்து கங்கையுடன் கலந்து கங்கையாகி நிம்மதிபெறுகிறது. கடாக்ஷம் மட்டும் இன்னமும் நிலைபெறாமல் ஏன் அலைந்து கொண்டிருக்கிறது ? (63)*

काकोलपावकतृणीकरणेऽपि दक्षं
कामाक्षि बालकसुधाकरशेखरस्य ।
अत्यन्तशीतलतमोऽप्यनुपारतं ते
चित्तं विमोहयति चित्रमयं कटाक्षः ॥ ६४

காகோல பாவக த்ருணீகரணேऽபி தக்ஷம்
காமாக்ஷி பாலக ஸுதாகர சேகரஸ்ய ।
அத்யந்த சீதளதமோऽப்யனுபாரதம் தே
சித்தம் விமோஹயதி சித்ரமயம் கடாக்ஷ: ॥ 64

*காமாக்ஷி ! கால கூடத்தின் நெருப்பு போன்ற விஷத்தையும் புல்லுக்குச்சமமாக்குவதில் தேர்ந்தவரான இளஞ் சந்திரனைத் தலையில் சூடிய பரம சிவனது மனத்தை, உன் கடாக்ஷம், மிக மிகக் குளிர்ந்ததாயினும், இடைவிடாமல் மயக்குகிறதே ! விந்தையல்லவா.*

*தாபத்திற்குட்பட்டவனும் விஷமருந்தியவனும் மயக்கமடைவான். குளிர்ந்த நீர் முதலியவை அவனது மயக்கத்தைத் தெளியச் செய்யும். நெருப்பான காளகூட விஷத்தை அருந்தியும் மயக்கமுறாத பரமசிவன், உன் மிகக்குளிர்ந்த பார்வையால் மயங்குகிறான் எனில் இது இயற்கைக்கு மாறான விந்தையல்லவா ? (64)*

कार्पण्यपूररसवर्धितमम्ब मोह -
कन्दोद्गतं भवमयं विषपादपं मे ।
तुङ्गं छिनत्तु तुहिनाद्रिसुते भवत्याः
काञ्चीपुरेश्वरि कटाक्षकुठारधारा ॥ ६५

கார்பண்ய பூர ரஸ வர்த்திதம் அம்ப மோஹ-
கந்தோத்கதம் பவமயம் விஷபாதபம் மே ।
துங்கம் சினத்து துஹிநாத்ரிஸுதே பவத்யா:
காஞ்சீபுரேஶ்வரி கடாக்ஷ குடார தாரா ॥ 65

*பனி மலை மகளே ! காஞ்சிபுரத்தின் மகாராணியே ! தாயே ! எனது ஏழ்மையெனும் நீர்பெருக்கால் வளர்க்கப்பட்டதும், மோஹம் எனும் கிழங்கிலிருந்து வெளிப்பட்டதும், பிறப்பிறப்பென்ற தொடராக உருவானதும், உயரம் மிக்கதுமான விஷமரத்தை, உனது கடாக்ஷமெனும் கோடரியின் கூரிய நுனி, வெட்டி எறியட்டும். (65)*

कामाक्षि घोरभवरोगचिकित्सनार्थं
अभ्यर्थ्य देशिककटाक्षभिषक्प्रसादात् ।
तत्रापि देवि लभते सुकृती कदाचित्
अत्यन्तदुर्लभमपाङ्गमहौषधं ते ॥ ६६

காமாக்ஷி கோர பவரோக சிகித்ஸனார்த்தம்
அப்யர்த்ய தேஶிக கடாக்ஷ பிஷக் ப்ரஸாதாத் ।
தத்ராபி தேவி லபதே ஸுக்ருதீ கதாசித்
அத்யந்த துர்லபம் அபாங்க மஹௌஷதம் தே ॥ 66

*தேவி ! காமாக்ஷி ! கோரமான பிறப்பிறப்புத் தொடராகிய நோயின் சிகித்ஸைக்காக, வழிகாட்டியான குருவின் கடாக்ஷமாகிற வைத்தியரின் அருளால், நற்பணிபுரிந்த புண்ணியவான் மிகவும் துர்லபமான உன் கடைக்கண்பார்வையாகிய சிறந்த பெருமருந்தை எப்போதாவது பெறுவான். (66)*

कामाक्षि देशिककृपाङ्कुरमाश्रयन्तो
नानातपोनियमनाशितपाशबन्धाः ।
वासालयं तव कटाक्षममुं महान्तो
लब्ध्वा सुखं समधियो विचरन्ति लोके ॥ ६७

காமாக்ஷி தேஶிக க்ருபாங்குரம் ஆச்ரயந்தோ
நாநா தபோ நியம நாஶித பாஶபந்தா: ।

வாஸாலயம் தவ கடாக்ஷமமும் மஹாந்தோ
லப்த்த்வா ஸுகம் ஸமதியோ விசரந்தி லோகே ॥ 67

*காமாக்ஷி ! வழிகாட்டியான குருவின் கிருபையைப் பற்றிய பெரியோர், பல வகைப்பட்ட தவமும் நியமமும் பின்பற்றிஅஜ்ஞானம் முதலிய பாசக்கட்டுகள் அகன்றவர்களாக, உனது கடாக்ஷமாகிற இருப்பிடத்தை அடைந்து மனச்சலனமின்றி ஸம நிலைபெற்று உலகில் ஸுகமாக வாழ்கிறார்கள். (67)*

साकूतसंलपितगर्भितमुग्धहासं
व्रीडानुरागसहचारि विलोकनं ते ।
कामाक्षि कामपरिपन्थिनि मारवीर-
साम्राज्यविभ्रमदशां सफलीकरोति ॥ ६८

ஸாகூத ஸம்லபித கர்ப்பித முக்த்த ஹாஸம்
வ்ரீடா னுராக ஸஹசாரி விலோகனம் தே ।
காமாக்ஷி காம பரிபந்த்தினி மாரவீர-
ஸாம்ராஜ்ய விப்ப்ரம தஶாம் ஸபலீகரோதி ॥ 68

*காமாக்ஷி ! தன் உள்ளத்திலுள்ளதை முழுதும் வெளிப்படுத்தாமல் குறிப்பால் உணர்த்துகிற பேச்சை உள்ளடக்கிய மென்சிரிப்புள்ளதும், நாணமும் ஆழ்ந்த அன்பும் கொண்டதுமான உனது பார்வை, காமனின் எதிரியான சிவனிடம், மன்மதன் எனும் வீரனின் ஆளுமையின் சிறப்பைப் பயன்படச் செய்கிறது.*

*மனத்தில் உள்ளதை, தெரிந்து கொள்ள வேண்டியவர் மட்டும் குறிப்பால் உணரும்படி பேச்சும் புன் சிரிப்பும் நாணமும் ஆழ்ந்த அன்பும் தேவியிடம் காணப்பட்டதும் அதனைப் பயன்படுத்திக் கொண்ட மன்மதன் தன் வலிமையால் தன் எதிரியான சிவனின் மனத்தைத் தேவியின் பால் செல்லச் செய்தான். தேவியின் கடாக்ஷம் இதில் துணை நின்றது. (68)*

कामाक्षि विभ्रमबलैकनिधिर्विधाय
भ्रूवल्लिचापकुटिलीकृतिमेव चित्रम् ।

स्वाधीनतां तव निनाय शशाङ्कमौलेः
अङ्गार्धराज्यसुखलाभमपाङ्गवीरः ॥ ६९

காமாக்ஷி விப்ப்ரம பலேக நிதிர் விதாய
ப்ப்ரூவல்லி சாப குடிலீக்ருதிமேவ சித்ரம் ।
ஸ்வாதீனதாம் தவ நிஞய ஶஶாங்கமௌளே:
அங்கார்த்த ராஜ்யஸுகலாபம் அபாங்கவீர: ॥ 69

*காமாக்ஷி ! உனதுகடாக்ஷமாகிற வீரன், உனது சுழலவைக்கிற அழகையே தன் வலிவாகக் கொண்டு, கொடிபோன்ற புருவமாகிய வில்லை வளைப்பதைமட்டும் செய்து, சிவனது பாதி உடலின் ஆளுமையால் ஏற்படுகிற சுகம் என்ற பயனை உன் வசத்திலடங்கச் செய்தான். இது விந்தையானது.*

*உன்பார்வையில் மயங்கித் தன்பாதியைச் சிவன் உனக்கு அளித்தார். (69)*

कामाङ्कुरैकनिलयस्तव दृष्टिपातः
कामाक्षि भक्तमनसां प्रददाति कामान् ।
रागान्वितः स्वयमपि प्रकटीकरोति
वैराग्यमेव कथमेष महामुनीनाम् ॥ ७०

காமாங்குரைக நிலயஸ்தவ த்ருஷ்டிபாத:
காமாக்ஷி பக்தமனஸாம் ப்ரததாதி காமான் ।
ராகான்வித: ஸ்வயமபி ப்ரகடீகரோதி
வைராக்யமேவ கதமேஷ மஹாமுனீனாம் ॥ 70

*காமாக்ஷி ! உன் பார்வை ஆசை முளைத்து வெளியாகுமிடம். பக்தர்கள் மனம் நாடியதனைத்தையும் தருவதுடன், தானும் ஆசையுடன் கூடியதாகியும் பெரும் முனிவர்களுக்குப் பற்றற்ற நிலையை எப்படி நிலைக்கவைக்கிறது ? (70)*

कालाम्बुवाहनिवहैः कलहायते ते
कामाक्षि कालिममदेन सदा कटाक्षः ।

चित्रं तथापि नितराममुमेव दृष्ट्वा
सोत्कण्ठ एव रमते किल नीलकण्ठः ॥ ७१

காலாம்புவாஹ நிவஹை: கலஹாயதே தே
காமாக்ஷி காளிமமதேன ஸதா கடாக்ஷ: ।
சித்ரம் ததாபி நிதராம் அமுமேவ த்ருஷ்ட்வா
ஸோத்கண்ட ஏவ ரமதே கில நீலகண்ட : ॥ 71

*காமாக்ஷி ! உன் கடாக்ஷம் தனது கருநிறத்தில் கொண்ட இறுமாப்பால், கார்மேகங்களுடன் எப்போதும் கலகம் செய்கிறது. அவ்வாறிருந்தும் இந்த பார்வையை நீலகண்டன் ஆசையோடு கண்டு கூத்தாடுகிறுனே ! இது விந்தையல்லவா ?*

*நீலகண்டன் - மயில், சிவன். மேகத்தைக் கண்டு கூத்தாடுகிற மயில் மேகத்தை எதிர்ப்பவனைக் கண்டால் கோபமடையும். ஆனுல் இங்கோ நீலகண்டன் என்ற மயில் மேகத்தோடு சண்டையிடும் ஒன்றை கண்டு களித்துக் கூத்தாடுவது விந்தை யல்லவா ? (71)*

कामाक्षि मन्मथरिपुं प्रति मारताप-
मोहान्धकारजलदागमनेन नृत्यन् ।
दुष्कर्मकञ्चुकिकुलं कबलीकरोतु
व्यामिश्रमेचकरुचिस्त्वदपाङ्गकेकी ॥ ७२

காமாக்ஷி மன்மதரிபும் ப்ரதி மாரதாப-
மோஹாந்தகார ஜலதாகமனேன ந்ருத்யன் ।
துஷ்கர்ம கஞ்சுகிகுலம் கபளீகரோது
வ்யாமிஶ்ர மேசக ருசிஸ் த்வதபாங்ககேகீ ॥ 72

*காமாக்ஷி ! மற்ற நிறங்களுடன் கலந்த கருநிறமுள்ள மேனியுள்ள உன் கடைக்கண் ஆகிய மயில், மன்மத தாபத்தால் விளைந்த மோஹமாகிய மேகத்தின் வரவால் களித்து சிவனுக்கு எதிரில் நடனமாடுகிறது. அது கெட்ட வினையாகிற பாம்பினத்தை விழுங்கட்டும். (72)*

कामाक्षि मन्मथरिपोरवलोकनेषु
कान्तं पयोजमिव तावकमक्षिपातम् ।
प्रेमागमो दिवसवद्विकचीकरोति
लज्जाभरो रजनिवन्मुकुलीकरोति ॥ ७३

காமாக்ஷி மன்மத ரிபோரவலோகனேஷு
காந்தம் பயோஜமிவ தாவகம் அக்ஷிபாதம் ।
ப்ரேமாகமோ திவஸவத் விகசீகரோதி
லஜ்ஜாபரோ ரஜனிவத் முகுளீகரோதி ॥ 73

*காமாக்ஷி ! சிவ பெருமானின் பார்வை படும்போது, அழகிய தாமரை போன்ற உன் கடாக்ஷத்தை, அன்பின் தோற்றம் பகலைப் போன்று மலரச்செய்கிறது. வெட்கத்தின் அழுத்தமோ இரவு போல் மொட்டாகக் குவியச் செய்கிறது. (73)*

मूको विरिञ्चति परं पुरुषः कुरूपः
कंदर्पति त्रिदशराजति किंपचानः ।
कामाक्षि केवलमुपक्रमकाल एव
लीलातरङ्गितकटाक्षरुचः क्षणं ते । ७४

மூகோ விரிஞ்சதி பரம் புருஷ: குருப:
கந்தர்பதி த்ரிதசராஜதி கிம்பசாந: ।
காமாக்ஷி கேவலம் உபக்ரம கால ஏவ
லீலா தரங்கித கடாக்ஷருச: க்ஷணம் தே ॥ 74

*காமாக்ஷி ! விளையாட்டு உணர்வால் அலைபாய்கிற உன் கடாக்ஷம் ஒளியிடத்தொடங்கியதுமே நொடிக்குள், ஊமை நான்முகனாகிறான். குருபன் மன்மதனாகிறான். ஒரு வேளையுணவிற்கு வழியில்லாதவன். தேவேந்திரனாகிறான். (74)*

नीलालका मधुकरन्ति मनोज्ञनासा-
मुक्तारुचः प्रकटरूढबिसाङ्कुरन्ति ।

कारुण्यमम्ब मकरन्दति कामकोटि
मन्ये ततः कमलमेव विलोचनं ते ॥ ७५

நீலாளகா மதுகரந்தி மனோஜ்ஞ நாஸா-
முக்தாருச: ப்ரகடருட பிஸாங்குரந்தி ।
காருண்யமம்ப மகரந்ததி காமகோடி
மன்யே தத: கமலமேவ விலோகனம் தே ॥ 75

*தாயே ! காமகோடி ! உன் கருங்கூந்தல் சுருள்கள் வண்டுகளாகின்றன. மூக்கில் தொங்குகிற முத்துகள் வெளிவந்த தாமரைத் தண்டின் முளைகளாகின்றன. கருணை பூந்தேனாகிறது. அதனால் உன்பார்வை தாமரை தான். (75)*

आकाङ्क्षमाणफलदानविचक्षणायाः
कामाक्षि तावककटाक्षककामधेनोः ।
संपर्क एव कथमम्ब विमुक्तपाश-
बन्धाः स्फुटं तनुभृतः पशुतां त्यजन्ति ॥ ७६

ஆகாங்க்ஷ்யமாண ப்பலதான விசக்ஷணாயா:
காமாக்ஷி தாவக கடாக்ஷக காமதேனோ: ।
ஸம்பர்க ஏவ கதமம்ப விமுக்தபாஶ-
பந்த்தா: ஸ்ப்புடம் தனுப்ப்ருத: பஶுதாம் த்யஜந்தி ॥ 76

*தாயே ! காமாக்ஷி ! நாடிய பலனைத்தருவதில் தேர்ந்த உனது கடாக்ஷமாகிற காமதேனுவின் தொடர்பு ஏற்பட்டவுடனேயே மாந்தர்கள் பற்றுகிற பொருளால் ஏற்பட்டகட்டுகளிலிருந்து விடுபட்டு, பசுத்தன்மையைப் பிறரறியும்படி விட்டுவிடுகிறார்களே ! எப்படி ?*

*பசுவே பசுத்தன்மையையும் பசுவாகிப் பெறுகிற கட்டையும் பசுவின் தொடர்பால் நீக்குவது அதிசய மல்லவா ! (76)*

संसारघर्मपरितापजुषां नराणां
कामाक्षि शीतलतराणि तवेक्षितानि ।

चन्द्रातपन्ति घनचन्दनकर्दमन्ति
    मुक्तागुणन्ति हिमवारिनिषेचनन्ति ॥ ७७

ஸம்ஸார கா்ம பரிதாபஜுஷாம் நராணாம்
    காமாக்ஷி ஶீதளதராணி தவேக்ஷிதாணி ।
சந்த்ராதபந்தி கனசந்தன கா்தமந்தி
    முக்தாகுணந்தி ஹிமவாரி நிஷேசனந்தி ॥ 77

*காமாக்ஷி ! பிறப்பிறப்பெனும் கோடைதாபம் அனுபவிக்கிற மனிதர்களுக்கு உன் மிகக் குளிர்ந்த பார்வைகள், நிலவாகின்றன. கெட்டியான சந்தனக்குழம்பாகின்றன. முத்துமாலையாகின்றன. பனி நீர்த்தெளிப்பாகின்றன. (77)*

प्रेमाम्बुराशिसततस्नपितानि चित्रं
    कामाक्षि तावककटाक्षनिरीक्षणानि ।
सन्धुक्षयन्ति मुहुरिन्धनराशिरीत्या
    मारद्रुहो मनसि मन्मथचित्रभानुम् ॥ ७८

ப்ரேமாம்புராஶி ஸததஸ்னபிதானி சித்ரம்
    காமாக்ஷி தாவக கடாக்ஷ நிரீக்ஷிதானி ।
ஸந்துக்ஷயந்தி முஹுரிந்த்தன ராஶி ரீத்யா
    மாரத்ருஹோ மனஸி மன்மத சித்ரபானும் ॥ 78

*காமாக்ஷி ! அன்புக் கடலில் இடைவிடாமல் நீராட்டப்பெற்ற உன் கடைக்கண் பார்வைகள். விறகுக் குவியலாகி சிவனின் மனத்தில் காமநெருப்பைத் அடிக்கடி தூண்டுகின்றன. விந்தையல்லவா.*

*நன்கு நனைந்த விறகு நெருப்பைத் தூண்டுமா ? (78)*

कालाञ्जनप्रतिभटं कमनीयकान्त्या
    कंदर्पतन्त्रकलया कलितानुभावम् ।
काञ्चीविहाररसिके कलुषार्तिचोरं
    कल्लोलयस्व मयि ते करुणाकटाक्षम् ॥ ७९

காலாஞ்ஜன ப்ரதிபடம் கமனீயகாந்த்யா
கந்தர்ப தந்த்ரகலயா கலிதா நுபாவம் ।
காஞ்சீ விஹார ரஸிகே கலுஷார்த்தி சோரம்
கல்லோலயஸ்வ மயி தே கருணாகடாக்ஷம் ॥ 79

*காஞ்சியில் விளையாடுவதில் விருப்பமுள்ளவளே! தன் அழகிய ஒளியால் கறுத்த கண்மையுடன் போட்டியிடுவதும், காம சாஸ்திர அறிவால் துலங்கும் பெருமையுள்ளதும், பாபத்தால் நேர்கிற துயர் நீக்குவதுமான உன் கருணைமிக்க கடாக்ஷத்தை என்மீது அலைபாயச் செய்வாயாக! (79)*

क्रान्तेन मन्मथमदेन विमोह्यमान-
स्वान्तेन चूततरुमूलगतस्य पुंसः ।
कान्तेन किञ्चिदवलोकय लोचनस्य
प्रान्तेन मां जननि काञ्चिपुरीविभूषे ॥ ८०

க்ராந்தேன மன்மத மதேன விமோஹ்யமான-
ஸ்வாந்தேன சூததருமூலகதஸ்ய பும்ஸ: ।
காந்தேன கிஞ்சித் அவலோகய லோசனஸ்ய
ப்ராந்தேன மாம் ஜனனி காஞ்சிபுரீ விபூஷே ॥ 80

*காஞ்சீபுரிக்கு அழகிய அணியான தாயே! மாமரத்தினடியிலுள்ள ஏகாம்ரநாதரது அணைப்பால் ஏற்பட்ட காமாவேசத்தால் மோகவசப்பட்ட உள்ளத்தோடு கூடியதும், அழகுள்ளதுமான கடைக்கண்ணால் என்னைச் சிறிது பார்ப்பாயாக! (80)*

कामाक्षि केऽपि सुजनास्त्वदपाङ्ग सङ्गे
कण्ठेन कन्दलितकालिमसंप्रदायाः ।
उत्तंसकल्पितचकोरकुटुम्बपोषाः
नक्तंदिवप्रसवभूनयना भवन्ति ॥ ८१

காமாக்ஷி கேऽபி ஸுஜனாஸ் த்வதபாங்க ஸங்கே
கண்டேன கந்தளித காளிம ஸம்ப்ரதாயா: ।

உத்தம்ஸகல்பித சகோர குடும்பபோஷா :
நக்தம்திவ ப்ரஸவபூ நயனு பவந்தி ॥ 81

*காமாக்ஷி ! சில நல்லோர்கள், உன் கடைக்கண்களின் தொடர்பு ஏற்படும் போது கழுத்தில் கருநிற ஒட்டுதல் உள்ளவர்களாகவும் சகோரப்பறவைகளின் குடும்பத்தைப் போஷிப்பவரை (சந்திரனை)த்தலை யணியாகக் கொண்டவர்களாகவும் இரவையும் பகலையும் உண்டுபண்ணுபவர்களை (சந்திர ஸூரியர்களை)க் கண்களில் கொண்டவர்களாயும் ஆகிறுர்கள்.*

*உன் பார்வை பெற்றவர் சிவனின் வடிவைப் பெறுகிறுர்கள். பரமசிவனும் தேவியும் கண்களை விழிக்கப் பகலும் கண்களை மூட இரவும் தோன்றும். இடது கண் சந்திரன், வலது கண் சூர்யன், நெற்றிக் கண் அக்னி என்பதும் உண்டு.*
ஸோமஸூர்யாக்னிலோ சந: ஸோமஸூர்யாக்னிலோசநா. (81)

नीलोत्पलप्रसवकान्तिनिदर्शनेन
कारुण्यविभ्रमजुषा तव वीक्षणेन ।
कामाक्षि कर्मजलधेः कलशीसुतेन
पाशत्रयाद्वयममी परिमोचनीयाः ॥ ८२

நீலோத்பல ப்ரஸவ காந்தி நிதர்ஶனேன
காருண்ய விப்ப்ரமஜுஷா தவ வீக்ஷிதேன ।
காமாக்ஷி கர்மஜலதே: கலஶீஸுதேன
பாசத்ரயாத் வயமமீ பரிமோசனீயா: ॥ 82

*காமாக்ஷி ! கரு நெய்தல் பூவின் ஒளிக்கு நிகரானதும், கருணையின் சுழலால் அழகானதும் வினைக்கடலுக்கு அகஸ்தியருமான உன் பார்வையால், மூன்று கட்டுகளிலிருந்தும் இந்த நாங்கள் விடுவிக்கப்பட வேண்டியவர்கள்.*

*கடலில் ஒளிந்த அசுரனைத் தேவர்கள் தேடினர். அகஸ்தியர் தன் தவச் சக்தியால் கடல் நீரனைத்தையும் பருகி அசுரனிருக்குமிடத்தைக் காட்டினுர். வம்சம் தன்னுடன் முடிந்து விடாமல் தொடர்வதில் ஆசை (புத்ரைஷணா). வாழ்வில் உதவப் பொருளாசை (வித்தைஷணா). மறுமையில் நல்ல நிலை பெற மறு*

*உலகமான ஸ்வர்கத்தில் ஆசை (லோகைஷணா). இவை மூன்றும் கர்மமார்க்கத்தில் கட்டுப்படுத்துவதால் பாசங்கள். இந்த பற்றுகள் மூன்றும் நீங்கிய நிலையே முக்தி. (82)*

अत्यन्तचञ्चलमकृत्रिममञ्जनं किं
झंकारभङ्गिरहिता किमु भृङ्गमाला ।
धूमाङ्कुरः किमु हुताशनसंगहीनः
कामाक्षि नेत्ररुचि नीलिम कन्दली ते ॥ ८३

அத்யந்த சஞ்சலம் அக்ருத்ரிமம் அஞ்ஜனம் கிம்
ஜங்கார பங்க ரஹிதா கிமு ப்ருங்கமாலா ।
தூமாங்குர: கிமு ஹு‌தாசன ஸங்கஹீன:
காமாக்ஷி நேத்ரருசி நீலிம கந்தளீ தே ॥ 83

*காமாக்ஷி ! உனது கண்களின் ஒளியாகிய கருமையின் குருத்து, மிகவும் சஞ்சலமானது. அது செயற்கையாக உண்டாக்கப்பெறாத கண்மையோ ? ரீங்காரம் செய்யாத வண்டினமோ ? நெருப்பின் தொடர்பற்ற புகையெழுச்சியோ ?*

*உவமையற்றது தேவியின் கண்ணழகு. (83)*

कामाक्षि नित्यमयमञ्जलिरस्तु मुक्ति -
बीजाय विभ्रम मदोदयघूर्णिताय ।
कंदर्पदर्पपुनरुद्भवसिद्धिदाय
कल्याणदाय तव देवि दृगञ्चलाय ॥ ८४

காமாக்ஷி நித்யம் அயமஞ்ஜலிரஸ்து முக்தி-
பீஜாய விப்ரம மதோதய கூர்ணிதாய ।
கந்தர்ப தர்ப புனருத்ப்பவ ஸித்த்திதாய
கல்யாணதாய தவ தேவி த்ருகஞ்சலாய ॥ 84

*தேவி ! காமாக்ஷி ! முக்திக்கு வித்தும், அழகின் இறுமாப்பால் சுழன்று கொண்டிருப்பதும், மன்மதனின் (அழிந்த) கர்வத்தை மறுபடிதோன்றி நிலைக்கச் செய்ததும், மங்களத்தைக்*

*கொடுப்பதுமான உன்கடைக்கண்ணோரத்திற்கு எப்போதும் இந்த இருகை கூப்புதல். (84)*

दर्पाङ्कुरो मकरकेतनविभ्रमाणां
निन्दाङ्कुरो विदलितोत्पलचातुरीणाम् ।
दीपाङ्कुरो भवतमिस्रकदम्बकानां
कामाक्षि पालयतु मां त्वदपाङ्गपातः ॥ ८५

தர்பாங்குரோ மகரகேதன விப்ப்ரமாணும்
நிந்தாங்குரோ விதளிதோத்பல சாதுரீணும் ।
தீபாங்குரோ பவதமிஸ்ர கதம்பகாணும்
காமாக்ஷி பாலயது மாம் த்வதபாங்கபாத: ॥ 85

*காமாக்ஷி ! மன்மதனின் லீலைகளால் உண்டாகிற கர்வத்தின் சிலிர்ப்பும், மலர்ந்த கருநெய்தல் பூக்களின் அழகைப்பழிக்கிற செயலின் குருத்தும், பிறப்பிறப்புத் தொடராகிய இருள் குவியலுக்கெதிரான தீபச்சுடருமான உன் கடாக்ஷம் என்னைக் காப்பாற்றட்டும். (85)*

कैवल्यदिव्यमणिरोहणपर्वतेभ्यः
कारुण्यनिर्झरपयः कृतमज्जनेभ्यः ।
कामाक्षि किंकरितशङ्करमानसेभ्यः
तेभ्यो नमोऽस्तु तव वीक्षणविभ्रमेभ्यः ॥ ८६

கைவல்ய திவ்ய மணிரோஹண பர்வதேப்ப்ய:
காருண்ய நிர்ஜ்ஜரபய: க்ருத மஜ்ஜனேப்ப்ய: ।
காமாக்ஷி கிங்கரித சங்கர மானஸேப்ப்ய:
தேப்யோ நமோ஽ஸ்து தவ வீக்ஷண விப்ரமேப்ப்ய: ॥ 86

*காமாக்ஷி ! முக்தி (கைவல்ய நிலை) யாகிற தெய்விக ரத்தினங்கள் விளைகிற மலைகளும், கருணையெனும் அருவியில் மூழ்கி நீராடியவையும் சங்கரனின் மனத்தைத் தன் ஏவலுக்கு உட்படச்செய்ததுமான அந்த உன் பார்வையின் சுழல்களுக்கு வணக்கமிருக்கட்டும்.*

*கிங்கரன் - குற்றேவல் புரிபவன். (86)*

अल्पीय एव नवमुत्पलमम्ब हीना
मीनस्य वा सरणिरम्बुरुहां च किं वा।
दूरे मृगी तदसमञ्जसमञ्जनं वा
कामाक्षि वीक्षणरुचौ तव तर्कयामः ॥

அல்பீய ஏவ நவமுத்பலம் அம்ப ஹீனு
மீனஸ்ய வா ஸரணிரம்புருஹாம் ச கிம் வா ।
தூரே ம்ருகீ தத் அஸமஞ்ஜஸம் அஞ்ஜனம் வா
காமாக்ஷி வீக்ஷணருசௌ தவ தர்கயாம: ॥ 87

*தாயே ! காமாக்ஷி ! உன் கண்ணொளிக்கு எதிரே, புதிதாக மலர்ந்த நெய்தல் பூவும் அற்பம் தான். மீனின் நடையும் அற்பம் தான். தாமரையின் அழகும் அற்பம் தான். பெண் மான் (அதன் கண்ணழகு) வெகு தூரத்தில். கண்மையும் பொருந்தாதது என நாங்கள் நினைக்கிறோம். (87)*

मिश्रीभवद्गरलपङ्किलशङ्करोरः-
सीमाङ्गणे किमपि रिङ्खणमादधानः।
हेलावधूतललितश्रवणोत्पलोऽसौ
कामाक्षि बाल इव राजति ते कटाक्षः ॥ ८८

மிஶ்ரீ பவத் கரள பங்கில சங்கரோர: -
ஸீமாங்கணே கிமபி ரிங்க்கணமாததான: ।
ஹேலாவதூத லலித ச்ரவணோத்பலோ஽ஸௌ
காமாக்ஷி பால இவ ராஜதி தே கடாக்ஷ: ॥ 88

*காமாக்ஷி ! விஷக்கலவையால் சேறு பூசியதாக ஆன சங்கரரின் மார்பாகிய அங்கணத்தில் தவழ்ந்து வருகிற உன் கடாக்ஷமாகிற பாலன், தன் காதுகளில் செருகிய அல்லிப்பூவையும் விளையாட்டாக வீசி எறிபவனாக அழகாகத் தோன்றுகிறான்.*

*ஹாலாஹல விஷத்தைப் பருகும் போது உதடுவழியே வெளியே சிந்திய விஷத்துளிகள் மார்பில்பூசிய சந்தனம் விபூதி முதலியதுடன் கலந்து சேருகியுள்ளது. அதன் மீது உன் கடாக்ஷம் பரவுவது சிறுவன் சேற்றில் தவழ்ந்து செல்வது போலுள்ளது. சிறுவன் தன் காதில் செருகிய பூவை விளையாட்டு மும்முரத்தில் வீசி எறிந்து விடுகிறான். (88)*

प्रौढीकरोति विदुषां नवसूक्तिधाटी-
चूताटवीषु बुधकोकिललाल्यमानम् ।
माध्वीरसं परिमलं च निरर्गलं ते
कामाक्षि वीक्षणविलासवसन्तलक्ष्मीः ॥

ப்ரௌடீ கரோதி விதுஷாம் நவ ஸூக்திதாடீ-
சூதாடவீஷு புதகோகில லால்யமானம் ।
மாத்த்வீரஸம் பரிமளம் ச நிரர்களம் தே
காமாக்ஷி வீக்ஷண விலாஸ வஸந்த லக்ஷ்மீ : ॥ 89

*காமாக்ஷி ! உன்பார்வையழகாகிய வஸந்த காலத்து சோபை, புதிய காவியச்சொல் வரிசை என்கிற மாந்தோப்பில் அறிஞர்களாகிய குயில்களால் கொண்டாடப்பட்டு, இனிய தேனின் சுவையையும் நறுமணத்தையும் பெருமைப்படுத்துகிறது.*

*வஸந்த காலத்தில் மாமரம் பூத்துக்குலுங்கும். குயில்கள் மகிழ்ந்து பாடும். இனிய தேனின் சுவையும் பூக்களின் நறுமணமும் காற்றில் மிதக்கும். தேவியின் கடாக்ஷம் கவிகளின் மனத்தை மகிழ்வித்துக் காவியஊற்றை வெளிப்படுத்த, அந்த காவியப்பூஞ்சோலையில் வந்தமர்ந்த அறிஞர்கள் பாராட்ட, எங்கும் காவியருசியும் காவிய மணமும் பரவிநிற்கும். (89)*

कूलंकषं वितनुते करुणाम्बुवर्षी
सारस्वतं सुकृतिनः सुलभं प्रवाहम् ।
तुच्छीकरोति यमुनाम्बुतरङ्गभङ्गी
कामाक्षि किं तव कटाक्षमहाम्बुवाहः ॥ ९०

கூலங்கஷம் விதனுதே கருணாம்புவர்ஷீ
ஸாரஸ்வதம் ஸுக்ருதின: ஸுலபம் ப்ரவாஹம் ।
துச்ச்சீகரோதி யமுனாம்பு தரங்க பங்கீம்
காமாக்ஷி கிம் தவ கடாக்ஷ மஹாம்புவாஹ: ॥ 90

*காமாக்ஷி ! கருணை நீர் பொழிகிற உனது கடாக்ஷமாகிய பெருமேகம், நல்லோர்களின் பேச்சாற்றலின் பெருக்கை எளிதில் கரைபுரளச் செய்கிறது. யமுனை நதியின் அலைவரிசைகளையும் தாழ்ந்தநிலை கொள்ளச் செய்கிறதோ ?*

*யமுனை நீர் கருமை கொண்டது. கவிதை பிரவாஹத்தின் எதிரே யமுனையின் பிரவாஹம் தாழ்ந்து விடுகிறது. கடாக்ஷம் கரைபுரண்டோடுகிற ஆற்றின் பெருக்கைப்போல் கவிதையைப் பெருக்கெடுத்தோடச் செய்கிறது. (90)*

जागर्ति देवि करुणाशुकसुंदरी ते
ताटङ्करत्नरुचि दाडिमखण्डशोणे ।
कामाक्षि निर्भरकटाक्षमरीचि पुञ्ज-
माहेन्द्रनीलमणिपञ्जरमध्यभागे ॥ ९१

ஜாகர்தி தேவி கருணாசுக ஸுந்தரீ தே
தாடங்க ரத்னருசி தாடிமக்கண்டசோணே ।
காமாக்ஷி நிர்ப்பர கடாக்ஷ மரீசி புஞ்ஜ-
மாஹேந்த்ர நீல மணி பஞ்ஜர மத்த்யபாகே ॥ 91

*தேவி ! காமாக்ஷி ! உனது கருணையெனும் அழகிய பெண்கிளி, காதணிகளிலுள்ள அழகிய சிகப்பு ரத்தினங்களாகிய மாதுளை வித்தால் சிவந்ததும், உன்கடாக்ஷ ஒளிக்குவியல் பரவலால் நீல ரத்தினத்தாலானதாகத் தோன்றுகிறதுமான கூட்டின் நடுவில் அமர்ந்திருக்கிறது.*

*கடாக்ஷ ஒளியாலான கூடு. அதனால் கரு நிறம் பெற்றுள்ளது. அதன் நடுவில் காதணிகளிலுள்ள சிவந்தரத்தினங்களில் ஒளி பரவச் செம்மை பரவியுள்ளது. அதில் தேவியின் கருணையாகிற பெண்கிளி அமர்நதுள்ளது. 91*

कामाक्षि सत्कुवलयस्य सगोत्रभावात्
　　आक्रामति श्रुतिमसौ तव दृष्टिपातः ।
किं च स्फुटं कुटिलतां प्रकटीकरोति
　　भ्रूवल्लरीपरिचितस्य फलं किमेतत् ॥ ९२

காமாக்ஷி ஸத்குவலயஸ்ய ஸகோத்ரபாவாத்
　　ஆக்ராமதி ஶ்ருதிமஸௌ தவ த்ருஷ்டி பாத: ।
கிம் ச ஸ்புடம் குடிலதாம் ப்ரகடீ கரோதி
　　ப்ப்ரூவல்லரீ பரிசிதஸ்ய பலம் கிமேதத் ॥ 92

*காமாக்ஷி ! இந்த உனது பார்வை, நல்ல கருநெய்தல் பூவின் (நல்லோரின்) ஒரின உணர்வுடன் காதை (வேதவழியை) அடைகிறது. ஆனால் காதை அடைய குறுக்கே வக்கிரமாகச் செல்கிறது. புருவக்கொடியோடு பழகியதால் இது நேர்ந்ததோ ?*

*கடாக்ஷம் தூரத்திலும் பக்கத்தில் ஒதுங்கியும் நிற்பவர்களிடம் பாயும்போது காதுவரை விரிகிறது. இது கோணல் பார்வை. நேர்ப்பார்வை அல்ல. இந்தக் கோணல் இதன் இயல்பல்ல. புருவங்கள் உள்ளுணர்வை வெளிப்படுத்தப் பல்வேறு கோணல்களும் வில்லைப்போன்றவளைதலும் கொண்டவை. அதன் அருகாமையில் கோணலாகச் செயல்படுவது பழகி, கடாக்ஷமும் நேர்ப்பார்வை கொள்ளாமல் கோணலாகப் பார்க்கின்றதோ ? சுருதி - காது, வேதம். வேதவழி செல்ல குறுக்குவழி நல்லதல்லவே ! 92*

एषा तवाक्षिसुषमा विषमायुधस्य
　　नाराचवर्षलहरी नगराजकन्ये ।
शङ्के करोति शतधा हृदि धैर्यमुद्रां
　　श्रीकामकोटि यदसौ शिशिरांशुमौलेः ॥ ९३

ஏஷா தவாக்ஷிஸுஷமா விஷமாயுதஸ்ய
　　நாராசவர்ஷ லஹரீ நகராஜகன்யே ।
ஶங்கே கரோதி ஶததா ஹ்ருதி தைர்யமுத்ராம்
　　ஶ்ரீ காமகோடி யதஸௌ ஶிஶிராம்ஶு மௌளே: ॥ 93

*மலையரசனின் மகளே ! ஸ்ரீகாமகோடி ! இந்த உன்பார்வையழகு, மன்மதனின் அம்புவரிசையோ என சந்தேகிக்கிறேன். ஏனெனில் இது பரமசிவனது உள்ளத்திலிருந்த தைரிய அழுத்தத்தைச் சிதறச் செய்கிறது. (93)*

बाणेन पुष्पधनुषः परिकल्प्यमान-
त्राणेन भक्तमनसां करुणाकरेण ।
कोणेन कोमलदृशस्तव कामकोटि
शोणेन शोषय शिवे मम शोकसिन्धुम् ॥ ९४

பாணேன புஷ்பதனுஷ: பரிகல்ப்யமான -
த்ராணேன பக்தமனஸாம் கருணாகரேண ।
கோணேன கோமலத்ருஶஸ் தவ காமகோடி
ஶோணேன ஶோஷய ஶிவே மம ஶோக ஸிந்த்தும் ॥ 94

*காமகோடியே ! சிவையே ! மன்மதனது அம்பும், பக்தரின் மனத்திற்குக் காப்பளிக்க வகை செய்வதும், கருணை புரிவதும், சிவந்ததுமான உன் அழகிய கண்ணோரத்தால் எனது துயரக்கடலை வற்றச் செய்வாய். (94)*

मारद्रुहा मुकुटसीमनि लाल्यमाने
मन्दाकिनीपयसि ते कुटिलं चरिष्णुः ।
कामाक्षि कोपरभसाद्वलमानमीन -
संदेहमङ्कुरयति क्षणमक्षिपातः ॥ ९५

மாரத்ருஹா முகுடஸீமனி லால்யமானே
மந்தாகினீ பயஸி தே குடிலம் சரிஷ்ணு: ।
காமாக்ஷி கோபரபஸாத் வலமான மீன -
ஸந்தேஹம் அங்குரயதி க்ஷணமக்ஷிபாத: ॥ 95

*காமாக்ஷியே ! பரமசிவனது முடிமீது கொண்டாடப்பெறுகிற கங்கை நீரில் கொண்ட கோபத்தின் துடிப்பால் குறுக்கே (கோணலாக) செல்கின்ற உன் பார்வை, அங்குமிங்கும் பாய்ந்தோடிக் கொண்டிருக்கிற மீனோ என்ற ஐயத்தை நொடியில் தோற்றுவிக்கிறது.*

*கங்கையிடம் சக்களத்தி என்ற எண்ணம் கவியின் கல்பனையில் உதித்தது. ஓரப்பார்வை நேர்பார்வையல்லாததால் குடிலம் - வக்ரம். (95)*

कामाक्षि संवलितमौक्तिककुण्डलांशु
चञ्चत्सितश्रवण चामरचातुरीकः ।
स्तम्भे निरन्तरं अपाङ्गमये भवत्या
बद्धश्चकास्ति मकरध्वजमत्तहस्ती ॥ ९६

காமாக்ஷி ஸம்வளித மௌக்திக குண்டலாம்ஶு-
சஞ்சத் ஸிதஶ்ரவண சாமர சாதுரீக: ।
ஸ்தம்ப்பே நிரந்தரம் அபாங்கமயே பவத்யா:
பத்த்தஶ் சகாஸ்தி மகரத்வஜ மத்தஹஸ்தீ ॥ 96

*காமாக்ஷியே ! மன்மதனெனும் மதம்பிடித்தயானை, தொங்குகிற முத்துக்களுடன் கூடிய குண்டலத்தின் ஒளியால் வெளுத்ததாகத் தோன்றுகிற உனது காதுகளாகிற வெண் சாமரங்களை வீசிக்கொண்டு, உன் கடாக்ஷமாகிற தூணில் எப்போதும் கட்டப்பட்டதாக விளங்குகிறது. (96)*

यावत्कटाक्षरजनीसमयागमस्ते
कामाक्षि तावदचिरान्नमतां नराणाम् ।
आविर्भवत्यमृतदीधितिबिम्बमम्ब
संविन्मयं हृदयपूर्वगिरीन्द्रशृङ्गे ॥ ९७

யாவத் கடாக்ஷ ரஜனீ ஸமயாகமஸ்தே
காமாக்ஷி தாவத் அசிரான் நமதாம் நராணாம் ।
ஆவிர்பவத்யம்ருததீதிதி பிம்பம் அம்ப
ஸம்வின்மயம் ஹ்ருதய பூர்வ கிரீந்த்ர ஶ்ருங்கே ॥ 97

*தாயே ! காமாக்ஷி ! உன்னை வணங்குகிற மாந்தர்க்கு, எப்போது கடாக்ஷமாகிற இரவோடு சேர்க்கை நேர்கிறதோ, உடனேயே, இதயமாகிற கிழக்கு (உதய) மலைமீது ஜ்ஞானமாகிற அமுத கிரணனான சந்திரன் தோன்றுகிறான்.*

*சந்திரனின் ஒளி அமுதமயம். வெண்ணிறமுள்ளது; அது ஜ்ஞானத்தின் உருவகம். கடாக்ஷம் ஜ்ஞான அமுதப்பெருக்கை வெளியாக்குகிறது. (97)*

कामाक्षि कल्पविटपीव भवत्कटाक्षो
दित्सुः समस्तविभवं नमतां नराणां ।
भृङ्गस्य नीलनलिनस्य च कान्तिसंपत्-
सर्वस्वमेव हरतीति परं विचित्रम् ॥ ९८

காமாக்ஷி கல்பவிடபீவ பவத் கடாக்ஷோ
தித்ஸு: ஸமஸ்த விபவம் நமதாம் நராணாம் ।
ப்ருங்கஸ்ய நீல நளினஸ்ய ச காந்திஸம்பத் -
ஸர்வஸ்வமேவ ஹரதீதி பரம் விசித்ரம் ॥ 98

*காமாக்ஷி ! உன்னை வணங்குகிற மாந்தர்க்கு எல்லாச் செல்வங்களையும் கற்பகமரம் போல் அளிக்க விரும்புகிற உன் கடாக்ஷம், வண்டினுடையதும் கருநெய்தலுடையதுமான அனைத்து அழகுச்செழிப்பையும் திருடுகிறதே ! விந்தையல்லவா ?*

*வள்ளல் திருடுவது விசித்திரமே ! (98)*

अज्ञात भक्तिरसं अप्रसरद्विवेकं
अत्यन्तगर्वं अनधीत समस्तशास्त्रम् ।
अप्राप्तसत्यं असमीपगतं च मुक्तेः
कामाक्षि नैव तव काङ्क्षति दृष्टिपातः ॥ ९९

அஜ்ஞாத பக்திரஸம் அப்ரஸரத் விவேகம்
அத்யந்த கர்வம் அனதீத ஸமஸ்த சாஸ்த்ரம் ।
அப்ராப்த ஸத்யம் அஸமீப கதம் ச முக்தே:
காமாக்ஷி நைவ தவ காங்க்ஷதி த்ருஷ்டிபாத: ॥ 99

*காமாக்ஷி ! பக்தியின் சுவை உணராதவனை, பகுத்தறிவு பரவாதவனை, மிகவும் செருக்குற்றவனை, சாஸ்திரங்கள் அனைத்தையும் படிக்காதவனை, ஸத்யத்தை அணுகாதவனை,*

*முக்தியின் அருகே வராதவனாக இருப்பவனை உன் பார்வை விரும்புவதில்லை.*

*தேவியின் கடாக்ஷம் படாதவன் நிலைகள் இவை. (99)*

अत्यन्तशीतलं अनर्गलकर्मपाक
काकोलहारि सुलभं सुमनोभिरेतत् ।
पीयूषमेव तव वीक्षणं अम्ब किन्तु
कामाक्षि नीलमिदमित्ययमेव भेदः ॥ १००

அத்யந்த சீதளம் அனர்களா கர்மபாக
காகோலஹாரி ஸுலபம் ஸுமனோபிரேதத் ।
பீயூஷமேவ தவ வீக்ஷணமம்ப கிம் து
காமாக்ஷி நீலமிதமித்யயமேவ பேத: ॥ 100

*காமாக்ஷி ! உன்பார்வை, மிகவும் குளிர்ந்ததும், தடையுறாமல் பழுக்கிற கெட்டவினையாகிற ஹாலா ஹல விஷத்தை நீக்குவதும், நல்மனமுள்ளவருக்கு எளிதில் கிட்டுவதுமான அமுதமே - ஆனால் இது கறுத்ததென்பதே இதன் தனித்தன்மை.*

*அமுதும் வெண்ணெய் போல் வெண்ணிறம் கொண்டது. இதுவோ கருவிழியிலிருந்து வெளியாவதால் கருப்பு. (100)*

पातेन लोचनरुचेस्तव कामकोटि
पोतेन पातकपयोधि भयातुराणाम् ।
पूतेन तेन नवकाञ्चनकुण्डलांशु -
वीतेन शीतलय भूधरकन्यके माम् ॥ १०१

பாதேன லோசன ருசேஸ் தவ காமகோடி
போதேன பாதக பயோதி பயாதுராணாம் ।
பூதேன தேன நவ காஞ்சன குண்டலாம்ஶு
வீதேன ஶீதளய பூதரகன்யகே மாம் ॥ 101

*மலை மகளே ! காமகோடி ! பாபக்கடலிடம் பயத்தால் துன்புறுபவர்களுக்கு ஓடமானதும், தூயதும், புதியதங்கக் குண்டல*

ஒளி பரவியதுமான உன் கண்ணொளி வீச்சால், என்னைக் குளிர்விப்பாய்.

*கடலைக்கப்பலால் பயமின்றி கடக்கலாம். (101)*

**முடிவுரை:** - கடாக்ஷம் - கடைக்கண், கடைக்கண்பார்வை. விழியோரங்கள் இரண்டு. மூக்கின் அருகே உள்ளது யோகியின் பார்வைக்குரியது, காதின் அருகே உள்ளது அருளும், அன்பும், பரிவும் கொண்டது. விழியோரத்தில் கருவிழி ஒதுங்குமளவு பார்வையைத் திருப்புவது, நேரே வராமல் பயத்தாலும் பக்தியாலும் பக்கத்திலும் தூரத்திலும் நிற்பவர்களைப் பார்ப்பதற்காக. ஆதலால் நேர்ப்பார்வையல்ல, குடிலப்பார்வை, வக்ரப்பார்வை, கோணப்பார்வை என்பர். வக்ரப்பார்வையால் கோணல் பார்வையும் கூட. இதில் கருவிழி மட்டும் பெரிதும் கண்ணில் படும். அதனுல் கண்ணே கருத்துவிட்டதாகவும் பார்வை கருத்து விட்டதாகவும் சொல்வர்.

இந்தக் கருவிழியை கருநெய்தல் (நீலோத்பலம், நீல அல்லி) கார்மேகம், நீலரத்தினம், காரிருள் முதலியதுடன் ஒப்பிடுவர். பார்வையை அமுதம், நிலவு, ரத்தின ஒளி முதலியவற்றுடன் ஒப்பிடுவர். காதுவரை நீண்ட கண்கள் என்ற உருவகம் உண்டு. காதிற்கு சுருதி, கர்ணம் என்றபெயர் உண்டு. சுருதிக்கு வேதம் என்றும் கர்ணத்திற்கு கர்ணன் என்றும் வேறுபொருள் உண்டு. தேவியின் பார்வையை அனுசரிப்பவை என்பதால் காதும் வேதமும் கர்ணனும் சிலேடையில் பொருந்துகின்றன.

அன்பும் பரிவும் உலகபந்தம் தருபவை. தேவியிடம் அவை முக்தி தருபவையும் கூட. சிவன் தேவியின் அன்பிற்குக்கட்டுப்பட்டவர். தேவி சிவனின் அன்பிற்குக் கட்டுப்பட்டவள். சிவனிடம் தேவிக்குக் காதலும் தேவியிடம் சிவனுக்குக் காதலும் இணையற்றது. சிவன் பெரும் ஜ்ஞானியாக, பெரும் யோகியாக நினைவில் வருபவர். அவர் காதல் வயப்படுகிறுர் என்பது பொருந்தாததாகத் தோன்றும். அது கொச்சைப்படுத்தக்கூடிய அன்பல்ல. காதலரை இணைப்பவன் மன்மதன். உள்ளன்பின் இயக்கத்தைத் தூண்டுகிறவன்.

காமனைச்சிவன் வென்றதும் உண்டு. சிவனைக்காமன் வென்றது முண்டு. இது புராணமும் கவியும் தரும் கற்பனைவடிவம். அன்பு அலையாக, ஒளிக்கதிராக, நிலையற்ற வேகம் உள்ளதாகப்பரவுவதால் அன்பின் அலையெனவும், சுழல் எனவும், அழகின் துடிப்பெனவும், ஒளிக்கதிர் எனவும் விப்ப்ரமம், லீலை, பிரவாஹம், லக்ஷ்மீ:, புஞ்ஜம் (குவியல்) ருசி, ருக், ரஸம், கந்தம், தரளம், தரங்கம் என்றவாறு சொல்லழகால் அதைக்கவி வர்ணிக்கிறார்.

கணத்திற்குக்கணம் அதே கடாக்ஷமும் நீலோத்பலமும் காதுக்குண்டலமும் ஏனையதும் புதுப்புதுக்காட்சியை மனத்திற்குள் காட்டுவதால் கார், கருவிழி, அதிலுள்ள கருமையும் செம்மையும், கண்-மை, அல்லி, மேகம், காது, சிவன், சிவனின் காதல் என்ற ஒரு சில விஷயங்களே புதுப்புதுக்காட்சிகளாகக் கவியின் உள்ளத்தில் தோன்றுகின்றன. நூற்றியொரு சுலோகங்களிலும் இதுதான் கருப்பொருள்.

கடாக்ஷ சதகத்தில், வக்ரோக்தி, உத்ப்ரேக்ஷை, உபமையின் பல வடிவங்கள், விரோதாபாஸம், அன்யோக்தி முதலிய அலங்கார வடிகாலான சொற்களின் செறிவும் பொருளின் அடர்த்தியும் வக்கிரமும் எளிதில் பொருளுணர இயலாதபடி அமைந்துள்ளன. கடாக்ஷமும் கருநிறமும் வக்கிரமும் உணர்வுச் செறிவும் கொண்டது. அதை இப்படித்தான் சொல்ல முடிந்திருக்கலாம். இதனைப் பின் தொடர்கிற சதகங்களும் மிகவும் ரஸச் செறிவுள்ளவை தான். பொருளுணர்ந்தபின் அந்த சுலோகங்கள் நம் உள்ளத்தில் ஆனந்தக் கூத்தாடுகிற பாங்கை ரஸிகஉள்ளம் அனுபவிக்கும்.

**கடாக்ஷ சதகம் முற்றிற்று**

श्रीगुरुभ्यो नमः

श्रीकामाक्ष्यै नमः

# मूकपञ्चशती

## ३. पादारविन्दशतकम्

# மூகபஞ்ச சதீ

## 3. பாதாரவிந்த சதகம்

महिम्नः पन्थानं मदनपरिपन्थिप्रणयिनि
प्रभुर्निर्णेतुं ते भवति यतमानोऽपि कतमः ।
तथापि श्रीकाञ्चीविहृतिरसिके कोऽपि मनसो
विपाकस्त्वत्पादस्तुतिविधिषु जल्पाकयति माम् ॥ १ ॥

மஹிம்ந: பந்த்தாநம் மதன பரிபந்தி ப்ரணயிநி
ப்ரபுர் நிர்ணேதும் தே பவதி யதமாநோऽபி கதம: ।
ததாऽபி ஸ்ரீ காஞ்சீ விஹ்ருதி ரஸிகே ! கோऽபி மநஸோ
விபாகஸ் த்வத் பாத ஸ்துதி விதிஷு ஜல்பாகயதி மாம் ॥ (1)

*மன்மதனின் எதிரியிடம் அன்பு பூண்டவளே ! சீர் மிக்க காஞ்சியில் திருவிளையாடல்புரிவதில் ஆர்வமுள்ளவளே ! உன் பெருமையின் போக்கை நிச்சயிப்பதற்கு மிகத் திறம் படைத்தவனும் ஆற்றல் பெறுவானு ! ஆயினும் என் மனத்தின் ஏதோ ஒருவகையான கனிவு, உன் திருவடிகளைத் துதிக்கும் வழிமுறைகளில் என்னை வாயாடியாக்குகிறது.*

*தேவியின் பெருமை சொல்வடிவில் கொணர இயலாதது. தேவியின் அருள் மனத்தைத் தூண்ட, அது பேச்சாளனுக்கியுள்ளது. ஏதோ முன் செய்த நல்வினை இவ்வாறு கனிந்து தேவியின் அருளைப்பெறச்செய்துள்ளது. (1)*

गलग्राही पौरंदरपुरवनीपल्लवरुचां
धृतप्राथम्यानां अरुणमहसां आदिमगुरुः ।
समिन्धे बन्धूकस्तबकसहयुध्वा दिशि दिशि
प्रसर्पन्कामाक्ष्याश्चरणकिरणानां अरुणिमा ॥ २ ॥

கலக்ராஹீ பௌரந்தர புர வநீ பல்லவ ருசாம்
த்ருத ப்ராதம்யாநாம் அருண மஹஸாம் ஆதிம குரு: ।
ஸமிந்த்தே பந்த்தூக ஸ்தபக ஸஹயுத்த்வா திஶி திஶி
ப்ரஸர்பந் காமாக்ஷ்யா: சரண கிரணாநாம் அருணிமா ॥ (2)

*காமாக்ஷியின் திருவடிகளின் ஒளிக்கதிர்களிலுள்ள செம்மை, எங்கும் பரவி ஒளிர்கிறது. அது இந்திரனின் நகராகிய அமராவதியிலுள்ள தோட்டங்களில் முளைத்த பசுந்துளிர்களுடன் மென்னியைப் பிடித்துப் போட்டியிடுகிறது. ஒளிவீசுவதில் (தான் தான் முதல் என்று) முதன்மை தாங்குகிற சூர்யனின் செங்கதிர்களுக்கு முதல் குரு. செம்பரத்தம் பூக்கொத்துடன் செம்மைக்காகப் போட்டியிடுகிறது. (2)*

मरालीनां यानाभ्यसनकलनामूलगुरवे
दरिद्राणां त्राणव्यतिकरसुरोद्यानतरवे ।
तमस्काण्डप्रौढिप्रकटनतिरस्कारपटवे
जनोऽयं कामाक्ष्याश्चरणनलिनाय स्पृहयते ॥ ३ ॥

மராளீநாம் யாநாப்ப்யஸன கலநா மூல குரவே
தரித்ராணாம் த்ராண வ்யதிகர ஸுரோத்யான தரவே ।
தமஸ் காண்ட ப்ரௌடி ப்ரகடந திரஸ்கார படவே
ஜநோऽயம் காமாக்ஷ்யா: சரண நளிநாய ஸ்ப்ருஹயதே ॥ (3)

*இவன் (கவி) காமாக்ஷியின் திருவடித்தாமரையை (அடைய) விரும்புகிறான். அந்தத் தாமரை அன்னப்பறவைகளுக்கு நடைப்பயிற்சி தருகிற முதல் குரு. எளியவர்களைக்காக்கிற பணியில் கற்பகமரம். அறியாமை எனும் இருட்டுக் குவியலின் ஆற்றல் மிக்க விரிவை மறையச் செய்வதில் திறம் மிக்கது. (3)*

वहन्ती सैन्दूरीं सरणिं अवनम्रामरपुरी-
पुरंध्रीसीमन्ते कविकमलबालार्कसुषमा ।
त्रयीसीमन्तिन्याः स्तनतटनिचोलारुणपटी
विभान्ती कामाक्ष्याः पदनलिनकान्तिर्विजयते ॥ ४ ॥

வஹந்தீ ஸைந்தூரீம் ஸரணிம் அவநம்ராமரபுரீ-
புரந்த்ரீ ஸீமந்தே கவி கமல பாலார்க்க ஸுஷமா ।
த்ரயீ ஸீமந்திந்யா: ஸ்தந தட நிசோலாருண படீ
விபாந்தீ காமாக்ஷ்யா: பதநளின காந்தி: விஜயதே ॥ (4)

*தன்னை வணங்கி நிற்கிற தேவருலகப் பெண்களின் வகிட்டில் சிந்தூரப்பொட்டின் நிலையை ஏற்றதும், கவிகளாகிய தாமரைகளை மலரச் செய்கிற இளஞ்சூரிய ஒளியும், வேதங்களாகிய பெண்களின் மார்பகத்தை மறைக்கிற செவ்வாடையுமாக விளங்குகிற திருவடித் தாமரையின் அழகு மேன்மையுடன் வெல்கிறது.*

*திருவடியின் ஒளி வணங்குகிற பெண்களின் வகிட்டில் பதிய சிந்தூரமிட்டது போலாகின்றது. (4)*

प्रणम्रीभूतस्य प्रणयकलहत्रस्तमनसः
स्मरारातेश्चूडावियति गृहमेधी हिमकरः ।
ययोः सांध्यां कान्तिं वहति सुषमाभिश्चरणयोः
तयोर्मे कामाक्ष्या हृदयमपतन्द्रं विहरताम् ॥ ५ ॥

ப்ரணம்ரீபூதஸ்ய ப்ரணயகலஹ த்ரஸ்த மனஸ:
ஸ்மராராதே: சூடாவியதி க்ருஹமேதீ ஹிமகர: ।
யயோ: ஸாந்த்யாம் காந்திம் வஹதி ஸுஷமாபிஶ் சரணயோ:
தயோர் மே காமாக்ஷ்யா ஹ்ருதயமபதந்த்ரம் விஹரதாம் ॥ (5)

*ஊடலால் பரபரத்துப் பயந்து வணங்கி நிற்கிற பரம சிவனின் திருமுடியில் குடியிருக்கிற சந்திரன் எவற்றின் ஒளியால் சந்தியா காலத்துச் செம்மையைப் பெறுகிறுனே, அந்த காமாக்ஷியின் திருவடிகளில் என்மனம் சோர்வின்றி விளையாடட்டும்.*

*தேவியின் திருவடியில் ஊடலை நீக்கவந்த சிவனது திருமுடி பதிய, திருவடியின் ஒளி சிவனது திருமுடியிலுள்ள சந்திரனை மேலும் செம்மை பெறச் செய்கிறது. (5)*

ययोः पीठायन्ते विबुधमुकुटीनां पटलिका
ययोः सौधायन्ते स्वयमुदयभाजो भणितयः ।
ययोर्दासायन्ते सरसिजभवाद्याश्चरणयो ः
तयोर्मे कामाक्ष्या दिनमनु वरीवर्तु हृदयम् ॥ ६ ॥

யயோ: பீடாயந்தே விபுதமுகுடீநாம் படலிகா
யயோ: ஸௌதாயந்தே ஸ்வயமுதயபாஜோ பணிதய: ।
யயோ: தாஸாயந்தே ஸரஸிஜ பவாத்யா: சரணயோ:
தயோர் மே காமாக்ஷ்யா தினமனு வரீவர்த்து ஹ்ருதயம் (6)

*தேவர்களின் கிரீடவரிசை, எவற்றிற்குப் பீடமாகின்றனவோ, தானே தோன்றிய வேதமந்திரங்கள் எவற்றிற்கு உலா வர மேல்மாடங்களாகின்றனவோ, எவற்றிற்கு பிரும்மா முதலானவர் பணியாளராகின்றனரோ அந்த காமாக்ஷியின் திருவடிகளில் என் மனம் தினமும் பதிந்திருக்கட்டும். (6)*

नयन्ती संकोचं सरसिजरुचं दिक्परिसरे
सृजन्ती लौहित्यं नख किरण चन्द्रार्धखचिता ।
कवीन्द्राणां हृत्कैरवविकसनोद्योगजननी
स्फुरन्ती कामाक्ष्याश्चरणरुचिसंध्या विजयते ॥ ७ ॥

நயந்தீ ஸங்கோசம் ஸரஸிஜருசம் திக் பரிஸரே
ஸ்ருஜந்தீ லௌஹித்யம் நக கிரண சந்த்ரார்த்தகசிதா ।
கவீந்த்ராணும் ஹ்ருத் கைரவ விகஸனோத்யோக ஜநநீ
ஸ்ப்புரந்தீ காமாக்ஷ்யா: சரண ருசி ஸந்த்யா விஜயதே ॥ (7)

*தாமரைப்பூக்களின் ஒளியை மங்கச் செய்வதும், எல்லா திசைகளிலும் செம்மை படரச் செய்வதும், நக ஒளியாகிய*

*அரைச்சந்திரன் பதிக்கப்பட்டதும், சிறந்த கவிகளின் இதயமாகிய அல்லியை மலரச் செய்வதில் ஆர்வம் கொண்டதும் ஒளி மிக்கதுமான காமாக்ஷியின் திருவடி ஒளியாகிய மாலைச் சந்திவேளை மேலோங்குகிறது.*

*மாலைச்சந்திவேளையில் தாமரை குவியும். அல்லி மலரும். செம்மை படரும். (7)*

विरावैर्माञ्जीरैः किमपि कथयन्तीव मधुरं
पुरस्तादानम्रे पुरविजयिनि स्मेरवदने ।
वयस्येव प्रौढा शिथिलयति या प्रेमकलह-
प्ररोहं कामाक्ष्याश्चरणयुगली सा विजयते ॥ ८ ॥

விராவை: மாஞ்ஜீரை: கிமபி கதயந்தீவ மதுரம்
புரஸ்தாதாநம்ரே புரவிஜயிநி ஸ்மேர வதநே ।
வயஸ்யேவ ப்ரௌடா சிதிலயதி யா ப்ரேம கலஹ-
ப்ரரோஹம் காமாக்ஷ்யா: சரணயுகளீ ஸா விஜயதே ॥ (8)

*எதிரில் வணங்குகிற சிவனிடம் சிலம்புகளின் ஒலிகளால் எதையோ இனிது பேசி, புன்னகை பூத்த அவருடன் மிகவும் பழகிய தோழி போல், ஊடல் கலகத்தின் காரணத்தைத் தளரச் செய்கிற காமாக்ஷியின் திருவடிகள் நன்கு விளங்குகின்றன. (8)*

सुपर्वस्त्रीलोलालकपरिचितं षट्पदकुलैः
स्फुरल्लाक्षारागं तरुणतरणिज्योतिररुणैः ।
भृतं कान्त्यंभोभिर्विसृमरमरन्दैः सरसिजैः
विधत्ते कामाक्ष्याश्चरणयुगळं बन्धुपदवीम् ॥ ९ ॥

ஸுபர்வ ஸ்திரீ லோலாலக பரிசிதம் ஷட்பத குலை:
ஸ்புரல் லாக்ஷாராகம் தருண தரணி ஜ்யோதிர் அருணை: ।
ப்ப்ருதம் காந்த்யம்ப்போபி: விஸ்ருமர மரந்தை: ஸரஸிஜை:
விதத்தே காமாக்ஷ்யா: சரண யுகளம் பந்த்து பதவீம் ॥ (9)

*(வணங்குகிற) தேவமாதரின் அலைபோல் அசைகிற கூந்தல்களோடு உறவாடுவதும், ஒளியுள்ள செம்பஞ்சுக் குழம்பு பூசியதும், ஒளி நீரோட்டம் நிரம்பியதுமான காமாக்ஷியின் இருதிருவடிகளும் வண்டுக்கூட்டத்தோடும் இளஞ்சூரியக்கதிர்களின் செம்மையோடும், பூந்தாது நிறைந்த தாமரைகளோடும் உறவு கொள்கிறது.*

*வணங்குகிற தேவமாதரின் கூந்தல் வண்டுபோல் திருவடியைச் சூழ்ந்துள்ளது. செம்பஞ்சுக்குழம்பின் பூச்சு இளஞ்சூரியனின் கதிர்களின் செம்மைபோல், திருவடியின் காந்தி தாமரையின் பூந்தாதுபோல் சூழ்ந்துள்ளது. இவை திருவடியிடம் உற்றார் உறவினர்போல் வெகுநாட்களாகக் கொண்ட பரிசயத்தை வெளிப்படுத்துகின்றன. (9)*

रजःसंसर्गेऽपि स्थितं अरजसामेव हृदये
परं रक्तत्वेन स्थितमपि विरक्तैकसुलभम्[1]।
अलभ्यं मन्दानां दधदपि सदा मन्दगतितां
विधत्ते कामाक्ष्याश्चरणयुगमाश्चर्यलहरीम् ॥ १० ॥

ரஜஸ் ஸம்ஸர்கேऽபி ஸ்த்திதம் அரஜஸாம் ஏவ ஹ்ருதயே
பரம் ரக்தத்வேண ஸ்த்திதமபி விரக்தைக ஸுலபம்[2]।
அலப்ப்யம் மந்தாநாம் தததபி ஸதா மந்த கதிதாம்
விதத்தே காமாக்ஷ்யா: சரணயுகம் ஆஶ்சர்ய லஹரீம் ॥ (10)

*காமாக்ஷியின் திருவடி (களின் இரட்டை) விந்தை அலையை எழுப்புகிறது. ரஜஸ்ஸுடன் (புழுதியுடன்) சேரும் போதும், ரஜஸ் (ரஜோகுணம்) அற்றவருக்கு எளிதாகக்கிடைக்கிறது. (புகலிடமாகிறது) மந்தர்களுக்குக் கிட்டாதாயினும் மந்த நடை எப்போதும் போடுகிறது. (10)*

---

1. शरणं 2. *ஶரணம்*

जटाला मञ्जीरस्फुरदरुणरत्नांशुनिकरैः
निषीदन्ती मध्ये नखरुचिझरीगाङ्गपयसाम् ।
जगत्त्राणं कर्तुं जननि मम कामाक्षि नियतं
तपश्चर्यां धत्ते तव चरणपाथोजयुगली ॥ ११ ॥

ஜடாலா மஞ்ஜீர ஸ்ப்புரத் அருண ரத்நாம்ஶு நிகரை:
நிஷீதந்தீ மத்த்யே நக ருசி ஜரீ காங்க பயஸாம் ।
ஜகத் த்ராணம் கர்தும் ஜநநி மம காமாக்ஷி நியதம்
தபஶ் சர்யாம் தத்தே தவ சரண பாதோஜ யுகளீ ॥ (11)

*என் தாயே ! காமாக்ஷி ! கால் தண்டைகளில் ஒளிர்கிற சிவப்பு ரத்தின ஒளிக்கதிர்களால் சடைதரித்ததாக, நக ஒளி வெள்ளமாகிய கங்கை நீரின் நடுவே அமர்ந்துள்ளதாக, நியமத்துடன் தவம் புரிவதை உன் திருவடித்தாமரை உலகைக் காப்பதற்கென்றே ஏற்றுள்ளது.*

*தேவியைப் போல் அவளது இருதிருவடிகளும் உலகைக் காக்கத் தவக்கோலம் பூண்டுள்ளன போலும். அதற்கேற்றவாறு கால் தண்டை சிகப்பு ரத்தின ஒளியே அதன் சடை, நக ஒளி எனும் நீரோட்டமே கங்கை பிரவாஹம். அதன் நடுவே ஆஸனம் (11)*

तुलाकोटिद्वन्द्वक्वणितभणिताभीतिवचसोः
विनम्रं कामाक्षी विसृमरमहःपाटलितयोः ।
क्षणं विन्यासेन क्षपिततमसोर्मे ललितयोः
पुनीयान्मूर्धानं पुरहरपुरंध्री चरणयोः ॥ १२ ॥

துலாகோடி த்வந்த்வ க்வணித பணிதாபீதி வசஸோ:
விநம்ரம் காமாக்ஷீ விஸ்ருமர மஹ: பாடலிதயோ: ।
க்ஷணம் விந்யாஸேந க்ஷபித தமஸோ: மே லலிதயோ:
புநீயாந் மூர்த்தாநம் புரஹர புரந்த்ரீ சரணயோ: ॥ (12)

*இருசிலம்புகளின் பரல்ஒலியால் அபயவாக்களிப்பவையும் தன் செம்மை நிறைந்த ஒளியால் சூழலில் செம்மையைப்*

*பாப்புபவையும் அஜ்ஞானமாகிற இருளைப் போக்குபவையும் மென்மை மிக்கவையுமான தன் திருவடிகளைக் கணநேரம் வைப்பதால் புரங்களை அழித்தவரின் மனைவியான காமாக்ஷி வணங்கி நிற்கிற என் தலையைப் புனிதமாக்கட்டும். (12)*

भवानि द्रुह्येतां भवनिबिडितेभ्यो मम मुहुः
तमोव्यामोहेभ्यस्तव जननि कामाक्षि चरणौ ।
ययोर्लाक्षाबिन्दुस्फुरणधरणाद् धूर्जटिजटा-
कुटीरा शोणाङ्कं वहति वपुरेणाङ्ककलिका ॥ १३ ॥

பவாநி ! த்ருஹ்யேதாம் பவ நிபிடிதேப்ப்யோ மம முஹு:
தமோ வ்யாமோஹேப்ப்ய: தவ ஜநநி ! காமாக்ஷி ! சரணௌ।
யயோர் லாக்ஷாபிந்து ஸ்ப்புரண தரணாத் தூர்ஜடி ஜடா-
குடீரா ஶோணாங்கம் வஹதி வபு: ஏணாங்க கலிகா ॥(13)

*பவனின் மனைவியே ! தாயே ! காமாக்ஷி ! உன் திருவடிகள் செம்பஞ்சுக்குழம்புப் பூச்சை ஏற்பதால், சிவனது சடையைக் குடியிருப்பாகக் கொண்ட சந்திரனின் கலை சிவப்புநிறமுள்ள உடலைக் கொண்டுள்ளது. அவை அடிக்கடி பிறவியைத் திணிக்கின்ற என் அஜ்ஞான மயக்கங்களுக்குத் துரோகம் விளைவிக்கட்டும்.*

*வணங்கி நிற்கிற சிவன் இங்கும் காட்சி தருகிறார். (13)*

पवित्रीकुर्युर्नः पदतलभुवः पाटलरुचः
परागास्ते पापप्रशमनधुरीणास्तव शिवे ।
कणं लब्धुं येषां निजशिरसि कामाक्षि नियतं
वलन्तो व्यातन्वन्त्यहमहमिकां वासवमुखाः ॥ १४ ॥

பவித்ரீகுர்யுர்ந: பததலபுவ: பாடலருச:
பராகாஸ் தே பாபப்ரஶமநதுரீணாஸ் தவ ஶிவே ।
கணம் லப்த்தும் யேஷாம் நிஜஶிரஸி காமாக்ஷி நியதம்
வலந்தோ வ்யாதந்வந்த்யஹமஹமிகாம் வாஸவமுகா: ॥ 14

*மங்கள உருவினளே ! காமாக்ஷி ! இந்திரன் முதலான தேவர்களும் உன் திருவடிப்புழுதியைத் தம் தலையில் பெற எப்போதும் நான் முன்னதாக, நான்முன்னதாக எனப் போட்டியுடன் முந்துகின்றனர். சிவந்த ஒளி கொண்டவையும் பாபத்தைப் போக்குவதில் முன் நிற்பவையுமான அவை எங்களைப் புனிதமாக்கட்டும். (14)*

बलाकामालाभिर्नखरुचिमयीभिः परिवृते
विनम्रस्वर्नारीविकचकचकालाम्बुदकुले ।
स्फुरन्तः कामाक्षि स्फुटदलितबन्धूकसुहृदः
तडिल्लेखायन्ते तव चरणपाथोजकिरणाः ॥ १५ ॥

பலாகா மாலாபிர் நக ருசி மயீபி: பரிவ்ருதே
விநம்ர ஸ்வர்நாரீ விகச கச காலாம்புத குலே ।
ஸ்புரந்த: காமாக்ஷி ஸ்புட தளித பந்தூக ஸுஹ்ருத:
தடில்லேகாயந்தே தவ சரண பாதோஜ கிரணா: ॥ 15

*காமாக்ஷி ! நன்கு மலர்ந்த செம்பரத்தம்பூவுடன் நட்பு கொண்ட உனது தாமரைபோன்ற பாதங்களின் ஒளிக்கதிர்கள், நகஒளியாகிற கொக்குவரிசைகள் பரவிய (தன்னை) வணங்குகின்ற தேவமாதரின் விரிந்த கூந்தல்களாகிற கார்மேகக் குவியலில் பளீரென ஒளிர்கிற மின்னல் கோடாகின்றன.*

*தேவமாதர் தேவியை வணங்க, அவர்களது கூந்தல் திருவடிகளின் அருகே வீழ்ந்து கார்மேகம் போல் படிகின்றன. தேவியின் பாத நக ஒளி அவற்றின் மீது மின்னல் கொடிபோல் பாய்ந்து கணநேரம் ஒளிர்கிறது. (15)*

सरागः सद्वेषः प्रसृमरसरोजे प्रतिदिनं
निसर्गादाक्रामन्विबुधजनमूर्धानमधिकम् ।
कथंकारं मातः कथय पदपद्मस्तव सतां
नतानां कामाक्षि प्रकटयति कैवल्यसरणिम् ॥ १६ ॥

ஸராக: ஸத்வேஷ: ப்ரஸ்ருமர ஸரோஜே ப்ரதி திநம்
நிஸர்காத் ஆக்ராமந் விபுத ஜந மூர்த்தாநம் அதிகம் ।
கதங்காரம் மாத: கதய பத பத்மஸ் தவ ஸதாம்
நதாநாம் காமாக்ஷி ப்ரகடயதி கைவல்ய ஸரணிம் ॥ 16

*தாயே ! காமாக்ஷி ! பற்று(செம்மை) உள்ளதும் அலர்ந்த தாமரையிடம் வெறுப்புள்ளதும், தேவர்களுடைய (அறிஞர்களுடைய) சிரஸில் தினமும் நன்கு அடியெடுத்து வைப்பதுமான உன் திருவடித்தாமரை வணங்குகிற நல்லோருக்கு மட்டும் முக்திவழிக்கு எப்படி வழிகாட்டுகிறது என்பதை விளக்குவாய் !*

*ராகத்வேஷங்கள் நிறைந்து, தேவர்களையும் ஞானிகளையும் தலைமீதேறி மிகவும் அடக்குகிற திருவடிகள், நல்லோருக்கு முக்திவழி எப்படிக் காட்டும் ? ராகத்துவேஷங்களின்றி, தன் திருவடி சார்ந்த சிஷ்யனிடம் பரிவோடு கைதூக்கி விடுபவன் அல்லவோ ஆசாரியனாகி முக்திவழி காட்டுவான் ? திருவடிஸ்பர்சமே வலுவில் சென்று முக்தி கொடுக்கிறதே ! (16)*

जपालक्ष्मीशोणो जननि[1] परमज्ञाननलिनी-
विकासव्यासङ्गो विफलितजगज्जाड्यगरिमा ।
मनःपूर्वाद्रिं मे तिलकयतु कामाक्षि तरसा
तमस्काण्डद्रोही तव चरणपाथोजरमणः ॥ १७ ॥

ஜபாலக்ஷ்மீஶோணோ ஜநநி[2] பரம ஜ்ஞாந நலிநீ-
விகாஸ வ்யாஸங்கோ விபலித ஜகஜ் ஜாட்ய கரிமா ।
மந: பூர்வாத்ரிம் மே திலகயது காமாக்ஷி தரஸா
தமஸ் காண்ட த்ரோஹீ தவ சரண பாதோஜ ரமண: ॥

*தாயே ! காமாக்ஷி ! உன் திருவடித்தாமரையான காதலன்; சிவந்துள்ளவன், பேரறிவாகிய தாமரையை மலரச் செய்வதில்*

1. जनित 2. ஜநித

*ஈடுபட்டவன், உலகின் ஜடத்தன்மைச் சுமையைப் பயன் தராதபடி அழிப்பவன், அஜ்ஞான இருளை எதிர்ப்பவன்; அவன் என்மனமாகிற (அவன்) உதிக்கின்ற மலையில் திலகமிடட்டும்.*

*சூரியன் கிழக்குமலையின் உச்சியில் சிவந்து தோன்றுகிறான். உடன் மாந்தரின் சோம்பல் அகலுகிறது. இருள் நீங்குகிறது. தாமரை மலர்கிறது. திருவடியாகிற காதலன் சூரியன் போல் என் மனமாகிற கிழக்குமலையின் நெற்றியில் திலகமிடட்டும். உடன் எனது ஜடத்தன்மையும் அறியாமையும் தானே நீங்கும். பேரறிவு மலரும். (17)*

**नमस्कुर्मः प्रेङ्खन्मणिकटकनीलोपलमहः-**
**पयोधौ रिङ्खद्भिर्नखकिरणफेनैर्धवलिते ।**
**स्फुटं कुर्वाणाय प्रबलचलदौर्वानलशिखा-**
**वितर्कं कामाक्ष्याः सततमरुणिम्ने चरणयोः ॥ १८ ॥**

**நமஸ் குர்ம: ப்ரேங்க்கந் மணி கடக நீலோபல மஹ:**
**பயோதௌ ரிங்க்கத்ப்பிர் நக கிரண பேநை: கவலிதே ।**
**ஸ்ப்புடம் குர்வாணாய ப்ரபல சல தௌர்வாநல ஶிக்கா-**
**விதர்கம் காமாக்ஷ்யா: ஸததம் அருணிம்நே சரணயோ: ॥ 18**

*காமாக்ஷியின் பாதங்களின் செந்நிறத்தை எப்போதும் வணங்குகிறோம். அவை நகங்களிலிருந்து வெளியாகிற காந்தி எனும் நுரைகளால் வெளுத்தவை. ஒளி மிக்க ரத்தினச் சிலம்புகளிலுள்ள நீலரத்தினக்கற்களின் ஒளியாகிய நீலமான கடலில் வலுத்து எரிகின்ற படபாக்கினி (கடல் தீ)யின் தீப்பிழம்போ என்ற ஐயத்தை உண்டாக்குபவை.*

*திருவடிகளில் அணிந்துள்ள ரத்தினச்சிலம்புகளில் உள்ள நீலரத்தின ஒளி என்ற பரந்த நீலக்கடல், நகங்களில் ஒளி கடல்மீது படர்ந்த நுரை. செந்நிறமுள்ள திருவடிகள் கடல்தீ. (18)*

शिवे पाशायेतां अलघुनि तमःकूपकुहरे
दिनाधीशायेतां मम हृदयपाथोजविपिने ।
नभोमासायेतां सरसकवितारीतिसरिति
त्वदीयौ कामाक्षि प्रसृतकिरणौ देवि चरणौ ॥ १९॥

ஶிவே பாஶாயேதாம் அலகுநி தம: கூப குஹரே
திநாதீஶாயேதாம் மம ஹ்ருதய பாதோஜ விபிநே ।
நபோ மாஸாயேதாம் ஸரஸ கவிதா ரீதி ஸரிதி
த்வதீயௌ காமாக்ஷி ப்ரஸ்ருத கிரணௌ தேவி சரணௌ ॥ 19

*சிவே ! தேவி ! காமாக்ஷி ! ஒளிபரவியுள்ள உன் பாதங்கள் மிகப்பெரிய அறியாமையாகிற பாழ்கிணற்றில் (வெளியேற உதவுகிற) கயிறாகட்டும். இதயமாகிற தாமரைக்காட்டிற்கு (அதனை மலர்விக்கிற) சூரியனாகட்டும். இனிய கவிதை முறை என்ற ஆற்றின் வெள்ளம்பெருக மழைநாட்கள் கொண்ட ஆவணிமாதமாகட்டும். (19)*

निषक्तं श्रुत्यन्ते नयनमिव सद्वृत्तरुचिरैः
समैर्जुष्टं शुद्धैरधरमिव रम्यैर्द्विजगणैः ।
शिवे वक्षोजन्मद्वितयमिव मुक्ताश्रितमुमे
त्वदीयं कामाक्षि प्रणतशरणं नौमि चरणम् ॥ २०

நிஷக்தம் ஶ்ருத்யந்தே நயநமிவ ஸத்வ்ருத்தருசிரை:
ஸமைர் ஜுஷ்டம் ஶுத்தைரதரமிவ ரம்யை: த்விஜகணை: ।
ஶிவே வக்ஷோஜந்ம த்விதயமிவ முக்தா ஶ்ரிதமுமே
த்வதீயம் காமாக்ஷி ப்ரணதஶரணம் நௌமி சரணம் ॥ 20

*சிவே ! உமையே ! காமாக்ஷி ! கண்ணைப்போல் காதின் எல்லையைத் தொடுவதும் உதடுபோல் நன்கு அமைப்பழகுகொண்ட, நேரான அழகான பல்வரிசையுடன் இணைந்ததும். இரண்டு ஸதனங்கள் போல் முத்துமாலை பூண்டதுமான உன் திருவடிகளைச் சரணடைகிறேன்.*

*இங்கு சிலேடை-வரிசை. ச்ருத்யந்தம் - காதின் ஓரம், சுருதியான வேதத்தின் எல்லையான உபநிடதத்துவம். த்விஜகணம் - பற்களின் வரிசை, அந்தணரின் வரிசை. வேதமோத மறுபிறப்பான உபனயனமானவரின் கூட்டம். ஸத்வ்ருத்தம் - நல்லவட்டஅமைப்பு (பற்களில்), நன்னடத்தை (அந்தணரிடம்) முக்தாச்ரிதம் - முத்தணிந்தது (மார்பகத்தில்) முக்திபெற்றவரால் அண்டப்பெற்றது (திருவடியில்) கண்கள், உதடு, ஸ்தனம் இவற்றுடன் திருவடி உவமை பெறுகிறது. கண்கள் காதின் ஓரத்தைத் தொடுபவை. சரணங்கள் உபநிடதஎல்லையைத் தொடுபவை. உதடு சிவந்து நன்கு அமைந்த நேரான பல்வரிசையுடன் கூடியது. சரணங்கள் நன்னடத்தைமிக்க நேர்மைமிக்க அந்தணர்கள் சூழ்ந்தது. மார்பகம் முத்துமாலை பூண்டது. திருவடி முக்தர்களின் புகலிடம். (20)*

**नमस्या संसज्जन्नमुचि परिपन्थि प्रणयिनी-**
**निसर्गप्रेंखोलत्कुरलकुलकालाहिशबले ।**
**नखच्छाया दुग्धोदधिपयसि ते वैद्रुमरुचां**
**प्रचारं कामाक्षि प्रचुरयति पादाब्जसुषमा ॥ २१**

நமஸ்யாஸம்ஸஜ்ஜந் நமுசி பரிபந்த்தி ப்ரணயிநீ-
நிஸர்கப்ரேங்க்கோலத்குரலகுல காலாஹி ஶபலே ।
நகச் ச்சாயாதுக்த்தோததி பயஸி தே வைத்ருமருசாம்
ப்ரசாரம் காமாக்ஷி ப்ரசுரயதி பாதாப்ஜஸுஷமா ॥ 21

*காமாக்ஷி ! உன் திருவடித்தாமரைகளின் அழகு, பவழத்தின் செந்நிற ஒளியின் பரப்பை, உன்னை வணங்குவதில் ஈடுபட்ட (நமுசியின் எதிரி) இந்திரனின் மனைவியின் அலைபோல் அசைந்தாடுகிற கூந்தல் கற்றையாகிற கருநாகங்களின் மீதுள்ள ரத்தினம் பதித்த சூடாமணி முதலியவற்றின் ஒளிச்சிதறலால், பல நிறக்கலவை கொண்ட நகஒளியாகிற பாற்கடலில் அதிகப்படுத்துகிறது.*

*இந்திராணி தேவியை வணங்க, அவளது கேசம் திருவடிமுன் விரிந்தாடுகிறது. அதன் ஒளி கருநாகத்தின்*

*தலையிலுள்ள நீலரத்னஒளிபோல் பாதங்களின் மீது படர்கிறது. நகஒளி பாற்கடல் போல் வெண்மையுடன் நடுவே ஒளிர்கிறது. தேவியின் திருவடி பவழம் போல் சிவந்து காண்கிறது. ஒவ்வொன்றும் தனித் தனியே தம் தம் ஒளியைப்பரப்புகின்றன. அந்த ஒளிச் சிதறல் மிக அழகியது. (21)*

कदा दूरीकर्तुं कटुदुरित काकोल जनितं
महान्तं सन्तापं मदनपरिपन्थि प्रियतमे ।
क्षणात्ते कामाक्षि त्रिभुवन परीतापहरणे
पटीयांसं लप्स्ये पदकमलसेवामृतरसम् ॥ २२

கதா தூரீகர்தும் கடு துரித காகோல ஜநிதம்
மஹாந்தம் ஸந்தாபம் மதந பரிபந்த்தி ப்ரியதமே ।
க்ஷணாத் தே காமாக்ஷி த்ரிபுவந பரீதாப ஹரணே
படீயாம்ஸம் லப்ஸ்யே பதகமல ஸேவாம்ருதரஸம் ॥ 22

*மன்மதனின் எதிரியின் மிகவும் இனியாளே ! காமாக்ஷி ! கொடும்பாபமாகிய விஷத்தால் ஏற்பட்ட பெருந்தாபத்தை அகற்றுவதற்காக, மூவுலகின் துயரையும் ஒருநொடியில் போக்க மிகவும் வல்லதான உன் திருவடித்தாமரையின் ஸேவை எனும் அமுதபானத்தை என்று பெறுவேன் ? (22)*

ययोः सान्ध्यं रोचिः सततमरुणिम्ने स्पृहयते
ययोश्चान्द्री कान्तिः परितपति दृष्ट्वा नखरुचिम् ।
ययोः पाकोद्रेकं पिपठिषति भक्त्या किसलयं
म्रदिम्नः कामाक्ष्या मनसि चरणौ तौ तनुमहे ॥ २३ ॥

யயோ: ஸாந்த்த்யம் ரோசி: ஸததம் அருணிம்நே ஸ்ப்ருஹயதே
யயோ: சாந்த்ரீ காந்தி: பரிதபதி த்ருஷ்ட்வா நகருசிம் ।
யயோ: பாகோத்ரேகம் பிபடிஷதி பக்த்யா கிஸலயம்
ம்ரதிம்ந: காமாக்ஷ்யா மநஸி சரணௌ தௌ தநுமஹே ॥ 23

*காமாக்ஷியின் அந்த திருவடிகளை மனத்தில் பதித்து வைப்போம். அவற்றின் செந்நிறத்தைப் பெற மாலை வான ஒளி எப்போதும் விரும்புகிறது. அதன் நகஒளியைக் கண்டு சந்திரனின் நிலவு தன்னை நொந்து கொள்கிறது. அதன் மென்மையின் கனிவை, துளிர் பக்தியுடன் கற்றுக் கொள்ள விரும்புகிறது (23)*

जगन्नेदं नेदं परमिति परित्यज्य यतिभिः
कुशाग्रीयस्वान्तैः कुशलधिषणैः शास्त्रसरणौ ।
गवेष्यं कामाक्षि ध्रुवं अकृतकानां गिरिसुते
गिरामैदंपर्यं तव चरणमाहात्म्यगरिमा[1] ॥ २४ ॥

ஜகந்நேதம் நேதம் பரமிதி பரித்யஜ்ய யதிபி:
குஶாக்ரீய ஸ்வாந்தை: குஶல திஷணை: ஶாஸ்த்ரஸரணௌ ।
கவேஷ்யம் காமாக்ஷி த்த்ருவம் அக்ருதகாநாம் கிரிஸுதே
கிராம் ஐதம்பர்யம் தவ சரண மாஹாத்ம்யகரிமா[2] ॥ 24

*காமாக்ஷி ! மலைமகளே ! உன் திருவடித்தாமரையின் பெருமையின் சிறப்பு, தானே தோன்றிய வேதவாக்குகளின் முடிவான கருத்து. சாஸ்திரவழியில் தேர்ந்தஅறிவுள்ளவர்களும் தர்ப்பைநுனி போன்று கூர்மிக்க புத்தி உள்ளவருமான துறவிகளால் (ஸ்ரீ சங்கரபகவத் பாதர் முதலானோரால்) உலகிலுள்ளதனைத்தையும் இது பரம்பொருளல்ல, இது பரம் பொருளல்ல என ஒதுக்கி இதுபரம்பொருள் என ஆராய்ந்து உணரப்பட்டது. நிலைத்ததொன்று (24)*

कृतस्नानं शास्त्रामृतसरसि कामाक्षि नितरां
दधानं वैशद्यं कलितरसं आनन्दसुधया ।
अलङ्कारं भूमेर्मुनिजनमनश्चिन्मयमहा-
पयोधेरन्तस्स्थं तव चरणरत्नं मृगयते ॥ २५ ॥

1. पद्मं विजयते 2. பத்மம் விஜயதே

க்ருதஸ்நாநம் ஶாஸ்த்ராம்ருத ஸரஸி காமாக்ஷி நிதராம்
ததாநம் வைஶத்யம் கலித ரஸம் ஆநந்த ஸுதயா।
அலங்காரம் பூமே: முநி ஜந மனஶ் சிந்மய மஹா-
பயோதே ரந்தஸ் ஸ்த்தம் தவ சரண ரத்நம் ம்ருகயதே ॥ 25

*காமாக்ஷி ! சாஸ்திரம் என்ற அமுத ஓடையில் நீராடி, தெளிவுபெற்று, ஆனந்த அமுதத்தைச் சுவைத்துள்ள முனிவர்களின் மனம் பூமிக்கு அணியும், சித் சக்தி எனும் பெருங்கடலினுள் ஆழ்ந்துள்ளதுமான உன் திருவடியாகிற ரத்தினத்தை (முத்தை)த் தேடுகிறது. (25)*

मनोगेहे मोहोद्भवतिमिरपूर्णे मम मुहुः
दरिद्राणीकुर्वन्दिनकरसहस्राणि किरणैः ।
विधत्तां कामाक्षि प्रसृमरतमोवञ्चनचणः
क्षणार्धं सान्निध्यं चरणमणिदीपो जननि ते ॥ २६ ॥

மநோ கேஹே மோஹோத்பவ திமிர பூர்ணே மம முஹு:
தரித்ராணீ குர்வந் திநகர ஸஹஸ்ராணி கிரணை: ।
விதத்தாம் காமாக்ஷி ! ப்ரஸ்ருமர தமோ வஞ்சந சண:
க்ஷணார்த்தம் ஸாந்நித்யம் சரணமணி தீபோ ஜநநி தே ॥ 26

*தாயே ! காமாக்ஷி ! தன் கிரண ஒளியால் ஆயிரக்கணக்கான சூரியர்களின் ஒளியைத் தாழச் செய்வதும், பரவிவருகிற அறியாமை எனும் இருளை நீக்குவதில் திறமை பெற்றதுமான உனது திருவடியாகிற மணிவிளக்கு மோகத்தால் உண்டான இருள் நிரம்பிய என்மனமெனும் வீட்டினுள், அடிக்கடி அரைநொடியாவது, அருகாமை தரட்டும். (கூடத்துணையாயிருக்கட்டும்.) (26)*

कवीनां चेतोवन्नखररुचिसंपर्कि विबुध-
स्रवन्तीस्रोतावत्पटुमुखरितं हंसकरवैः ।
दिनारम्भ श्रीवन्नियतमरुणच्छायसुभगं
मदन्तः कामाक्ष्याः स्फुरतु पदपङ्केरुहयुगम् ॥ २७ ॥

கவீநாம் சேதோவந் நகரருசி ஸம்பர்க்கி விபுத-
ஸ்ரவந்தீ ஸ்ரோதோவத் படுமுகரிதம் ஹம்ஸகரவை: ।
திநாரம்ப ஸ்ரீவத் நியதம் அருணச்ச்சாய ஸுபகம்
மதந்த: காமாக்ஷ்யா: ஸ்ப்புரது பதபங்கேருஹ யுகம் ॥ 27

*கவிகளின் மனம்போல், நகர (கரடுமுரடல்லாத நகத்தின்) ருசியுடன் (ஒளியுடன், சுவையுடன்) கூடியதும் கங்கையின் பிரவாகம்போல் ஹம்ஸகங்களின் (பாதசரங்களின், அன்னப்பட்சிகளின்) இனிய ஒலிகளால் இனிது பேசுவதும், உதயகாலத்து அழகுபோல் அருண (செம்மையுள்ள - அருணனுடைய)ச் சாயையால் அழகியதுமான காமாக்ஷியின் இரு திருவடித்தாமரைகள் எப்போதும் என் உள்ளத்தில் விளங்கட்டும்.*

*சிலேடை-நகர-நகம், (ந-கர) கரடுமுரடல்லாத-மென்மையுள்ள. ஹம்ஸக-பாதஸரம், அன்னப்பறவை. அருண-செம்மை, அருணன். (27)*

सदा किं सम्पर्कात्प्रकृतिकठिनैर्नाकिमकुटैः
तटैर्नीहाराद्रेरधिकं अणुना योगिमनसा ।
विभिन्ते संमोहं शिशिरयति भक्तानपि दृशां
अदृश्यं कामाक्षि प्रकटयति ते पादयुगलम् ॥ २८

ஸதா கிம் ஸம்பர்காத் ப்ரக்ருதி கடிநை: நாகி மகுடை:
தடை: நீஹாராத்ரே: அதிகம் அணுநா யோகி மநஸா ।
விபிந்தே ஸம்மோஹம் ஶிஶிரயதி பக்தான் அபி த்ருஶாம்
அத்ருஶ்யம் காமாக்ஷி ! ப்ரகடயதி தே பாதயுகளம் ॥ 28

*காமாக்ஷி ! உன் இரு திருவடிகளும் இயற்கையாகவே திடம்மிக்க தேவர்களின் கிரீடங்களுடன், எப்போதும் இணைந்திருப்பதால் கலக்கத்தைப் போக்குகின்றனவோ ? பனிமலையின் தாழ்வரையுடன் தொடர்புகொள்வதால் பக்தர்களைக் குளிர்விக்கிறதோ ? அணுவளவுள்ள யோகியின் மனத்துடன் தொடர்பு கொண்டதால் கண்களுக்குப் புலப்படாததையும் புலப்படச் செய்கிறதோ ?*

*தேவர்கள் வணங்கும்போது உறுதிமிக்க அவர்களின் கிரீடங்கள் காலில் படுவதில் கிரீடத்தின் உறுதி காலில் பதிகிறது. உறுதிமிக்கதானதால் கலக்கத்தை நீக்குகிறது. பனிமலையடிவாரத்தில் உலாவுவதால் சீதத் தன்மையை இயல்பாகப் பெற்று பக்தரின் தாபத்தைப் போக்குகிறது. அணுவளவே உள்ள யோகியின் மனத்தில் நிலை கொள்வதால் அணுவிற்குச் சிறியதான தன்னையும் உணரச் செய்கிறது. (28)*

**पवित्राभ्याममम्ब प्रकृतिमृदुलाभ्यां तव शिवे**
**पदाभ्यां कामाक्षि प्रसभमभिभूतैः सचकितैः ।**
**प्रवालैरम्भोजैरपि च वनवासव्रतदशाः**
**सदैवारभ्यन्ते परिचरितनानाद्विजगणैः ॥ २९ ॥**

**பவித்ராப்யாம் அம்ப ! ப்ரக்ருதிம்ருதுலாப்யாம் தவ ஶிவே !**
**பதாப்யாம் காமாக்ஷி ! ப்ரஸபம் அபிபூதை: ஸசகிதை: ।**
**ப்ரவாளை: அம்போஜை: அபி ச வநவாஸவ்ரத தஶா:**
**ஸதைவா஽஽ரப்ப்யந்தே பரிசரிதநாநாத்விஜகணை: ॥ 29**

*தாயே ! சிவே ! காமாக்ஷி ! தூய்மை மிக்கதும் இயல்பாகவே மிருதுவாக உள்ளதுமான உன் இருதிருவடி (இரட்டை)களால் பலரறியத் தோற்கடிக்கப்பட்டுப் பயந்துள்ள பவழங்களாலும் தாமரைகளாலும் எப்போதும் துவிஜர்களின் பரிசரணைபெற்று வனத்தில் வசிப்பதென்ற விரதத்தின் முறைகள் தொடங்கப் பட்டுள்ளன.*

*சிலேடை வநவாஸம் - காட்டில் வசிப்பது, நீரின் நடுவே வசிப்பது. துவிஜர். தூய அந்தணர், பறவைகள். பவழமும் தாமரையும் மென்மையிலும் தூய்மையிலும் திருவடியிடம் தோற்றன. மிருதுவான திருவடி உறுதிமிக்க பவழத்தை வென்றது. அதன் செம்மையில் இரண்டும் தோற்றன. பலரறியத் தோற்றதால் பயந்த அவை தவம்புரியக் காட்டிற்குச் சென்று நீரின் நடுவே வசிப்பதென்று விரதம் ஏற்றன. அவ்வாறு தவம் புரிய தூய்மை மிக்க துவிஜர் (அந்தணர்) சூழ்ந்துள்ள இடத்தைத்*

*தேர்ந்தெடுத்தனவோ ? பவழம் கடல் நீரில் வசிக்கிறது. தாமரை நீரில் நடுவே ஒற்றைக்காலில் நின்று தவம் புரிகிறது. அதனைச் சுற்றி துவிஜர்கள் (பறவைகள்) சூழ்ந்து நிற்கின்றன. (29)*

चिराद्दृश्या हंसैः कथमपि सदा हंससुलभं
निरस्यन्ती जाड्यं नियतजडमध्यैकशरणम् ।
अदोषव्यासङ्गा सततमपि दोषाप्तिमलिनम्
पयोजं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥ ३० ॥

சிராத் த்ருஶ்யா ஹம்ஸை: கதம் அபி ஸதா ஹம்ஸஸுலபம்
நிரஸ்யந்தீ ஜாட்யம் நியதஜடமத்த்யைகஶரணம் ।
அதோஷவ்யாஸங்கா ஸததம் அபி தோஷாப்திமலிநம்
பயோஜம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜயுகளீ ॥ 30

*ஹம்ஸர்களால் எப்படியோ வெகுநாட்கள் தேடிக்காணத்தக்கதும், ஜடத்தன்மையைப் போக்குவதும் தோஷங்களால் தீண்டப்படாததுமான காமாக்ஷியின் திருவடி (இரட்டை) எப்போதும் ஹம்ஸங்களால் எளிதில் அடையத்தக்கது. ஜட (ஜல)த்தின் நடுவே மட்டுமிருப்பதும் எப்போதும் தோஷா (மாலைநேரம்) சேர்வதால் வாடுவதுமான தாமரையை ஏளனம் செய்கிறது.*

*சிலேடை-ஹம்ஸர் - பரமஹம்ஸர்கள், அன்னப் பறவைகள். ஜாட்யம். அஜ்ஞானம் மந்தமான அறிவு. ஜடம் - அறிவிலி, குளிர்ந்த நீர். தோஷம் - குறை, தோஷா - அந்திநேரம். திருவடியை ஹம்ஸர்கள் தேடி அலைகின்றனர். தாமரையை ஹம்ஸங்கள் எளிதில் தேடாமலே அடைகின்றன. திருவடி ஜடமாயிருப்பதையே விரட்டும். தாமரை ஜட (ஜல)த்தின் நடுவே மட்டும் இருக்கும். திருவடி தோஷத்தை நெருங்காது. தாமரை தோஷா (மாலைநேரம்)வை தானே வேறுவழியின்றி நெருங்கி வாடும். தாமரையைத் திருவடி எள்ளி நகைப்பது எளிதல்லவா ? (30)*

सुराणां आनन्दप्रबलनतया मण्डनतया
नखेन्दुज्योत्स्नाभिः विसृमरतमःखण्डनतया ।
पयोजश्रीद्वेषव्रतरततया त्वच्चरणयोः
विलासः कामाक्षि प्रकटयति नैशाकरदशाम् ॥ ३१ ॥

ஸுராணும் ஆநந்தப்ரபலநதயா மண்டநதயா
நகேந்துஜ்யோத்ஸ்நாபி: விஸ்ருமரதம:கண்டநதயா ।
பயோஜ ஸ்ரீத்வேஷவ்ரதரததயா த்வச்சரணயோ:
விலாஸ: காமாக்ஷி ! ப்ரகடயதி நைஶாகரதஶாம் ॥ 31

*காமாக்ஷி ! அலங்காரப்பொருளாகித் தேவர்களின் ஆனந்தத்தைப் பல மடங்கு பெருக்குவதாலும் நகங்களின் நிலவொளியால் பரவிநின்ற இருளை வெட்டி அகற்றுவதாலும் தாமரையின் சீரை அழிப்பதை விரதமெனக்கொண்டு அதில் ஈடுபட்டுள்ளமையாலும் உன் இரு திருவடிகளின் ஒளிபரப்பு தான் சந்திரனுகியுள்ளதைப் பலரறியச் செய்கிறது.*

*தேவர்கள் தேவியை வணங்க அவர்களது சிரஸில் திருவடி அழகிய அலங்காரப் பொருளாகிறது. தேவர்கள் ஆனந்தத்தின் எல்லையடைகின்றனர். நகவொளி நில வொளியாகித் தாமரையை வாடச் செய்கிறது. வானின் மேட்டில் உலவுகிற சந்திரன் ஆனந்தம் தருகிறுன். இருட்டைப்போக்குகிறுன். தாமரையை வாடச்செய்கிறுன். இதையே திருவடியும் செய்கிறது. வேருெரு சந்திரன் தேவையில்லை. இவளது திருவடியே சந்திரனுக ஒளிர்கிறது. (31)*

सितिम्ना कान्तीनां नखरजनुषां पादनलिन-
च्छवीनां शोणिम्ना तव जननि कामाक्षि नमने ।
लभन्ते मन्दारग्रथितनवबन्धूककुसुम-
स्रजां सामीचीन्यं सुरपुरन्ध्रीकचभराः ॥ ३२ ॥

ஸிதிம்நா காந்தீநாம் நக்கர ஜநுஷாம் பாதநளிநச்-
ச்சவீநாம் ஶோணிம்நா தவ ஜநநி ! காமாக்ஷி ! நமநே ।
லபந்தே மந்தாரக்ரதித நவ பந்த்தூககுஸுமஸ்-
ஸ்ரஜாம் ஸாமீசீந்யம் ஸுரபுரபுரந்த்ரீ கசபரா: !! 32

*தாயே ! காமாக்ஷி ! (உன்னை) வணங்கும் போது, தேவமாதரின் திரண்ட கூந்தல்கள், உன் கால் நகங்களிலிருந்து வெளிப்படுகிற ஒளிகளின் வெண்மையாலும் தாமரை ஒத்த திருவடி ஒளியின் செந்நிறத்தாலும் மந்தாரப்பூவும் செம்பரத்தம்பூவும் கலந்து கட்டிய மாலைகளின் அழகைப் பெறுகின்றன.*

*திருவடியின் செந்நிறமும் நகத்தின் வெண்மையும் பின்னித் தேவமாதரின் சிரசில் படரும் போது செம்பரத்தம்பூவும் மந்தாரமும் தொடுத்துக் கட்டிய மாலைபோல் சிரஸை அணிவிக்கின்றன. (32)*

नख श्रीसन्नद्धस्तबकनिचितः स्वैश्च किरणैः
पिशङ्गैः कामाक्षि प्रकटितलसत्पल्लवरुचिः ।
सतां गम्यः शङ्के सकलफलदाता सुरतरुः
त्वदीयः पादोऽयं तुहिनगिरिराजन्यतनये ॥ ३३ ॥

நகஶ்ரீஸந்நத்தஸ்தபகநிசித: ஸ்வைஸ்ச கிரணை:
பிஶங்கை: காமாக்ஷி ! ப்ரகடிதலஸத்பல்லவருசி: ।
ஸதாம் கம்ய: ஶங்கே ஸகலபலதாதா ஸுரதரு:
த்வதீய: பாதோऽயம் துஹிநகிரிராஜந்யதநயே ॥ 33

*பனிமலையரசனின் மகளே ! காமாக்ஷி ! உன் திருவடி, நகஒளியாகிற பூங்கொத்து சூடியதும், தங்கநிறமுள்ள தன் ஒளியால் பசுமையும் செம்மையும் கலந்த துளிர்களின் ஒளி கொண்டதும், நல்லோர்கள் சென்றடையும் இடமும், விரும்பிய பயனைத்தருவதுமான கற்பகமரமோ என ஐயப்படுகிறேன். (33)*

स्फुरन्मध्ये शुद्धे नखकिरणदुग्धाब्धिपयसां
वहन्नब्जं चक्रं दरमपि च लेखात्मकतया।
श्रितो मात्स्यं रूपं श्रियमपि दधानो निरुपमां
त्रिधामा कामाक्ष्याः पदनलिननामा विजयते॥ ३४॥

ஸ்ப்புரந் மத்த்யே ஶுத்த்தே நககிரணதுக்த்தாப்த்தி பயஸாம்
வஹந் அப்ஜம் சக்ரம் தரம் அபி ச லேகாத்மகதயா ।
ஶ்ரிதோ மாத்ஸ்யம் ரூபம் ஶ்ரியமபி ததாநோ நிருபமாம்
த்ரிதாமா காமாக்ஷ்யா: பதநளிந நாமா விஜயதே !! 34

*நக ஒளியாகிற பாற்கடல் நீரின் தூய்மைமிக்க நடுபாகத்தில் ஒளிர்வதும், (சரணங்களின் அடிப்புறத்தில்) ரேகைகளாக தாமரையையும் சக்கிரத்தையும் சங்கையையும் தாங்கிக் கொண்டிருப்பதும் மேல் மீன்வடிவினைக் கொண்டதும் ஒளியழகுகொண்டதுமான உன் திருவடித் தாமரை என்ற பெயருள்ளதொன்று வானிலும் நீரிலும் நடுவிலும் இடம் பெற்ற லக்ஷ்மியைத் தாங்கி நிற்கிற விஷ்ணுவாகப் பெருமையுடன் விளங்குகிறது.*

*திருவடியே விஷ்ணு. மார்பில் லக்ஷ்மி, பாற்கடலில் வாசம், தாமரையும் சக்கிரமும் சங்கும் ஏந்திய நிலை. இந்த மூன்றுடன் மீன்வடிவம் கொண்ட விஷ்ணு என்று உணர்த்துகிற அறிகுறிகள். லக்ஷ்மி சிறப்பின் வடிவம். நகத்தின் வெண்மை பாற்கடல். அடிப்புறத்தில் தாமரை - சங்கு - சக்கிரரேகைகள். மீன்ரேகையோ மீன்வடிவமோ பொருந்தும். அதனால் திருவடியே விஷ்ணு தானே ! ப்ரபூதஸ் த்ரிக்ககுப் த்தாம என்று விஷ்ணுவின் பொருளுள்ள பெயர். பாற்கடல், லக்ஷ்மி, சங்கு சக்ரம் தாமரை ஏந்திய நிலை என்ற மூன்று பெருமையுள்ள மத்ஸ்யராகத் தோன்றிய விஷ்ணு த்ரிதாமா. (34)*

वषट्कुर्वन् माञ्जीरजकलकलैः कर्मलहरी-
हवींषि प्रोद्दण्डं ज्वलति परमज्ञानदहने।
महीयान् कामाक्षि स्फुटमहसि जोहोति सुधियां
मनोवेद्यां मातस्तव चरणयज्वा गिरिसुते॥ ३५॥

வஷட்குர்வந் மாஞ்ஜீரஜகலகலை: கர்மலஹரீ-
ஹவீம்ஷி ப்ரோத்தண்டம் ஜ்வலதி பரமஜ்ஞானதஹநே ।
மஹீயாந் காமாக்ஷி ! ஸ்ப்புடமஹஸி ஜோஹோதி ஸுதியாம்
மநோவேத்யாம் மாதஸ்தவ சரணயஜ்வா கிரிஸுதே ! 35

*மலைமகளே ! தாயே ! காமாக்ஷி ! மிகப்பெருமைபெற்ற உன் திருவடியாகிற வேள்வி புரிகிற தீக்ஷிதர், நல்லறிவு படைத்தவரின் உள்ளமாகிய ஓமக்குண்டத்தில், கொழுந்து விட்டெரிவதும் ஒளிமிக்கதுமான பேரறிவாகிய வேள்வித் தீயில், அலை அலையாக மோதுகிற கருமங்களாகிற ஆகுதிப்பொருட்களை உனது சிலம்புகளின் கலகல ஒலியாகிற 'வஷட்' உச்சரிப்புடன் ஹோமம் செய்கிறார்.*

*அந்தந்த தேவதையை அழைத்து இது உமக்கே அர்பணம், ஏற்பீர் எனத் தான் தருவதை உரத்து விண்ணப்பிக்க 'வஷட்' 'ஸ்வாஹா' முதலிய சொற்களைக் கூறுவர். (35)*

महामन्त्रं किञ्चिन्मणिकटकनादैरिव[1]जपन्-
क्षिपन्दिक्षु स्वच्छं नखरुचिमयं भास्मनरजः ।
नतानां कामाक्षि प्रकृतिपटुरुच्चाट्य ममता -
पिशाचीं पादोऽयं प्रकटयति ते मान्त्रिकदशाम् ॥ ३६ ॥

மஹாமந்த்ரம் கிஞ்சித் மணிகடகநாதை: இவ[2] ஜபந்
க்ஷிபந் திக்ஷு ஸ்வச்சம் நகருசி மயம் பாஸ்மநரஜ: ।
நதாநாம் காமாக்ஷி ! ப்ரக்ருதிபடு: உச்சாட்ய மமதா-
பிஶாசீம் பாதோऽயம் ப்ரகடயதி தே மாந்த்ரிக தஶாம் ॥ 36

*காமாக்ஷி ! இந்த உன் திருவடி, தன்னை வணங்குபவரிடமுள்ள மமதை எனும் பிசாசியை, ரத்தினச் சிலம்புகளின் மூலம் ஒரு பெருமந்திரத்தை ஜபித்தும் நாற்புறமும் நகஒளியாகிற விபூதியை ஊதியெறிந்தும் விரட்டி இயல்பாகவே கைதேர்ந்த மந்திரவாதி நிலையை வெளிப்படுத்துகிறது. (36)*

---

1. नादैर्मृदु 2. நாதைர் ம்ருது

उदीते बोधेन्दौ तमसि नितरां जग्मुषि दशां
दरिद्रां कामाक्षि प्रकटमनुरागं विदधती।
सितेनाच्छाद्याङ्गं नखरुचिपटेनांघ्रियुगली-
पुरन्ध्री ते मातः स्वयमभिसरत्येव हृदयम्॥ ३७॥

உதீதே போதேந்தௌ தமஸி நிதராம் ஜக்முஷி தஶாம்
தரித்ராம் காமாக்ஷி ப்ரகடம் அநுராகம் விதததீ।
ஸிதேந ஆச்சாத்ய அங்கம் நகருசிபடேந அங்க்ரியுகளீ-
புரந்த்ரீ தே மாத: ! ஸ்வயம் அபிஸரத்யேவ ஹ்ருதயம் ॥37

*தாயே ! காமாக்ஷி ! ஜ்ஞானமென்ற சந்திரன் உதித்ததும், இருட்டு முழுவதும் எளிமையுற்று மறைகிற நிலைக்கு வந்ததும், தன் காதலை வெளிப்படுத்தியவளாக, வெளுத்த நகஒளியாகிற மேலாடையால் உடலை மறைத்துக்கொண்டு உன் இருதிருவடிகளாகிற பெண் என் இதயத்தைத் தானுகவே தேடி வரட்டும்.*

*தானே காதலனை வலியச் சென்றடைகிற அபிஸாரிகை போல் தேவியின் திருவடி தன் இதயத்தினுள் பதியட்டும். தன் இதயம் தேவியின் திருவடியை நாடிச் செல்லவேண்டியிருக்க, அவ்வாறு செல்லமறுக்கிற இதயத்திடம் திருவடி செல்லுமாறு கோருகிறார். (37)*

दिनारम्भः संपन्नलिन विपिनानां अभिनवो
विकासो वासन्तः सुकवि पिकलोकस्य नियतः।
प्रदोषः कामाक्षि प्रकटपरमज्ञान शशिनः
चकास्ति त्वत्पादस्मरणमहिमा शैलतनये॥ ३८॥

திநாரம்பப: ஸம்பந்நளிந விபிநாநாம் அபிநவோ
விகாஸோ வாஸந்த: ஸுகவி பிகலோகஸ்ய நியத:।
ப்ரதோஷ: காமாக்ஷி ! ப்ரகடபரமஜ்ஞான ஶஶிந:
சகாஸ்தி த்வத்பாதஸ்மரணமஹிமா ஶைலதநயே ! ॥ 38

*மலைமகளே ! காமாக்ஷி ! உன் திருவடிகளை நினைப்பதன் பெருமை, செல்வச் செழிப்பாகிற தாமரைக்காடுகளுக்கு புது விடிவேளையாகும். நற்கவிகளாகிற குயில் கூட்டத்திற்கு எப்போதும் நிலைத்திருக்கக் கூடிய வஸந்தருதுவின் மலர்ச்சியாகும். தெளிந்த பேரறிவாகிய சந்திரன் வெளிப்படுகிற முன்னிரவாகும்.*

*உன் திருவடிகளைத் தியானிப்பதால் செல்வம் செழிக்கும். வாக்கு அழகுபெறும். அறிவு துலங்கும். (38)*

धृतच्छायं नित्यं सरसिरुहमैत्रीपरिचितं
निधानं दीप्तीनां निखिलजगतां बोधजनकम् ।
मुमुक्षूणां मार्गप्रथनपटु कामाक्षि पदवीं
पदं ते पातङ्गीं परिकलयते पर्वतसुते ॥ ३९ ॥

த்ருதச்சாயம் நித்யம் ஸரஸிருஹமைத்ரீபரிசிதம்
நிதாநம் தீப்தீநாம் நிகிலஜகதாம் போதஜநகம் ।
முமுக்ஷூணாம் மார்கப்ரதநபடு காமாக்ஷி ! பதவீம்
பதம் தே பாதங்கீம் பரிகலயதே பர்வதஸுதே ! ॥ 39

*மலைமகளே ! காமாக்ஷி ! உன் திருவடி எப்போதும் தன்னிடம் ஸூரியனின் நிலையை விளக்குகிறது. எப்போதும் ஒளியேற்றது. தாமரையுடன் நட்புடன் பழகுகிறது. எல்லா ஒளிக்கும் மூல காரணமாகிறது. உலகமனைத்திற்கும் விழிப்பை - அறிவைத்தருகிறது. முக்தியை நாடுபவருக்கு வழிகாட்டுவதில் மிகவும் திறமை பெற்றது. (39)*

शनैस्तीर्त्वा मोहाम्बुधिमथ समारोढुमनसः
क्रमात्कैवल्याख्यां सुकृतिसुलभां सौधवलभीम् ।
लभन्ते निश्रेणीमिव झटिति कामाक्षि चरणम्
पुरश्चर्याभिस्ते पुरमथनसीमन्तिनि जनाः ॥ ४० ॥

ஶனைஸ்தீர்த்வா மோஹாம்புதிம் அத ஸமாரோடுமநஸ:
க்ரமாத் கைவல்யாக்க்யாம் ஸுக்ருதிஸுலபாம் ஸௌதவலபீம் ।
லபந்தே நிச்ரேணீம் இவ ஜடிதி காமாக்ஷி ! சரணம்
புரச்சர்யாபி: தே புரமதநஸீமந்திநி ! ஜநா: ॥ 40

*திரிபுரத்தை அழித்தவனின் தர்மபத்தினியே ! காமாக்ஷி ! மெள்ள மெள்ள மோகமெனும் கடலைத் தாண்டி, மேலும் புண்ணியம் செய்தவர்களால் மட்டும் எளிதில் பெறத்தக்க முக்தி என்ற மேன் மாடத்தை முறையுடன் ஏறவிரும்புகிற மாந்தர், படியமைப்பு போன்ற உன் திருவடியை பலதரப்பட்ட வழிபாட்டு முறைகளால் எளிதில் அடைகிறார்கள்.*

*ஜபம் ஹோமம் மார்ஜனம் தர்பணம் என்ற நீண்டமுறைகளால் மந்திர சித்திபெற்றவர் தேவியின் திருவடியைப்பற்றுக் கோலாகக்கொண்டு முக்திவழியில் தடையுறாமல் தளராமல் செல்கின்றனர். (40)*

प्रचण्डार्तिक्षोभप्रमथनकृते प्रातिभसरित्-
प्रवाहप्रोद्दण्डीकरण जलदाय प्रणमताम् ।
प्रदीपाय प्रौढे भवतमसि कामाक्षि चरण-
प्रसादौन्मुख्याय स्पृहयति जनोऽयं जननि ते ॥ ४१ ॥

ப்ரசண்டார்தி க்ஷோபப்ரமதநக்ருதே ப்ராதிபஸரித்-
ப்ரவாஹப்ரோத்தண்டீகரணஜலதாய ப்ரணமதாம் ।
ப்ரதீபாய ப்ரௌடே பவதமஸி காமாக்ஷி சரண-
ப்ரஸாதௌந்முக்க்யாய ஸ்ப்ருஹயதி ஜநோऽயம் ஜநநி தே ॥ 41

*தாயே ! காமாக்ஷி ! வணங்குபவரின் கொடுந்துயரக்குமுறலைத் தணித்து அடக்குவதும், அறிவாற்றலென்ற ஆற்றின் பெருக்கை வெள்ளமாக மாற்றுகிற மேகமானதும், வலிவுமிக்க ஸம்ஸார இருளில் தீபமுமான உன் திருவடிகளின் அருளை (தன் மீது) திருப்புவதை இவன் விரும்புகிறான். (41)*

मरुद्भिः संसेव्या सततमपि चाञ्चल्यरहिता
सदाऽऽरुण्यं यान्ती परिणतिदरिद्राणसुषमा ।
गुणोत्कर्षान्मञ्जीरजकलकलैस्तर्जनपटुः
प्रवालं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥ ४२ ॥

மருத்ப்பி: ஸம்ஸேவ்யா ஸததம்அபி சாஞ்சல்ய ரஹிதா
ஸதாருண்யம் யாந்தீ பரிணதிதரித்ராணஸுஷமா ।
குணோத்கர்ஷாத் மஞ்ஜீரஜகலகலை: தர்ஜநபடு:
ப்ரவாளம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜயுகளீ ॥ 42

*காமாக்ஷியின் இருதிருவடிகள் மருத்துகளால் எப்போதும் பணிவிடைபுரியப்பட்டவை. சஞ்சலமற்றவை, எப்போதும் செம்மை யடைபவை, மாறுதலற்ற அழகுள்ளவை. தன் சிறப்பால் சிலம்பிலிருந்து . கிளம்பிய கலகல ஒலியால் மிரட்டுவதில் தேர்ந்தவை. அவை செந்துளிர்களை ஏளனம் செய்கின்றன.*

*மருத்து - காற்று, தேவதைகள். திருவடிகள் தேவதைகளால் வணங்கப் பெற்றவை. துளிர் காற்றால் ஆடும், அசையும், துளிர்களின் செம்மையும் அழகும் நிலையற்றவை. துளிர் காற்றால் கூட மிரட்டப்படும். இதற்கு நேர்மாறுபட்ட திருவடி தன் சிறப்பால் துளிரை ஏளனம் செய்கிறது. (42)*

जगद्रक्षादक्षा नलिनरुचिशिक्षापटुतरा
सुरैर्नम्या[1] रम्या सततमभिगम्या बुधजनैः ।
द्वयी लीलालोला श्रुतिषु सुरपालादिमुकुटी-
तटीसीमाधामा तव जयति[2] कामाक्षि पदयोः ॥ ४३ ॥

ஜகத்ரக்ஷாதக்ஷா நளிநருசிஶிக்ஷாபடுதரா
ஸுரை:[3] நம்யா ரம்யா ஸததம் அபிகம்யா புதஜநை: ।
த்வயீ லீலா லோலா ஶ்ருதிஷு ஸு ரபாலாதிமுகுடீ-
தடீஸீமாதாமா தவ ஜயதி [4] காமாக்ஷி ! பதயோ: ॥ 43

1. समैर्नम्या 2. ஸமை: 3. जननि 4. ஜநநி

*(தாயே) ! காமாக்ஷி ! உன் திருவடிகளின் இரட்டை, உலகைக் காப்பதில் ஆற்றல் மிக்கது. தாமரைக்கு ஒளிபெறும் முறையைக் கற்பிப்பதில் மிகவும் தேர்ந்தது. தேவர்களால் (எல்லோராலும்) வணங்கத்தக்கது. அழகியது, அறிவாளிகளால் எப்போதும் வரவேற்கத் தக்கது, வேதங்களில் லீலையாக உலாவுவது, இந்திரன் முதலானோருடைய கிரீட விளிம்பில் அது அழகாக விளங்குகிறது. (43)*

गिरां दूरौ चोरौ जडिमतिमिराणां कृतजगत्-
परित्राणौ शोणौ मुनिहृदयलीलैकनिपुणौ ।
नखैः स्मेरौ सारौ निगमवचसां खण्डितभव-
ग्रहोन्मादौ पादौ मम मनसि कामाक्षि कलये ।। ४४ ।।

கிராம் தூரௌ சோரௌ ஜடிமதிமிராணாம் க்ருதஜகத்-
பரித்ராணௌ ஶோணௌ முநிஹ்ருதயலீலைக நிபுணௌ ।
நகை: ஸ்மேரௌ ஸாரௌ நிகமவசஸாம் கண்டிதபவ-
க்ரஹோந்மாதௌ பாதௌ மம மநஸி காமாக்ஷி ! கலயே ॥ 44

*காமாக்ஷி ! உன் திருவடிகள், சொற்களுக்கு எட்டாதவை, அறியாமையிருளைப் பறிப்பவை, சிவந்தவை, உலகைக் காத்துவருபவை, முனிவரின் உள்ளத்தில் விளையாடுவதில் தேர்ந்தவை, நகங்களால் சிரிப்பவை, வேதவசனங்களின் உட்கருத்தானவை, ஸம்ஸாரமெனும் கிரகபீடைமயக்கத்தைத் துண்டிப்பவை, அவற்றை என் உள்ளத்தினுள் பல கோலங்களில் தியானிக்கிறேன். (44)*

अविश्रान्तं पङ्कं यदपि कलयन् यावकमयं
निरस्यन्कामाक्षि प्रणमनजुषां पङ्कमखिलम् ।
तुलाकोटिद्वन्द्वं दधदपि च गच्छन्नतुलतां
गिरां मार्गं पादो गिरिवरसुते लङ्घयति ते ।। ४५ ।।

அவிச்ராந்தம் பங்கம் யதபி கலயந் யாவகமயம்
நிரஸ்யந் காமாக்ஷி ப்ரணமனஜுஷாம் பங்கமகிலம் ।
துலாகோடி த்வந்த்வம் தததபி ச கச்சந்நதுலதாம்
கிராம் மார்கம் பாதோ கிரிவரஸுதே லங்க்கயதி தே ॥ 45

*மலையரசனின் மகளே ! காமாக்ஷி ! உன் திருவடி ஓய்வின்றி செம்பஞ்சுக்குழம்பாகிய சேற்றை அணிந்த போதிலும் வணங்குபவரின் எல்லா பாபமாகிய சேற்றையும் அகற்றுகிறது. துலாகோடி எனும் இரு பாதஅணிகள் பூண்டிருந்தும், துலனத்திற்கு (ஒப்பிடுவதற்கு) இயலாத நிலை கொண்டது. அது (என்) சொற்களின் எல்லையைக் கடக்கிறது*

*பங்கம் - பாபம், சேறு. துலாகோடி - கால்களின் ஆபரணம். ஒப்பிட இரு நிலைகளான தராசுத்தட்டுகள. துலா ஒப்பிடுதல், எடை பார்த்தல். (45)*

प्रवालं सव्रीडं विपिनविवरे वेपयति या
स्फुरल्लीलं बालातपमधिकबालं दधति[1] या ।
रुचिं सांध्यां वन्ध्यां विरचयति या वर्धयतु सा
शिवं मे कामाक्ष्याः पदनलिनपाटल्यलहरी ॥ ४६ ॥

ப்ரவாளம் ஸவ்ரீடம் விபிநவிவரே வேபயதி யா
ஸ்புரல்லீலம் பாலாதபமதிகபாலம் தததி[2] யா ।
ருசிம் ஸாந்த்த்யாம் வந்த்த்யாம் விரசயதி யா வர்த்தயது ஸா
ஶிவம் மே காமாக்ஷ்யா: பதநளிநபாடல்யலஹரீ ॥ 46

*தாமரை போன்ற பாதங்களின் செந்நிற அலை பசுந்துளிரை வெட்கத்துடன் காட்டு மூலையில் நடுங்கும்படி செய்கிறது. விளையாட்டாகத் துடிப்புடன் வந்த இளம் சூரியனைப் பேதைச் சிசு நிலை பெறச் செய்கிறது. காலை மாலை நேரத்துச் செவ்வொளியைப் பயனற்ற தாக்குகிறது. அது எனக்கு மங்களம் பெருகச் செய்யட்டும்! (46)*

---

1. वदति 2. வததி

किरञ् ज्योत्स्नारीतिं नखमणि[1] रुचा हंसमनसां
वितन्वानः प्रीतिं विकचद[2]रुणाम्भोरुहरुचिः ।
प्रकाशः श्रीपादस्तव जननि कामाक्षि तनुते
शरत्कालप्रौढिं शशिशकलचूडप्रियतमे ॥ ४७ ॥

கிரஞ் ஜ்யோத்ஸ்நாரீதிம் நகமணி[3]ருசா ஹம்ஸமநஸாம்
விதந்வாந: ப்ரீதிம் விகசத் அ[4]ருணாம்போருஹருசி: ।
ப்ரகாஶ: ஶ்ரீபாதஸ்தவ ஜநநி காமாக்ஷி தநுதே
ஶரத்காலப்ரௌடிம் ஶஶிஶகலசூடப்ரியதமே ॥ 47

*பிறைசூடியின் இனியாளே! காமாக்ஷி! நகமாகிற ரத்தினத்தின் ஒளியால், நிலவாகப் பரவுவதும், ஹம்ஸர்களின் மனத்தில் மகிழ்ச்சியைப் பெருக்குவதும், மலர்ந்து சிவந்த (இளமைமிக்க) தாமரைப்பூவின் அழகுள்ளதும், பேரொளியுமான உன் திருவடி, சரத்காலத்தின் தெளிவான வானிலே அழகை வெளிப்படுத்துகிறது. (47)*

नखाङ्कूरस्मेरद्युतिविमल गङ्गाम्भसि सुखं
कृतस्नानं ज्ञानामृतं अमलं आस्वाद्य नियतम् ।
उदञ्चन्माञ्जीरस्फुरणमणिदीपे मम मनो
मनोज्ञे कामाक्ष्याश्चरणमणिहर्म्ये विहरताम् ॥ ४८ ॥

நகாங்கூரஸ்மேரத்யுதி விமல கங்காம்ப்பஸி ஸுகம்
க்ருதஸ்நாநம் ஜ்ஞாநாம்ருதம் அமலம் ஆஸ்வாத்ய நியதம் ।
உதஞ்சந்மாஞ்ஜீரஸ்ப்புரணமணிதீபே மம மநோ
மநோஜ்ஞே காமாக்ஷ்யா: சரணமணிஹர்ம்யே விஹரதாம் ॥ 48

*என் உள்ளம், (திருவடி) நகங்களின் வெளுத்த அழகான ஒளி வெள்ளமெனும் தூய கங்கை நீரில் சுகமாக நீராடிவிட்டு, தூய ஞான அமுதத்தை முறையுடன் பருகிவிட்டு, பளிச்செனச் சிலம்பெனும்*

---

1. मुख 2. तरुणा 3. முக 4. தருணா

*ரத்தின விளக்குள்ள, மனத்திற்கினிய, காமாக்ஷியின் சரணங்களாகிய ரத்தின மாளிகையில், எப்போதும் விளையாடட்டும். (48)*

भवाम्भोधौ नौकां जडिमविपिने पावकशिखां
प्रणम्रेन्द्रादी[1]नामधिमुकुटं उत्तंसकलिकाम् ।
जगत्तापज्योत्स्नामकृतकवचः पञ्जरपुटे
शुकस्त्रीं कामाक्ष्याः मनसि कलये पादयुगलीम् ॥ ४९ ॥

பவாம்ப்போதௌ நௌகாம் ஜடிமவிபிநே பாவகஶிகாம்
ப்ரணம்ரேந்த்ரா[2]தீநாம் அதிமுகுடம் உத்தம்ஸகலிகாம் ।
ஜகத்தாபஜ்யோத்ஸ்நாம் அக்ருதக வச: பஞ்ஜரபுடே
ஶுகஸ்த்ரீம் காமாக்ஷ்யா மநஸி கலயே பாதயுகளீம் ॥ 49

*ஸம்ஸாரக்கடலில் கப்பலாகவும் அறியாமைக் காட்டில் காட்டுத்தீயாகவும், வணங்கிநிற்கிற தேவேந்திரன் முதலானவரின் கிரீடங்களின் மீது பூவணியாகவும், உலகின் தாபத்திற்கு நிலாவாகவும் செயற்கையல்லாத வேதவாக்காகிற கூட்டில் பெண்கிளியாகவும் இருக்கிற காமாக்ஷியின் இரு சரணங்களை மனத்தில் தியானிக்கிறேன் (49)*

परात्मप्राकाश्यप्रतिफलनचुञ्चुः प्रणमतां
मनोज्ञस्त्वत्पादो मणिमुकुरमुद्रां कलयते ।
यदीयां कामाक्षि प्रकृतिमसृणाः शोधकदशां
विधातुं चेष्टन्ते वलरिपुवधूटीकचभराः ॥ ५० ॥

பராத்மப்ராகாஶ்யப்ரதிபலநசுஞ்சு: ப்ரணமதாம்
மநோஜ்ஞஸ் த்வத்பாதோ மணிமுகுர முத்ராம் கலயதே ।
யதீயாம் காமாக்ஷி ! ப்ரக்ருதிமஸ்ருணா: ஶோதகதஶாம்
விதாதும் சேஷ்டந்தே வலரிபுவதூடீகசபரா: ॥ 50

---

1. अमर्त्येन्द्रादी 2. *அமர்த்யேந்த்ரா*

*காமாக்ஷி ! வலாஸுரனின் எதிரியான இந்திரனது மனைவியின் அடர்ந்த கூந்தல்கள் உன் திருவடியின் தூசு துடைப்பாளராக ஆக விரும்புகின்றன. அத்தகைய அழகால் உள்ளங்கவர்கிற உன் திருவடி தன்னை வணங்குபவருக்கு பரம்பொருளை விளக்கவும் பிரதிபலிக்கவும் திறம் மிக்கதான ரத்தினக் கண்ணாடி நிலையை அழகாக வெளிப்படுத்துகிறது.*

*அடியாரின் அறியாமை நீக்கிப் பரம்பொருளைத் தெள்ளெனப்பிரதிபலிக்கிற நிழல்காண்பிக்கிற கண்ணாடி அது. (50)*

**अविश्रान्तं तिष्ठन्नकृतक वचःकंदरपुटी-**
**कुटीरान्तः प्रौढां[1] नखरुचिसटालीं प्रकटयन् ।**
**प्रचण्डं खण्डत्वं नयतु मम कामाक्षि तरसा**
**तमोवेतण्डेन्द्रं तव चरणकण्ठीरवपतिः ॥ ५१ ॥**

**அவிஶ்ராந்தம் திஷ்ட்டந் அக்ருதகவச: கந்தரபுடீ-**
**குடீராந்த: ப்ரௌடாம்[2]நககருசிஸடாலீம் ப்ரகடயந் ।**
**ப்ரசண்டம் க்கண்டத்வம் நயது மம காமாக்ஷி ! தரஸா**
**தமோவேதண்டேந்த்ரம் தவ சரணகண்ட்டீரவபதி: ॥ 51**

*காமாக்ஷி ! செயற்கையல்லாத வேதவாக்காகிற குகைக்குடிலினுள் ஓய்வின்றி இருப்பதும், நகஒளி என்ற பிடரிமயிரை அழகும் கம்பீரமும் காட்டிச்சிலிர்த்துக் கொள்வதுமான உன் திருவடியாகிற சிங்கம், பயம் தருகிற என் அறியாமையாகிற பெரும் யானையைப் பிளந்து உடன் மாய்க்கட்டும். (51)*

**पुरस्तात्कामाक्षि प्रचुररसमाखण्डलपुरी-**
**पुरंध्रीणां लास्यं तव ललितमालोक्य शनकैः ।**
**नखश्रीभिः स्मेरा बहु वितनुते नूपुररवैः**
**चमत्कृत्या शङ्के चरणयुगली चाटुरचनाः ॥ ५२ ॥**

---

1. प्रौढं 2. ப்ரௌடம்

புரஸ்தாத் காமாக்ஷி! ப்ரசுர ரஸம் ஆகண்டலபுரீ-
புரந்த்ரீணும் லாஸ்யம் தவ லலிதம் ஆலோக்ய ஶநகை: ।
நக ஶ்ரீபி: ஸ்மேரா பஹு விதநுதே நூபுர ரவை:
சமத் க்ருத்யா ஶங்கே சரணயுகளீ சாடு ரசநா: ॥ 52

*காமாக்ஷி ! உன் திருவடியாகிற பெண், தன் முன் நடைபெறுகிற தேவமாதரின் இனிய அழகிய நடனத்தைக்கண்டு, நகஒளியால் முகமலர்ச்சியை (சிரிப்பை) மெல்ல வெளிப்படுத்துபவளாக, தண்டை ஒலியால் பாராட்டைச் சமத்காரத்துடன் தெரியப்படுத்துகிறுள் எனக் கருதுகிறேன். (52)*

सरोजं निन्दन्ती नखकिरणकर्पूरशिशिरा
निषिक्ता मारारेर्मुकुटशशिरेखाहिमजलैः ।
स्फुरन्ती कामाक्षि स्फुटरुचिमये पल्लवचये
तवाधत्ते मैत्रीं पथिकसुदृशा पादयुगली ॥ ५३ ॥

ஸரோஜம் நிந்தந்தீ நக கிரண கர்பூர ஶிஶிரா
நிஷிக்தா மாராரே: முகுட ஶஶி ரேகா ஹிம ஜலை: ।
ஸ்ப்புரந்தீ காமாக்ஷி ஸ்ப்புட ருசி மயே பல்லவ சயே
தவாதத்தே மைத்ரீம் பதிக ஸுத்ருஶா பாத-யுகளீ ॥ 53

*காமாக்ஷி ! தாமரை மீது பழி கூறுகிற உன் திருவடி எனும் பெண், தன் நகஒளியாகிய கர்பூரத்தால் குளிர்ந்தவளாக, மன்மத சத்துருவின் கிரீடத்து சந்திரகலையிலிருந்து பெருகுகிற பனி நீரால் நனைந்தவளாக, (தன்னிடமிருந்து) வெளிப்படுகிற ஒளியாகிய பூந்துளிர்க்குவியல் மீது புரள்பவளாக, வழிப்போக்கனின் மனைவியுடன் நட்பு கொள்கிறுள்.*

*கணவன் நாடோடியாக வெளியே சென்ற போது மனைவி வீட்டில் பிரிவாற்றுமையால் தவித்தவளாக தாமரையின் மென்மையும் குளிர்ச்சியும் போதாதெனை அதனை வெறுப்பாள். கர்பூரம் கலந்த சந்தனப் பூச்சை ஏற்பாள். இரவு வானத்தடியில் நிலவில் பூந்துளிர் படுக்கையில் படுப்பாள். திருவடியும் இவளது தோழிபோன்றநிலை பெற்றுள்ளது. (53)*

नतानां संपत्तेरनवरतमाकर्षणजपः
प्ररोहत्संसारप्रसरगरिमस्तम्भनजपः ।
त्वदीयः कामाक्षि स्मरहरमनोमोहनजपः
पटीयान्नः पायात् पदनलिनमञ्जीरनिनदः ॥ ५४ ॥

நதாநாம் ஸம்பத்தே: அநவரதம் ஆகர்ஷண ஜப:
ப்ரரோஹத் ஸம்ஸார ப்ரஸர கரிம ஸ்தம்ப்பந ஜப: ।
த்வதீய: காமாக்ஷி! ஸ்மர ஹர மநோ மோஹந ஜப:
படீயாந் ந: பாயாத் பத நளிந மஞ்ஜீர நிநத: ॥ 54

*காமாக்ஷி! உனது தாமரை போன்ற சரணங்களின் சிலம்பொலி, வணங்குபவருக்குச் செல்வச் செழிப்பை எப்போதுமிருக்கும்படி ஆகர்ஷணம் செய்வதற்கான ஜபமாகவும், கிளைவிட்டுப்படர்கிற ஸம்ஸாரத்துயர் வளர்ச்சியைத் தடைசெய்வதற்கான ஸ்தம்பன ஜபமாகவும், மன்மதனை எரித்தவரின் மனத்தை மயக்குவதற்கான ஸம்மோஹன ஜபமாகவும் ஆகும் திறமை கொண்டது. அது எம்மைக்காப்பாற்றட்டும்.*

*அந்தந்த பயனைப் பெறத் தனித்தனி மந்திரஜபம் உதவும். திருவடியை வழிபட அந்த மந்திர ஜபமின்றியே பலன் பெறலாம். (54)*

वितन्वीथा नाथे मम शिरसि कामाक्षि कृपया
पदाम्भोजन्यासं पशुपरिबृढप्राणदयिते ।
पिबन्तो यन्मुद्रां प्रकटमुपकम्पापरिसरं
दृशा नानद्यन्ते नलिनभवनारायणमुखाः ॥ ५५ ॥

விதந்வீதா நாதே மம ஶிரஸி காமாக்ஷி ! க்ருபயா
பதாம்ப்போஜ ந்யாஸம் பஶுபரிப்ருட ப்ராணதயிதே ।
பிபந்தோ யந் முத்ராம் ப்ரகடம் உபகம்பாபரிஸரம்
த்ருஶா நாநத்யந்தே நளிந பவ நாராயண முகா: ॥ 55

*பசுபதியின் உயிரான மனைவியே! நாடத்தக்கவளே! காமாக்ஷி! கம்பைக் கரையருகே வெளிப்படையாகத் தெரிகிற உன் திருவடிப்பதிவுகளை பிரும்மா நாராயணன் முதலானோர், கண்ணாரக் கண்டு களிக்கின்றனர். அந்தத் திருவடிப்பதிவைக்கிருபையுடன் என் மீது வைப்பாயாக. (55)*

प्रणामोद्यद्बृन्दारकमुकुटमन्दारकलिका -
विलोलल्लोलम्बप्रकरमयधूमप्रचुरिमा ।
प्रदीप्तः पादाब्जद्युतिविततिपाटल्यलहरी-
कृशानुः कामाक्ष्या मम दहतु संसारविपिनम् ॥ ५६ ॥

ப்ரணமோத்யத் ப்ருந்தாரக முகுட மந்தார கலிகா-
விலோலல் லோலம்ப ப்ரகர மய தூம ப்ரசுரிமா ।
ப்ரதீப்த: பாதாப்ஜ த்யுதி விததி பாடல்ய லஹரீ-
க்ருஶாநு: காமாக்ஷ்யா மம தஹது ஸம்ஸார விபிநம் ॥ 56

*வணங்க முன் வந்த தேவர்களின் கிரீடத்தில், சூடியுள்ள மந்தாரமலர்களில் மொய்க்கின்ற தேனீக்களின் கூட்டமாகிற அடர்ந்த புகை கொண்டதும், கொழுந்து விட்டெரிவதுமான காமாக்ஷியின் தாமரைபோன்ற திருவடி ஒளிவரிசையின் செந்நிற அலையான அக்கினி, எனது பிறப்பிறப்புத் தொடரை எரிக்கட்டும். (56)*

वलक्षश्रीर्ऋक्षाधिपशिशुसदृक्षैः[1] तव नखैः
जिघृक्षुर्दक्षत्वं सरसिरुहभिक्षुत्वकरणे ।
क्षणान्मे कामाक्षि क्षपितभवसंक्षोभगरिमा
वचोवैचक्षण्यं चरणयुगली पक्ष्मलयतात् ॥ ५७ ॥

வலக்ஷஶ்ரீர் ருக்ஷாதிப ஶிஶு ஸத்ருக்ஷை:[2] தவ நகை:
ஜிக்ருக்ஷுஸ் தக்ஷத்வம் ஸரஸிருஹ பிக்ஷுத்வ கரணே ।
க்ஷணாந் மே காமாக்ஷி! க்ஷபித பவ ஸங்க்ஷோப கரிமா
வசோ வைசக்ஷண்யம் சரண யுகளீ பக்ஷ்மலயதாத் ॥ 57

1. सदृक्षा 2. ஸத்ருக்ஷா

*காமாக்ஷி ! நக்ஷத்திரங்களின் தலைவனான குழந்தைச் சந்திரனைப் போன்ற நகங்களால், தாமரையை ஆண்டியாக ஆக்குவதில் திறமையை வலிவில் எடுத்துக் கொள்வதும், நொடிப்பொழுதில் பிறப்பிறப்புத் தொடரின் சுமையைக் குறைப்பதுமாகிய திருவடி இரட்டை, எனக்குப் பேச்சுத் திறமையை விரிவுபடுத்தட்டும். (57)*

समन्तात्कामाक्षि क्षततिमिरसंतानसुभगान्
अनन्ताभिर्भाभिर्दिनमनु दिगन्तान्विरचयन् ।
अहंताया हन्ता मम जडिमदन्तावलरिपुः
विभिन्तां संतापं तव चरणचिन्तामणिरसौ ॥ ५८ ॥

ஸமந்தாத் காமாக்ஷி! க்ஷத திமிர ஸந்தாந ஸுபகான்
அநந்தாபி: பாபி: தினமநு திகந்தாந் விரசயன் ।
அஹந்தாயா ஹந்தா மம ஜடிம தந்தாவல ரிபு:
விபிந்தாம் ஸந்தாபம் தவ சரண சிந்தாமணி:அஸௌ ॥ 58

*காமாக்ஷி ! எல்லையற்ற ஒளிக்கதிர்களால், சுற்றிலுமுள்ள கடும் இருள் அகற்றித்தினமும் திக்கின் எல்லைகளை அழகுமிக்கவைகளாகச் செய்கிற உன் திருவடி எனும் சிந்தாமணி, அகந்தையை அழித்து, ஜடத்தன்மையாகிறயானையைச் சிங்கமாகி மாய்த்து, என் உள்ளத்துத் தாபத்தை நீக்கட்டும். (58)*

दधानो भास्वत्ताममृतनिलयो लोहितवपुः
विनम्राणां सौम्यो गुरुरपि कवित्वं च कलयन् ।
गतौ मन्दो गङ्गाधरमहिषि कामाक्षि भजतां
तमःकेतुर्मातस्तव चरणपद्मो विजयते ॥ ५९ ॥

ததாநோ பாஸ்வத்தாம் அம்ருத நிலயோ லோஹித வபு:
விநம்ராணும் ஸௌம்யோ குரு: அபி கவித்வம் ச கலயந் ।
கதௌ மந்தோ கங்காதர மஹிஷி காமாக்ஷி! பஜதாம்
தம:கேது: மாத:! தவ சரண பத்மோ விஜயதே ॥ 59

*கங்கையைத் தாங்குபவரின் பட்டமஹிஷியே ! தாயே ! காமாக்ஷி ! உன் திருவடியாகிற தாமரை, ஒளி மிக்க சூர்யனாக, அமுதத்தின் இருப்பிடமான சந்திரனாக, செந்நிறமேனியனான செவ்வாயாக, வணங்குபவரிடம் மென்மை காட்டுகிற புதனாக, குருவான பிருஹஸ்பதியாக, கவிதை அருள்கிற சுக்கிரனாக, நடையில் மந்தனான சனியாக, இருட்டைக் கொடியாகக் கொண்ட (ராகுவும்) கேதுவுமாக, விளங்குகிறது.*

*ஒன்பது கிரகங்களும் தேவியின் திருவடியில் தன் தன் சிறப்புடன் அமைந்துள்ளனர். தம: கேது:- இருளைத்தூர விரட்டுகிற என்ற பொருளும் தகும். தமஸ் ராகு, கேது: கேது (59)*

नयन्तीं दासत्वं नलिनभवमुख्यान् असुलभ-
प्रदानाद् दीनानाममरतरुदौर्भाग्यजननीम् ।
जगज्जन्मक्षेमक्षयविधिषु कामाक्षि पदयोः
धुरीणामीष्टे कस्तव भणितुमाहोपुरुषिकाम् ॥ ६० ॥

நயந்தீம் தாஸத்வம் நளிநபவ முக்கியாந் அஸுலப-
ப்ரதாநாத் தீநாநாம் அமர தரு தௌர்ப்பாக்ய ஜநநீம் ।
ஜகஜ் ஜன்ம க்ஷேம க்ஷய விதிஷு காமாக்ஷி! பதயோ:
துரீணாம் ஈஷ்டே கஸ் தவ பணிதும் ஆஹோ புருஷிகாம் ॥

*காமாக்ஷி ! உன் திருவடிகளின் பேராண்மை, பிரும்மா முதலியவர்களைத் தன்னடியார்களாக்கிக் கொண்டது. எளிதில் கிட்டாதவற்றை எளியவர்களுக்கு அளித்துக்கற்பகமரங்களின் பெருமையைத் தாழச் செய்தது. உலகின் படைப்பிலும் காத்தலிலும் லயத்திலும் முன் நின்று செயலாற்றுவது. அதனை வர்ணிக்க வல்லவன் யார் ? (60)*

जनोऽयं संतप्तो जननि भवचण्डांशुकिरणैः
अलब्ध्वैकं शीतं कणमपि परज्ञानपयसः ।
तमोमार्गे पान्थस्तव झटिति कामाक्षि शिशिरां
पदाम्भोजच्छायां परमशिवजाये मृगयते ॥ ६१ ॥

ஜநோயம் ஸந்தப்தோ ஜநநி ! பவ சண்டாம்ஶு கிரணை:
அலப்த்வா ஏகம் ஶீதம் கணம் அபி பரஜ்ஞான பயஸ: ।
தமோ மார்க்கே பாந்தஸ் தவ ஜடிதி காமாக்ஷி ! ஶிஶிராம்
பதாம்போஜச் சாயாம் பரமஶிவ ஜாயே ! ம்ருகயதே ॥ 61

*அன்னையே ! பரம சிவனின் இல்லாளே ! காமாக்ஷி ! இருள் சூழ்ந்த பாதையில் பிறப்பிறப்புத் தொடரெனும் சூரியனின் உக்கிர கிரணங்களால வாடிய இந்த வழிப்போக்கனுன மானுடன், பேரறிவு நீரின் குளிர்ந்த ஒரு துளியைத் கூடப்பெருமல் தவித்தவனுக, குளிர்ந்த உன் திருவடித் தாமரைகளின் நிழலைத் தேடி அலைகிறுன். (61)*

जयत्यम्ब श्रीमन्नखकिरणचीनांशुकमयं
वितानं बिभ्राणे सुरमुकुटसंघट्टमसृणे ।
निजारुण्यक्षौमास्तरणवति कामाक्षि सुलभा
बुधैः संविन्नारी तव चरणमाणिक्यभवने ॥ ६२ ॥

ஜயதி அம்ப ! ஸ்ரீமந் நக கிரண சீநாம்ஶுக மயம்
விதாநம் பிப்ராணே ஸுர முகுட ஸங்கட்ட மஸ்ருணே
நிஜாருண்ய க்ஷௌமாஸ்தரணவதி காமாக்ஷி ! ஸுலபா
புதை:ஸம்விந் நாரீ தவ சரண மாணிக்ய பவநே ॥ 62 ॥

*தாயே ! காமாக்ஷி ! உன் திருவடிகளாகிற ரத்தினமாளிகை, மிக அழகிய நகஒளியாகிற சீனப்பட்டாலான மேல் கட்டியுள்ளது. தேவர்களின் கிரீடங்கள் உரசுவதால் வழவழப்புள்ளது. தன் செந்நிறமாகிய பட்டுவிரிப்புள்ளது. அதில் பேருணர்வு என்ற பெண் ஞானிகளால் எளிதில் பெறத்தக்கவளாக விளங்குகிறுள்.*

*ரத்தின மாளிகையில் அமருமிடத்திற்கு மேல் அஸ்மானகிரி என்ற மேல் விரிப்பும் அமருமிடத்தின் மீது பட்டு விரிப்பும் உள்ளது. (62)*

प्रतीमः कामाक्षि स्फुरिततरुणादित्यकिरण-
श्रियो मूलद्रव्यं तव चरणमद्रीन्द्रतनये ।

सुरेन्द्राशामापूरयति यदसौ ध्वान्तमखिलं
धुनीते दिग्भागानपि च महसा पाटलयते ॥ ६३ ॥

ப்ரதீம: காமாக்ஷி ! ஸ்ப்புரித தருணாதித்ய கிரண-
ஶ்ரியோ மூல த்ரவ்யம் தவ சரணம் அத்ரீந்த்ர தநயே !
ஸுரேந்த்ராஶாம் ஆபூரயதி யத் அஸௌ த்வாந்தம் அகிலம்
துநீதே திக் பாகாந் அபி ச மஹஸா பாடலயதே ॥ 63

*மலையரசனின் மகளே ! காமாக்ஷி ! உன் திருவடி ஒளிமிக்க முதிர்ந்த சூரிய கிரணங்களின் காந்திக்கு மூலப்பொருள் என நம்புகிறோம். இது இந்திரனது எதிர்பார்வையை (கிழக்கு திசையை) நிரப்புகிறது. அனைத்து இருளையும் அகற்றுகிறது. திசைப் பகுதிகளையும் ஒளியால் செந்நிறமடையச் செய்கிறது. (63)*

महाभाष्यव्याख्यापटुशयनमारोपयति वा
स्मरव्यापारेर्ष्यापिशुननिटिलं कारयति वा ।
द्विरेफाणामध्यासयति सततं वाऽधिवसतिं
प्रणम्रान्कामाक्ष्याः पदनलिनमाहात्म्यगरिमा ॥ ६४ ॥

மஹாபாஷ்ய வ்யாக்க்யாபடு ஶயநம் ஆரோபயதி வா
ஸ்மர வ்யாபாரேர்ஷ்யா பிஶுந நிடிலம் காரயதி வா ।
த்வி ரேபாணாம் அத்த்யாஸயதி ஸததம் வா அதிவஸதிம்
ப்ரணம்ராந் காமாக்ஷ்யா: பதநளிந மாஹாத்ம்ய கரிமா ॥ 64

*காமாக்ஷியின் தாமரையை ஒத்த திருவடியின் பெருமையும் உயர்வும், தன்னை வணங்கியவரை மகாபாஷ்ய உரை எழுதிய பதஞ்ஜலி (ஆதிசேஷன்)ப் படுக்கையில் அமரச்செய்யும். (விஷ்ணு நிலை பெறச் செய்யும்.) மன்மதனின் நடைமுறையில் வெறுப்பை உணர்த்துகிற நெற்றியுள்ளவனாக மாற்றும். (சிவ நிலை பெறச் செய்யும்.) தேனீக்களின் இருப்பிடமான தொன்றின் (தாமரை) மீது அமரச் செய்யும் (பிரும்மனின் நிலை பெறச் செய்யும்.)*

*தேவியின் அருள் பெற்றதனால் தான் மும்மூர்த்திகளும் தம் தம் பொறுப்பை நன்கு நிறைவுறச் செய்கின்றனர். (64)*

विवेकाम्भःस्रोतः स्नपनपरिपाटी शिशिरिते
समीभूते शास्त्रस्मरणहलसंकर्षणवशात् ।
सतां चेतःक्षेत्रे वपति तव कामाक्षि चरणो
महासंवित्सस्यप्रकरवरबीजानि कृषिकः[1] ॥ ६५ ॥

விவேகாம்ப்ப: ஸ்ரோத: ஸ்நபந பரிபாடீ ஶிஶிரிதே
ஸமீபூதே ஶாஸ்த்ர ஸ்மரண ஹல ஸங்கர்ஷண வஶாத் ।
ஸதாம் சேத: க்ஷேத்ரே வபதி தவ காமாக்ஷி ! சரணோ
மஹா ஸம்வித் ஸஸ்ய ப்ரகர வர பீஜாநி க்ருஷிக[2]: ॥ 65

மலைமகளே ! காமாக்ஷி ! உன் திருவடி விவேகம் என்ற நீர்ப்பாய்ச்சும் முறைகளால் நன்கு ஈரம் கொண்ட நல்லோரின் உள்ளமாகிற வயலில், சாஸ்திர ஆராய்ச்சி எனும் கலப்பையால் உழவுநன்மூலம் கிளறிச் சம நிலை பெறச் செய்ததில், பேருணர்வாகிய உயர்ந்த விதையைத் தெளித்து விதைக்கின்றது.

உள்ளமெனும் பண்படுத்தப் பெற்ற வயல், அதில் விவேகமென்ற வாய்க்கால் மூலம் பெற்ற நீர் பாய்ச்சி, சாஸ்திரப்பயிற்சியால் பெற்ற நடைமுறைத் தெளிவு என்ற கலப்பைகொண்டு உழுது, கட்டிகளைத் தட்டி ஒரே சீருள்ள நிலைக்குக் கொணர்ந்து பேரறிவும் பேருணர்வும் பேராற்றலும் கலந்த மஹாஸம்வித் என்ற விதையைத் தேவியின் திருவடியின் அருள் விதைக்கிறது. உலகம் ஜீவன் ஈச்வரன் என்ற மூன்று வெவ்வேறாகத் தொடர்பற்றதாக இருப்பதாகக் கருதுகிற அஜ்ஞான நிலையை மாற்ற இந்த கிருஷி முறையைத் தேவி கையாள்கிறாள். விவேகத்தால் நித்தியப்பொருளை அறிகிற ஆவலைத்தூண்டி, நல்ல குருவைக்காட்டி, அவர்மூலம் உடல் உள்ளம் ஜீவன் என்பவற்றைப் பிரித்தறியச் செய்து, உடல் உள்ளம் உலகம் என்பவற்றால் ஜீவனின் மீது நீக்கமுடியாத கட்டு ஏற்பட்டுள்ளதை உணர்த்தி, கட்டு விலக வழிகாட்டி, பேரிருக்கையும் பேரறிவும், பேராற்றலுமாக விளங்குகிற ஆத்மா என்பதை விளக்கி, அதனை உணரவைத்து, உலகம் ஜீவன் ஈசன்

1. बीजं गिरिसुते 2. பீஜம் கிரிஸுதே.

*என்ற நிலே வேறுபாடு உணரப்படும்போதே இவற்றை இணைக்கிற பரா சித், பராஸம்வித், பராசக்தி என்று பலவாருகக் காட்சி தருகிற தேவியை உணர்வதற்கான விதையை. ஞான விதையை தேவியே கருணைகொண்டு விதைக்கிருள். (65)*

**दधानो मन्दारस्तबकपरिपाटीं नखरुचा**

**वहन् दीप्ताः शोणाङ्गुलिभिरपि चाम्पेयकलिकाः[1] ।**

**अशोकोल्लासं नः प्रचुरयतु कामाक्षि चरणो**

**विकासी वासन्तः समय इव ते शर्वदयिते ॥ ६६ ॥**

**ததாநோ மந்தார ஸ்தபக பரிபாடீம் நக ருசா**

**வஹந் தீப்தா:ஶோணாங்குளிபிரபி சாம்பேய கலிகா:[2] ।**

**அஶோகோல்லாஸம் ந: ப்ரசுரயது காமாக்ஷி ! சரணோ**

**விகாஸீ வாஸந்த: ஸமய இவ தே ஶர்வ தயிதே !! 66 !!**

*உலகை ஒடுக்குபவரான சிவனுக்கு இனியவளே ! காமாக்ஷி ! மந்தாரப் பூங்கொத்தின் நிலேயை நகஒளியால் விளக்குவதும் சிவந்தவிரல்கள் வரிசையால் ஒளிமிக்க சம்பகமொட்டின் நிலேயை ஏற்றுள்ளதுமான உன் திருவடி, அசோகமரத்து மலர்ச்சியை வஸந்தகாலம் போல் எம்மிடம் பரவச்செய்யட்டும்.*

*தேவியின் நகஒளி மந்தாரப்பூபோல் அழகாக வெளுத்தது. சரணங்களின் விரல்கள் சம்பகப்பூ போன்று சிவந்து நறுமணமுள்ளவை. வஸந்த ருதுவில் மட்டும் அசோகமரம் பூக்கும். சோகமற்ற சாந்தமும் ஆனந்தமும் மிக்க சூழ்நிலேயை வஸந்த ருது தரும். அழகும் சீரிய நடைமுறையும் கொண்ட பதிவிரதையான உத்தமப்பெண்ணின் கால் அதன் மீதுபட்டால், அசோகமரம் அதிகமாக மலர்ச்சி பெறும். அப்பெண்களின் பாத ஸ்பரிசமே அதற்கு உரம் (தோஹதம்) என்பர். தன்னேச் சார்ந்தவர், தன்னிடம் அன்பு பூண்டவர் எனக்கறப்பவனிடம் பரிவு கொண்ட பசு மடியிலுள்ளபாலே எளிதில் சுரந்து வெளிப்படச் செய்யும். கறப்பவனின் அருகாமையும் கைபடுதலும் கறவையை*

1. दीप्तां शोणाङ्गुलिपटलचांपेय कलिकाम् । 2. *தீப்தாம் ஶோணாங்குலி படல சாம்பேய கலிகாம்.*

எளிதாக்கும். அதை தோஹ - தம் என்பர். பெண்ணின் கால்படுதலும் அசோகமரத்தின் உள்ளத்தில் கிளர்ச்சி தந்து மொட்டிட்டு மலர்வதை விரைவுபடுத்தும். அது போல் அசோகமான சோகமற்ற நிலையின் மலர்ச்சி ஏற்படவேண்டுகிறுர். (66)

नखांशुप्राचुर्यप्रसृमरमरालालिमहितः[1]
स्फुरन्मञ्जीरोद्यन्मरकतमहःशैवलयुतः ।
भवत्याः कामाक्षि स्फुटचरणपाटल्यकपटो
नदः शोणाभिख्यो नगपतितनूजे विजयते ॥ ६७ ॥

நகாம்ஶு ப்ராசுர்ய ப்ரஸ்ருமர மராளாளி மஹித:[2]
ஸ்ப்புரன் மஞ்ஜீரோத்யந் மரகத மஹ: ஶைவல யுத: ।
பவத்யா: காமாக்ஷி! ஸ்ப்புட சரண பாடல்ய கபடோ
நத: ஶோணாபிக்க்யோ நக பதி தநூஜே! விஜயதே ॥ 67

*மலையரசனின் மகளே ! காமாக்ஷி ! உன் அழகிய தூய சரணங்களின் செம்மை என்ற வெளித்தோற்றம் செம்மையே உருவான சோண நதமாக விளங்குகிறது. அது நக ஒளிச் செறிவு என்ற (பெண்) அன்னப்பறவைக்கூட்டத்தால் வெண்மை பரப்பிநிற்கிறது. ஒளிக்கதிர்கள் வீசுகிற சிலம்பில் உள்ள மரகதப்பச்சை ரத்தின ஒளி எனும் பாசிபடர்ந்ததாகக் காண்கிறது. அது சிறந்து விளங்குகிறது.*

*சோணா என்ற ஆறு மேற்கு நோக்கிப் பாய்வதால் நதி என்றழைக்காமல் சோணநதம் என்ற ஆண்பால் சொல்லால் குறிப்பிடுவர். அதில் மணல் பரப்பில் உள்ள கூழாங்கற்கள் மிகச் சிவந்து (சோணமாக)க்காணப் பெறும். பஞ்சாயதன பூஜையில் அந்தக் கற்களே விநாயகரின் ஆயதனமாக (காணுமிடமாக) ஆராதிக்கப்படுகின்றன. சோணபத்ரம் என்றும் அந்த ஆற்றையும் விநாயகரின் ஆயதனத்தையும் குறிப்பிடுவர். செம்மைக்கு எடுத்துக்காட்டாக அந்த ஆறு இங்கு தரப்பட்டுள்ளது. (67)*

1. मरालालिधवलः मरालीधवलितः 2. *மராளாலிதவள:, மராளீதவலித:*

धुनानं पङ्कौघं परमसुलभं कण्टककुलैः
विकासव्यासङ्गं विदधदपराधीनमनिशम् ।
नखेन्दुज्योत्स्नाभिर्विशदरुचि कामाक्षि नितरां
असामान्यं मन्ये सरसिजमिदं ते पदयुगम् ॥ ६८ ॥

துநாநம் பங்கௌகம் பரமஸுலபம் கண்டக குலை:
விகாஸ வ்யாஸங்கம் விதததத் அபராதீநம் அநிஶம் ।
நகேந்து ஜ்யோத்ஸ்நாபி: விஶத ருசி காமாக்ஷி! நிதராம்
அஸாமாந்யம் மந்யே ஸரஸிஜம் இதம் தே பத யுகம் ॥ 68

*காமாக்ஷி ! உன் திருவடித் தாமரை ஒப்பற்றது. (பொதுவாகக் காணப்படுகிற தாமரையிலிருந்தும் வேறுபட்டது) பாபச் சேற்றை அகற்றுகிறது. முள் கூட்டங்களால் (தீயவரால்) எளிதில் அணுக முடியாதது. பிறரது உதவியைச் சாராமல் எப்போதும் மலர்வதில் ஆர்வமுள்ளது. நகஒளியாகிய நிலாவால் ஒளித்தெளிவு பெற்றது. இது என் கருத்து.*

*திருவடியும் தாமரைக்கு இணையாக, தாமரையும் திருவடிக்கு இணையாகக் கூறப்படுவது சரியா ? என் கருத்தில் செம்மையால் தாமரை போன்றிருந்தாலும் தாமரையின் இயல்பிற்கு மாறான சில தன்மைகள் இதில் காணப்படுகின்றனவே ! தாமரை சேற்றில் நிற்கும். தண்டில் முட்கள் நிறையக் காணப்படும். சூரிய ஒளிபட்ட பிறகே மலரும். நிலாபட்டால் குவியும், தான்மலர மற்றொன்றை எதிர் பார்க்கும். திருவடியோ பாபச் சேற்றை அகற்றுகிறது. முள் அருகில் வராது. வேறொன்றைச் சாராமல் தானே எப்போதும் மலர்ந்தே நிற்கும். சூரிய ஒளியிலும் சந்திர ஒளியிலும் வேற்றுமை உணராது. தாமரைக்கும் திருவடிக்கும் இடையே பொது நிலை பெரிதும் இல்லை. (68)*

करीन्द्राय द्रुह्यत्यलसगतिलीलासु विमलैः
पयोजैर्मात्सर्यं प्रकटयति कामं कलयते ।

पदाम्भोजद्वन्द्वं तव तदपि कामाक्षि हृदयं
मुनीनां शान्तानां कथमनिशमस्मै स्पृहयते ॥ ६९ ॥

கரீந்த்ராய த்ருஹ்யதி அலஸ கதி லீலாஸு விமலை:
பயோஜை: மாத்ஸர்யம் ப்ரகடயதி காமம் கலயதே ।
பதாம்ப்போஜ த்வந்த்வம் தவ ததபி காமாக்ஷி! ஹ்ருதயம்
முநீநாம் ஶாந்தாநாம் கதம் அநிஶம் அஸ்மை ஸ்ப்ருஹயதே ॥69॥

*காமாக்ஷி ! உன் திருவடித்தாமரை மென்னடை விளையாட்டில் யானையுடன் போட்டியிடுகிறது. தூய்மையுள்ள தாமரையுடன் ஒற்றுப் போகாமல் பொறாமைப்படுகிறது. ஆனால் அமைதிமிக்க முனிவரின் உள்ளம் எப்போதும் இதனிடம் மிகவும் ஈடுபடுகிறதே ! அது எப்படி !*

*யானையிடம் விரோதம், தாமரையிடம் பொறாமை கொண்ட ஒன்றை- காமமும் க்ரோதமும் மாற்சரியமும் கொண்டதை அமைதியை நாடுகிற முனிவர் விலக்குவது தானே இயல்பு ? ஆனால் யானையை விஞ்சுகிறமென்னடையும், தாமரையை விஞ்சுகிற தூய்மையும் தேவியிடம் நிறைந்து உள்ளதால் முனிவர் தான் நாடுகிற அமைதிக்கும் மென்மைக்கும் தூய்மைக்கும் காப்பிடமான தேவியை அணுகுகிறார். (69)*

निरस्ता शोणिम्ना चरणकिरणानां तव शिवे
समिन्धाना संध्यारुचिरचलराजन्यतनये ।
असामर्थ्यादेनं परिभवितुमेतत्समरुचां
सरोजानां जाने मुकुलयति शोभां प्रतिदिनम्[1] ॥ ७० ॥

நிரஸ்தா ஶோணிம்நா சரண கிரணாநாம் தவ ஶிவே!
ஸமிந்த்தாநா ஸந்த்யா ருசி: அசல ராஜந்ய தநயே ।
அஸாமர்த்த்யாத் ஏநம் பரிபவிதும் ஏதத் ஸம ருசாம்
ஸரோஜாநாம் ஜாநே முகுலயதி ஶோபாம் ப்ரதிதிநம்[2] ॥70

1. सरोजानां शोभां मुकुलयति कामाक्षि सततम्, मुहुःसायं सायं मुकुलयति कामाक्षि कमलम् ।
2. *ஸரோஜாநாம் ஶோபாம் முகுலயதி காமாக்ஷி ஸததம், முஹு: ஸாயம் ஸாயம் முகுலயதி காமாக்ஷி கமலம்.*

*மங்களமானவளே ! மலையரசனின் மகளே ! உன் திருவடி ஒளியின் செம்மையால், ஸந்தியா (மாலை) காலத்து ஒளி தோல்வியுற்றது. அதனுல் வெகுண்டு எழுந்ததாக, செம்மையை வெல்லத் திறமையில்லாததால் , திருவடியை ஒத்த ஒளியுள்ள தாமரைகளின் அழகைக் கூம்பிக் குவியச் செய்கிறதோ என நினைக்கிறேன்.*

*தோல்வியால் ஏற்பட்ட அவமானத்தைப் போக்கிக் கொள்ள, தோல்வியுறச் செய்தவருக்கு ஈடான ஒருவரிடம் தன் ஆத்திரத்தைக் காட்டுவது கீழ்மக்களின் போக்கு. மாலை நேரத்துச் செவ்வான ஒளி தாமரை மலர்ச்சியை அழிப்பது இந்த ஆத்திரத்தின் விளைவோ ? (70)*

उपादिक्षद्दाक्ष्यं तव चरणनामा गुरुरसौ
मरालानां शङ्के मसृणगतिलालित्यसरणौ ।
अतस्ते निस्तन्द्रं नियतममुना सख्यपदवीं
प्रपन्नं पाथोजं प्रति दधति कामाक्षि कुतुकम् ॥ ७१ ॥

உபாதிக்ஷத் தாக்ஷ்யம் தவ சரண நாமா குரு: அஸௌ
மராளாநாம் ஶங்கே மஸ்ருண கதி லாலித்ய ஸரணௌ!
அதஸ்தே நிஸ்தந்த்ரம் நியதம் அமுநா ஸக்க்ய பதவீம்
ப்ரபந்நம் பாதோஜம் ப்ரதி தததி காமாக்ஷி! குதுகம் ॥ 71

*காமாக்ஷி ! உன் திருவடி எனும் குரு (தன் அருகாமைபெற்ற) ஹம்ஸர்களுக்கு மென்னடை முறையில் திறமையைப் புகட்டுகிறுர் என நினைக்கிறேன். அதனுல் தான், அவர்கள் அயர்வின்றி எப்போதும் முனைந்து உன் திருவடியைச் சார்ந்த தாமரை மீது நட்பு நிலை கொள்வதில் ஆர்வம் கொண்டுள்ளனர்.*

*ஹம்ஸ - அன்னப்பறவை, பற்றற்றதுறவி. அன்னப்பறவை நட்புடன் தாமரையைச் சூழ்ந்து நிற்கும். பரமஹம்ஸர்கள் தேவியின் திருவடியைச் சூழ்வர். (71)*

दधानैः संसर्गं प्रकृतिमलिनैः षट्पदकुलैः
द्विजाधीशश्लाघाविधिषु विदधद्भिर्मुकुलताम् ।
रजोमिश्रैः पद्मैर्नियतमपि कामाक्षि पदयोः
विरोधस्ते युक्तो विषमशरवैरिप्रियतमे ॥ ७२ ॥

ததாநை: ஸம்ஸர்கம் ப்ரக்ருதி மலிநை: ஷட் பத குலை:
த்விஜா தீஶ ஶ்லாகா விதிஷு விதததப்பி: முகுலதாம் ।
ரஜோ மிஶ்ரை: பத்மை: நியதம் அபி காமாக்ஷி ! பதயோ:
விரோத: தே யுக்தோ விஷம ஶர வைரி ப்ரிய தமே ॥ 72

*ஒற்றைப்படை (5) எண்ணுள்ள அம்புகளைக் கொண்ட மன்மதனின் எதிரியின் மிக்க அன்புக்குரியவளே ! காமாக்ஷி ! இயல்பாலேயே அழுக்கு மிகுந்த வண்டுக் கூட்டத்துடன் தொடர்பு கொண்டவையும், அந்தணர் தலைவரை (சந்திரனை)ப் பாராட்டுவதில் மொட்டுபோல் ஈடுபாட்டின்மையை வெளிப்படுத்துபவையும், தூசி கலந்தவையுமான தாமரைகளுடன் உன் திருவடிகளுக்கு விரோதம் பொருத்தமானதே.*

*தாமரை அழுக்குமிக்க வண்டுக்கூட்டம் தன்னை மொய்ப்பதை விரும்பும். சந்திரனை வெறுக்கும். மகரந்தத்தூள் படிந்தது, திருவடியோ அப்பழுக்கற்றது. நல்லோரை விரும்புவது, தூய்மை மிக்கது. இரு மாறுபட்ட இயல்புள்ளவரிடம் பகையுணர்வு நிலவுவது இயல்பே. துவிஜாதீச: - அந்தணர் தலைவன் சந்திரன் என்ற இருபொருள் கொண்டது. தாமரை சந்திரனிடம் பகையுணர்வு கொண்டது. நடைமுறையில் உத்தமரான அந்தணர் தேவியிடம் பக்தியுணர்வு கொண்டவர். (72)*

कवित्वश्रीमिश्रीकरणनिपुणौ रक्षणचणौ
विपन्नानां श्रीमन्नलिनमसृणौ शोणकिरणौ ।
मुनीन्द्राणामन्तः करणशरणौ मन्दसरणौ
मनोज्ञौ कामाक्ष्या दुरितहरणौ नौमि चरणौ ॥ ७३ ॥

கவித்வ ஸ்ரீ மிஸ்ரீ கரண நிபுணௌ ரக்ஷண சணௌ
விபந்நாநாம் ஸ்ரீமந் நளிந மஸ்ருணௌ ஸோண -
கிரணௌ ।
முநீந்த்ராணாம் அந்த:கரண ஸரணௌ மந்த ஸரணௌ
மநோஜ்ஞௌ காமாக்ஷ்யா: துரித-ஹரணௌ நௌமி சரணௌ ॥ 73 ॥

*காமாக்ஷியின் பாபத்தை அகற்றுகிற திருவடிகளை வணங்குகிறேன். அவை கவிதையும் லக்ஷ்மியும் கலந்து உறவாட வைப்பதில் தேர்ந்தவை. நொடித்தவரைக் காப்பதில் நிகரற்றவை. அழகிய தாமரை போன்று மென்மையுள்ளவை, செவ்வொளி கொண்டவை. சிறந்த முனிவர்களின் உள்ளத்தின் புகலிடம், மென்னடையில் மிகவும் மனத்தைக் கவர்பவை. (73)*

परस्मात्सर्वस्मादपि च परयोर्मुक्तिकरयोः
नखश्रीषु ज्योत्स्नाकुलिततुलयोस्ताम्रतलयोः ।
निलीये कामाक्ष्या निगमनुतयोर्नाकिनतयोः
निरस्तप्रोन्मीलन्नलिनमदयोरेव पदयोः ॥ ७४ ॥

பரஸ்மாத் ஸர்வஸ்மாத் அபிச பரயோ: முக்தி கரயோ:
நக ஸ்ரீஷு ஜ்யோத்ஸநா கலித துலயோ: தாம்ர தலயோ: ।
நிலீயே காமாக்ஷ்யா நிகம நுதயோ: நாகி நதயோ:
நிரஸ்த ப்ரோந் மீலந் நளிந மதயோரேவ பதயோ: ॥ 74

*நன்றாக மலர்ந்த தாமரையின் செருக்கை விரட்டியடித்த காமாக்ஷியின் திருவடிகளினுள் லயமடைகிறேன். அவை, மிகச் சிறந்தவற்றைக் காட்டிலும் சிறந்தவை. முக்தி தருபவை, நக ஒளியால் நிலவின் பரப்பை ஒத்தவை, தாமிரநிறம் கொண்ட அடித்தலம் கொண்டவை. வேதங்களால் துதிக்கப்பெற்றவை, தேவர்களால் வணங்கப்பெற்றவை. (74)*

स्वभावादन्योन्यं किसलयमपीदं तव पदं
म्रदिम्ना शोणिम्ना भगवति दधाते सदृशताम् ।
वने पूर्वस्येच्छा सततमवने किं तु जगतां
परस्येत्थं भेदः स्फुरति हृदि कामाक्षि सुधियाम् ॥ ७५ ॥

ஸ்வபாவாத் அந்யோந்யம் கிஸலயம் அபீதம் தவ பதம்
ம்ரதிம்நா ஶோணிம்நா பகவதி! ததாதே ஸத்ருஶதாம் ।
வநே பூர்வஸ்யேச்சா ஸததம் அவநே கிந்து ஜகதாம்
பரஸ்யேத்தம் பேத: ஸ்ப்புரதி ஹ்ருதி காமாக்ஷி! ஸுதியாம் ॥ 75

*பெருமைகளனைத்தும் பெற்றவளே! காமாக்ஷி! இளந்துளிரும் உன்பாதமும் மென்மையாலும் செந்நிறத்தாலும் இயற்கையாக ஒன்றோடொன்று இணையானவை. ஆனால் நல்லறிஞரின் உள்ளத்தில் முன்னதற்கு 'தனது' வனத்தில் ஆசை, பின்னதற்கு உலகின் 'அவன'த்தில் ஆசை என்ற வேற்றுமை உணர்வு முன் நிற்கிறதே!*

*வநம் - காடு. தனித்தனியாக இராமல் தனித்தனியாகக் காட்டிக்கொள்ளாமல் தொகையாகக் காண்பது. தனி மரமாகக் காணப்பெறாமல் மரஇன வேற்றுமை உணர இயலாமல் காடாக மொத்தமாக அது காணப்படும். துளிர்கள் ஒன்றோடொன்று இணைந்தே புலப்படும். காட்டில் தனித்தனித் துளிராக இல்லாமல் இணைந்து காணப்படுவதால் துளிர்க்குவியலை புதர் - வனம் என்றே குறிப்பிடுவர். துளிருக்கு 'வனமாயிருப்பதில் ஆசை. திருவடிக்கோ இதற்கு நேர்மாறாக' அவனமாயிருப்பதில் ஆசை. அவநம் - அணைத்து அன்னைபோல் காப்பது. முழுப்பேராளுமை, கடும் எதிர்ப்பிலும் முன்னேறும் ஆற்றலும் புகழும் செல்வமும் சுய அறிவும் கல்வியறிவும் நிறைந்த நிலை பகம் ஆகும். அதனைக் கொண்டவள். பகவதீ பெருமைகள் அனைத்தும் பெற்றவள். (75)*

कथं वाचालोऽपि प्रकटमणिमञ्जीरनिनदैः
सदैवानन्दार्द्रान्विरचयति वाचंयमजनान् ।
प्रकृत्या ते शोणच्छविरपि च कामाक्षि चरणो
मनीषानैर्मल्यं कथमिव नृणां मांसलयते ॥ ७६ ॥

கதம் வாசாலோ஽பி ப்ரகட மணி மஞ்ஜீர நிநதை:
ஸதைவா஽஽நந்தார்த்ராந் விரசயதி வாசம்யம ஜநாந் ।
ப்ரக்ருத்யா தே ஶோணச் சவி: அபிச காமாக்ஷி! சரணோ
மநீஷா நைர்மல்யம் கதம் இவ ந்ருணாம் மாம்ஸலயதே ॥ 76

*காமாக்ஷி ! உன் சரணம், மணிச்சிலம்புகளில் தெளிவாகச் செவிக்குப் புலப்படுகிற இனிய ஒலிகளால் வாயாடியாகி, வாயைக்கட்டி மௌனமாக இருப்பவரை எப்போதும் ஆனந்தத்தில் நனைந்தவர்களாக ஆக்குகிறது. இயல்பால் செவ்வொளி கொண்டிருந்தாலும், அறிவின் தெளிவைப் புஷ்டி செய்கிறது. இது எப்படி ?*

*அரட்டையடிக்கிற சரணம் மௌனியின் உள்ளத்திற்கு இனியதாகிறது, சிவப்பு தெளிவற்ற நிலையின் தோற்றம். உண்மை நிலைக்கு மாறுபட்ட காட்சியை (விக்ஷேபத்தை) தரும். தெள்ளத்தெளிந்த அறிவை அது தருகிறது. இது எப்படி நேரும்? (76)*

चलत्तृष्णा वीचीपरिचलनपर्याकुलतया
मुहुर्भ्रान्त्वा[1] तान्तः परमशिववामाक्षि परवान् ।
तितीर्षुः कामाक्षि प्रचुरतरकर्माम्बुधिममुं
कदाहं लप्स्ये ते चरणमणिसेतुं गिरिसुते ॥ ७७ ॥

சலத் த்ருஷ்ணாவீசீ பரிசலந பர்யாகுல தயா
முஹுர் ப்ப்ராந்த்வா[2] தாந்த: பரமஶிவ வாமாக்ஷி! பரவாந்।
திதீர்ஷு : காமாக்ஷி! ப்ரசுர தர கர்மாம்புதிம் அமும்
கதா அஹம் லப்ஸ்யே தே சரண மணி ஸேதும் கிரிஸுதே ॥ 77

*பரமசிவனது அழகிய மனைவியே ! மலைமகளே ! காமாக்ஷி ! புதிது புதிதாக எழுகிற ஆசையின் அலைகளில் தடுமாடுவதால், மிகவும் சுழன்றும் களைத்துமுள்ள நான், பிறர் உதவியைப் பெரிதும் எதிர்பார்ப்பவனாகி, மிகவும் பெரிதான வினைக்கடலைக் கடக்கவிரும்புகிறேன். அதற்கு உன் திருவடியாகிய ரத்தினப் பாலத்தை என்று சென்றடைவேன் ? (77)*

---

1. भ्रान्तः 2. ப்ப்ராந்த:

विशुष्यन्त्यां प्रज्ञासरिति दुरितग्रीष्मसमय-
प्रभावेण क्षीणे सति मम मनःकेकिनि शुचा ।
त्वदीयः कामाक्षि स्फुरितचरणाम्भोदमहिमा
नभोमासाटोपं नगपतिसुते किं न कुरुते ॥ ७८ ॥

விஶுஷ்யந்த்யாம் ப்ரஜ்ஞா ஸரிதி துரித க்ரீஷ்ம ஸமய-
ப்ரபாவேண க்ஷீணே ஸதி மம மந:கேகிநி ஶுசா ।
த்வதீய: காமாக்ஷி! ஸ்புரித சரணாம்போத மஹிமா
நபோமாஸாடோபம் நக பதி ஸுதே! கிம் ந குருதே ॥ 78

*மலையரசனின் மகளே! காமாக்ஷி! என் தெளிவான அறிவு என்ற ஆறு பாபமாகிற கோடைவெப்பத்தின் தாக்கத்தால் வற்றிய நிலையில், சோகத்தால் என் மனமாகிற மயில் தளர்ந்து களைத்துள்ள போது, உன் ஒளிமிக்க சரணங்களாகிற பெருமை மிக்க மேகம், ஆவணி மாதத்துப்பகட்டை ஏன் வெளிப்படுத்தவில்லை ?*

*ஆவணி வருஷருதுவின் தொடக்கநாள். தேவியின் சரணமாகிற மேகம் பொழிந்தால், பாபம் நீங்கி அறிவு தெளியும். மனம் குதூஹலம் பெறும். (78)*

विनम्राणां चेतोभवनवलभीसीम्नि चरण-
प्रदीपे प्राकाश्यं दधति तव निर्धूततमसि ।
असीमा कामाक्षि स्वयमलघुदुष्कर्मलहरी
विघूर्णन्ती शान्तिं शलभपरिपाटीव भजते ॥ ७९ ॥

விநம்ராணாம் சேதோ பவந வலபீ ஸீம்நி சரண-
ப்ரதீபே ப்ராகாஶ்யம் தததி தவ நிர்த்தூத தமஸி ।
அஸீமா காமாக்ஷி! ஸ்வயம் அலகு துஷ்கர்ம லஹரீ
விகூர்ணந்தீ ஶாந்திம் ஶலப பரிபாடீவ பஜதே ॥ 79

*காமாக்ஷி ! உன் முன்பு வணங்கிநிற்கிறவருடைய மனமாகிய மாளிகையின் மேல் மாடத்தின் ஓரத்தில், உன் திருவடியாகிற தீபம்*

*இருளை நீக்கி ஒளியைப் பரப்பும் போது, எல்லை அறிய இயலாத பெருந்தீவினையலை, விட்டில் பூச்சிக்கூட்டம் போல் சுற்றிச் சுற்றி வந்து விழுந்து அடங்கிவிடும். (79)*

विराजन्ती शुक्तिर्नखकिरणमुक्तामणिततेः-
विपत्पाथोराशौ तरिरपि नराणां प्रणमताम् ।
त्वदीयः कामाक्षि ध्रुवमलघुवह्निर्भववने
मुनीनां ज्ञानाग्नेररणिरयमंघ्रिर्विजयते ॥ ८० ॥

விராஜந்தீ ஶுக்தி: நக கிரண முக்தா மணி ததே:
விபத் பாதோ ராஶௌ தரிரபி நராணாம் ப்ரணமதாம் ।
த்வதீய: காமாக்ஷி ! த்த்ருவம் அலகு வஹ்நி: பவ வநே
முநீநாம் ஜ்ஞாநாக்நே: அரணி ரயம் அங்க்ரி: விஜயதே ॥ 80

*காமாக்ஷி ! உனது இந்த சரணம், நகஒளியாகிற முத்துவரிசை தோன்றுமிடமான சிப்பி. உன்னைவணங்குபவர் உணர்கிற துன்பக்கடலைத் தாண்ட உதவுகிற ஓடம், பிறப்பிறப்புக் காட்டை எரிக்கிற பெருந்தீ. முனிவர் ஞானம் பெறக்கடைகிற அரணிக்கட்டை, அது நன்கு விளங்குகிறது*

*சிப்பிக்கு ஒரு முத்து. இங்கு ஒரே சிப்பியில் முத்துக்குவியல். நீரில் தெப்பமாவதே காட்டில் தீயாக, தீக்கடைகிற அரணிக்கட்டையாக இருப்பது. விந்தையல்லவா ? (80)*

समस्तैः संसेव्यः सततमपि कामाक्षि विबुधैः
स्तुतो गंधर्वस्त्रीसुललितविपञ्चीकलरवैः ।
भवत्या भिन्दानो भवगिरिकुलं जृम्भिततमो-
बलद्रोही मातश्चरणपुरुहूतो विजयते ॥ ८१ ॥

ஸமஸ்தை: ஸம்ஸேவ்ய: ஸததம் அபி காமாக்ஷி! விபுதை:
ஸ்துதோ கந்த்தர்வ ஸ்த்ரீ ஸுலலித விபஞ்சீ கல ரவை: ।

பவத்யா பிந்தாநோ பவ கிரி குலம் ஜ்ரும்பித தமோ-
பல த்ரோஹீ மாத: ! சரண புருஹூதோ விஜயதே ॥ 81 ॥

*காமாக்ஷி ! தாயே ! உன் சரணமாகிற இந்திரன், எல்லா 'விபுதர்'களாலும் எப்போதும் வழிபடத்தக்கவர், கந்தர்வமாதர்களின் இனிதழகிய வீணையொலியால் துதிக்கப்பெற்றவர், பிறப்பிறப்புத் தொடராகிய பவ மலையைப் பிளப்பவர், பொருமுகிற அஜ்ஞானமாகிற பலாஸுரனை எதிர்த்தவர், அவர் நன்கு விளங்குகிறார்.*

*விபுதர் - ஞானி, தேவர். இந்திரன் வானில் பறந்து கொண்டிருந்த மலைகளை வஜ்ரத்தால் பிளந்து பூமியில் நிலை கொள்ளச் செய்தவர். பலன் (வலன்) என்ற அசுரனைமாய்த்தவர். பல:- பலன் என்ற அசுரன், பலம்- வலிவு. அஞ்ஞான வலிவை எதிர்த்து அடக்கியவர். (81)*

**वसन्तं भक्तानामपि मनसि नित्यं परिलसद्-**
**घनच्छायापूर्णं शुचिमपि नृणां तापशमनम् ।**
**नखेन्दुज्योत्स्नाभिः शिशिरमपि पद्मोदयकरं**
**नमामः कामाक्ष्याश्चरणमधिकाश्चर्यकरणम् ॥ ८२ ॥**

வஸந்தம் பக்தாநாம் அபி மனஸி நித்யம் பரிலஸத்-
க்கநச்சாயா பூர்ணம் ஶுசிம் அபி ந்ருணாம் தாபஶமநம்!
நகேந்து ஜ்யோத்ஸ்நாபி: ஶிஶிரம் அபி பத்மோதயகரம்
நமாம: காமாக்ஷ்யா: சரணம் அதிகாஶ்சர்ய கரணம் ॥ 82

*பக்தர்களின் மனத்தில் எப்போதும் (வஸந்த ருதுவாக) விளங்குவது, சூழ்ந்து அடர்ந்த இருள் கொண்டதாகி (வர்ஷருதுவாகி) தூய்மைதருவது, நகமாகிற நிலவொளியால் (சரத்காலமாகி) மாந்தரின் தாபத்தைத் தணிப்பது. சிசிர (பனி)ருதுவானாலும் தாமரையை மலரச் செய்வது, இத்தகைய பெரும் வியப்பைத்தருகிற காமாக்ஷியின் சரணத்தை வணங்குகிறோம் (82)*

कवीन्द्राणां नानाभणितिगुणचित्रीकृतवचः
प्रपञ्चव्यापारप्रकटनकलाकौशलविधिः[1] ।
अधः कुर्वन्नब्जं सनकभृगुमुख्यैर्मुनिजनैः
नमस्यः कामाक्ष्याश्चरणपरमेष्ठी विजयते ॥ ८३ ॥

கவீந்த்ராணும் நாநா பணிதி குணசித்ரீ-க்ருதவச:-
ப்ரபஞ்ச வ்யாபார ப்ரகடந கலா கௌஶலவிதி:[2] ।
அத: குர்வந் அப்ஜம் ஸநக ப்ருகு முக்யை: முநி ஜநை:
நமஸ்ய: காமாக்ஷ்யா: சரண பரமேஷ்டீ விஜயதே ॥ 83

*காமாக்ஷியின் திருவடியாகிற பிரும்மா, ஸனகர், பிருகு முதலான முனிவர்களால் வணங்கத்தக்கவராக, கவியரசர்களின் பல்வகை சிறப்புகளால் வியப்பூட்டுகிற சொல்லாற்றலாகிய உலகை வெளிப்படுத்துகிற கலைத்திறமை நிரம்பியவராக, தாமரையைத்தனக்கு அடியில் அமைத்துக்கொண்டு விளங்குகிறார்.*

*பிரமன், உலகைத் தானே படைக்கிறார். தாமரையின் அழகால் ஈர்க்கப்பெற்றுத் தனக்கு ஆஸனமாக்கிக் கொண்டவர். சரணமாகிய பிரமனோ, கவியின் சொல்லமைப்பால், அவர்களைக் கொண்டே புதிய உலகைப்படைக்கிறது. தாமரை தன்னை விடத் தாழ்ந்ததென அதைத் தாழச் செய்கிறது. (83)*

भवत्याः कामाक्षि स्फुरितपदपङ्केरुहभुवां
परागाणां पूरैः परिहृतकलङ्कव्यतिकरैः ।
नतानामामृष्टे हृदयमुकुरे निर्मलरुचि
प्रसन्ने निःशेषं प्रतिफलति विश्वं गिरिसुते ॥ ८४ ॥

பவத்யா: காமாக்ஷி! ஸ்ப்புரித பத பங்கேருஹ புவாம்
பராகாணும் பூரை: பரிஹ்ருத களங்க வ்யதிகரை: ।
நதாநாம் ஆம்ருஷ்டே ஹ்ருதய முகுரே நிர்மல ருசி
ப்ரஸந்நே நிஃஶேஷம் ப்ரதிபலதி விஶ்வம் கிரிஸுதே ॥ 84

1. निधिः 2. நிதி:

*மலை மகளே! காமாக்ஷி! உன்னை வணங்குபவரின் உள்ளமாகிய கண்ணாடி, உனது மலர்ந்து ஒளிதருகிற சரணத் தாமரைகளிலிருந்து வெளியானதும், அப்பழுக்குடன் கலவையைத் தவிர்த்ததுமான பூந்தாதுக்குவியலால் நன்கு துடைக்கப்பட்டு, நிர்மல ஒளி பெற்றுத் தெளிந்ததும், அதில் இவ்வுலகமனைத்தும் பிரதிபலிக்கிறது.*

*தேவியின் திருவடியைப் பற்றிய நல்லிதயம், கண்ணாடி போல் தெளிந்து வெளிப்பொருளை காட்டும்படி சரணத் தூசிகள் அழுக்கைத்துடைத்து நிர்மலமானதும் உலகனைத்தையும் உணர்கிற எல்லாமறிகிற அறிவு அதில் தோன்றுகிறது (84)*

तव त्रस्तं पादात्किसलयमरण्यान्तरमगात्
परं रेखारूपं कमलममुमेवाश्रितमभूत् ।
जितानां कामाक्षि द्वितयमपि युक्तं परिभवे
विदेशे वासो वा शरणगमनं वा निजरिपोः ॥ ८५ ॥

தவ த்ரஸ்தம் பாதாத் கிஸலயம் அரண்யாந்தரம் அகாத்
பரம் ரேகாரூபம் கமலம் அமுமேவ ஆச்ரிதம் அபூத்[1]
ஜிதாநாம் காமாக்ஷி ! த்விதயம் அபி யுக்தம் பரிபவே
விதேஶே வாஸோ வா ஶரண கமநம் வா நிஜ ரிபோ: ॥ 85

*காமாக்ஷி ! தோற்றவர் அவமதிப்பிற்குள்ளாகும் போது, வெளிநாட்டிற்குச் சென்று மறைந்து வசிப்பது அல்லது வென்றவனையே சரணடைவது தான் வாழவழி. உன் சரணங்களிலிருந்து பயந்தோடிய துளிர்வேறு காட்டிற்குச் சென்றது. தாமரையோ உன்திருவடி அடித்தலத்தில் ரேகையாகித் திருவடியையே சரணடைந்தது. (85)*

गृहीत्वा याथार्थ्यं निगमवचसां देशिककृपा-
कटाक्षार्कज्योतिश्शमितममताबन्धतमसः ।
यतन्ते कामाक्षि प्रतिदिवसमन्तर्द्रढयितुं
त्वदीयं पादाब्जं सुकृतपरिपाकेन सुजनाः ॥ ८६ ॥

க்ருஹீத்வா யாதார்த்த்யம் நிகம வசஸாம் தேஶிக க்ருபா-
கடாக்ஷார்க ஜ்யோதிஶ்ஶமித மமதா பந்த தமஸ: ।
யதந்தே காமாக்ஷி ! ப்ரதி திவஸம் அந்த: த்ரடயிதும்
த்வதீயம் பாதாப்ஜம் ஸுக்ருத பரிபாகேந ஸுஜநா: ॥86

*காமாக்ஷி ! நல்லோர்கள், தன்குருவின் அருட் கடாக்ஷமாகிய சூரிய ஒளியால் உள்ளிருட்டாகிற அறியாமை அகன்றவர்களாக, வேதவசனங்களின் உண்மைப் பொருள் ஏற்று, நல்வினையின் கனிவால் உன் திருவடித்தாமரையை எப்போதும் உள்ளத்தில் பதித்துக் கொள்ள முயல்கிறார்கள் (86)*

जडानामप्यम्ब स्मरणसमये त्वच्चरणयोः
भ्रमन्मन्थक्ष्माभृद्घुमुघुमितसिन्धुप्रतिभटाः ।
प्रसन्नाः कामाक्षि प्रसभमधरस्पन्दनकलाः (राः)
भवन्ति स्वच्छन्दं प्रकृतिपरिपक्वाः भणितयः ॥ ८७ ॥

ஜடாநாம் அப் யம்ப ஸ்மரண ஸமயே த்வச் சரணயோ:
ப்ப்ரமந் மந்த்த க்ஷ்மா ப்ருத் க்குமுகுமித ஸிந்த்து ப்ரதிபடா: ।
ப்ரஸந்நா: காமாக்ஷி ! ப்ரஸபம் அதர ஸ்பந்தந கலா:(ரா:)
பவந்தி ஸ்வச்சந்தம் ப்ரக்ருதி பரிபக்வா: ப்பணிதய: ॥ 87

*காமாக்ஷி ! தாயே ! மந்த அறிவுள்ளவர் கூட, உன் திருவடிகளை நினைத்ததும், சுழல்கிற மலையாகிற மத்தால் கடையப்பெற்றுக் கொந்தளிக்கும் கடலொலியுடன் ஒத்தவையும் தெளிந்தவையும் வேகமாக உதடசைவைத் தருபவையும் இயல்பாகவே கனிந்தவையுமான வாக்குகள் அவர்களிடம் தன்னியல்பாக வெளியாகின்றன. (87)*

वहन्नप्यश्रान्तं मधुरनिनदं हंसकमसौ
तमेवाधःकर्तुं किमिव यतते केलिगमने ।
भवस्यैवानन्दं विदधदपि कामाक्षि चरणो
भवत्यास्तद्द्रोहं भगवति किमेवं वितनुते ॥ ८८ ॥

வஹந்நப்யஸ்ராந்தம் மதுர நிநதம் ஹம்ஸகம் அஸௌ
தமேவ அத: கர்தும் கிமிவ யததே கேளி கமநே ।
பவஸ்யைவ ஆநந்தம் விதததீ அபி காமாக்ஷி ! சரணௌ
பவத்யா: தத் த்ரோஹம் பகவதி ! கிம் ஏவம் விதநுதே ॥ 88

*காமாக்ஷி ! பெருமைகள் அனைத்தும் பெற்ற பகவதியே ! உன் திருவடி எப்போதும் இனிதொலிக்கின்ற ஹம்ஸகத்தை (சிலம்பை) சுமந்து கொண்டிருந்தும், தன் அழகிய விளையாட்டு நடையால், அதனையே (ஹம்ஸத்தையே) தாழ்ந்த நிலைக்குக் கொணர முயல்கிறதே ! அது ஏன் ? பவனுக்கு ஆனந்தம் விளைவிப்பதாயினும் பவத்திற்கு (ஸம்ஸாரத்திற்கு) துரோகம் விளைவிக்கிறதே ! அது ஏன் ?*

*ஹம்ஸகம் - சிலம்பு, அன்னப்பக்ஷி, பவர் - சிவன். பவம் - ஸம்ஸாரம் - சிலேடை. (88)*

यदत्यन्तं ताम्यत्यलसगतिवार्तास्वपि शिवे
तदेतत्कामाक्षि प्रकृतिमृदुलं ते पदयुगम् ।
किरीटैः संघट्टं कथमिव सुरौघस्य सहते
मुनीन्द्राणामास्ते मनसि च कथं सूचिनिशिते ॥ ८९ ॥

யத் அத்யந்தம் தாம்யதி அலஸ கதி வார்த்தாஸ்வபி ஶிவே!
ததேதத் காமாக்ஷி ! ப்ரக்ருதி ம்ருதுலம் தே பதயுகம் ।
கிரீடை: ஸங்க்கட்டம் கதம் இவ ஸுரௌகஸ்ய ஸஹதே
முநீந்த்ராணாம் ஆஸ்தே மநஸி ச கதம் ஸூசி நிஶிதே !! 89

*சிவே! காமாக்ஷி ! இயல்பாகவே மென்மை மிக்க உன் திருவடி (இரட்டை) 'மென்னடை' என்ற சொல் கேட்டால் கூட மிகவும் தளர்ச்சியுறுகிறது. அது தேவர் கூட்டத்தின் கிரீடங்களின் உராய்தலை எப்படித் தாங்குகிறது? ஊசியின் கூர் போல் நுண்ணிய முனிவர் உள்ளத்தினுள் எப்படி அமர்கிறது ? (89)*

मनोरङ्गे मत्के विबुधजनसंमोदजननी
सरागव्यासङ्गं [1] सरसमृदुसञ्चारसुभगा ।
मनोज्ञा कामाक्षि प्रकटयतु लास्यप्रकरणं
रणन्मञ्जीरा ते चरणयुगलीनर्तकवधूः ॥ ९० ॥

மநோ ரங்கே மத்கே விபுத ஜந ஸம்மோத ஜநநீ
ஸராக வ்யாஸங்கம் [2]ஸரஸ ம்ருது ஸஞ்சார ஸுபகா ।
மநோஜ்ஞா காமாக்ஷி ! ப்ரகடயது லாஸ்ய ப்ரகரணம்
ரணந் மஞ்ஜீரா தே சரண யுகளீ நர்த்தக வதூ: ॥ 90

*காமாக்ஷி! உனது இருதிருவடிகளாகிய நடனமாது, அறிஞர்களுக்கு (தேவர்களின்) மனமகிழ்ச்சி தருபவளாக, ஆசையை (ராகத்தை) வெளிப்படுத்துவதுடன் அழகியமென்னடையால் இனியவளாக, என் உள்ளம் உணர்ந்தவளாக, சிலம்பு ஒலிப்பவளாக என் மனமாகிய அரங்கில் தனது (லாஸ்ய) நாட்டிய அரங்கேற்றத்தை வெளிப்படுத்தட்டும்.*

*லாஸ்யம், பெண்களது நடனம். தாண்டவம் ஆண்களது நடனம். (90)*

परिष्कुर्वन्मातः पशुपतिकपर्दं चरणराट्[3]
पराचां हृत्पद्मं परमभणितीनां च मुकुटम् ।
भवाख्ये पाथोधौ[4] परिहरतु कामाक्षि ममता-
पराधीनत्वं मे परिमुषितपाथोजमहिमा ॥ ९१ ॥

பரிஷ்குர்வந் மாத: பஶுபதி கபர்தம் சரண ராட்[5]
பராசாம் ஹ்ருத் பத்மம் பரமபணிதீநாம் ச முகுடம் ।
பவாக்க்யே பாதோதௌ[6] பரிஹரது காமாக்ஷி ! மமதா-
பராதீநத்வம் மே பரிமுஷித பாதோஜ மஹிமா ॥ 91

*1.* व्यासङ्गा *2. வ்யாஸங்கா 3.* च विषये *4.* परस्ते पादोऽयं *5. ச விஷயே 6. பரஸ்தே பாதோऽயம்*

*காமாக்ஷி ! தாயே ! தாமரையின் பெருமையைப் பறிப்பவளாக, பசுக்களான ஜீவர்களின் பதியாகிய சிவனின் சடைமுடியையும், வெளிநோக்குள்ளவர்களின் இதயத்தாமரையையும் வேதவசனங்களின் மகுடமான உபநிஷத்தையும் சீராக்கிக் கொண்டு வருகிற உன் சரணமாகிய அரசன், ஸம்ஸாரக்கடலில் மமதையின் ஆட்சிக்கு உட்பட்ட நிலையைச் சீர்ப்படுத்தட்டும்.*

*மமதையை அகற்றிச் சடைமுடிமுதலானவற்றைச் சீரமைத்தது போல் என்னையும் சீரமைக்கட்டும் (91)*

प्रसूनैः संपर्कादमरतरुणीकुन्तलभवैः
अभीष्टानां दानादनिशमपि कामाक्षि नमताम् ।
स्वसङ्गात्कङ्केलिप्रसवजनकत्वेन च शिवे[1]
त्रिधा धत्ते वार्तां सुरभिरिति पादो गिरिसुते ॥ ९२ ॥

ப்ரஸூனை: ஸம்பர்க்காத் அமர தருணீ குந்தல பவை:
அபீஷ்டாநாம் தாநாத் அநிஶம் அபி காமாக்ஷி நமதாம் ।
ஸ்வ ஸங்காத் கங்கேளி ப்ரஸவ ஜநகத்வேன ச ஶிவே ![2]
த்ரிதா தத்தே வார்தாம் ஸுரபி ரிதி பாதோ கிரி ஸுதே ॥ 92

*மலைமகளே ! சிவே ! காமாக்ஷி ! தேவமாதரின் கூந்தலிலிருந்த பூக்களுடன் தொடர்பாலும், வணங்குபவரின் விருப்பத்தை எப்போதும் வழங்குவதாலும், தனது ஸ்பர்சத்தால் அசோகப்பூக்கள் உண்டாவதாலும் உன் திருவடி ஸுரபி என்ற புகழைப் பெறுகின்றது.*

*ஸுரபி மணமுள்ளது, காமதேனு, வஸந்த காலம். தேவமாதர் வணங்குகையில் அவர் தம் தலையில் சூடிய மலரின் மணம், திருவடிகளில் பரவுகிறது. அடியாரின் விருப்பத்தை நிறைவுறச் செய்வதால் காமதேனு. அசோகம் பூப்பது வஸந்தத்தில். இவ்வாறு மூன்று நிலைகளில் சரணம் ஸுரபி: (92)*

1. तव 2. தவ

महामोहस्तेनव्यतिकरभयात्पालयति यो
विनिक्षिप्तं स्वस्मिन्निजजनमनोरत्नमनिशम् ।
सरागस्योद्रेकात्सततमपि कामाक्षि रुचिरां
किमेवं पादोऽसौ किसलयरुचिं चोरयति ते ॥ ९३ ॥

மஹா மோஹ ஸ்தேந வ்யதிகர பயாத் பாலயதி யோ
விநிக்ஷிப்தம் ஸ்வஸ்மிந் நிஜஜந மநோ ரத்நம் அநிஶம் ।
ஸராகஸ்ய உத்ரேகாத் ஸததம் அபி காமாக்ஷி ருசிராம்
கிம் ஏவம் பாதோऽஸௌ கிஸலய ருசிம் சோரயதி தே ॥ 93

*காமாக்ஷி ! பெரும் மோகம் எனும் திருடனின் கைவரிசையிலுள்ள பயத்தால், தன்னிடம் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டிருந்த தன்னைச் சார்ந்தவரின மனமாகிய ரத்தினத்தை இரவுபகலாகக் காப்பாற்றுகிற உன் இந்தத் திருவடி, தன் செம்மை எனும் ஆசை மிகுதியால் துளிரின் ஒளியை வேகத்துடன் பறித்துச்செல்கிறதே ? ஏன் இப்படி ?*

*பாதுகாப்பாளனே திருடுவதா ? (93)*

सदा स्वादुंकारं विषयलहरीशालिकणिकां
समास्वाद्य श्रान्तं हृदयशुकपोतं जननि मे ।
कृपाजाले फालेक्षणमहिषि कामाक्षि रभसात्
गृहीत्वा रुन्धीथाश्चरणयुगली[1]पञ्जरपुटे ॥ ९४ ॥

ஸதா ஸ்வாதுங்காரம் விஷய லஹரீ ஶாலி கணிகாம்
ஸமாஸ்வாத்ய ஶ்ராந்தம் ஹ்ருதய ஶுக போதம் ஜநநி மே ।
க்ருபா ஜாலே பாலேக்ஷண-மஹிஷி ! காமாக்ஷி! ரபஸாத்
க்ருஹீத்வா ருந்த்தீதா: சரண யுகளீ [2]பஞ்ஜர புடே ॥ 94

*நெற்றியில் கண்ணுடையவரின் மனைவியே ! காமாக்ஷி ! என் தாயே ! இது இனியது !இது இனியது' எனத் தாவித்தாவி*

1. स्तवपदयुगी 2. *ஸ்தவபதயுகீ*

*நாட்டத்திற்குரிய பொருள் குவியலான தானிய மணியைப் பொறுக்கி உண்டு தளர்ந்த என் உள்ளமாகிய கிளிக்குஞ்சை கருணை எனும் வலையில் பிடித்து திருவடியாகிற கூண்டில் வேகமாக அடைப்பாயாக !*

*பெருங்காமனைச் சுட்டெரித்தவரையே அடக்கி ஆள்கிற நீ, சிறுகாமத்துக்கு அலைகிற என் உள்ளத்தை அடக்கமாட்டாயா ? (94)*

धुनानं कामाक्षि स्मरणलवमात्रेण जडिम-
ज्वरप्रौढिं गूढस्थिति निगमनैकुञ्जकुहरे ।
अलभ्यं सर्वेषां कतिचन लभन्ते सुकृतिनः
चिरादन्विष्यन्तस्तव चरणसिद्धौषधमिदम् ॥ ९५ ॥

துநாநம் காமாக்ஷி ! ஸ்மரண லவ மாத்ரேண ஜடிம-
ஜ்வர ப்ரௌடிம் கூட ஸ்திதி நிகம நைகுஞ்ஜ குஹரே ।
அலப்ப்யம் ஸர்வேஷாம் கதிசந லபந்தே ஸுக்ருதிந:
சிராத் அந்விஷ்யந்த: தவ சரண ஸித்தௌஷதம் இதம் ॥ 95

*காமாக்ஷி ! சிறிது தியானித்த உடனே, ஜடத்தன்மை என்ற ஜ்வரத்தின் தலைகனத்தை நீக்குவதும், வேதமெனும் கொடிவீட்டினுள் மறைந்துள்ளதும், எல்லோருக்கும் கிட்டாததுமான அந்த திருவடி என்ற பயன் தருவதில் தேர்ந்த பச்சிலையை வெகுநாட்களாகத் தேடி புண்ணியம் செய்தோரில் ஒரு சிலரே பெறுகின்றனர். (95)*

रणन्मञ्जीराभ्यां ललितगमनाभ्यां सुकृतिनां
मनोवास्तव्याभ्यां मथिततिमिराभ्यां नखरुचा ।
निधेयाभ्यां पत्या निजशिरसि कामाक्षि सततं
नमस्ते पादाभ्यां नलिनमृदुलाभ्यां गिरिसुते ॥ ९६ ॥

ரணந் மஞ்ஜீராப்ப்யாம் லலித கமநாப்ப்யாம் ஸுக்ருதிநாம்
மநோ வாஸ்தவ்யாப்ப்யாம் மதித திமிராப்ப்யாம் நக ருசா ।
நிதேயாப்ப்யாம் பத்யா நிஜ ஶிரஸி காமாக்ஷி ! ஸததம்
நமஸ்தே பாதாப்ப்யாம் நளிந ம்ருதுலாப்ப்யாம் கிரிஸுதே ॥ 96

*மலை மகளே ! காமாக்ஷி ! இனிது ஒலிக்கின்ற சிலம்புகளுடன் கூடியதும் மென்மையுடன் நடமாடுவதும், புண்ணியம் செய்தவரின் உள்ளத்தில் குடியிருப்பதும், நக ஒளியாக உள்ளத்து இருட்டைப் போக்குவதும் கணவரால் தன் சிரசில் தாங்கத்தக்கதும், தாமரை போன்று மென்மை உள்ளதுமான உனது திருவடிக்கு நமஸ்காரம். (96)*

सुरागे राकेन्दुप्रतिनिधिमुखे पर्वतसुते
चिराल्लभ्ये भक्त्या शमधनजनानां परिषदा।
मनोभृङ्गो मत्कः पदकमलयुग्मे जननि ते
प्रकामं कामाक्षि त्रिपुरहरवामाक्षि रमताम्॥ ९७॥

ஸுராகே ராகேந்து ப்ரதிநிதி முகே பர்வத ஸுதே !
சிராத் லப்யே பக்த்யா ஶம தந ஜநாநாம் பரிஷதா ।
மநோப் ப்ருங்கோ மத்க: பத கமல யுக்மே ஜநநி தே
ப்ரகாமம் காமாக்ஷி ! த்ரிபுர ஹர வாமாக்ஷி ரமதாம் ॥ 97

*திரிபுரமழித்தவரின் மனைவியே ! தாயே ! மலைமகளே ! பௌர்ணமீ சந்திரனுக் கொப்பான முகம் உள்ளவளே ! காமாக்ஷி ! நன்கு சிவந்தவையும் மனவடக்கத்தையே செல்வமாகக் கொண்டவரின் கூட்டத்தால் வெகு நாட்களின் வழிபாட்டால் பெறத்தக்கவையுமான உன் இரு திருவடிகளில் என் மனமாகிய தேனீ விரும்புமளவு, இன்புறட்டும். (97)*

शिवे[1] संवित्पाशैः शशिशकलचूडप्रियतमे
शनैर्गत्यागत्या जितसुरवरेभे[2] गिरिसुते।
यतन्ते सन्तस्ते चरणनलिना[3] लानयुगले
सदा बद्धुं चित्तप्रमदकरियूथं दृढतरम्॥[4] ९८॥

ஶிவே ![5] ஸம்வித் பாஶை: ஶஶி ஶகல சூட ப்ரிய தமே !
ஶநை: கத்யாகத்யா ஜித ஸுர வரேபே[6] கிரி ஸுதே!

1. महा 2. जितमदगजेन्द्रे 3. जननि चरणा 4. मनो व्यालं बद्धुं सततमपि कामाक्षि सुदृढम्। 5. மஹா 6. ஜித மதகஜேந்த்ரே

யதந்தே ஸந்த: தே சரண நளிநா[1] லாந யுகளே
ஸதா பத்த்தும் சித்த ப்ரமத கரி யூதம் த்ருட தரம்[2] ॥ 98

*பேரறிவின் வடிவமே! சந்திரனின் பிறையைச் சூடியவரின் மிக இனியவளே! மலை மகளே! தன் மெதுவான நடையின் போக்குவரத்தால் ஐராவதத்தை வென்றவளே! சிவே! நல்லோர் உன் தாமரையை ஒத்த திருவடியாகிற கட்டுத்தரி இரண்டில் உள்ளமாகிற மதம்பிடித்தயானையை மிகவும் திடமாக எப்போதும் கட்டமுயன்று வருகின்றனர். (98)*

यशः सूते मातर्मधुरकवितां पक्ष्मलयते
श्रियं दत्ते चित्ते कमपि परिपाकं प्रथयते ।
सतां पाशग्रन्थिं शिथिलयति ते किं न कुरुते
प्रपन्ने कामाक्ष्याः प्रणतिपरिपाटी चरणयोः ॥ ९९ ॥

யஶ: ஸூதே மாதர் மதுர-கவிதாம் பக்ஷ்மலயதே
ஶ்ரியம் தத்தே சித்தே கம் அபி பரிபாகம் ப்ரதயதே।
ஸதாம் பாஶக்ரந்திம் ஶிதிலயதி தே கிம் ந குருதே
ப்ரபந்நே காமாக்ஷி ப்ரணதி-பரிபாடீ சரணயோ: ॥ 99

*அன்னையே! காமாக்ஷியான உனது திருவடிகளில் பணிவதாகிய முறை, உன்னைச்சரணடைந்தவனிடம் எதை எதைத்தான் செய்யவில்லை? நல்லோருக்குப் புகழைத் தருகிறது. இனிய கவிதையை சிலிர்க்கச் செய்கிறது. செல்வம் தருகிறது. உள்ளத்தில் ஒரு கனிவை வெளிப்படுத்துகிறது. ஆசைச் சிக்கலைத் தளர்த்துகிறது. (99)*

मनीषां माहेन्द्रीं ककुभमिव ते कामपि दशां
प्रधत्ते कामाक्ष्याश्चरणतरुणादित्यकिरणः[3] ।
यदीये संपर्के धृतरसमरन्दा कवयतां
परीपाकं धत्ते परिमलवती सूक्तिनलिनी ॥ १०० ॥

---

*1. ஜனனி சரணா 2. மநோ வ்யாலம் பத்த்தும் ஸததமபிகாமாக்ஷி ஸுத்ருடம் 3.* चरणतरुणादित्य किरणैः, सुजनचरणादित्यकिरणः

மநீஷாம் மாஹேந்த்ரீம் ககுபம் இவ தே காமபி தஶாம்
ப்ரதத்தே காமாக்ஷ்யா: சரண தருணாதித்ய கிரண:[1] ।
யதீயே ஸம்பர்கே த்ருத ரஸமரந்தா கவயதாம்
பரீபாகம் தத்தே பரிமளவதீ ஸூக்தி நளிநீ ॥ 100

*காமாக்ஷியின் சரணம் என்கிற இளஞ்சூரிய ஒளிக்கதிர், கிழக்கு திக்கை ஒளியடைவிப்பது போல் என் அறிவை ஒப்பற்றதொரு தனிநிலையை அடையச் செய்கிறது. அதன் தொடர்பால், கவிகளின் கவிதையாகிற தாமரை தேனைப்போல் சுவைகொண்டு நறு மணத்துடன் ஒரு தனிக்கனிவைப் பெறுகிறது (100)*

पुरा माराराति: पुरमजयदम्ब स्तवशतै:
प्रसन्नायां यस्य[2] त्वयि तुहिनशैलेन्द्रतनये ।
परं तत्[3] कामाक्षि स्फुरतु तरसा कालसमये
समायाते मातर्मम मनसि पादाब्जयुगळम् ॥ १०१ ॥[4]

புரா மாராராதி: புரம் அஜயத் அம்ப ஸ்தவ-ஶதை:
ப்ரஸந்நாயாம் யஸ்ய[5] த்வயி துஹிந-ஶைலேந்தரதநயே ।
பரம் தத்[6] காமாக்ஷி ஸ்புரது தரஸா கால-ஸமயே
ஸமாயாதே மாத: ! மம மநஸி பாதாப்ஜ யுகளம்[7]॥ 101

*தாயே ! காமாக்ஷியன்னையே ! பனிமலையரசனின் மகளே ! முன்பு மன்மதனின் எதிரியான சிவன் நூற்றுக்கணக்கான துதிகளால் மகிழ்ந்து நீ அருள்புரிந்த போது, முப்புரத்தையும் வென்றார். அதனால் காலனின் காலம் நெருங்கும் போது என்மனத்தில் உன்திருவடிகள் வெலிவுடன் விளங்கட்டும்.*

*நூற்றுக்கணக்கான துதிகளால் உன்னைப் பாடிய சிவன் உன் அருள் பெற்றார். நானும் உன்னருளால் இந்த சதகத்தைப் பாடியுள்ளேன். காலன் நெருங்கும் போது உன் திருவடிகள் காப்பாற்றட்டும். (101)*

1. சரணதருணாதித்ய கிரணை:, ஸுஜந சரணாதித்யகிரண: 2. सत्यां, 3. अतस्ते
4. समायाते स्वान्ते मम तव पदांभोजयुगलम् 5. ஸத்யாம். 6. அதஸ்தே. 7. ஸமாயாதே ஸ்வாந்தே மம தவ பதாம்ப்போஜயுகலம்.

पदद्वन्द्वं मन्दं गतिषु निवसन्तं हृदि सतां
गिरामन्ते भ्रान्तं कृतकरहितानां परिबृढे ।
जनानामानन्दं जननि[1] जनयन्तं प्रणमतां
त्वदीयं कामाक्षि प्रतिदिनमहं नौमि विमलम् ॥ १०२ ॥

பத த்வந்த்வம் மந்தம் கதிஷு நிவஸந்தம் ஹ்ருதி ஸதாம்
கிராம் அந்தே ப்ப்ராந்தம் க்ருதக ரஹிதாநாம் பரிப்ருடே ।
ஜநாநாம் ஆநந்தம் ஜநநி![2] ஜநயந்தம் ப்ரணமதாம்
த்வதீயம் காமாக்ஷி! ப்ரதி திநம் அஹம் நௌமி விமலம் ॥ 102

*மிகச் சிறந்தவளே ! காமாக்ஷி ! தாயே ! நடையில் மென்மையுள்ளதும், நல்லோர் உள்ளத்தில் வசிப்பதும், செயற்கையாகத் தோன்றாத வேத வசனங்களின் நடுவே சுற்றிவருவதும், வணங்குகிற மாந்தருக்கு ஆனந்த முண்டாக்குவதும், அப்பழுக்கற்றதுமான உன் திருவடி (இரட்டை)யைத் தினமும் வணங்குகிறேன் (102)*

इदं यः कामाक्ष्याश्चरणनलिनस्तोत्रशतकं
जपेन्नित्यं भक्त्या निखिलजगदाह्लादजनकम् ।
स विश्वेषां वन्द्यः सकलकविलोकैकतिलकः
चिरं भुक्त्वा भोगान्परिणमति चिद्रूपकलया ॥ १०३ ॥

இதம் ய: காமாக்ஷ்யா: சரண நளிந ஸ்தோத்ர ஶதகம்
ஜபேந் நித்யம் பக்த்யா நிகில ஜகத் ஆஹ்லாத ஜநகம் ।
ஸ விச்வேஷாம் வந்த்ய: ஸகல கவி லோகைக திலக:
சிரம் ப்புக்த்வா போகாந் பரிணமதி சித் ரூப கலயா ॥ 103

*உலகமனைத்திற்கும் பேரானந்தம் தருகிற காமாக்ஷியின் திருவடித் தாமரைப்பற்றிய நூறு துதிகளையும் தினமும் பக்தியுடன் ஜபிப்பவன் உலகினரால் வணங்கத்தக்கவனும், எல்லாக்கவிகளின் உலகிற்கு நெற்றித்திலகமுமாகி நீண்டகாலம் இம்மைச்சுகம்*

1. जगति 2. ஜகதி.

*பெற்றனுபவித்து சித்ரூபிணியின் கலையாக வடிவாக ஆகின்றான். (103)*

*திருவடிகளில் வணங்கி நிற்பவன் எல்லா நன்மைகளையும் பெறுகிறான். மமதையும் அகந்தையும் நீங்கி விருப்பு வெறுப்பின்றி ஸமநோக்குடன் உலகுடன் பழகுவதால் அமைதி பெறுகிறான்.*

*திருவடியில் வணங்கும் போது சிவபெருமானின் அருகாமையும் கிடைக்கிறது. மங்களம் சூழ ஆனந்தம் பெருக்கெடுத்து ஓடுகிறது.*

பாதாரவிந்த சதகம் முற்றிற்று.

श्रीगुरुभ्यो नमः

श्रीकामाक्ष्यै नमः

# मूकपञ्चशती

## ४. मन्दस्मित शतकम्

# மூகபஞ்சசதீ

## 4. மந்தஸ்மித சதகம்

बध्नीमो वयमञ्जलिं प्रतिदिनं बन्धच्छिदे देहिनां
कन्दर्पागमतन्त्रमूलगुरवे कल्याणकेलीभुवे ।
कामाक्ष्या घनसारपुञ्जरजसे कामद्रुहश्चक्षुषां
मन्दारस्तबकप्रभामदमुषे मन्दस्मितज्योतिषे ॥ १ ॥

பத்த்நீமோ வயம் அஞ்ஜலிம் ப்ரதிதிநம் பந்த்தச்சிதே தேஹிநாம்
கந்தர்ப்பாகம தந்த்ரமூல குரவே கல்யாண கேளீபுவே ।
காமாக்ஷ்யா கநஸாரபுஞ்ஜரஜஸே காம த்ருஹஶ்சக்ஷுஷாம்
மந்தார ஸ்தபக ப்ரபா மத முஷே மந்தஸ்மித ஜ்யோதிஷே ॥ 1

*மாந்தரின் ஸம்ஸாரபந்தத்தை நீக்குவதும், காமசாஸ்திரத்தின் ஆதிகுருவும், மங்களமான லீலைகளின் இருப்பிடமும், காமனின் எதிரியான பரமசிவனது கண்களுக்குப் பச்சைக்கர்பூரத்தின் தூள்போல் குளிர்ச்சி தருவதும் மந்தாரைப் பூங்கொத்தின் எழிலின் இறுமாப்பைப் பறிப்பதுமான காமாக்ஷியின் புன் சிரிப்பின் ஒளிக்கு இருகைகள் கூப்புவோம்.*

*மென்மைமிக்க சிரிப்பு மந்தஸ்மிதமாகும். உதடுவிரியாமல் உதடுகளின் லேசான சுழிப்பால் வெளியாவது. கண்களும் மூக்கும் புருவங்களும் இதில் பங்குபெறும். முகமே மலர்ந்து விரியும். அன்பும் கருணையும் மென்மையும் அழகும் வெளிப்படும். சிரிப்பு ஒலியாக எழாது. பார்ப்பவர் கண்ணிற்கு*

விருந்து. அருள் சொரிகிற முகத்தின் மலர்ச்சியானதால் - பற்றற்ற நிலேயும் அமைதியும் உணரப்பெறும். தேவியின் அருளால் இது காறும் மனிதனேப் பிணேத்திருந்த வெளிப்பொருளின் கவர்ச்சி குன்றி மனச்சலனம் நின்று உள்நோக்கும் ஆத்மதர்சனமும் பெற்றதும், பிறப்பும் இறப்பும் தொடர்கிற கர்மபந்தம் விலகும். புன்சிரிப்பை அனுபவிக்கச் சிவனும் அருகில் இருப்பதால் இருவரின் அருளும் எளிதில் கிடைக்கும். (1)

सध्रीचे नवमल्लिकासुमनसां नासाग्रमुक्तामणेः
आचार्याय मृणालकाण्डमहसां नैसर्गिकाय द्विषे ।
स्वर्धुन्या सह युध्वने हिमरुचेरर्धासनाध्यासिने
कामाक्ष्याः स्मितमञ्जरीधवलिमाद्वैताय तस्मै नमः ॥ २ ॥

ஸத்த்ரீசே நவமல்லிகா ஸுமநஸாம் நாஸாக்ர- முக்தாமணே:
ஆசார்யாய ம்ருணாள காண்ட மஹஸாம் நைஸர்கிகாய
த்விஷே ।
ஸ்வர்த்துந்யா ஸஹ யுத்த்வநே ஹிமருசே:
அர்த்தாஸநாத்த்யாஸிநே
காமாக்ஷ்யா: ஸ்மிதமஞ்ஜரீ - தவளிமாத்வைதாய தஸ்மை நம: ॥ 2

குடமல்லிகைப்பூவிற்கு ஒப்பானதும், மூக்கின் நுனியில் தொங்குகிற புல்லாக்கு முத்துக்கு வெண்மைபற்றிப் போதிக்கும் ஆசிரியரும், தாமரைத்தண்டின் உள்ளொளிக்கு இயற்கையாக எதிரியானதும், ஆகாசகங்கையோடு (வெண்மைக்கும் குளிர்ச்சிக்கும்) போரிடுவதும், சந்திரனுடன் முகத்தைப் பங்கிட்டுப் பாதியிடத்தில் அமர்ந்ததுமான பூத்த சிரிப்புக்கொத்தின் இணேயற்ற அந்த வெண்மைக்கு நமஸ்காரம்.

புன் சிரிப்பு வெண்ணிறமுள்ளது - மல்லிகைப்பூ, முத்து, கர்பூரம், தாமரைத்தண்டின் உட்பகுதி, ஆகாசகங்கை, சந்திரஒளி, இவைகளுடன் போட்டியிடுகிற வெண்மை. கள்ளமாகச் சிரிக்காமல், கபடமற்றமன நிலேயில் சிறுகுழந்தையின் மழலேச் சிரிப்புபோல் மனத்தை நெகிழச்செய்கிற சிரிப்பு. தலேயில் தேவி அஷ்டமீ சந்திரனேச் சூடியுள்ளாள். முகத்தின் மேற்பகுதியை

*அர்த்த சந்திரனின் நிலவும் கீழ்பகுதியைப் புன் சிரிப்பும் பங்கிட்டுக் கொண்டுள்ளன. ஆகாசகங்கை நக்ஷத்திர வீதியில் பேரொளிமிக்க ஒளிப்பெருக்காக ஓடுகிருள். பூமியை அடைந்ததும் நீர்வடிவம் பெறுகிருள். (2)*

कर्पूरद्युतिचातुरीं अतितरां अल्पीयसीं कुर्वती
दौर्भाग्योदयमेव संविदधती दौषाकरीणां त्विषाम् ।
क्षुल्लानेव मनोज्ञमल्लिनिकरान्फुल्लानपि व्यञ्जती
कामाक्ष्या मृदुलस्मितांशुलहरी कामप्रसूरस्तु मे ॥ ३ ॥

கர்ப்பூர த்யுதி சாதுரீம் அதிதராம் அல்பீயஸீம் குர்வதீ
தௌர்ப்பாக்யோதயமேவ ஸம்விதததீ தௌஷாகரீணாம் த்விஷாம் ।
க்ஷுல்லாநேவ மனோஜ்ஞ மல்லி நிகராந் புல்லாநபி வ்யஞ்ஜதீ
காமாக்ஷ்யா ம்ருதுள ஸ்மிதாம்ஶு லஹரீ காமப்ரஸூரஸ்து மே ॥ 3

*கர்பூரத்தின் ஒளியின் திறமையை மிகவும் அளவில் குன்றச் செய்வதும், சந்திரனின் ஒளிமண்டலத்திற்கு துர்பாக்கிய நிலையை உண்டாக்குவதும், மனத்தைக் கவர்கிற நன்கு மலர்ந்த மல்லிகைப் பூக்களைத் தாழ்ந்தவையாகக் காட்டுவதுமான காமாக்ஷியின் மென்மை மிக்க புன்னகையின் அலைவரிசை எனது விருப்பங்களைப் பெற்றுத் தரட்டும்.*

*புன்னகை மெல்லிய அலைவரிசையாக வெளியாகிறது. (3)*

या पीनस्तनमण्डलोपरि लसत्कर्पूरलेपायते
या नीलेक्षणरात्रिकान्तिततिषु ज्योत्स्नाप्ररोहायते ।
या सौन्दर्यधुनीतरङ्गततिषु व्यालोलहंसायते
कामाक्ष्याः शिशिरीकरोतु हृदयं सा मे स्मितप्राचुरी ॥ ४ ॥

யா பீந ஸ்தந மண்டலோபரி லஸத் கர்பூர லேபாயதே
யா நீலேக்ஷண ராத்ரி காந்தி ததிஷு ஜ்யோத்ஸ்நா
ப்ரரோஹாயதே ।
யா ஸௌந்தர்ய துநீ தரங்க ததிஷு வ்யாலோல ஹம்ஸாயதே
காமாக்ஷ்யா: ஶிஶிரீகரோது ஹ்ருதயம் ஸா மே ஸ்மித ப்ராசுரீ ॥ 4

*காமாக்ஷியின் புன்சிரிப்பின் நிறைவு நிலை எனது இதயத்தைக் குளிரச் செய்யட்டும். அது தேவியின் பருத்த மார்பகத்தின் மீது பளிச்சென்று தெரிகிற கர்பூரப்பூச்சாகிறது. கருநிற முள்ள கடாக்ஷ ஒளியாகிய இரவுகளில் புதிய குருத்து நிலவாகத் தோன்றுகிறது. அழகெனும் ஆற்று அலைவரிசைகளில் இங்குமங்கும் நிலையாமல் நீந்துகிற அன்னப்பறவையாகிறது. (அது இதயத்தைக் குளிர்விக்கட்டும்)*

*புன் சிரிப்பின் வெண்மை மார்பகம் வரை பரவுகிறது. கடாக்ஷத்தின் காரொளியின் இடையே புன்சிரிப்பின் வெண்மையும் நிலவுகிறது. முக அழகு புன்சிரிப்பால் சிறப்புறுகிறது. (4)*

येषां गच्छति पूर्वपक्षसरणिं कौमुद्वतः श्वेतिमा
येषां संततमारुरुक्षति तुलाकक्ष्यां शरच्चन्द्रमाः ।
येषामिच्छति कम्बुरप्यसुलभां अन्तेवसत्प्रक्रियां
कामाक्ष्या ममतां हरन्तु मम ते हासत्विषां अङ्कुराः ॥ ५ ॥

யேஷாம் கச்சதி பூர்வபக்ஷ ஸரணிம் கௌமுத்வத: ஶ்வேதிமா
யேஷாம் ஸந்ததம் ஆருருக்ஷதி துலா கக்ஷ்யாம் ஶரத் சந்த்ரமா: ।
யேஷாமிச்சதி கம்புரப்யஸுலபாம் அந்தே வஸத் ப்ரக்ரியாம்
காமாக்ஷ்யா மமதாம் ஹரந்து மம தே ஹாஸ த்விஷா மங்குரா: ॥ 5

*வாதத்தில் பூர்வபக்ஷம் போல், ஆம்பலின் வெண்மை புன்சிரிப்பிற்கு முன்னோடி. சரத்ருதுவின் சந்திரன் இதற்கு இணை என்ற நிலையை மெல்ல எம்பிப்பிடிக்க விரும்புகிறான். சங்கும் இதன் கூட இருந்து இதனிடமிருந்து பயிற்சி பெற விரும்புகிற மாணுக்கனுகிய நிலையை அடைய விரும்புகிறது. காமாக்ஷியின் இத்தகைய சிரிப்பின் ஒளிக்கதிர்கள் என்மமதையைப் போக்கட்டும்.*

*வாதம் தொடங்கியதும் எதிர்கட்சியின் வாதம் முதலிடம் பெறும். புன் சிரிப்பின் உயர்வை ஏற்க அது விரும்பாமல் ஆம்பல் தான் தான் வெண்மையின் சிறப்புடையது என பூர்வபக்ஷமாக வாதிட்டது. மத்யஸ்தர்கள் புன் சிரிப்பின் வெண்மைபற்றி கேட்டறிந்து, ஆம்பலின் வாதம் பொருந்தாதெனக் கூறினர்.*

*ஆம்பல் தன் பூர்வபக்ஷநிலையால் வருந்தியது, சந்திரனும் சமநிலை பெற இன்றும் முயன்று கொண்டிருக்கிறான். சங்கோ சிரிப்பிடமே வெண்மையடையும் வழியைக் கற்றுக் கொண்டுவருகிறது. புன்சிரிப்பிற்கு ஈடேது ? (5)*

आशासीमसु संततं विदधती नैशाकरीं व्याक्रियां
काशानां अभिमानभङ्गकलनाकौशल्यं आबिभ्रती ।
ईशानेन विलोकिता सकुतुकं कामाक्षि ते कल्मष -
क्लेशापायकरी चकास्ति लहरी मन्दस्मितज्योतिषाम् ॥ ६ ॥

ஆஶா ஸீமஸு ஸந்ததம் விதததீ நைஶாகரீம் வ்யாக்ரியாம்
காஶாநாம் அபிமானபங்ககலனகௌஶல்யம்
ஆபிப்ப்ரதீ ।
ஈஶாநேந விலோகிதா ஸகுதுகம் காமாக்ஷி தே கல்மஷ-
க்லேஶாபாயகரீ சகாஸ்தி லஹரீ மந்தஸ்மித ஜ்யோதிஷாம் ॥ 6

*காமாக்ஷியே ! திசைகளின் எல்லைகளில் சந்திரனின் செயல்முறையைச் செய்து காட்டுவதும். நாணல் பூக்களின் தன்மானத்தைக்குலைப்பதில் திறமை கொண்டதும், பரமசிவனால் ஆர்வத்துடன் காணப்பெறுவதும் தீவினைகளால் ஏற்படுகிற துன்பங்களைப் போக்குவதுமான உன் புன்சிரிப்பலை நன்கு விளங்குகிறது.*

*தேவியின் புன் சிரிப்பொளி திக்கெட்டும் பரவி நிற்கிறது. சந்திரன் தோன்றாத இடங்களிலும் நாட்களிலும் தானே நிலவாகி ஒளிதருகிறது. பாபத்தின் துன்பம் விளைவிக்கிற சக்தியை அழிக்கிறது. (6)*

आरूढस्य समुन्नत स्तनतटी साम्राज्य सिंहासनं
कन्दर्पस्य विभोर्जगत्त्रय जयप्राकट्य मुद्रानिधेः ।
यस्याश्चामरचातुरीं कलयते रश्मिच्छटा चञ्चला
सा मन्दस्मितमञ्जरी भवतु नः कामाय कामाक्षि ते ॥ ७ ॥

ஆரூடஸ்ய ஸமுந்நத ஸ்தநதட ஸாம்ராஜ்யஸிம்ஹாஸநம்
கந்தர்பஸ்ய விபோ: ஜகத்த்ரய ஜயப்ராகட்யமுத்ராநிதே: ।
யஸ்யா: சாமரசாதுரீம் கலயதே ரஶ்மிச்சடா சஞ்சலா
ஸா மந்தஸ்மித மஞ்ஜரீ பவது ந: காமாய காமாக்ஷி ! தே ॥ 7

*நன்கு மேடிட்ட மார்பகமாகிய பேரரசின் ஸிம்ஹாஸனத்தில் ஏறியமர்ந்தவனும், மூவுலகின் வெற்றியைக் கொண்டாடும் வகையில் விருதுகள் பல பெற்றவனும் பெருஞ்செல்வாக்கு கொண்டவனுமான மன்மதனுக்கு (தேவியின் புன்னகையின்) முன்னும் பின்னும் அசைந்து கொண்டேயிருக்கிற ஒளிவீச்சு சாமரம் வீசுகிறது. அந்தப்புன் சிரிப்புக் கொத்து நம் விருப்பங்களின் நிறைவு தருவதாக ஆகட்டும்.*

*புன் சிரிப்பு அலை போன்று வீசிக்கொண்டிருக்கிறது. மன்மதனுக்குச் சாமரம் வீசுவது போல் காட்சி தருகிறது. (7)*

शंभोर्या परिरम्भसंभ्रमविधौ नैर्मल्यसीमानिधिः
गैर्वाणीव तरङ्गिणी कृतमृदुस्यन्दां कलिन्दात्मजाम् ।
कल्माषीकुरुते कलङ्कसुषमां कण्ठस्थलीचुम्बिनीं
कामाक्ष्याः स्मितकन्दली भवतु सा कल्याणसन्दोहिनी ॥ ८ ॥

ஶம்போர் யா பரிரம்ப்பஸம்ப்ரம விதௌ நைர்மல்ய ஸீமாநிதி:
கைர்வாணீவ தரங்கிணீ க்ருதம்ருதுஸ்யந்தாம் களிந்தாத்மஜாம் ।
கல்மாஷீகுருதே களங்கஸுஷமாம் கண்ட்ட ஸ்த்தலீசும்பிநீம்
காமாக்ஷ்யா: ஸ்மித கந்தளீ பவது ஸா கல்யாண ஸந்தோஹிநீ ॥ 8

*அப்பழுக்கற்ற நிலையின் எல்லையாகிய (கலப்பற்ற) வெண்ணிறம் கொண்ட அது (தேவியின் புன்சிரிப்பாகிய பூங்கொத்து) மந்த நடையுடன் பெருகி ஓடி வருகிற யமுனையைத் தேவநதியான கங்கை (கட்டி அணைப்பது) போல், (சிவன் தேவியைக்) கட்டியணைத்த பரபரப்பில் சிவனது கழுத்தில் நன்கு அப்பிக்கொண்டிருந்த கருமையழகு, தேவியின் முகத்தில் (புன் சிரிப்பின் வெண்மையும் சிவனது கழுத்துக் கருப்பும்) கலந்து நிறக்கலவையுள்ளதாகச் செய்தது. அந்தக் காமாக்ஷியின் புன் சிரிப்புக்கொத்து மங்களங்களை நிரம்ப வழங்கட்டும். (8)*

जेतुं हारलतामिव स्तनतटीं संजग्मुषी सन्ततं
गन्तुं निर्मलतामिव द्विगुणितां मग्ना कृपास्रोतसि ।
लब्धुं विस्मयनीयतामिव हरं रागाकुलं कुर्वती
मञ्जुस्ते स्मितमञ्जरी भवभयं मथ्नातु कामाक्षि मे ॥ ९ ॥

ஜேதும் ஹாரலதாமிவ ஸ்தந தடீம் ஸஞ்ஜக்முஷீ ஸந்ததம்
கந்தும் நிர்மலதாமிவ த்விகுணிதாம் மக்நா க்ருபா ஸ்ரோதஸி ।
லப்த்தும் விஸ்மயநீயதாமிவ ஹரம் ராகாகுலம் குர்வதீ
மஞ்ஜுஸ்தே ஸ்மித மஞ்ஜரீ பவபயம் மத்நாது காமாக்ஷி ! மே ॥ 9

*காமாக்ஷி ! கழுத்திலுள்ள முத்துமாலையைத் தன்னுடையதாக்கிக் கொள்ள அடிக்கடி மேடிட்ட மார்பகத்தை நன்கு அடைவதும், அப்பழுக்கற்ற இரட்டிப்பு வெண்ணிறம் பெற கிருபை அருவியில் ஆழ்ந்து நீராடியதும், வியப்பதற்குரிய பெருமை பெற சிவனை காதலால் சிவந்து தன்னிலே இழக்கச் செய்வதுமான, உன் புன் சிரிப்பாகிய பூங்கொத்து என் ஸம்ஸாரபந்தத்தை நீக்கட்டும்.*

*வெண்ணிறமுள்ள புன் சிரிப்பு தன் வெண்மையை மீண்டும் சிறப்பிக்க (1) தேவியின் மார்பில் துலங்குகிற முத்துமாலையைப் பெற விழைந்தது. (2) வெண்மையை இரண்டு மடங்காக்க தெளிவு மிக்க கருணையருவியில் மூழ்கி எழுந்தது. (3) தன் பெருமையைப் பலரறியச் செய்ய வெண்ணிறமிக்க சிவனது மேனியைக் காதலால் சிவக்கச் செய்து ஸ்வதந்திரமாயிருந்தவரைத் தன் வசமாக்கியது. தன் அழகிலுள்ள இறுமாப்பால் புன் சிரிப்பு மார்பகம் வரைதாழ்ந்து பரவித் தன் பெருமையை மார்பகத்திடம் தெரிவிக்கிறது போலும். அப்படி வரும்போது மார்பணியான முத்தாரத்தைத் தன்னுடைமையாக்க முற்படுகிறது. இப்படிக் கூடாததைக் கூட்டிவைப்பதில் இடையறுமல் முயன்று திறமை காட்டிய புன்னகை, நீக்குவதற்கரிய என் ஸம்ஸாரபந்தத்தைப் போக்கட்டும். (9)*

श्वेतापि प्रकटं निशाकररुचां मालिन्यमातन्वती
शीतापि स्मरपावकं पशुपतेः सन्धुक्षयन्ती सदा ।
स्वाभाव्यादधराश्रितापि नमतां उच्चैर्दिशन्ती गतिं
कामाक्षि स्फुटमन्तरा स्फुरतु नस्त्वन्मन्दहासप्रभा ॥ १० ॥

ஶ்வேதாபி ப்ரகடம் நிஶாகர-ருசாம் மாலிந்யம் ஆதந்வதீ
ஶீதாபி ஸ்மர-பாவகம் பஶுபதே: ஸந்துக்ஷயந்தீ ஸதா ।
ஸ்வாபாவ்யாத் அதராஶ்ரிதாபி நமதாம் உச்சைர் திஶந்தீ கதிம்
காமாக்ஷி ! ஸ்புடம் அந்தரா ஸ்புரது ந: த்வன் மந்தஹாஸ-ப்ரபா ॥ 10

*காமாக்ஷி ! உன் மந்த ஹாஸ ஒளி, வெண்ணிறம் கொண்டதாயினும் நிலவின் ஒளியில் அழுக்கைப் படரச் செய்கிறது. தான் குளிர்ந்ததெனினும் சிவனிடம் மன்மதத்தீயைக் கொழுந்து விட்டெரியத் தூண்டுகிறது. இயல்பால் கீழுதட்டில் (கீழ் நிலையில்) நிலைத்திருந்தும் தன்னை வணங்குபவர்களுக்கு மேனிலையை வழங்குகிறது. அந்த ஒளி என் உள்ளத்தில் நன்கு விளங்கட்டும்.*

*தன்னிலைக்கு மாறுபட்ட நிலையை இயல்பைமீறி வழங்கும் பாங்கை சொல்நயம் விளக்குகிறது. (10)*

वक्त्रश्रीसरसीजले तरलितभ्रूवल्लिकल्लोलिते
कालिम्ना दधती कटाक्षजनुषा माधुव्रतीं व्यापृतिम् ।
निर्निद्रामलपुण्डरीककुहनापाण्डित्यमाबिभ्रती
कामाक्ष्याः स्मितचातुरी मम मनः कातर्यं उन्मूलयेत् ॥ ११ ॥

வக்த்ரஶ்ரீஸரஸீ ஜலே தரளிதப்ப்ரூவல்லி-கல்லோலிதே
காளிம்நா தததீ கடாக்ஷ ஜநுஷா மாதுவ்ரதீம் வ்யாப்ருதிம் ।
நிர்நித்ராமலபுண்டரீக குஹநாபாண்டித்யம் ஆபிப்ப்ரதீ
காமாக்ஷ்யா: ஸ்மிதசாதுரீ மம மந: காதர்யம் உந்மூலயேத் ॥ 11

*புருவக்கொடியின் நிலையற்ற வளைந்து நிமிர்கிற அலை அசைவால் தானும் அலைமோதுகிற நிலைக்கு வந்த (தேவியின்) முக அழகாகிய குளத்து நீரில், கடைக்கண் பார்வையில் தோன்றிய கருநிற ஒளியாகிய வண்டுகள் மொய்ப்பதைக் காட்டுவதும், நித்திரை நீங்கிய (நன்கு மலர்ந்த) வெண்தாமரையை ஏமாற்றி அதன் காந்தியைப் பறிப்பதில் தேர்ந்ததுமான உன்புன்சிரிப்பின் திறமை என்மனத்தில் குடி கொண்டிருக்கிற பயத்தைக் வேருடன் களையட்டும்.*

*புருவம் வளைவதற்கேற்ப கடைக்கண்பார்வை அசைகிறது. பார்வையில் நிறைந்த கருப்பு. வெண் தாமரைபோன்ற வெண்*

சிரிப்பின் வெண்மை. அருள் நிறைந்த பார்வையும் மனத்தை லேசாக்குகிற சிரிப்பும் பயத்தைப்போக்கும். *(11)*

नित्यं बाधितबन्धुजीवमधरं मैत्रीजुषं पल्लवैः
शुद्धस्य द्विजमण्डलस्य च तिरस्कर्तारमप्याश्रिता।
या वैमल्यवती सदैव नमतां चेतः पुनीतेतरां
कामाक्ष्या हृदयं प्रसादयतु मे सा मन्दहासप्रभा॥ १२॥

நித்யம் பாதித பந்த்துஜீவம் அதரம் மைத்ரீஜுஷம் பல்லவை:
சுத்த்தஸ்ய த்விஜமண்டலஸ்ய ச திரஸ்கர்தாரம் அப்யாஸ்ரிதா ।
யா வைமல்யவதீ ஸதைவ நமதாம் சேத: புநீதேதராம்
காமாக்ஷ்யா: ஹ்ருதயம் ப்ரஸாதயது மே ஸா மந்தஹாஸப்ரபா ॥ 12

*எப்போதும் 'பந்து ஜீவனை'ப் பாதிப்பது, 'பல்லவ'ங்களுடன் நட்புடன் கூடியது, தூய 'த்விஜ மண்டல'த்தை அவமதிப்பது, 'அதர'த்தை அண்டியது, ஆனால் அப்பழுக்கற்றது, எப்போதும் தேவியை வணங்குபவரின் மனத்தைத் தூயதாக்குவது, இத்தகைய காமாக்ஷியின் புன் சிரிப்பொளி என் இதயத்தைத் தெளிவடையச் செய்யட்டும்.*

*இது சிலேடை. பந்து ஜீவம் பல்லவம் த்விஜமண்டலம் அதரம் என்பவை இருபொருள் கொண்டவை. பந்துஜீவம் - உற்றார் உறவினரின் உயிர், செம்பரத்தம்பூ, பல்லவம் - துஷ்டர், துளிர். த்விஜமண்டலம் - அந்தணர் சமூகம், பற்கள் வரிசை, அதரம் - கீழானவன், உதடு. இதனால் பிரமை ஏற்படுகிறது. உற்றார் உறவினரைப் பாதித்து துஷ்டருடன் நட்புகொண்டு அந்தணர் சமூகத்தைப் பழித்துக், கீழானவனிடம் அண்டிய இவன் அப்பழுக்கற்றவனா ? மனத்தைத் தூய தாக்குபவனா ? இதயத்தைத் தெளிவடையச் செய்பவனா ? என்ற கேள்விகள் எழும். மாற்றுப்பொருள் கொள்ள விடை இதோ. செம்பரத்தம்பூவின் செம்மையைப் பாதிப்பதும் துளிர்களுடன் நட்பு பூண்டதும் தூயபற்களின் வெண்மையைப் பழிப்பதும், உதட்டை அண்டி நிற்பதுமான புன்சிரிப்பு தூய்மை மிக்கது. வணங்குபவரின் மனத்தை நிர்மலமாக்குவது. உள்ளத்தைத் தெளிவடையச் செய்வது. சிலேடைநயம் சிந்திக்கச் சிந்திக்க இனிக்கும். (12)*

द्रुह्यन्ती तमसे मुहुः कुमुदिनीसाहाय्यमाबिभ्रती
यान्ती चन्द्रकिशोरशेखरवपुःसौधाङ्गणे प्रेङ्खणम् ।
ज्ञानाम्भोनिधिवीचिकां सुमनसां कूलङ्कषां कुर्वती
कामाक्ष्याः स्मितकौमुदी हरतु मे संसारतापोदयम् ॥ १३ ॥

த்ருஹ்யந்தீ தமஸே முஹு: குமுதிநீஸாஹாய்யம் ஆபிப்ப்ரதீ
யாந்தீ சந்த்ரகிஶோரஶேகரவபுஸ்ஸௌதாங்கணே ப்ரேங்க்கணம் ।
ஞானம்ப்போநிதி-வீசிகாம் ஸுமநஸாம் கூலங்கஷாம் குர்வதீ
காமாக்ஷ்யா: ஸ்மிதகௌமுதீ ஹரது மே ஸம்ஸாரதாபோதயம் ॥ 13

*அடிக்கடி அறியாமையிருளை எதிர்ப்பதும், ஆம்பல்குளத்திற்கு உதவி புரிவதும், இளஞ்சந்திரனைச் சூடியவரின் மேனியாகிற உப்பரிகை அங்கணத்தில் உலாவருவதும், ஞானக்கடலின் அலையை கரையடையச் செய்து நல்லோரிடம் கொண்டு சேர்ப்பதுமான காமாக்ஷியின் புன்னகை எனும் நிலா ஸம்ஸாரதாபம் உதிப்பதை நீக்கட்டும்.*

*ஆம்பல்குளம் நிலவைக்கண்டதும் பூமலர்ந்து அழகு பெறும். நல்லோர் இருக்குமிடம் தேடி ஞானக்கடலலை பாயும். ஸம்ஸாரதாபத்தை வந்தபின் நீக்குவதை விட அதை உதிக்காமலே தடுப்பது கருணை புரிகிற மிகச் சிறந்த உதவி. (13)*

काश्मीरद्रवधातुकर्दमरुचा कल्माषतां बिभ्रती
हंसौघैरिव कुर्वती परिचितिं हारीकृतैर्मौक्तिकैः ।
वक्षोजन्मतुषारशैलकटके सञ्चारमातन्वती
कामाक्ष्या मृदुलस्मितद्युतिमयी भागीरथी भासते ॥ १४ ॥

காஶ்மீரத்ரவதாது கர்தமருசா கல்மாஷதாம் பிப்ப்ரதீ
ஹம்ஸௌகைரிவ குர்வதீ பரிசிதிம் ஹாரீக்ருதைர் மௌக்திகை: ।
வக்ஷோஜந்மதுஷாரஶைலகடகே ஸஞ்சாரமாதந்வதீ
காமாக்ஷ்யா ம்ருதுளஸ்மிதத்யுதிமயீ பாகீரதீ பாஸதே ॥ 14

*காமாக்ஷியின் மென்மைமிக்க புன் சிரிப்பின் ஒளியே உருவானதொரு கங்கை, குங்குமப்பூக்குழம்பால் கலங்கிச் செஞ்சேறாகியதால் பல நிறக்கலவை கொண்டுள்ளதாக, அன்னப்பறவைகளின் கூட்டம் வரிசையாக நிற்பதுபோல் ஆரத்தில் இணைந்த முத்துக்களுடன் கூடியதாக, மார்பகமாகிய பனிமலையில் ஒய்யாரமாக நடைபழகுவதாக விளங்குகிறது.*

*முகத்தில் பூசப்பெற்ற குங்குமப்பூவாலான பூச்சு புன் சிரிப்பின் வெண்மையில் செம்மையைக் கலக்குகிறது. (14)*

**कम्बोर्वंशपरम्परा इव कृपासन्तानवल्लीभुवः**
**सम्फुल्लस्तबका इव प्रसृमरा मूर्ताः प्रसादा इव ।**
**वाक्पीयूषकणा इव त्रिपथगापर्यायभेदा इव**
**भ्राजन्ते तव मन्दहासकिरणाः कामाक्षि ! काञ्चीप्रिये[1]॥ १५ ॥**

கம்போ: வம்ஶபரம்பரா இவ க்ருபாஸந்தாநவல்லீபுவ:
ஸம்ப்புல்லஸ்தபகா இவ ப்ரஸ்ருமரா மூர்தா: ப்ரஸாதா இவ ।
வாக்பீயூஷகணா இவ த்ரிபதகாபர்யாயபேதா இவ
ப்ராஜந்தே தவ மந்தஹாஸகிரணா: காமாக்ஷி ! காஞ்சீப்ரியே [2] ॥ 15

*காஞ்சியைப்பெரிதும் விரும்புகிற காமாக்ஷி ! உனது புன்னகை ஒளிக்கதிர்கள், உன்கருணையாகிய ஸந்தானக்கொடியில் பூத்துப் பரவுகிற மலர்ந்த பூங்கொத்துகள் போல், சங்கின் வம்சத்தில் தோன்றியவை போல், அருளே உருவெடுத்தது போல், வாக்கின் அமுதத்துளிகள் போல், கங்கையின் மாற்றுவடிவம் போல் விளங்குகின்றன.*

*ஸந்தானம் என்ற கொடி. தேவலோகத்தில் கற்பகமரமாகவும் கற்பகக் கொடியாகவும் உள்ள தெய்வமரம் - கொடி. சங்கின் வெண்மை பரம்பரைச் சொத்தாகப் புன்னகையிலும் வருகிறது. அவள் கழுத்து சங்கு போன்றது. (கம்புகண்ட்டீ) காஞ்சீபுரீநாயிகே என்று பாடம் உண்டு. காஞ்சீபுரியின் நாயிகையே ! (15)*

---

1. काञ्चीपुरीनायिके 2. *காஞ்சீபுரீநாயிகே.*

वक्षोजे घनसारपत्ररचनाभङ्गीसपत्नायिता
कर्णे बन्धुरदन्तपत्रकुहनाव्यापार[1]मुद्रायिता ।
ओष्ठश्रीनिकुरुम्बपल्लवपुटे प्रेङ्खत्प्रसूनायिता
कामाक्षि स्फुरतां [2] मदीयहृदये त्वन्मन्दहासप्रभा ॥ १६ ॥

வக்ஷோஜே கநஸாரபத்ரரசநாபங்கீஸபத்நாயிதா
கர்ணே பந்த்துரதந்தபத்ரகுஹநாவ்யாபார[3]முத்ராயிதா ।
ஓஷ்ட்டஸ்ரீநிகுரும்பபல்லவபுடே ப்ரேங்க்கத்ப்ரஸூநாயிதா
காமாக்ஷி ! ஸ்ப்புரதாம் [4] மதீயஹ்ருதயே த்வன்
மந்தஹாஸப்ரபா ॥ 16

*காமாக்ஷியே ! உனது புன் சிரிப்பின் ஒளி, மார்பகத்தில் பச்சைக் கர்பூரத்தால் எழுதப்பட்ட மகரரேகைக்கு எதிரி (சக்களத்தி)யாயும் காதில் தந்தத்தாலான அழகிய காதணியின் ஏமாற்றுதலின் முத்திரை போன்று உதடாகிற துளிர்களின் இடையே கவ்வப்பட்டதாக உள்ள பூபோலவும் என் இதயத்தில் விளங்கட்டும்.*

*கண்ட்டே மௌக்திஹாரயஷ்டி கிரணவ்யாபாரமுத்ராயிதா என்ற பாடம் - கழுத்தில் நீண்டமுத்தாரத்தின் ஒளியின் நடைமுறையின் அடையாளமாக என்று பொருள். தந்தபத்ரம் என்று தந்தத்தாலான கர்ணபத்ரம் - காதணி. மார்பில் பச்சிலைச் சாறு கர்பூரம் இவை கலந்து பூச்சுப் பொருளைக் கொண்டு மார்பு இடை புஜம் முதலிய பகுதிகளில் மகர ரேகை - மீன் போன்ற வடிவங்களை எழுதிக்கொள்வது மரபு. ஸ்ப்புரதாம் - ஸ்ப்புரதாத்- பொருள் ஒன்றே.*

*ஸபத்நீ - சக்களத்தி. சக்களத்தி மனைவிக்கு எதிரி என்றகருத்தில் ஸபத்ன என்ற சொல்லிற்கு எதிரியென்றேபொருள். (16)*

येषां बिन्दुरिवोपरि प्रचलितो नासाग्रमुक्तामणिः
येषां दीन इवाधिकण्ठमयते हारः करालम्बनम् ।

1. कण्ठे मौक्तिकहारयष्टि किरणव्यापार 2. स्फुरतात् *3. கண்ட்டே மௌக்திக ஹாரயஷ்டி கிரண வ்யாபார 4. ஸ்ப்புரதாத்*

येषां बन्धुरिवोष्ठयोररुणिमा धत्ते स्वयं रञ्जनं
कामाक्ष्याः प्रभवन्तु ते मम शिवोल्लासाय हासाङ्कुराः ॥ १७ ॥

யேஷாம் பிந்துரிவோபரி ப்ரசலிதோ நாஸாக்ரமுக்தாமணி:
யேஷாம் தீந இவாதி கண்டமயதே ஹார: கராலம்பநம் ।
யேஷாம் பந்த்துரிவோஷ்ட்டயோரருணிமா தத்தே ஸ்வயம்
ரஞ்ஜநம்
காமாக்ஷ்யா: ப்ரபவந்து தே மம ஶிவோல்லாஸாய ஹாஸாங்குரா: 17

*நாசியின் முன் தொங்குகிற புல்லாக்கு முத்து மேலேறிச்செல்கிற பொட்டு போல் திகழ்கிறது. முத்தாரம் களைப்புற்றதுபோல் புன்னகையின் கைப்பிடிப்பை எதிர்பார்த்து கழுத்துவரை எம்புகிறது. உதடுகளின் செம்மை உறவினன்போல் இதனுல் தானே செம்மை என மனநிறைவு பெறுகிறது. அந்தப் புன்னகையின் குருத்துகள் என்மங்களப்பெருக்கிற்கு உதவட்டும். (17)*

या जाड्याम्बुनिधिं क्षिणोति भजतां वैरायते कैरवैः
नित्यं या नियमेन या च यतते कर्तुं त्रिनेत्रोत्सवम् ।
बिम्बं चान्द्रमसं च वञ्चयति या गर्वेण सा तादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं ज्योत्स्नेत्यसौ कीर्त्यते ॥ १८ ॥

யா ஜாட்யாம்புநிதிம் க்ஷிணோதி பஜதாம் வைராயதே கைரவை:
நித்யம் யா நியமேந யா ச யததே கர்தும் த்ரிநேத்ரோத்ஸவம் ।
பிம்பம் சாந்த்ரமஸம் ச வஞ்சயதி யா கர்வேண ஸா தாத்ருஶீ
காமாக்ஷி ஸ்மிதமஞ்ஜரீ தவ கதம் ஜ்யோத்ஸ்நேத்யஸௌ
கீர்த்யதே ॥ 18

*காமாக்ஷி ! உனது புன்னகைப்பூங்கொத்து, அறியாமை எனும் கடலை வற்றச் செய்கிறது. ஆம்பலுடன் வைரம் பாராட்டுகிறது. முக்கண்ணனை பரம சிவனின் மனமகிழ்ச்சியை நியமத்துடன் செய்ய முற்படுகிறது. தன் செறுக்கால் சந்திரபிம்பத்தை அதற்குரிய பெருமைதராது ஏமாற்றுகிறது. (இந்நிலையில்) உன் புன்னகை தான் நிலவு என்பது எப்படி ?*

*நிலவு கடலை வற்றச் செய்யாது, பொங்கச் செய்யும்; ஆம்பலை மலரச் செய்யும், அதனுடன் சண்டையிடாது. முகசந்திரனிடம் தோன்றிய முரண்பாடு தெரியும் போதே கவிகள் புன்னகையையும் நிலவையும் ஒப்பிடுகிறுர்களே ! (18)*

आरूढा रभसात्पुरः[1] पुररिपोराश्लेषणोपक्रमे
या ते मातरुपैति दिव्यतटिनीशङ्काकरी तत्क्षणम् ।
ओष्ठौ वेपयति भ्रुवौ कुटिलयत्यानम्रयत्याननं
तां वन्दे मृदुहासपूरसुषमां कामाक्षि कामप्रदे[2]॥ १९ ॥

ஆரூடா ரபஸாத் புர:[3] புரரிபோ: ஆச்லேஷணோபக்ரமே
யா தே மாதருபைதி திவ்யதடிநீஶங்கா கரீ தத்க்ஷணம் ।
ஓஷ்ட்டௌ வேபயதி ப்ப்ருவௌ குடிலயத்யாநம்ரயத்யாநநம்
தாம் வந்தே ம்ருதுஹாஸபூரஸுஷமாம் காமாக்ஷி ! காமப்ரதே [4]॥ 19

*தாயே ! விரும்பியதைத் தருபவளே ! காமாக்ஷி ! (ஏகாம்ரநாதரின் பிரிய நாயகியே !) திரிபுரங்களின் எதிரியான சிவன் உன்னை அணைக்கத் தொடங்கியதும் மென்மைமிக்க புன்னகைப் பெருக்கின் அழகு வேகமாக முன்புறம் (சிவனது முகத்தின் மீது பாய்ந்து) ஏறியது. உடன் அது கங்கை வந்துள்ளதாக ஐயம் எழுப்பியது. உடன் உதடுகளைத்துடிக்க வைத்தது. புருவத்தை வக்கிரமாக வளைத்தது. முகத்தைத் தாழ்த்தியது. அந்த புன்னகை அழகை வணங்குகிறேன்.*

*புன்னகையின் வெண்ணொளி சிவனின் முகத்தின் பாய்ந்து ஏறியதும் சிவனது சடையில் தங்கியது. அதனுல் ஆகாசத்திலிருந்து விழுகிற கங்கையோ என ஐயம் ஏற்பட்டதும் சக்களத்தி மீது வந்த கோபம் தேவியிடம் மாறுதல்களை உண்டாக்கியது, ஆரூடா ரபஸாத் உர: என்ற பாடமுண்டு, சிவனது மார்பில் சிரிப்பொளிபட்டதும் விபூதி பூசியமார்பில் ஒளி கங்கை போல் தோன்றிற்று எனப்பொருள். (19)*

---

1. आरूढा रभसादुरः 2. एकाम्रनाथप्रिये 3. *ஆரூடாரபஸாதுர:* 4. *ஏகாம்ரநாதப்ரியே*

वक्त्रेन्दोस्तव चन्द्रिका स्मितरुचिर्वल्गु स्फुरन्ती सतां
स्याच्चेद्युक्तमिदं चकोरमनसां कामाक्षि कौतूहलम् ।
एतच्चित्रमहर्निशं यदधिकामेषा [1]रुचिं गाहते
बिम्बोष्ठद्युमणिप्रभास्वपि च यद्बिब्बोकमालम्बते ॥ २० ॥

வக்த்ரேந்தோ: தவ சந்த்ரிகா ஸ்மிதருசி: வல்கு ஸ்ப்புரந்தீ ஸதாம்
ஸ்யாத் சேத் யுக்தமிதம் சகோரமநஸாம் காமாக்ஷி கௌதூஹலம் ।
ஏதத் சித்ரமஹர்நிஶம் யததிகாம் ஏஷா[2] ருசிம் காஹதே
பிம்போஷ்ட்ட த்யு மணிப்ரபாஸ்வபி ச யத் பிப்வோக மாலம்பதே ॥ 20

*காமாக்ஷி ! உன் முகமாகிய சந்திரனின் நிலவாகிய புன் சிரிப்பின் ஒளி நன்கு பிரகாசிப்பதுடன் சகோரப்பறவையின் அன்பு மனம் கொண்ட நல்லோர்களுக்கு மனமகிழ்ச்சி தருவது உசிதம். ஆனால் இரவிலும் பகலிலும் அதிக ஒளியை அடைவதும், கோவைக்கனி போன்ற உதட்டின் சூரிய ஒளியிலும் கிளர்ச்சி அடைவதும் விந்தையே.*

*நிலா இரவில் மட்டும் அல்லாமல் பகலிலும் கிளர்ந்து எழுவது அதிசயம். (20)*

सादृश्य[3]कलशाम्बुधेर्वहति ते कामाक्षि मन्दस्मितं
शोभामोष्ठरुचाम्ब विद्रुमभवां एतद्विदां ब्रूमहे ।
एकस्मादुदितं [4] पुरा किल पपौ सद्यः[5] पुराणः पुमान्
अद्य[6]ाप्यन्यसमुद्भवं रसयते माधुर्यरूपं रसम् [7]॥ २१ ॥

ஸாத்ருஶ்யம் [8] கலஶாம்புதே: வஹதி தே காமாக்ஷி ! மந்தஸ்மிதம்
ஶோபாமோஷ்டருசாம்ப வித்ருமபவாம் ஏதத் ப்பிதாம் ப்ரூமஹே ।
ஏகஸ்மாத்[9] உதிதம் புரா கில பபௌ ஸத்ய: [10] புராண: புமான்
அத்யாப்யந்ய [11] ஸமுத்பவம் ரஸயதே மாதுர்ய ரூபம் ரஸம் [12]॥ 21

*தாயே ! காமாக்ஷி ! உன் புன்னகை பாற்கடலுக்கு ஒப்பான நிலையை ஏற்றுள்ளது. உதட்டின் ஒளியால் பவழத்திலிருந்து வருகிற*

*1.* यदधिकामाभां *2. ஆபாம். 3.* साहाय्यं *4.* एतस्मादुदितं *5.* शर्वः *6.* एतन्मध्य *7.* रूपां सुधाम् ।
*8. ஸாஹாய்யம் 9. ஏதஸ்மாத் 10 ஶர்வ: 11. ஏதன் மத்த்ய 12. ரூபாம் ஸுதாம்.*

சோபையை ஏற்கிறது. (ஆனால்) இவ்விரண்டிலும் ஒரு மாறுதல் உள்ளதைக் கூறுவோம். ஒன்றிலிருந்து (பாற்கடலிலிருந்து) வெளிவந்த ரஸத்தை (விஷத்தை) அந்த ஆதிபுருஷன் பருகினார். மற்றொன்றிலிருந்து (உதட்டிலிருந்து) வந்த இனிய ரஸத்தை இன்றும் சுவைத்து வருகிறார்.

வேறு பாடத்தில் ஸாஹாய்யம் - உதவியைத்தந்தது. ஏதஸ்மாத் - இதிலிருந்து. மாதுர்யரூபாம் ஸுதாம் (பா.பே) இனிய அமுதத்தை. புன்னகைக்கு ஒப்பான பாற்கடல் விஷத்தைத் தந்தது. அதைச் சிவன் பருகினார். உதடாகிய கோவைப்பழம் அமுதத்தைத் தந்தது. அதை முத்தமிட்டுச்சிவன் இனிது பருகினார். (21)

उत्तुङ्गस्तनकुम्भशैलकटके विस्तारिकस्तूरिका-
पत्रश्रीजुषि चञ्चलाः स्मितरुचः कामाक्षि ते कोमलाः ।
सन्ध्यादीधितिरञ्जिता इव मुहुः सान्द्राधरज्योतिषा
व्यालोलामलशारदाभ्रशकलव्यापारमातन्वते ॥ २२ ॥

உத்துங்கஸ்தநகும்பஶைலகடகே விஸ்தாரிகஸ்தூரிகா
பத்ரஶ்ரீஜுஷி சஞ்சலா: ஸ்மிதருச: காமாக்ஷி ! தே கோமலா: ।
ஸந்த்யாதீதிதிரஞ்ஜிதா இவ முஹு: ஸாந்த்ராதர ஜ்யோதிஷா
வ்யாலோலாமல-ஶாரதாப்ரஶகலவ்யாபாரம் ஆதந்வதே ॥ 22

மிகப்பரவலாக (உன் மார்பகத்தின் மீது) எழுதப்பெற்ற மகரரேகைச் சித்திரங்களின் அழகு கொண்ட, மேடிட்டுக்கலசம் போன்றுள்ள ஸ்தனங்களாகிய மலைத்தாழ்வரையில் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கிற உன் மென்னகை ஒளிகள், கசிவுள்ள உதடுகளின் ஒளியால் ஸந்தியாகாலத்து வானின் செவ்வொளிகளால் சிவந்தது போல், சரத்காலத்தில் வானில் அங்குமிங்கும் அலைகிறமேகச்சிதறல்களின் நிலையை அடைகின்றன.

மார்பில் எழுதப்பெற்ற மகரரேகையில் உன்புன்னகையின் வெண்ணிறம் பாய, அதனுடன் உதட்டின் சிவப்பும் கலக்க, ஸந்தியாகாலத்து மேகம் போல் செவ்வொளி கலந்த வெண்ணொளி மார்பில் தெரிகிறது. மழைபெய்து ஓய்ந்த

*சரத்காலத்து வெண் மேகத்தில் ஸந்தியாகாலத்தின் அருணனின் செவ்வொளி பாய்கிறதையும் உணரலாம். (22)*

क्षीरं दूरत एव तिष्ठतु कथं वैमल्यमात्रादिदं
मातस्ते सहपाठवीथिमयतां मन्दस्मितैर्मञ्जुलैः ।
किञ्चेयं तु भिदास्ति दोहनवशात् एकं तु[1] सञ्जायते
कामाक्षि स्वयमर्थितं प्रणमतां अन्यत्तु दोदुह्यते ॥ २३ ॥

க்ஷீரம் தூரத ஏவ திஷ்ட்டது கதம் வைமல்ய-மாத்ராதிதம்
மாதஸ்தே ஸஹபாடவீதிமயதாம் மந்த ஸ்மிதைர் மஞ்ஜுளை: ।
கிஞ்சேயம் து பிதாऽஸ்தி தோஹநவசாத் ஏகம் து[2] ஸஞ்ஜாயதே
காமாக்ஷி ! ஸ்வயமர்த்திதம் ப்ரணமதாம் அந்யத் து
தோதுஹ்யதே ॥ (23)

*தாயே ! காமாக்ஷி ! பால் தூரத்திலேயே இருக்கட்டும். இந்தப்பால் தன் வெண்மையால் மட்டும் உன் அழகிய புன் முறுவலுடன் சமநிலையை எப்படிப்பெறும்? பாலோ கறப்பதால் மட்டும் வெளிப்படுகிறது. அந்தப்புன்முறுவலோ வணங்குபவர் விரும்பிய தனத்தையும் கறக்கிறது.*

*கறக்கப்படுவதும் கறப்பதும் ஒன்றாகுமா ? (23)*

कर्पूरैरमृतांशुभिर्जननि[3] ते कान्तैश्च चन्द्रातपैः
मुक्ताहारगुणैर्मृणालवलयैर्मुग्धस्मितश्रीरियम् ।
श्रीकाञ्चीश्वरि सज्जनैः समतया कामाक्षि संस्तूयते[4]
तत्तादृङ्मम तापशान्तिविधये किं देवि मन्दायते ॥ २४ ॥

கர்பூரை: அம்ருதாம்பு॰பி: ஜநநி[5] தே காந்தைஶ்ச சந்த்ராதபை:
முக்தாஹாரகுணை: ம்ருணாளவலயை: மந்த ஸ்மிதஶ்ரீரியம் ।
ஶ்ரீ காஞ்சீஶ்வரி ! ஸஜ்ஜநை: ஸமதயா காமாக்ஷி ! ஸம்ஸ்தூயதே[6]
தத் தாத்ருக் மம தாபசாந்திவிதயே கிம் தேவி மந்தாயதே ॥ 24

*1.* एतत्तु *2. ஏதத்து 3.* रमृतै र्जगज्जननि, रमृतांबुभिर्जननि *4.* श्रीकाञ्चीपुरनायिके समतया संस्तूयते सज्जनैः *5. அம்ருதைர் ஜகஜ் ஜனனி, அம்ருதாம்புபிர் ஜநநி. 6. ஶ்ரீகாஞ்சீபுரநாயிகே ஸமதயா ஸம்ஸ்தூயதே ஸஜ்ஜநை:*

*தாயே ! தேவி ! காமேச்வரி ! திருமிக்க காஞ்சீபுரத்து நாயகியே ! உன் அழகிய மந்தஹாஸ ஒளியானது கர்பூரம் சந்திரன் (அமுதம்) அழகிய நிலவு, முத்தாரவடம், தாமரைத் தண்டு இவற்றுடன் ஒப்பிடப்பட்டு நல்லோர்களால் பாராட்டப் பெறுகிறது. இத்தகைய புன்முறுவல் என்தாபத்தைத் தணிப்பதில் மட்டும் ஏன் தாமதமாகச் செயல்படுகிறது ? (24)*

मध्ये गर्भितमञ्जुवाक्यलहरीमाध्वीझरीशीतला
मन्दारस्तबकायते जननि ते मन्दस्मितांशुच्छटा ।
यस्या वर्धयितुं मुहुर्विकसनं कामाक्षि कामद्रुहो
वल्गुर्वीक्षणविभ्रमव्यतिकरो वासन्तमासायते ॥ २५ ॥

மத்த்யே கர்ப்பித மஞ்ஜுவாக்யலஹரீ மாத்த்வீஜ்ஜரீ-பசீதளா
மந்தாரஸ்தபகாயதே ஜநநி ! தே மந்தஸ்மிதாம்பசுச்ச சடா ।
யஸ்யா வர்த்தயிதும் முஹுர் விகஸநம் காமாக்ஷி காமத்ருஹோ
வல்குர் வீக்ஷணவிப்ப்ரமவ்யதிகரோ வாஸந்த மாஸாயதே ॥ 25

*தாயே ! காமாக்ஷி ! உன் புன்சிரிப்பின் சுழற்சிக் கலவையின் மலர்ச்சியை அடிக்கடி வளர்ப்பதில் காமனின் எதிரியான சிவனது மிக அழகிய பார்வை வஸந்தமாஸமாகிறது. பொருள் செறிவுமிக்க உன்பேச்சலையாகிய தேனருவியால் அது குளிர்ந்து மந்தாரைப்பூங்கொத்தாகிறது.*

*புன் சிரிப்பைத் தொடர்கிற பேச்சு வஸந்தமாஸத்துப் பூங்கொத்தாகிறது. (25)*

बिम्बोष्ठद्युतिपुञ्जरञ्जितरुचिस्त्वन्मन्दहासच्छटा
कल्याणं गिरिसार्वभौमतनये कल्लोलयत्वाशु मे ।
फुल्लन्मल्लिपिनद्धहल्लकमयी कामाक्षि मालेव या[1]
श्रीकाञ्चीश्वरि मारमर्दितुरुरोमध्ये मुहुर्लम्बते ॥ २६ ॥

1. मालेव या पेशला

பிம்போஷ்ட்ட த்யுதிபுஞ்ஜரஞ்ஜிதருசிஸ் த்வன்
மந்தஹாஸச்சடா
கல்யாணம் கிரிஸார்வபௌமதநயே கல்லோலயத்வாமம் மே ।
புல்லன்மல்லிபிநத்தஹல்லகமயீ காமாக்ஷி ! மாலேவ யா[1]
ஸ்ரீகாஞ்சீஸ்வரி ! மாரமர்திது: உரோமத்யே முஹுர்லம்பதே ॥ 26

*மலைப்பேரரசனின் மகளே ! ஸ்ரீகாஞ்சியின் ஈச்வரி ! காமாக்ஷி ! உனது புன்னகைக்குவியல், மலர்ந்த மல்லிகைப்பூவும் செங்கழனீர்ப்பூவும் சேர்ந்து தொடுத்த மாலைபோல் காமனை அழித்த சிவனது நடுமார்பில் எப்போதும் தொங்குகிறது. கோவைப்பழத்தையொத்த உதட்டின் ஒளிக்குவியலால் சிவந்துள்ளது. அது எனக்கு நன்மையலை பரப்பட்டும்.*

*புன்னகையும் உதட்டின் ஒளியும், மல்லிகைப்பூவும் செங்கழனீர்ப்பூவும் ஆக, அவற்றாலான மாலை சிவனின் கழுத்தை அலங்கரிக்கிறது. (26)*

बिभ्राणा शरदभ्रविभ्रमदशां विद्योतमानाप्यसौ
कामाक्षि स्मितमञ्जरी किरति ते कारुण्यधारारसम् ।
आश्चर्यं शिशिरीकरोति जगतीमालोक्य चैनामहो
कामं खेलति नीलकण्ठहृदयं कौतूहलान्दोलितम् ॥ २७ ॥

பிப்ராணா ஶரதப்ரவிப்ரமதஶாம் வித்யோதமாநாப்யஸௌ
காமாக்ஷி ! ஸ்மிதமஞ்ஜரீ கிரதி தே காருண்யதாரா ரஸம் ।
ஆஶ்சர்யம் ஶிஶிரீகரோதி ஜகதீமாலோக்ய சைநாமஹோ
காமம் கேலதி நீலகண்ட்டஹ்ருதயம் கௌதூஹலாந்தோளிதம் ॥ 27

*காமாக்ஷி ! உனது புன்னகைப்பூங்கொத்து சரத்காலத்துமேகத்தின் அழகலையைக் கொண்டிருந்தும், கருணைமழைபொழிகிறது என்பது விந்தை. உலகைக் குளிர்விக்கிறது. இதனைக்கண்ட நீலகண்டரின் (மயிலின்) உள்ளமும் குதூஹலத்துடன் துள்ளி விளையாடுகிறது என்பதும் விந்தையே.*

1. *மாலேவ யா பேமலா*

*சரத்காலத்துமேகம் மழை பொழியாது. அதனைக்கண்டு மயிலும் கூத்தாடாது. உலகைக் குளிர்விக்காது. இங்கே - எல்லாம் மாறித்தோன்றுவது விந்தை தானே ! (27)*

प्रेङ्खत्प्रौढकटाक्षकुञ्जकुहरेष्वत्यच्छगुच्छायितं
वक्त्रेन्दुच्छविसिन्धुवीचिनिचये फेनप्रतानायितम् ।
नैरन्तर्यविजृम्भितस्तनतटे नैचोलपट्टायितं
कल्माषं कबलीकरोतु मम ते कामाक्षि मन्दस्मितम् ॥ २८ ॥

ப்ரேங்க்கத்ப்ரௌடகடாக்ஷகுஞ்ஜகுஹரேஷ்வத்யச்சகுச்சாயிதம்
வக்த்ரேந்துச்சவிஸிந்த்துவீசிநிசயே ப்பேநப்ரதாநாயிதம் ।
நைரந்தர்யவிஜ்ரும்ப்பிதஸ்தநதடே நைசோளபட்டாயிதம்
கல்மாஷம் கபளீகரோது மம தே காமாக்ஷி ! மந்தஸ்மிதம் ॥ 28

*ஒளிஅலை ஆட்டம் போடுகிற ஆழ்ந்தகடாக்ஷப்புதரினுள் மிகவும் வெளுத்த பூங்கொத்தும், முகமாகிய சந்திரனது ஒளிக்கடலலையிடையே உள்ள மிகவும் பரவிய நுரைக்கொத்தும் இடையற்ற பருத்த மார்பகத்தின் மீதுள்ள வெண்பட்டுரவிக்கையுமான உனது புன்சிரிப்பு எனது பாப அழுக்கை நீக்கட்டும். (28)*

पीयूषं तव मन्थरस्मितमिति व्यर्थैव साऽपि प्रथा[1]
कामाक्षि ध्रुवमीदृशं यदि भवेदेतत्कथं वा शिवे ।
मन्दारस्य कथालवं न सहते मथ्नाति मन्दाकिनीं
इन्दुं निन्दति कीर्तिते च कलशीपाथोधिमीर्ष्यायते ॥ २९ ॥

பீயூஷம் தவ மந்த்தரஸ்மிதமிதி வ்யர்த்தைவ ஸாऽபி ப்ரதா[2]
காமாக்ஷி ! த்த்ருவமீத்ருஶம் யதி பவேதேதத் கதம் வா ஶிவே ।
மந்தாரஸ்ய கதாலவம் ந ஸஹதே மத்த்நாதி மந்தாகிநீம்
இந்தும் நிந்ததி கீர்திதே ச கலஶீபாதோதிம் ஈர்ஷ்யாயதே ॥ 29

1. साऽप्रथा 2. ஸாऽபப்ரதா.

மங்களப் பொருளே ! காமாக்ஷி ! மென்னழகு கொண்ட உன்புன்சிரிப்பு அமுதம் என்று புகழ்வது (இகழ்வது) வீணே ! அது இவ்வாறு நிச்சயமாயிருந்தால், மந்தாரப்பூ என்ற சொல்லைக்கூடப்பொறுப்பதில்லை. கங்கையைக் கலக்குகிறது. சந்திரனைப்பழிக்கிறது, பாற்கடல் என்று சொன்னாலே வெகுண்டு எழுகிறது. இது ஏன் ?

ப்ரதா - புகழ்ச்சி. அபப்ரதா - இகழ்ச்சி. பின்வருகிற நிலைகளைக் காணும் போது புகழவும் இடமில்லை. பின் நிலைகள் இயல்பானால் இகழவும் இடமில்லை. (29)

विश्वेषां नयनोत्सवं वितनुतां विद्योततां चन्द्रमाः
विख्यातो मदनान्तकेन मुकुटीमध्ये च[1] संमान्यताम् ।
आः किं जातमनेन हाससुषमामालोक्य कामाक्षि ते
कालङ्कीमवलम्बते खलु दशां कल्माषहीनोऽप्यसौ ॥ ३० ॥

விஶ்வேஷாம் நயநோத்ஸவம் விதநுதாம் வித்யோததாம்
சந்த்ரமா:
விக்க்யாதோ மதநாந்தகேந முகுடீமத்த்யே ச [2] ஸம்மாந்யதாம் ।
ஆ: கிம் ஜாதமநேந ஹாஸ-ஸுஷமாம் ஆலோக்ய காமாக்ஷி ! தே
காளங்கீம் அவலம்பதே கலு தஶாம் கல்மாஷஹீநோऽப்யஸௌ ॥ 30

காமாக்ஷி ! சந்திரன் எல்லோர் கண்களுக்கும் விருந்தளிக்கட்டும் ! வானில் விளங்கட்டும் ! மன்மதனின் எதிரி சிவனால் மகுடத்தின் நடுவே பெருமைப்படுத்தப்படட்டும். களங்கமற்றவனும் சிரிப்பு அழகைக் கண்டு களங்கியானனே ? (30)

चेतः शीतलयन्तु नः पशुपतेरानन्दजीवातवो
नम्राणां नयनाध्वसीमसु शरच्चन्द्रातपोपक्रमाः ।
संसाराख्यसरोरुहाकरखलीकारे तुषारोत्कराः
कामाक्षि स्मरकीर्तिबीजनिकरास्त्वन्मन्दहासाङ्कुराः ॥ ३१ ॥

1. मध्ये न 2. மத்த்யே ந

சேத: ஶீதளயந்து ந: பஶுபதேராநந்தஜீவாதவ:
நம்ராணாம் நயநாத்த்வஸீமஸு ஶரத்சந்த்ராதபோபக்ரமா: ।
ஸம்ஸாராக்யஸரோருஹாகரகலீகாரே துஷாரோத்கரா:
காமாக்ஷி ஸ்மரகீர்த்திபீஜநிகரா: த்வந்மந்த ஹாஸாங்குரா: ॥ 31

*காமாக்ஷி ! பரமசிவனது ஆனந்தத்திற்கு உயிர் ஊட்டுவதும், வணங்குபவரது பார்வை விழுமிடமெல்லாம் சரத்காலத்துப் பால்நிலவுபோல் ஒளிர்வதும் ஸம்ஸாரதாபம் எனும் தாமரைக்குவியலை கருகச் செய்வதில் கடும்பனி வீழ்ச்சியும் மன்மதனின் புகழின் விதைக்குவியலுமான உன் புன்சிரிப்புக் குருத்துக்கள் எமது உள்ளத்தைக் குளிர்விக்கட்டும். (31)*

कर्मौघाख्यतमः कचाकचिकरान् कामाक्षि सञ्चिन्तये
त्वन्मन्दस्मितरोचिषां त्रिभुवनक्षेमङ्करानङ्कुरान् ।
ये वक्त्रं शिशिरश्रियो विकसितं चन्द्रातपाम्भोरुह-
द्वेषोद्घोषणचातुरीमिव तिरस्कर्तुं परिष्कुर्वते ॥ ३२ ॥

கர்மௌகாக்யதம:கசா - கசிகராந் காமாக்ஷி ஸஞ்சிந்தயே
த்வந்மந்தஸ்மிதரோசிஷாம் த்ரிபுவந க்ஷேமங்கராநங்குராந் ।
யே வக்த்ரம் ஶிஶிரஶ்ரியோ விகஸிதம் சந்த்ராதபாம்ப்போருஹ-
த்வேஷோத்கோஷணசாதுரீமிவ திரஸ்கர்தும் பரிஷ்குர்வதே ॥ 32

*காமாக்ஷி ! உனது சீதளமான புன்சிரிப்பு நிலாவுக்கும் தாமரைக்கும் இடையே உள்ள இயல்பான விரோதத்தைப் பறைசாற்றுவதை மறுப்பதற்காக முகத்தைத் தாமரைபோல் மலரச் செய்கிறது. வினைகளுடன் குடுமி பிடித்துச் சண்டையிடுகிறது. மூவுலகிற்கும் நன்மை புரிகிறது. அந்த புன்சிரிப்பொளிக் கூட்டத்தைத் தியானிக்கிறேன். (32)*

कुर्युर्नः कुलशैलराजतनये कूलंकषं मङ्गलं
कुन्दस्पर्धनचुञ्चवस्तव शिवे मन्दस्मितप्रक्रमाः ।
ये कामाक्षि समस्तसाक्षिनयनं सन्तोषयन्तीश्वरं[1]
कर्पूरप्रकरा इव प्रसृमराः पुंसामसाधारणाः ॥ ३३ ॥

1. सन्तोषयन्त्यान्तरं

குர்யுர் ந: குலஶைலராஜதநயே ! கூலங்கஷம் மங்களம்
குந்தஸ்பர்த்தநசுஞ்சவ: தவ ஶிவே மந்தஸ்மிதப்ரக்ரமா: ।
யே காமாக்ஷி ! ஸமஸ்தஸாக்ஷிநயநம் ஸந்தோஷயந்தீஶ்வரம்[1]
கர்ப்பூரப்ரகரா இவ ப்ரஸ்ருமரா: பும்ஸாமஸாதாரணா: ॥ (33)

குலபர்வதராஜனின் மகளே ! மங்களமானவளே ! காமாக்ஷி ! ஆண்களுக்குக் கிட்டாததான புன் சிரிப்புகள் பரவிநிற்கிற கர்ப்பூரப் பொடிக்குவியல் போல் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷிகளான ஸூர்யன் சந்திரன் அக்னி என்ற மூவரையும் கண்களாகக் கொண்ட பரமசிவனை மகிழ்விக்கின்றன. முல்லைப்பூவுடன் போட்டியிடுகிற அழகுள்ள உனது புன் சிரிப்பின் அழகிய அடிவைப்புகள் நமக்கு எல்லா மங்களங்களையும் செய்யட்டும்.

ஸந்தோஷயந்தி ஆந்தரம் என்ற பாடம் உண்டு, உள்ளம் வரை மகிழ்விக்கின்றன. (33)

कम्रेण स्नपयस्व कर्मकुहनाचोरेण मारागम-
व्याख्याशिक्षणदीक्षितेन विदुषामक्षीणलक्ष्मीपुषा ।
कामाक्षि स्मितकन्दलेन कलुषस्फोटक्रियाचुञ्चुना
कारुण्यामृतवीचिकाविहरणप्राचुर्यधुर्येण माम् ॥ ३४ ॥

கம்ரேண ஸ்நபயஸ்வ கர்ம குஹநா சோரேண மாராகம-
வ்யாக்க்யாஶிக்ஷணதீக்ஷிதேந விதுஷாமக்ஷீண லக்ஷ்மீ புஷா ।
காமாக்ஷி ! ஸ்மிதகந்தளேந கலுஷஸ்ப்போடக்ரியாசுஞ்சுநா
காருண்யாம்ருதவீசிகாவிஹரணப்ராசுர்யதுர்யேண மாம் ॥ 34

காமாக்ஷி ! வினையின் வஞ்சனையைப் பறிப்பதும், காமசாஸ்திரவிளக்கத்திலும் போதிப்பதிலும் தேர்ந்ததும், அறிஞர்களுக்கு வற்றாத செல்வம் தருவதும் பாவத்தை வெடிக்கச் செய்தழிப்பதில் திறமையுள்ளதும். கருணையாகிற அமுத அலைகளில் விளையாடுவதில் பெரிதும் முன் நிற்பதுமான அழகிய புன்னகைச் செறிவால் என்னை நீராட்டுவாய் ! (34)

---

2. ஸந்தோஷயந்த்யாந்தரம்,

त्वन्मन्दस्मितकन्दलस्य नियतं कामाक्षि शङ्कामहे
बिम्बः कश्चन नूतनः प्रचलितो नैशाकरः शीकरः ।[1]
किञ्च क्षीरपयोनिधिः प्रतिनिधिः स्वर्वाहिनीवीचिका-
बिब्वोकोऽपि विडम्ब एव कुहनामल्लीमतल्लीरुचः ॥ ३५ ॥

த்வந்மந்த ஸ்மித கந்தளஸ்ய நியதம் காமாக்ஷி ! ஶங்காமஹே
பிம்ப: கஶ்சந நூதந: ப்ரசலிதோ நைஶாகர: ஶீகர: ।[2]
கிஞ்ச க்ஷீரபயோ நிதி: ப்ரதிநிதி: ஸ்வர்வாஹிநீவீசிகா
பிப்வோகோऽபி விடம்ப ஏவ குஹநா மல்லீமதல்லீருச: ॥ 35

*காமாக்ஷி ! உன் புன்னகையிலிருந்து வெளிவந்த திவிலையே சந்திரபிம்பம் எனவும், பாற்கடலே அதன் மாற்றுருவம் தான் என்றும், ஆகாசகங்கையின் அலை அழகும் பரிகசிப்பதற்குரியதே என்றும், சிறந்த மல்லிகைப்பூவின் அழகும் ஒரு ஏமாற்றே என்றும் ஐயப்படுகிறோம்*

*ஸ்ரீகர: (என்ற பாடப்படி) புன்னகையை அழகுபடுத்துவதே. (35)*

दुष्कर्मार्कनिसर्गकर्कशमहस्संपर्कतप्तं मिलत्-
पङ्कं शंकरवल्लभे मम मनः कामाक्षि काञ्चीश्वरि[3]।
अम्ब त्वन्मृदुलस्मितामृतरसे मङ्क्त्वा विधूय व्यथां
आनन्दोदयसौधशृङ्गपदवीमारोढुं आकाङ्क्षति ॥ ३६ ॥

துஷ்கர்மார்கநிஸர்ககர்கசமஹஸ்ஸம்பர்கதப்தம் மிளத்-
பங்கம் சங்கரவல்லபே மம மந: காமாக்ஷி காஞ்சீஶ்வரி[4]।
அம்ப ! த்வந் ம்ருதுளஸ்மிதாம்ருதரஸே மங்க்த்வா
விதூய வ்யதாம்
ஆநந்தோதயஸௌதஶ்ருங்கபதவீமாரோடும் ஆகாங்க்ஷதி ॥ 36

---

*1.* श्रीकरः *2. ஸ்ரீகர: 3.* काञ्चीपुरालंक्रिये *4. காஞ்சீபுராலங்க்ரியே.*

*காமாக்ஷி ! காஞ்சியின் தலைவியே ! (காஞ்சீபுரத்தின் அணியானவளே !) தாயே ! சங்கரரின் இனியவளே ! தீவினை எனும் சூரியனின் இயல்பான வரண்ட கொடுந்தாபத்தால் வாடியதும், பாபச்சேறு படிந்ததுமான என் மனம் உன் புன் சிரிப்பாகிற அமுதச் சாற்றில் மூழ்கி, களைப்பு நீக்கி, ஆனந்த மெனும் மேல் மாடத்தின் உச்சியில் உலாவ விரும்புகிறது. (36)*

नम्राणां नगराजशेखरसुते नाकालयानां पुरः
कामाक्षि त्वरया विपत्प्रशमने कारुण्यधाराः किरन् ।
आगच्छन्तमनुग्रहं प्रकटयन्नानन्दबीजानि ते
नासीरे मृदुहास एव तनुते नाथे सुधाशीतलः ॥ ३७ ॥

நம்ராணாம் நகராஜஶேகரஸுதே நாகாலயாநாம் புர:
காமாக்ஷி த்வரயா விபத்ப்ரஶமநே காருண்யதாரா: கிரந் ।
ஆகச்சந்தம் அநுக்ரஹம் ப்ரகடயந் ஆனந்த பீஜாநி தே
நாஸீரே ம்ருதுஹாஸ ஏவ தநுதே நாதே ஸுதா ஶீதள: ॥ 37

*மலைப் பேரரசின் மகளே ! உலகால் நாடப்பெறுபவளே ! காமாக்ஷி ! உன் முன்னால் வணங்கி நிற்கிற தேவர்களது ஆபத்தை நீக்குவதில் வேகமாக கருணை மழை பெய்து பின் வரவிருக்கிற அருளை முன் அறிவித்துக் கொண்டுள்ள உனது அமுதம் போன்று குளிர்ந்த மந்தஹாஸம், உன் முன்னணியில் ஆனந்தத்தின் வித்துகளை விதைத்து வருகிறது. (37)*

कामाक्षि प्रथमानविभ्रमनिधिः कन्दर्पदर्पप्रसूः
मुग्धस्ते मृदुहास एव गिरिजे मुष्णातु मे किल्बिषम् ।
यं द्रष्टुं विहिते करग्रह उमे शंभुस्त्रपामीलितं
स्मेरं कारयति स्म ताण्डवविनोदानन्दिना तण्डुना ॥ ३८ ॥

காமாக்ஷி ! ப்ரதமாநவிப்ப்ரமநிதி: கந்தர்பதர்பப்ரஸூ:
முக்த்தஸ்தே ம்ருதுஹாஸ ஏவ கிரிஜே முஷ்ணாது மே கில்பிஷம் ।
யம் த்ரஷ்டும் விஹிதே கரக்ரஹ உமே ! ஶம்புஸ் த்ரபாமீலிதம்
ஸ்மேரம் காரயதி ஸ்ம தாண்டவவிநோதாநந்திநா தண்டுநா ॥ 38

*மலைப் பேரரசின் மகளே! உமையே! காமாக்ஷி! உன் திருமணம் நிச்சயிக்கப்பெற்றதும் சிவன் வெட்கத்தால் மறைக்கப்பெற்ற அழகிய உன் புன்சிரிப்பைப் பார்ப்பதற்கு, நடனமாடுவதை விளையாட்டாகக் கொண்டு மனமகிழ்ச்சி தருகிற (தண்டமேந்திய) நந்தியைக் கொண்டு (உன்முன் நடனமாடச் செய்து) புன்னகையை வெளிப்படுத்தினர். அந்தப் புகழ்பெற்ற மனமலர்ச்சிக்குக்காப்பிடம் போன்றதும், மன்மதனுக்குக் கர்வம் உண்டாக்குவதுமான அந்தப் பேதைமை நிரம்பிய புன்முறுவல் எனது பாபத்தைப் போக்கட்டும். (38)*

क्षुण्णं केनचिदेव धीरमनसा कुत्रापि नानाजनैः
कर्मग्रन्थिनियन्त्रितैरसुगमं कामाक्षि सामान्यतः ।
मुग्धैर्द्रष्टुमशक्यमेव मनसा मूढस्य मे चक्षुषो
मार्गं दर्शयतु प्रदीप इव ते मन्दस्मितश्रीरियम् ॥ ३९ ॥

க்ஷுண்ணம் கேநசிதேவ தீரமநஸா குத்ராபி நாநா ஜநை:
கர்மக்ரந்த்திநியந்த்ரிதை:அஸுகமம் காமாக்ஷி ! ஸாமாந்யத: ।
முக்த்தைர் த்ரஷ்டுமஶக்யமேவ மநஸா மூடஸ்ய மே சக்ஷுஷோ
மார்கம் தர்ஶயது ப்ரதீப இவ தே மந்தஸ்மித ஶ்ரீரியம் ॥ 39

*காமாக்ஷி ! எங்கேயோ யாரோ ஒரு தீரமனம் உள்ளவனால் பழக்கப்பட்டதும் வினைப்பிணைப்பில் கட்டுண்டபலரால் எளிதில் அடைய முடியாததும் அறிவிலிகளால் மனத்தாலும் காண முடியாததுமான வழி ஒன்றை, உனது இந்தப் புன்னகையின் காந்தி, பெருந்தீபம் போலாகி மூடனை என் கண்களில் புலப்படட்டும்.*

*மௌக்திகம் என்ற பாடம். முக்திக்கான (பாதையை). (39)*

ज्योत्स्नाकान्तिभिरेव निर्मलतरं नैशाकरं मण्डलं
हंसैरेव शरद्विकाससमये व्याकोचमम्भोरुहम् ।
स्वच्छैरेव विकस्वरैरुडुगणैः कामाक्षि बिम्बं दिवः
पुण्यैरेव मृदुस्मितैस्तव मुखं पुष्णाति शोभाभरम् ॥ ४० ॥

ஜ்யோத்ஸ்நாகாந்திபிரேவ நிர்மலதரம் நைசாகரம் மண்டலம்
ஹம்ஸைரேவ ஶரத்விகாஸ ஸமயே வ்யாகோசம் அம்போருஹம் ।
ஸ்வச்சைரேவ விகஸ்வரை: உடுகணை: காமாக்ஷி ! பிம்பம் திவ:
புண்யைரேவ ம்ருதுஸ்மிதைஸ்தவ முகம் புஷ்ணாதி ஶோபாபரம் ॥ 40

*காமாக்ஷி ! சரத்ருதுவின் அழகு வெளிப்படும் போது, மிகவும் நிர்மலமான சந்திர மண்டலம் நிலாஒளியாலும், மலர்ந்த தாமரைப்பூ அன்னபக்ஷிகளாலும், ஆகாசமண்டலம் தெளிவு மிக்க ஒளி கொண்ட நட்சத்திர மண்டலங்களாலும், உன் முகம் புனித மந்தஹாஸ ஒளியாலும் மட்டுமே ஒளிச்செறிவைப் போஷிக்கிறது. (40)*

मानग्रन्थिविधुंतुदेन रभसादास्वाद्यमाने नव-
प्रेमाडम्बरपूर्णिमाहिमकरे कामाक्षि ते तत्क्षणम् ।
आलोक्य स्मितचन्द्रिकां मुहुरिमां उन्मीलनं जग्मुषीं
चेतः शीलयते चकोरचरितं चन्द्रार्धचूडामणेः ॥ ४१ ॥

மாநக்ரந்த்திவிதுந்துதேந ரபஸாதாஸ்வாத்யமாநே நவ-
ப்ரேமாடம்பரபூர்ணிமாஹிமகரே காமாக்ஷி ! தே தத்க்ஷணம் ।
ஆலோக்ய ஸ்மித சந்த்ரிகாம் முஹுரிமாம் உந் மீலநம் ஜக்முஷீம்
சேத: ஶீலயதே சகோரசரிதம் சந்த்ரார்த்தசூடாமணே: ॥ 41

*காமாக்ஷி ! அன்பின் பகட்டுள்ள தோற்றம் என்ற பூர்ணசந்திரன் தன்மானம் என்ற ராகுவால் வேகத்துடன் சுவைத்து விழுங்கப்படும்போது, உடனே முழுவதும் ஒளிபரப்புகிற உனது புன் சிரிப்பு என்ற நிலாவைப் பார்த்து, சந்திரனின் பாதியைத் தலையில் சூடிய சிவனது மனம் சகோரப்பறவையின் நடைமுறையைப் பழக்கிக் கொள்கிறது.*

*அன்பு தன்மானத்தால் வெளித் தோன்ருத போது தயங்கி நிற்கிற சிவனது மனம் தேவியின் புன் சிரிப்பைக் கண்டதும் தெளிந்து தேவியின் அன்பை உணர்கிறது. அன்பால் சிவனிடம் கோபம் கொண்டதேவி, கோபம் தானே தணிய, வெட்கத்துடன் புன்னகைத்து அன்பைக் காட்டுகிருள். (41)*

कामाक्षि स्मितमञ्जरीं तव भजे यस्यास्त्विषामङ्कुरान्
आपीनस्तनपानलालसतया निःशङ्कमङ्केशयः ।
ऊर्ध्वं वीक्ष्य विकर्षति प्रसृमरानुद्दामया शुण्डया
सूनुस्ते बिसशङ्कयाशु कुहनादन्तावलग्रामणीः ॥ ४२ ॥

காமாக்ஷி ஸ்மித மஞ்ஜரீம் தவ பஜே யஸ்யாஸ்த்விஷாமங்குரான்
ஆபீநஸ்தநபாநலாலஸதயா நிஶ்ஶங்கமங்கேஶய: ।
ஊர்த்த்வம் வீக்ஷ்ய விகர்ஷதி ப்ரஸ்ருமரான்
உத்தாமயா ஶுண்டயா
ஸூநுஸ்தே பிஸஶங்கயாஶு குஹநாதந்தாவலக்ராமணீ: ॥ 42

*காமாக்ஷி ! உன் பருத்த ஸ்தனங்களிலிருந்தும் பெருகுகிற பாலைப்பருகுகிற ஆர்வத்தால் கூச்சமின்றி உன் மடிமீது படுத்த உன்மைந்தன் அந்தமாயாவியான சிறந்த ஆனை முகத்தோன், ஸ்தனத்தின் மேலிடத்தில் பார்வையைச் செலுத்தி, அங்கே (கம்பி கம்பியாக)ப் பெருகிப் பரவுகிற புன் சிரிப்புக் கதிர்களைத் தாமரைத் தண்டு என்ற எண்ணத்துடன், அந்த கட்டிற்கடங்காத துதிக்கையால் இழுக்கிறான். அந்தப் புன்னகைப் பூங்கொத்தைப் வழிபடுகிறேன். (42)*

गाढाश्लेषविमर्दसंभ्रमवशाद् उद्दाममुक्तागुण-
प्रालम्बे कुचकुम्भयोर्विगलिते दक्षद्विषो वक्षसि ।
या सख्येन पिनह्यति प्रचुरया भासा तदीयां दशां
सा कामाक्षि तवास्य चेतसि कनत्वच्छा[1] स्मितांशुच्छटा [2]॥ ४३ ॥

காடாஶ்லேஷவிமர்தஸம்ப்ரமவஶாத் உத்தாம முக்தா குண-
ப்ராலம்பே குச கும்பயோர் விகலிதே தக்ஷத்விஷோ வக்ஷஸி ।
யா ஸக்க்யேந பிநஹ்யதி ப்ரசுரயா பாஸா ததீயாம் தஶாம்
ஸா காமாக்ஷி ! தவாஸ்ய சேதஸி கநத்வச்சா[3] ஸ்மிதாம்சு ச்சடா ।[4]43

---

*1.* सा मे खेलतु कामकोटि हृदये स्वच्छा *2.* सान्द्रा स्मितांशुच्छटा *3.* ஸாமே கேலது காமகோடி ! ஹ்ருதயே ஸ்வச்சா *4.* ஸாந்த்ரா ஸ்மிதாம்ஶுச்சடா

*காமாக்ஷி ! தக்ஷனின் எதிரியான சிவனது மார்பும் உன் கலசம் போன்ற மார்பகமும் அன்பணைப்பால் ஏற்பட்ட அழுத்தத்தில் பரபரப்பு கொண்டபோது, அந்த நீண்ட முத்துமாலை அறுந்து சிதறியதும், உன் புன்னகையொளி நட்புடன் தன் அடர்ந்த ஒளிவீச்சால் தானே முத்துமாலையாகிக் கழுத்தைத் தழுவிக் கொள்கிறது. அந்த தூயப் புன்சிரிப்பின் ஒளிவீச்சு என் மனத்தில் ஒளியுடன் விளங்கட்டும்.*

*தேவியும் சிவனும் அன்பால் ஒருவருக்கொருவரை இறுகத் தழுவ முத்துமாலை அறுந்து சிதறியது. தேவி வெட்கத்துடன் புன்னகைக்க, அந்தப் புன்னகையே முத்துமாலையாகி மார்பைத் தழுவியது. ஸாமே கேலது காமகோடி ஹ்ருதயே ஸ்வச்ச்சா என்ற பாடத்தில் காமகோடியே ! அந்த தூயப்புன்னகை ஒளி என் இதயத்தில் விளையாட்டடும் என்று பொருள். ஸாந்த்ரா ஸ்மிதாம்ஶுச்ச்சடா என்ற பாடத்தில் அடர்ந்த புன்னகை ஒளி வீச்சு. (43)*

मन्दारे तव मन्थरस्मितरुचो मात्सर्यमालोक्यते
कामाक्षि स्मरशासने च नियतं रागोदयो लक्ष्यते ।
चान्द्रीषु द्युतिमञ्जरीषु च महान् द्वेषाङ्कुरो दृश्यते
शुद्धानां कथमीदृशी गिरिसुतेऽशुद्धा दशा कथ्यताम् ॥ ४४ ॥

மந்தாரே தவ மந்த்தரஸ்மித ருசோ மாத்ஸர்ய மாலோக்யதே
காமாக்ஷி ! ஸ்மரஶாஸநே ச நியதம் ராகோதயோ லக்ஷ்யதே ।
சாந்த்ரீஷு த்யுதிமஞ்ஜரீஷு ச மஹான் த்வேஷாங்குரோ
த்ருஶ்யதே
ஶுத்தாநாம் கதமீத்ருஶீ கிரிஸுதேऽஶுத்தா தஶா கத்த்யதாம் ॥ 44

*மலைமகளே ! காமாக்ஷி ! உன் புன்சிரிப்பொளிக்கு மந்தாரைப்பூவில் பொறாமை தென்படுகிறது. மன்மதனை அடக்கிய சிவனிடம் மாறாமல் காதல் தோற்றம் உணரப்படுகிறது. சந்திரனின் ஒளிக்குவியலிடம் பெரும் துவேஷம் குருத்தாக வெளிப்படுகிறது. தூயபொருளுக்கும் இந்த தூய்மையற்றநிலை எப்படி வரும் ? விளக்குவாய்.*

*அன்பும் வெண்மையும் தூய்மையும் உருவானதொன்றிடம் மாத்ஸரியம் ராகம் துவேஷம் வெளிப்படுவது தவறான தல்லவா ? (44)*

पीयूषं खलु पीयते सुरजनैर्दुग्धाम्बुधिर्मथ्यते
माहेशैश्च जटाकलापनिगडैर्मन्दाकिनी नह्यते ।
शीतांशुः परिभूयते च तमसा तस्मादनेतादृशी
कामाक्षि स्मितमञ्जरी तव वचोवैदग्ध्यमुल्लङ्घते ॥ ४५ ॥

பீயூஷம் கலு பீயதே ஸுரஜனை: துக்த்தாம்புதிர் மத்த்யதே
மாஹேசைஸ்ச ஜடாகலாபநிகடை: மந்தாகிநீ நஹ்யதே ।
ஶீதாம்ஶு: பரிபூயதே ச தமஸா தஸ்மாதநேதாத்ருஶீ
காமாக்ஷி ஸ்மிதமஞ்ஜரீ தவ வசோ வைதக்த்ய முல்லங்க்கதே ॥ 45

*காமாக்ஷி ! அமிருதம் தேவர்களால் பருகப்படுகிறது. பாற்கடல் கடையப்படுகிறது. கங்கை சிவனது சடைநார்களாகிய விலங்குகளால் பிணைக்கப்படுகிறது. சந்திரன் இருட்டால் அவமதிக்கப்படுகிறான். இவற்றிற்கு முற்றிலும் மாறுபட்ட உன் புன்சிரிப்பொளி சொல்வண்ணத்தின் எல்லையைத் தாண்டி நிற்கிறதே !*

*புன் சிரிப்பை அமுதம், பாற்கடல், கங்கை, சந்திரன் இவற்றுடன் ஒப்பிடுவர். இவைகள் பாதிப்பு அடைபவை. புன் சிரிப்போ எவ்வித பாதிப்புமற்றது. (45)*

आशङ्के तव मन्दहासलहरीमन्यादृशीं चन्द्रिकां
एकाम्रेशकुटुम्बिनि प्रतिपदं यस्याः प्रभासंगमे ।
वक्षोजाम्बुरुहे न ते रहयतः [1] काञ्चिद्दशां कौड्मलीं
आस्याम्भोरुहमम्ब किं च शनकैरालम्बते फुल्लताम् ॥ ४६ ॥

1. रचयतः

ஆமங்கே தவ மந்தஹாஸலஹரீ மந்யாத்ருமீம் சந்த்ரிகாம்
ஏகாம்ரேமகுடும்பினி ! ப்ரதிபதம் யஸ்யா: ப்ரபாஸங்கமே ।
வக்ஷோஜாம்புருஹே ந தே ரஹயத:[1] காஞ்சித் தமாம்
கௌட்மலீம்
ஆஸ்யாம்ப்போருஹமம்ப ! கிஞ்ச மநகைராலம்பதே புல்லதாம் ॥ 46

*ஏகாம்ர நாதரின் இல்லாளே ! தாயே ! உன் புன் சிரிப்பின் அலைவரிசையை அடிக்கடி ஒரு தனிச் சிறப்புள்ள நிலாவாகக் கருதுகிறேன். அதன் ஒளிபடுவதால் உன் இரு ஸ்தனங்களாகிய தாமரை மொட்டாகவே இருக்கிற ஒரு நிலையை இழப்பதில்லை. ஆனால் உன்முகமெனும் தாமரை மெள்ள மெள்ள மலர்ச்சியைப் பெற்று வருகிறதே !*

*புன்சிரிப்பு நிலாவாகத் தன் மீது படர்வதால் மார்பகத்தாமரை மொட்டாகவே உள்ளது. அது சரி. ஆனால் இந்த நியதிக்குமீறி முகம் மெள்ள மலர்கிறதே ! அது எப்படி ? புன்னகைக்கு அப்படி ஒரு தனிச் சிறப்போ ! ஒருபுறம் நிலாவாக, மற்றொருபுறம் சூரியஒளியாகக் காட்சி தருமோ ! ந தே ரசயத: என்றும் பாடம். மார்பையும் மொட்டாக்குவதில்லை. நிலா தாமரையை மலரவிடாது. இந்த நிலா தனிச் சிறப்புள்ளது. ஸ்தனத்தாமரையையும் முகத்தாமரையையும் மலரச் செய்கிறது. (46)*

**आस्तीर्णाधरकान्तिपल्लवचये पातं मुहुर्जग्मुषी**
**कामद्रोहिणि मांसलस्मरशरज्वालावलिं व्यञ्जती ।**
**निन्दन्ती घनसारहारवलयज्योत्स्ना मृणालानि ते**
**कामाक्षि स्मितचातुरी विरहिणीरीतिं जगाहेतराम् ॥ ४७ ॥**

ஆஸ்தீர்ணாதரகாந்திபல்லவ சயே பாதம் முஹுர் ஜக்முஷீ
காமத்ரோஹிணி மாம்ஸலஸ்மரசரஜ்வாலாவலிம் வ்யஞ்ஜதீ ।
நிந்தந்தீ கநஸாரஹார வலயஜ்யோத்ஸ்நாம்ருணாளாநி தே
காமாக்ஷி ஸ்மிதசாதுரீ விரஹிணீ ரீதிம் ஜகாஹேதராம் ॥ 47

1. *ரசயத:*

*காமாக்ஷி ! கீழே விரிக்கப்பெற்ற உதட்டின் அழகாகிற துளிர்குவியலில் அடிக்கடி விழுந்தெழுவதும், காமனின் எதிரியிடம், கொழுத்த மன்மதனின் அம்பின் ஜ்வாலைகளை வெளிப்படுத்துவதும், கர்பூரம், முத்தாரம், நிலவு, தாமரைத் தண்டு முதலியவற்றைக் குறை கூறுவதுமான உன் புன் சிரிப்பின் செயல்முறை, பதியைவிட்டுப்பிரிந்த மனைவியின் மனநிலையைப் பெற்றுள்ளது.*

*தளிர்படுக்கையில் படுப்பதும், அதில் ஆர்வம் குன்றி வெறுப்புடன் எழுவதும் மன்மத தாபத்தால் வாடுவதும், கர்பூரம் முதலியவற்றால் இன்பம் காணாமல் அவற்றை இகழ்வதும் விரஹதாபமுள்ளவளின் செயல்முறை. (47)*

**सूर्यालोकविधौ विकासमधिकं यान्ती हरन्ती तमस्-**
**संदोहं नमतां निजस्मरणतो दोषाकरद्वेषिणी ।**
**निर्यान्ती वदनारविन्दकुहरान्निर्धूतजाड्या नृणां**
**श्रीकामाक्षि तव स्मितद्युतिमयी चित्रीयते चन्द्रिका ॥ ४८ ॥**

**ஸூர்யாலோகவிதௌ விகாஸமதிகம் யாந்தீ ஹரந்தீ தமஸ்-**
**ஸந்தோஹம் நமதாம் நிஜஸ்மரணத: தோஷாகரத்வேஷிணீ।**
**நிர்யாந்தீ வதநாரவிந்தகுஹராத் நிர்த்தூதஜாட்யா ந்ருணாம்**
**ஸ்ரீ காமாக்ஷி ! தவ ஸ்மிதத்யுதிமயீ சித்ரீயதே சந்த்ரிகா ॥ 48**

*காமாக்ஷி ! உனது முகமாகிற தாமரையிலிருந்து வெளியான புன் சிரிப்பாகிற நிலவு, சூரியனை (அறிஞரை)க் காணும் போது ஒளி மிகுந்ததும், தன்னைத் தியானித்து வணங்குபவரது இருளை (அறியாமையை) நீக்குவதும், சந்திரனை (குற்றக்குவியலை) இகழ்வதும் மாந்தரின் ஜடத்தன்மையைப் போக்குவதுமாக சித்திரிக்கப்படுகிறது.*

*ஸூர்ய - ஆலோக என்ற சொல் ஸூரி - ஆலோக என்றும் தோஷா (இரவு) - கர என்ற சொல் தோஷ - ஆகர என்றும் பிரிக்கப்படுகிறது. ஜாட்யம்- அறிவின் மந்தம், உணர்வுக்குறைவு, குளிரால் விறைப்பு என்றும் பொருள்படும். தாமரையிலிருந்து நிலவு, நிலவு சூர்யனைக்கண்டதும் ஒளிர்வது, நிலவு சந்திரனை இகழ்வது, நிலவின் குளிர்ச்சி விறைப்பையகற்றுவது எனப்பொருத்தமில்லாத செயல்முறை, அதனால் ஒரு சித்திரிப்பே தவிர உண்மை யல்ல என்று தோன்றும் போதே, அறிஞரைக் கண்டதும் மலர்ச்சி, குற்றக் குவியலை*

*இகழ்வது, அறியாமையை நீக்குவது என்ற செயல் நேர்த்திகொண்ட புன்னகை தாமரையிலிருந்து தோன்றியதாக சித்திரிப்பதில் பொருத்தமின்மை இல்லே. (48)*

कुण्ठीकुर्युरमी कुबोधघटनां अस्मन्मनोमाथिनीं
श्रीकामाक्षि शिवङ्करास्तव शिवे श्रीमन्दहासाङ्कुराः ।
ये तन्वन्ति निरन्तरं तरुणिमस्तम्बेरमग्रामणी-
कुम्भद्वन्द्वविडम्बिनि स्तनतटे मुक्ताकुथाडम्बरम् ॥ ४९ ॥

குண்ட்டீகுர்யுரமீ குபோதகடநாம் அஸ்மந்மநோமாதிநீம்
ஸ்ரீ காமாக்ஷி ஶிவங்கராஸ் தவ ஶிவே ஸ்ரீமந்தஹாஸாங்குரா: ।
யே தந்வந்தி நிரந்தரம் தருணிமஸ்தம்பேரமக்ராமணீ
கும்ப்பத்வந்த்வவிடம்பிநி ஸ்தநதடே முக்தா-குதாடம்பரம் ॥ 49

*மங்களமுள்ளவளே! ஸ்ரீ காமாக்ஷி! எப்போதும், இளமையாகிய பெருயானேயின் இரு மத்தக முண்டு போன்ற மார்பகத்தில் முத்துக்களால் பின்னப்பட்ட அம்பாரிவிரிப்பின் நிலேயைத் தோற்றுவிக்கிற உனது மங்களம் தருகிற புன்சிரிப்புக்குருத்துகள், எமது மனத்தைத் கெடுக்கிற தவருன அறிவின் தொடர்பை முனே மழுங்கச் செய்யட்டும். (49)*

प्रेङ्खन्तः शरदम्बुदा इव शनैः प्रेमानिलैः प्रेरिता :
मज्जन्तो मदनारिकण्ठसुषमासिन्धौ मुहुर्मन्थरम् (राः) ।
श्रीकामाक्षि तव स्मितांशुनिकराः श्यामायमानश्रियो
नीलांभोधरनैपुणीं तत इतो निर्निद्रयन्त्यञ्जसा ॥ ५० ॥

ப்ரேங்க்கந்த: ஶரதம்புதா இவ ஶநை: ப்ரேமாநிலே: ப்ரேரிதா:
மஜ்ஜந்தோ மதநாரிகண்ட்டஸுஷமாஸிந்த்தௌ முஹு:
மந்த்தரம் (ரா:) ।
ஸ்ரீ காமாக்ஷி ! தவ ஸ்மிதாம்ஶுநிகரா: ஶ்யாமாயமாந-ஶ்ரியோ
நீலாம்போதரநைபுணீம் தத இதோ நிர்நித்ரயந்த்யஞ்ஜஸா ॥ 50

*ஸ்ரீ காமாக்ஷி ! சரத் காலத்து மேகம் போல் மெல்ல அன்பெனும் காற்ருல் தூண்டப்பெற்று மன்மதனின் எதிரியான சிவனது கழுத்தின்*

கருமையையழுக் கடலில் மூழ்கி எழுந்து சிறிது கருமைகலந்தவையாக உள்ள உனது புன் சிரிப்புக்குவியல்கள், அங்குமிங்கும் கார்மேகத்தின் சிறப்பை விழிப்படையச் (மலர)ச் செய்கின்றன.

புன் சிரிப்பாகிய வெண்மேகம், சிவனின் முகத்தில் பரவ, சிவனின் கழுத்தின் கருமை அதன் மீது ஒட்டிக் கொண்டு கார்மேகமாக்கியது. (50)

व्यापारं चतुराननैकविहृतौ व्याकुर्वती कुर्वती
रुद्राक्षग्रहणं करेण[1] सततं वागूर्मिकल्लोलिता ।
उत्फुल्लं धवलारविन्दमधरीकृत्य स्फुरन्ती सदा
श्रीकामाक्षि सरस्वती विजयते त्वन्मन्दहासप्रभा ॥ ५१ ॥

வ்யாபாரம் சதுராநநைகவிஹ்ருதௌ வ்யாகுர்வதீ குர்வதீ
ருத்ராக்ஷக்ரஹணம் கரேண[2] ஸததம் வாகூர்மி கல்லோலிதா ।
உத்ப்புல்லம் தவளாரவிந்த மதரீக்ருத்ய ஸ்ப்புரந்தீ ஸதா
ஸ்ரீ காமாக்ஷி ! ஸரஸ்வதீ விஜயதே த்வந்மந்தஹாஸப்ரபா ॥ 51

ஸ்ரீ காமாக்ஷி ! (மஹேச்வரி) நான்முகனிடம் (நல்லபேச்சாளனிடம்) மட்டும் தன் திறமையை வெளிப்படுத்துபவளும், எப்போதும் ருத்ராக்ஷமாலையைக் கையில் ஏந்தியவளும், பேச்சலையால் அலைக்கழிக்கப்பட்டவளும், மலர்ந்த வெண் தாமரையை ஆஸனமாக்கி அதன் மேல் எப்போதும் விளங்குபவளுமான ஸரஸ்வதியாக உன் மந்தஹாஸ ஒளி வெற்றியுடன் விளங்குகிறது. (51)

कर्पूरद्युतितस्करेण महसा कल्माषयत्याननं
श्रीकामाक्षि शिवप्रिये[3] पतिरिव श्रीमन्दहासोऽपि ते ।
आलिङ्गत्यतिपीवरां स्तनतटीं बिम्बाधरं चुम्बति
प्रौढं रागभरं व्यनक्ति मनसो धैर्यं धुनीतेतराम् ॥ ५२ ॥

---

1. महेशि 2. மஹேசி 3. श्रीकाञ्चीपुरनायिके

கர்பூரத்யுதிதஸ்கரேண மஹஸா கல்மாஷயத்யாநநம்
ஸ்ரீகாமாக்ஷி ! ஶிவப்ரியே ! [1] பதிரிவ ஸ்ரீமந்தஹாஸோऽபி தே ।
ஆலிங்கத்யதிபீவராம் ஸ்தநதடீம் பிம்பாதரம் சும்பதி
ப்ரௌடம் ராகப்பரம் வ்யநக்தி மநஸோ தைர்யம் துநீதே தராம் ॥ 52

*சிவனின் இனியவளே ! ஸ்ரீ காமாக்ஷி ! உன் பதிபோல் உன் புன்னகையும் கர்பூரத்தின் ஒளியைத் திருடுகிற தன்னொளியால் முகத்தை விசித்திரநிறக் கலவையுள்ளதாக்குகிறது. மிகப்பருத்த மார்பகத்தை அணைத்துக் கொள்கிறது. கோவைப் பழம் போன்ற உதட்டை முத்தமிடுகிறது. தன்பேரன்பின் அழுத்தத்தை உணர்த்துகிறது. மனத்தின் திடத்தைக் குலைக்கிறது. (52)*

वैशद्येन च विश्वतापहरणक्रीडापटीयस्तया
पाण्डित्येन पचेलिमेन जगतां नेत्रोत्सवोत्पादने ।
कामाक्षि स्मितकन्दलैस्तव तुलामारोढुमुद्योगिनी
ज्योत्स्नासौ जलराशिपोषणतया दूष्यां प्रपन्ना दशाम् ॥ ५३

வைஶத்யேந ச விஶ்வதாபஹரணக்ரீடாபடீயஸ்தயா
பாண்டித்யேந பசேளிமேந ஜகதாம் நேத்ரோத்ஸவோத்பாதநே ।
காமாக்ஷி ! ஸ்மிதகந்தளைஸ்தவ துலாமாரோடுமுத்யோகிநீ
ஜ்யோத்ஸ்நாऽஸௌ ஜலராஶிபோஷணதயா தூஷ்யாம் ப்ரபந்நா
தஶாம் ॥ 53

*காமாக்ஷி, தூய்மையாலும் (வெண்மையாலும்) உலகின் தாபத்தை விளையாட்டாக நீக்குவதில் திறமையாலும், உலகின் கண்களுக்கு விருந்தாவதில் பழுத்த தேர்ச்சியாலும், உன்புன்னகையுடன் (ஒப்பு நோக்க) தராசில் ஏறமுயன்ற இந்த நிலவு, ஜல (ஜட) ராசியைப் போஷிப்பதில் முனைந்ததால் தாழ்ந்த நிலையடைந்தது.*

*பல நிலைகள் புன்சிரிப்பிற்கும் நிலவுக்கும் ஈடிருப்பதை அறிவித்தாலும் புன் சிரிப்பு அறிவாளியைப் போஷிக்கும். நிலவு ஜடராசியைப் போஷிக்கும். ஜலம் - ஜடம். ஜலராசி கடல்.*

*1. ஸ்ரீ காஞ்சீபுரநாயிகே.*

*ஜடராசி - முட்டாள் மந்தை. நிலவு கடலைப் பொங்கச் செய்யும். சிலேடையால் ஜடர்களையும் பொங்கச் செய்யும் என்றுகிறது. 53*

लावण्याम्बुजिनीमृणालवलयैः शृङ्गारगर्जद्द्विप-[1]
ग्रामण्यः श्रुतिचामरैस्तरुणिमस्वाराज्यबीजाङ्कुरैः ।
आनन्दामृतसिन्धुवीचिपृषतैरास्याब्जहंसैस्तव
श्रीकामाक्षि मथान मन्दहसितैर्मत्कं मनः कल्मषम् ॥ ५४ ॥

லாவண்யாம்புஜிநீம்ருணாளவலயை: ஶ்ருங்காரகர்ஜத் த்விப-[2]
க்ராமண்ய: ஶ்ருதிசாமரைஸ்தருணிம ஸ்வாராஜ்ய பீஜாங்குரை: ।
ஆனந்தாம்ருதஸிந்துவீசிப்ருஷதை: ஆஸ்யாப்ஜஹம்ஸை ஸ்தவ
ஸ்ரீகாமாக்ஷி ! மதாந மந்தஹஸிதை: மத்கம் மந: கல்மஷம் ॥ 54

*ஸ்ரீ காமாக்ஷி ! அழகெனும் தாமரை நூல்முடிகளும், சிருங்காரம் என்ற பிளிர்கிற யானைக்கூட்டத்தலைவனின் காதுகளான சாமரங்களும், இளமையின் தன்னாட்சிக்கு வித்தின் முளையும், ஆனந்தமெனும் அமுதக்கடலலைகளின் நீர்த்துளிகளும் முகமெனும் தாமரையைச் சுற்றி வரும் அன்னங்களுமான உன் புன்சிரிப்புகளால் என் மன அழுக்கைக்கடைந்து அகற்றுவாயாக. (54)*

उत्तुङ्गस्तनमण्डलीपरिचलन्माणिक्यहारच्छटा-
चञ्चच्छोणिमपुञ्जमध्यसरणिं मातः परिष्कुर्वती ।
या वैदग्ध्यमुपैति शङ्करजटाकान्तारवाटीपतत् -
स्वर्वापीपयसः स्मितद्युतिरसौ कामाक्षि ते मञ्जुला ॥ ५५ ॥

உத்துங்கஸ்தநமண்டலீபரிசலந்மாணிக்யஹாரச்சடா-
சஞ்சத்ஶோணிமபுஞ்ஜமத்யஸரணிம் மாத: பரிஷ்குர்வதீ ।
யா வைதக்த்ய முபைதி ஶங்கரஜடாகாந்தாரவாடீ பதத்-
ஸ்வர்வாபீபயஸ: ஸ்மித த்யுதிரஸௌ காமாக்ஷி ! தே மஞ்ஜுளா ॥ 55

*தாயே காமாக்ஷி ! மேடிட்ட ஸ்தனங்களின் மீது இங்குமங்கும் அசைந்தாடுகிற மாணிக்க ரத்தினமாலையில் ஒளிர்கிற செம்மை*

1. गन्धद्विप 2. *கந்த்தத்விப*

அட்டர்த்தியின் நடுவில் வெற்றிடங்களை நிரப்பகிற உன் புன் சிரிப்பின் ஒளி, சங்கரரின் சடைக்காடுகளில் பாய்கிற கங்கை நீரின் ஆற்றலைப் பெற்று அழகியதாகத் தோன்றுகிறது. (55)

सन्नामैकजुषा जनेन सुलभं संसूचयन्ती शनैः
उत्तुङ्गस्य चिरादनुग्रहतरोरुत्पत्स्यमानं फलम् ।
प्राथम्येन विकस्वरा कुसुमवत्प्रागल्भ्यमभ्येयुषी
कामाक्षि स्मितचातुरी तव मम क्षेमंकरी कल्पताम् ॥ ५६ ॥

ஸந்நாமைகஜுஷா ஜநேந ஸுலபம் ஸம்ஸூசயந்தீ ஶநை:
உத்துங்கஸ்ய சிராதநுக்ரஹதரோருத்பத்ஸ்யமாநம் பலம் ।
ப்ராதம்யேந விகஸ்வரா குஸுமவத் ப்ராகல்ப்யமப்யேயுஷீ
காமாக்ஷி ! ஸ்மித சாதுரீ தவ மம க்ஷேமங்கரீ கல்பதாம் ॥ 56

*காமாக்ஷி ! நல்லவன் என்ற பெயர் மட்டும் பெற்ற மனிதனுல் எளிதில் பெறத்தக்கதும் நெடிது உயர்ந்த அனுக்கிரஹம் என்ற மரத்தில் வெகுநாட்கள் கழித்துத் தோன்றவிருக்கிற பழமாகிற பயனை மெதுவாக வெளிப்படுத்துவதும் முதன் முதலாக மலர்ந்ததுமான பூவைப்போல், பெருமித மடைந்த உன் புன்சிரிப்பின் ஆற்றல் எனக்கு நன்மை புரிவதாக ஆகட்டும். (56)*

धानुष्काग्रसरस्य लोलकुटिलभ्रूलेखया बिभ्रतो
लीलालोकशिलीमुखं नववयस्साम्राज्यलक्ष्मीपुषः ।
जेतुं मन्मथमर्दिनं जननि ते कामाक्षि हासाङ्कुरो [1]
वल्गुर्विभ्रमभूभृतो वितनुते सेनापतिप्रक्रियाम् ॥ ५७ ॥

தானுஷ்காக்ரஸரஸ்ய லோல குடிலப்ப்ரூலேகயா பிப்ப்ரதோ
லீலாலோகஶிலீமுகம் நவவயஸ்ஸாம்ராஜ்யலக்ஷ்மீபுஷ: ।
ஜேதும் மன்மதமர்த்திநம் ஜநநி தே காமாக்ஷி ! ஹாஸாங்குரோ[2]
வல்குர் விப்ப்ரமபூப்ப்ருதோ விதநுதே ஸேநாபதி ப்ரக்ரியாம் ॥ 57

---

1. मन्दस्मितप्रक्रमः, कामाक्षि हासः स्वयं 2. *மந்தஸ் மிதப்ரக்ரம:, காமாக்ஷி ! ஹாஸ ஸ்வயம்*

*தாயே ! காமாக்ஷி ! வில்லாளிகளின் முன்னிலைபெற்றவனும் அசைந்துவளைகிற புருவக்கோடாகிற நாணில் விளையாட்டுப்பார்வை என்ற அம்பைத் தொடுத்துக் கொண்டிருப்பவனும் புதிய இளமையின் அரசாட்சியில் சிறப்பு பெற்றவனுமான மன்மதசேஷ்டை என்ற அரசனுக்கு மன்மதனை வென்றவரை வெல்ல, உனது அழகிய புன்முறுவல் ஸேநாபதியின் பொறுப்பை நன்கு நிர்வகிக்கிறது.*

*பாடபேதத்தில் பொருள் மாறவில்லை. (57)*

यन्नाकम्पत कालकूटकबलीकारे चुचुम्बे न यत्
ग्लान्या चक्षुषि रूषितानलशिखे रुद्रस्य तत्तादृशम् ।
चेतो यत्प्रसभं स्मरज्वरशिखिज्वालेन लेलिह्यते
तत्कामाक्षि तव स्मितांशुकणिकाहेलाभवं प्राभवम् ॥ ५८ ॥

யந்நாகம்பத காலகூடகபலீகாரே சுசும்பே ந யத்
க்லாந்யா சக்ஷுஷி ரூஷிதாநலஶிகே ருத்ரஸ்ய தத்தாத்ருசம் ।
சேதோ யத் ப்ரஸபம் ஸ்மரஜ்வரஶிகிஜ்வாலேந லேலிஹ்யதே
தத் காமாக்ஷி தவ ஸ்மிதாம்ஶுகணிகாஹேலாபவம் ப்ராபவம் ॥ 58

*காமாக்ஷி ! எவருடைய மனம் காலகூடவிஷமருந்தியபோது நடுங்கவில்லையோ, எவருடைய கண் நெருப்புக் கொழுந்தால் களைப்படைய வில்லையோ, அத்தகைய ருத்திரனின் உள்ளம் காமஜ்வரம் என்ற நெருப்பால் வலுவில் நக்கிச் சுவைக்கப்படுகிறது எனில் இது உனது புன்சிரிப்பின் சிறு துளியின் விளையாட்டால் நிகழ்ந்த பெருஞ் செயலே. (58)*

संभिन्नेव सुपर्वलोकतटिनी वीचीचयैर्यामुनैः
संमिश्रेव शशाङ्कदीप्तिलहरी नीलैर्महानीरदैः ।
कामाक्षि स्फुरिता तव स्मितरुचिः कालाञ्जनस्पर्धिना
कालिम्ना कचरोचिषां व्यतिकरे काञ्चिद्दशामश्नुते ॥ ५९ ॥

ஸம்ப்பிந்நேவ ஸுபர்வலோகதடிநீ வீசீசயைர் யாமுநை:
ஸம்மிஶ்ரேவ ஶஶாங்கதீப்திலஹரீநீலைர் மஹாநீரதை: ।
காமாக்ஷி ! ஸ்புரிதா தவ ஸ்மிதருசி: காலாஞ்ஜநஸ்பர்த்திநா
காளிம்நா கசரோசிஷாம் வ்யதிகரே காஞ்சித் தஶாமஶ்நுதே ॥ 59

*காமாக்ஷி ! உனது பளிச்சென விளங்குகிற புன் சிரிப்பொளி, கருத்த கண்மையோடு போட்டியிடுகிற அழகிய கூந்தலின் கருநிற ஒளியுடன் கலக்கும் போது, யமுனையின் அலைகளோடு கலந்த தேவலோகநதியான கங்கை போல், கருத்த பெருமேகங்களுடன் சேர்ந்த நிலவொளியலை போல் ஒரு தனித்துச்சிறந்த நிலைபெறுகிறது. (59)*

जानीमो जगदीश्वरप्रणयिनि त्वन्मन्दहासप्रभां
श्रीकामाक्षि सरोजिनीमभिनवामेषा यतः सर्वदा ।
आस्येन्दोरवलोकने पशुपतेरभ्येति संफुल्लतां
तन्द्रालुस्तदभाव एव तनुते तद्वैपरीत्यक्रमम् ॥ ६० ॥

ஜாநீமோ ஜகதீஸ்வரப்ரணயிநி ! த்வந்மந்தஹாஸப்ரபாம்
ஸ்ரீ காமாக்ஷி ! ஸரோஜிநீமபிநவாமேஷா யதஸ் ஸர்வதா ।
ஆஸ்யேந்தோரவலோகநே பஶுபதேரப்யேதி ஸம்புல்லதாம்
தந்த்ராளுः ததபாவ ஏவ தநுதே தத்வைபரீத்யக்ரமம் ॥ 60

*உலகின் ஈசனின் இனியாளே ! ஸ்ரீகாமாக்ஷி ! உன் மந்த ஹாஸத்தின் ஒளியை ஒரு புதுத்தாமரையோடையாகக் கருதுகிறோம். ஏனெனில் இந்தப் புன் சிரிப்பு எப்போதும் பரமேசுவரனது முகமான சந்திரனின் பார்வையில் மலர்கிறது. சந்திரனது பார்வை படாதபோது தான் சோர்வுடன், எதிரான மலர்ச்சியின்மையை அடைகிறது.*

*தாமரையோடை நிலவில் மலராது. குவிந்துவிடும். தேவியின் புன் சிரிப்பாகிற தாமரையோடை சிவமுகமான சந்திரனைக்கண்டதும் மலர்கிறது. அந்த சந்திரனைக் காணாதபோது தான் குவிந்து விடுகிறது. இது புதுமையல்லவா. ? (60)*

यान्ती लोहितिमानमभ्रतटिनी धातुच्छटाकर्दमैः
भान्ती बालगभस्तिमालिकिरणैर्मेघावली शारदी ।
बिम्बोष्ठद्युतिपुञ्जचुम्बनकलाशोणायमानेन ते
कामाक्षि स्मितरोचिषा समदशामारोढुमाकाङ्क्षते ॥ ६१ ॥

யாந்தீ லோஹிதிமாநம் அப்ப்ரதடிநீ தாதுச்சடாகர்தமை:
பாந்தீ பாலகபஸ்திமாலிகிரணை: மேகாவளீ மாரதீ ।
பிம்போஷ்ட்டத்யுதிபுஞ்ஜசும்பநகலாமோறுயமாநேந தே
காமாக்ஷி ! ஸ்மிதரோசிஷா ஸமதமாமாரோடுமாகாங்க்ஷதே ॥ 61

*காமாக்ஷி ! பூங்காவி போன்ற கனிமப் பொருளால் குழம்பிச் செம்மை அடைந்த கங்கையும் இளஞ்சூரியனின் கதிரொளியால் சிவந்த சரத்காலத்து மேகவரிசையும், கோவைப்பழம் போன்று சிவந்த உதட்டின் முத்த அழகால் சிவந்த உன் புன் சிரிப்பொளியுடன் ஸமநிலையைப் பெற விரும்புகின்றன. (61)*

श्रीकामाक्षि मुखेन्दुभूषणमिदं मन्दस्मितं तावकं
नेत्रानन्दकरं तथा हिमकरो गच्छेद्यथा तिग्मताम् ।
शीतं देवि तथा यथा हिमजलं सन्तापमुद्रास्पदं
श्वेतं किञ्च तथा यथा मलिनतां धत्ते च मुक्तामणिः ॥ ६२ ॥

ஸ்ரீ காமாக்ஷி முகேந்துபூஷணமிதம் மந்தஸ்மிதம் தாவகம்
நேத்ராநந்தகரம் ததா ஹிமகரோ கச்சேத் யதா திக்மதாம் ।
சீதம் தேவி ! ததா யதா ஹிமஜலம் ஸந்தாபமுத்ராஸ்பதம்
ச்வேதம் கிஞ்ச ததா யதா மலிநதாம் தத்தே ச முக்தாமணி: ॥ 62

*ஸ்ரீ காமாக்ஷி ! தேவி ! உனது சந்திரனைப் போன்ற முகத்திற்கு நகையாக அமைந்த இந்த புன்னகை, சந்திரனே சூடாகி விட்டது போல் கண்களுக்கு ஆனந்தமளிக்கிறது. பனி நீரும் தாபம் தருவதாக ஆகிவிட்டாற் போல் அத்தனை குளிர்ந்துள்ளது. மேலும் முத்தும் அழுக்கானது போல் வெண்மை கொண்டுள்ளது.*

*புன் சிரிப்பின் குளிர்ச்சியை அனுபவித்தவர்கள் நிலவு சுடுவது போல் பனி நீர் எரிச்சல் தருவது போல் உணர்வார்கள். புன்னகையின் தூய வெண்மையை உணர்ந்தவர்கள் முத்து அழுக்குள்ளது என்று உணர்வார்கள். வெண்மையும் குளிர்ச்சியும் அவ்வாறு வேறிடத்தில் காணமுடியாது. (62)*

त्वन्मन्दस्मितमञ्जरीं प्रसृमरां कामाक्षि चन्द्रातपं
सन्तः संततमामनन्त्यमलता तल्लक्षणं लक्ष्यते ।
यन्नासौ विधुनोति तापमधिकं नाभ्यन्तरं मानसं[1]
ध्वान्तं तत्खलु दुःखिनो वयममी केनेति नो विद्महे [2]॥ ६३ ॥

த்வந்மந்தஸ்மிதமஞ்ஜரீம் ப்ரஸ்ருமராம் காமாக்ஷி சந்த்ராதபம்
ஸந்தஸ்ஸந்ததமாமநந்த்யமலதா தல்லக்ஷணம் லக்ஷ்யதே ।
யந்நாஸௌ விதுநோதி தாபமதிகம் நாப்யந்தரம் மாநஸம்[3]
த்வாந்தம் தத்க்கலு து:க்கிநோ வயமமீ கேநேதி நோவித்மஹே[4] ॥ 63

*காமாக்ஷி ! எங்கும் பரவுகிற தன்மையுள்ள உனது புன்னகைப்பூங்கொத்தை நிலா எனப்பெரியோர் கூறுவர். அதற்கான அறிகுறியாக வெண்மை (தூய்மை) அதில் காணப்படுகிறது. ஆனால் அது எங்களது உள்ளத்து அதிகத்தாபத்தையும் உள்ளத்து இருளையும் அகற்றுவதில்லையே ! அது ஏன் ? என்று துயருற்ற நாங்கள் அறியோம். (63)*

नम्रस्य प्रणयप्ररोहकलहच्छेदाय पादाब्जयोः
मन्दं चन्द्रकिशोरशेखरमणेः कामाक्षि रागेण ते ।
बन्धूकप्रसवश्रियं जितवतो बंहीयसीं तादृशीं
बिम्बोष्ठस्य रुचिं निरस्य हसितज्योत्स्ना वयस्यायते ॥ ६४ ॥

நம்ரஸ்ய ப்ரணயப்ரரோஹகலஹச்சேதாய பாதாப்ஜயோ:
மந்தம் சந்த்ரகிஶோரஶேகரமணே: காமாக்ஷி ராகேண தே ।
பந்த்தூகப்ரஸவஶ்ரியம் ஜிதவதோ பம்ஹீயஸீம் தாத்ருஶீம்
பிம்போஷ்ட்டஸ்ய ருசிம் நிரஸ்ய ஹஸிதஜ்யோத்ஸ்நா
வயஸ்யாயதே ॥ 64

*காமாக்ஷி ! அன்பால் வளர்ந்துவிட்ட பிரணயகலகத்தை (ஊடலை) அகற்றுவதன் பொருட்டு, உனது தாமரை போன்ற பாதங்களில் வணங்கி நிற்கிற இளம்பிறை சூடியான பரமசிவனுக்கு,*

1. अस्माकं न दुनोति तापमधिकं धूनोति नाप्यान्तरं 2. जानीमहे 3. *அஸ்மாகம் நதுநோதி தாபமதிகம் தூநோதி நாப்யா ந்தரம்.* 4. *ஜாநீமஹே*

செம்மையால் செம்பரத்தம்பூவின் ஒளியை வென்ற கோவைப்பழம் போன்ற உதட்டின் அந்த மிகவும் பெரிய ஒளியை ஒதுக்கிவிட்டுப் புன் சிரிப்பாகிய நிலா தோழியாகியது.

உதட்டின் செம்மையை புன்னகையின் வெண்மை மாற்றுகிறது. கோபத்தின் நிறம் சிகப்பு. பிரணயகலகத்தால் கோபமுற்ற தேவியை வணங்கியுள்ள சிவன், உதட்டின் சிகப்பைக் கண்டதும் கோபம் இன்னமும் தணியவில்லை என நினைக்கக் கூடும். அதனால் உதட்டின் சிவப்பை விடப் புன்னகையின் வெண்மையை அதிகமாக முன் நிறுத்தித் தேவி சிவனை மகிழ்விக்கிறாள். உதடு மூடியிருந்தால் உதட்டின் செம்மை அடர்த்தியுடன் தெரியும். சிறிது பற்கள் தெரியப்புன்னகை வெளிவர மூடிய உதடு பிரிகிறது. (64)

मुक्तानां परिमोचनं विदधतस्तत्प्रीतिनिष्पादिनी
भूयो दूरत एव धूतमरुतस्तत्पालनं तन्वती ।
उद्भूतस्य जलान्तरादविरतं तद्दूरतां जग्मुषी
कामाक्षि स्मितमञ्जरी तव कथं कम्बोस्तुलामश्नुते ॥ ६५ ॥

முக்தாநாம் பரிமோசநம் விததத: தத்ப்ரீதி நிஷ்பாதிநீ
பூயோ தூரத ஏவ தூதமருதஸ் தத் பாலநம் தந்வதீ ।
உத்பூதஸ்ய ஜலாந்தராதவிரதம் தத்தூரதாம் ஜக்முஷீ
காமாக்ஷி ! ஸ்மிதமஞ்ஜரீ தவ கதம் கம்போ: துலாமஶ்நுதே ॥ 65

காமாக்ஷி ! முத்துக்களுக்கு விடுதலை தருவதும், காற்றைத் தூரத்தில் ஊதித்தள்ளுவதும், நீரின் நடுவே தோன்றுவதுமான சங்குடன், முக்தர்களுக்குப் பிரீதி அளிப்பதும், தேவதைகளைக் காப்பதும், ஜடர்களை விட்டு விலகி நிற்பதுமான உன் புன் சிரிப்பாகிய பூங்கொத்து எவ்வாறு ஸமநிலை பெறமுடியும் ?

சங்கு வெண்ணிறமுள்ளது. வெண்ணிறமுள்ள புன் சிரிப்புடன் ஸமநிலை பெறவிரும்புகிறது. இங்கு சிலேடை. முக்நா - முத்து. முக்தர் முக்தி பெற்றவர், மருத் - காற்று, தேவர். ல-ட என்ற எழுத்துக்கள் வேறானவை அல்ல. அதனால் ஜலம் - ஜடம் என்று இருவிதமாகவும் கொள்ளலாம். ஜலம் - நீர். ஜடம் -

*மந்த அறிவுள்ளது. சங்கு முத்துக்கு விடுதலை தருவது. சங்கும் சிப்பியும் ஓரினம். தேவி முக்தர்களுக்கு விரும்பியதையளிப்பவள். சங்கு காற்றை ஊதித்துரத்தும். தேவி தேவருக்கு காப்பளிப்பாள். சங்கு ஜலத்தினிடையே தோன்றும். தேவி ஜட மனிதர்களைவிட்டுத் தூரச்செல்வாள். இரண்டும் எப்படிச்சமமாகும் ? இது சொல் சிலேடை. (65)*

श्रीकामाक्षि तव स्मितद्युतिझरीवैदग्ध्यलीलायितं
पश्यन्तोऽपि निरन्तरं सुविमलं मान्या जगन्मण्डले ।
लोकं हासयितुं किमर्थमनिशं प्राकाश्यमातन्वते
मन्दाक्षं विरहय्य वस्तुविभवो मन्दारचन्द्रादयः ॥ ६६ ॥

ஸ்ரீ காமாக்ஷி தவஸ்மிதத்யுதிஜ்ஜரீவைதக்த்யலீலாயிதம்
பஶ்யந்தோऽபி நிரந்தரம்-ஸுவிமலம் மாந்யா ஜகந்மண்டலே ।
லோகம் ஹாஸயிதும் கிமர்த்தமநிஶம் ப்ராகாஶ்ய மாதந்வதே
மந்தாக்ஷம் விரஹய்ய வஸ்துவிபவோ மந்தாரசந்த்ராதய: ॥ 66

*ஸ்ரீ காமாக்ஷியே ! இவ்வுலகில் நன்மதிப்பு பெற்ற சிறந்த மந்தாரை, சந்திரன் முதலானோர், மிகத்தூய்மையுள்ள உன் புன் சிரிப்பொளியின் லீலையைக் கண்ணாரக் கண்டிருந்தும், வெட்கத்தை விட்டு உலகில் வெளிப்படுவது உலகமக்களைச் சிரிக்கச் செய்யவே. (66)*

क्षीराब्धेरपि शैलराजतनये त्वन्मन्दहासस्य च
श्रीकामाक्षि वलक्षिमोदयनिधेः किञ्चिद्भिदां ब्रूमहे ।
एकस्मै पुरुषाय देवि स ददौ लक्ष्मीं कदाचित्पुरा
सर्वेभ्योऽपि ददात्यसौ तु सततं लक्ष्मीं च वागीश्वरीम् ॥ ६७ ॥

க்ஷீராப்தேரபி ஶைலராஜ தநயே ! த்வந் மந்தஹாஸஸ்ய ச
ஸ்ரீ காமாக்ஷி ! வலக்ஷிமோதயநிதே: கிஞ்சித்ப்பிதாம் ப்ரூமஹே ।
ஏகஸ்மை புருஷாய தேவி ! ஸ ததௌ லக்ஷ்மீம் கதாசித் புரா
ஸர்வேப்ப்யோऽபி ததாத்யஸௌ து ஸததம் லக்ஷ்மீம் ச
வாகீஶ்வரீம் ॥ 67

*மலையரசனின் மகளே! ஸ்ரீ காமாக்ஷி! வெண்மைக்குத் தோற்றுவாய்களான, பாற்கடலுக்கும் உனது மந்தஹாஸத்திற்கும் இடையே சிறிதுவேற்றுமையுள்ளதைக் கூறுவோம். முன்பு எப்போதோ அந்தப்பாற்கடல் ஒரே ஒரு புருஷருக்கு (விஷ்ணுவிற்கு) லக்ஷ்மியைத் தந்தார். உன்புன்சிரிப்போ எப்போதும் யாவர்க்கும் லக்ஷ்மியையும் ஸரஸ்வதியையும் சேர்த்துத் தருகிறது. (67)*

श्रीकाञ्चीपुररत्नदीपकलिके तान्येव विश्वान्तरे
चाकोराणि चराचरेश्वरि परं धन्यानि मन्यामहे ।
कम्पातीरकुटुम्बचङ्क्रमकलाचुञ्चूनि कामाक्षि ते
नित्यं यानि मृदुस्मितेन्दुमहसां आस्वादं आतन्वते ॥ ६८ ॥

ஸ்ரீ காஞ்சீபுர ரத்நதீபகலிகே ! தாந்யேவ விஶ்வாந்தரே
சாகோராணி சராசரேஶ்வரி ! பரம் தந்யாநி மன்யாமஹே ।
கம்பாதீரகுடும்பசங்க்ரமகலாசுஞ்சூநி காமாக்ஷி ! தே
நித்யம் யாநி ம்ருதுஸ்மிதேந்துமஹஸாம் ஆஸ்வாதம் ஆதந்வதே ॥ 68

*ஸ்ரீ காஞ்சீபுரத்து மணிவிளக்குச் சுடரே ! அசைவதும் அசைவற்றதுமானதனைத்திற்கும் ஈச்வரியே ! ஸ்ரீ காமாக்ஷி ! சகோரப்பறவையினம் அனைத்தும் கம்பைக்கரையில் இனத்தாருடன் கூடிவாழ்வதில் திறம் படைத்தவர்களாக உன் மென்மையுள்ள புன் சிரிப்பாகிற சந்திர கிரணங்களைப்பருகிக் கொண்டிருக்கின்றன. அவையே உலகின் இடையே மிகவும் பாக்கிய முள்ளவை என நினைக்கிறோம். (68)*

शैत्यप्रक्रममाश्रितोऽपि नमतां जाड्यप्रथां धूनयन्
रागव्यञ्जनपेशलोऽपि गिरिजे वैमल्यमुल्लासयन् ।
लीलालापपुरःसरोऽपि सततं वाचंयमान्प्रीणयन्
कामाक्षि स्मितरोचिषां तव समुल्लासः कथं वर्ण्यते ॥ ६९ ॥

ஶைத்யப்ரக்ரமமாஶ்ரிதோऽபி நமதாம் ஜாட்யப்ரதாம் தூநயன்
ராகவ்யஞ்ஜநபேஶலோऽபி கிரிஜே ! வைமல்ய முல்லாஸயன் ।
லீலாலாபபுரஸ்ஸரோऽபி ஸததம் வாசம்யமாந் ப்ரீணயன்
காமாக்ஷி ! ஸ்மிதரோசிஷாம் தவ ஸமுல்லாஸ: கதம் வர்ண்யதே ॥ 69

மலை மகளே ! காமாக்ஷியே ! குளிர்ச்சியின் எல்லையை அடைந்தது, ஆனால் வணங்கியவர்களின் ஜடத்தன்மையை அகற்றுவது, அன்பின் செம்மையை(ராகத்தை) வெளியிடுவதில் தேர்ந்தது. ஆனால் ராகத்துவேஷமற்ற நிர்மலத்தன்மையை வெளிப்படுத்துவது. விளையாட்டாக அரட்டையடிப்பதில் முன்நிற்பது. ஆனால் மௌனத்தைத் தன் இயல்பாகக் கொண்டவரை மகிழ்விப்பது. இத்தகைய உன் புன் சிரிப்பின் கேளிகளை எப்படி வர்ணிப்பது ?

குளிர்ச்சியும் ஜடத்தன்மை நீக்கமும், ராகமும் விராகமும், அரட்டையும் மௌனமும் என முரண்படுகிற தன்மையுள்ளதைச் சொல்லால் விளக்குவது இயலாதது. (69)

श्रोणीचञ्चलमेखलामुखरितं लीलागतं मन्थरं
भ्रूवल्लीचलनं कटाक्षवलनं मन्दाक्षवीक्षाचणम् ।
यद्वैदग्ध्यमुखेन मन्मथरिपुं संमोहयन्त्यञ्जसा
श्रीकामाक्षि तव स्मिताय सततं तस्मै नमस्कुर्महे ॥ ७० ॥

ஶ்ரோணீசஞ்சலமேகலாமுகரிதம் லீலாகதம் மந்த்தரம்
ப்ப்ரூவல்லீசலனம் கடாக்ஷவலநம் மந்தாக்ஷவீக்ஷாசணம் ।
யத்வைதக்த்யமுகேந மந்மதரிபும் ஸம்மோஹயந்த்யஞ்ஜஸா
ஶ்ரீகாமாக்ஷி ! தவ ஸ்மிதாய ஸததம் தஸ்மை நமஸ்குர்மஹே ॥ 70

ஸ்ரீ காமாக்ஷி ! இடையில் இடையறாது அசைகின்ற அரைஞாணின் ஒலிப்பும், அழகிய மென் நடையும், புருவநொடிப்பும், வெட்கத்துடன் நோக்குவதில் தேர்ந்த கடைக்கண் சுழற்சியும் புன் சிரிப்பின் திறமையை முன்னிட்டுக் கொண்டே மன்மதனின் எதிரியை எளிதில் மோக வசப்படுத்தின. அந்த புன் சிரிப்பிற்கு எப்போதும் வணக்கம் செய்கிறோம். (70)

श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्प्ररोहे तव
स्फीतश्वेतिमसार्वभौमसरणिप्रागल्भ्यमभ्येयुषि ।
चन्द्रोऽयं युवराजतां कलयते चेटीधुरं चन्द्रिका
गङ्गा सा च सुधाझरी सहचरीसाधर्म्यमालम्बते ॥ ७१ ॥

ஸ்ரீகாமாக்ஷி ! மநோஜ்ஞமந்தஹஸிதஜ்யோதிஷ் ப்ரரோஹே தவ
ஸ்ப்பீதஶ்வேதிமஸார்வபௌமஸரணிப்ராகல்ப்ப்ய மப்ப்யேயுஷி ।
சந்த்ரோऽயம் யுவராஜதாம் கலயதே சேடீதுரம் சந்த்ரிகா
கங்கா ஸா ச ஸுதாஜ்ஜரீ ஸஹசரீஸாதர்ம்யம் ஆலம்பதே ॥ 71

*ஸ்ரீ காமாக்ஷி ! மனத்தை ஈர்க்கின்ற உனது புன்னகையாகிற ஒளிக்கொழுந்து, கொழுத்த வெண்மையின் பேராண்மையின் ஆழத்தை அடைந்துள்ள போது, (ஒளியானது பேராட்சி புரியும் போது) இந்த சந்திரன் இளவரசனாகிறான். நிலவு சேடியின் பொறுப்பை ஏற்கிறாள். அமுதப்பெருக்குள்ள கங்கை தோழியின் ஒத்துழைப்பைத் தருகிறாள். (71)*

ज्योत्स्ना किं तनुते फलं तनुमतामौष्ण्यप्रशान्तिं विना
त्वन्मन्दस्मितरोचिषा तनुमतां कामाक्षि रोचिष्णुना ।
सन्तापोऽपि निवार्यते नववचः [1] प्राचुर्यमङ्कूर्यते
सौन्दर्यं परिपूर्यते जगति सा कीर्तिश्च सञ्चार्यते ॥ ७२ ॥

ஜ்யோத்ஸ்நா கிம் தநுதே பலம் தநுமதாம் ஔஷ்ண்யப்ரஶாந்திம் விநா
த்வந்மந்தஸ்மிதரோசிஷா தநுமதாம் காமாக்ஷி ரோசிஷ்ணுநா ।
ஸந்தாபோऽபி நிவார்யதே நவவச: [2] ப்ராசுர்ய மங்கூர்யதே
ஸௌந்தர்யம் பரிபூர்யதே ஜகதி ஸா கீர்த்திஶ்ச ஸஞ்சார்யதே ॥ 72

*காமாக்ஷி ! நிலா மனிதரின் சூட்டைத் தணிப்பதைத் தவிர என்ன செய்கிறது. ? ஒளிமிக்க உன் புன்னகை அழகால் மனிதரின் தாபம் தணிகிறது, புதுப்பேச்சுவன்மை நிறைவு (இளம் வயதின் முதிர்ச்சி) ஏற்படுகிறது. அழகு நிறைவு பெறுகிறது. புகழும் உலகளவும் பரப்பப்படுகிறது. (72)*

वैमल्यं कुमुदश्रियां हिमरुचः कान्त्यैव सन्धुक्ष्यते
ज्योत्स्नारोचिरपि प्रदोषसमयं प्राप्यैव सम्पद्यते ।

---

*1.* नववय: 2. நவவய:

स्वच्छत्वं नवमौक्तिकस्य परमं संस्कारतो दृश्यते
कामाक्ष्याः स्मितदीधितेर्विशदिमा नैसर्गिको भासते ॥ ७३ ॥

வைமல்யம் குமுதஶ்ரியாம் ஹிமருச: காந்த்யைவ
ஸந்த்துக்ஷயதே
ஜ்யோத்ஸ்நாரோசிரபி ப்ரதோஷஸமயம் ப்ராப்யைவ ஸம்பத்யதே ।
ஸ்வச்சத்வம் நவமௌக்திகஸ்ய பரமம் ஸம்ஸ்காரதோ
த்ருஶ்யதே
காமாக்ஷ்யா: ஸ்மிததீதிதே; விஶதிமா நைஸர்கிகோ பாஸதே ॥ 73

*ஆம்பலின் வெண்மை சந்திரனின் ஒளியால் வெளிப்படுகிறது. நிலவின் ஒளியும் மாலைவேளைவந்த பிறகே முழுமைபெறுகிறது. முத்துவின் தளதளப்பும் செயற்கையாகச் செம்மைப்படுத்துவதால் தான் வெளிப்படுகிறது. (இவ்விதச் செயற்கைக் கூட்டுதவியின்றி) காமாக்ஷியின் புன் சிரிப்பின் தெளிவு (அழுக்கின்மை, ஒளி, வெண்மை முதலியவை) இயல்பாகவே அமைந்துள்ளதாக விளங்குகிறது. (73)*

प्राकाश्यं परमेश्वरप्रणयिनि त्वन्मन्दहासश्रियः
श्रीकामाक्षि मम क्षिणोतु ममतावैचक्षणीमक्षयाम् ।
यद्भीत्येव निलीयते हिमकरो मेघोदरे शुक्तिका-
गर्भे मौक्तिकमण्डली च सरसो मध्ये मृणाली च सा ॥ ७४ ॥

ப்ராகாஶ்யம் பரமேஶ்வரப்ரணயிநி ! த்வந்மந்தஹாஸஶ்ரிய:
ஸ்ரீ காமாக்ஷி ! மம க்ஷிணோது மமதாவைசக்ஷணீம் அக்ஷயாம் ।
யத்ப்பீத்யேவ நிலீயதே ஹிமகரோ மேகோதரே ஶுக்திகா-
கர்ப்பே மௌக்திகமண்டலீ ச ஸரஸோ மத்த்யே ம்ருணாளீ ச ஸா ॥ 74

*பரமேசுவரரின் அன்புக்குரியவளே ! ஸ்ரீ காமாக்ஷி ! உன் மந்த ஹாஸத்தின் அழகு எதனாலும் குறையாத என் மமதையின் திறனைச் சிதைக்கட்டும். அந்த அழகிடம் பயந்து, சந்திரன் மேகத்தின் வயிற்றில் மறைகிறான். சிப்பியின் கருவில் முத்தும் ஓடை நடுவில் தாமரைத் தண்டும் ஒளிந்து கொள்கின்றன. (74)*

हेरम्बे च गुहे च हर्षभरितं वात्सल्यमङ्कूरयत्
मारद्रोहिणि पूरुषे सहभुवं प्रेमाङ्कुरं व्यञ्जयत्।
आनम्रेषु जनेषु पूर्णकरुणावैदग्ध्यमुत्तालयत्
कामाक्षि स्मितमञ्जसा तव कथंकारं मया कथ्यते ॥ ७५ ॥

ஹேரம்பே ச குஹே ச ஹர்ஷபரிதம் வாத்ஸல்ய மங்கூரயத்
மாரத்ரோஹிணி பூருஷே ஸஹபுவம் ப்ரேமாங்குரம் வ்யஞ்ஜயத் ।
ஆநம்ரேஷு ஜநேஷு பூர்ணகருணாவைதக்த்யம் உத்தாளயத்
காமாக்ஷி ! ஸ்மிதம் அஞ்ஜஸா தவ கதங்காரம் மயா கத்யதே ॥ 75

*காமாக்ஷி ! விநாயகரிடமும் குகனிடமும் மகிழ்ச்சி நிறைந்த பிள்ளைப்பாசத்தைத்துளிர் விடச் செய்தும், மன்மதனின் எதிரியான பரமபுருஷனிடம் இயல்பான அன்பைப் பெருக்கியும், வணங்குகிற நன்மக்களிடம் பரிவின் சிறப்பை வெளிப்படுத்திக் கொண்டும் உள்ள உன் புன் சிரிப்பின் பெருமையை எவ்வாறு விளக்க இயலும் ?.*

संक्रुद्धद्विजराजकोऽप्यविरतं कुर्वन् द्विजैः सङ्गमं
वाणीपद्धतिदूरगोऽपि सततं तत्साहचर्यं वहन्।
अश्रान्तं पशुदुर्लभोऽपि कलयन्पत्यौ पशूनां रतिं
श्रीकामाक्षि तव स्मितामृतरसस्यन्दो मयि स्यन्दताम् ॥ ७६ ॥

ஸம்க்ருத்த்தத்விஜராஜகோऽபி அவிரதம் குர்வந் த்விஜை; ஸங்கமம்
வாணீபத்த்ததிதூரகோऽபி ஸததம் தத்ஸாஹசர்யம் வஹன் ।
அஶ்ராந்தம் பஶுதுர்லபோऽபி கலயந் பத்யௌ பஶூநாம் ரதிம்
ஸ்ரீ காமாக்ஷி ! தவ ஸ்மிதாம்ருதரஸஸ்யந்தோ மயி ஸ்யந்ததாம் ॥ 76

*ஸ்ரீ காமாக்ஷி ! த்விஜராஜனான சந்திரனிடம் கோபம் கொண்டிருந்தாலும் த்விஜர்களான பற்களோடு கூடியிருப்பதும், வாணியின் (வாக்கின்) வழிக்கு அப்பாற்பட்டதாயினும் வாணியை (ஸரஸ்வதியை) அருகில் கொண்டதும், பசுக்களுக்கு (ஆத்மஞானம் பெறாது பசுநிலையில் உள்ளவர்க்கு) எளிதில் கிடைக்காததாயினும், பசுபதிக்கு மனக்களிப்பைத் தருவதுமான உன் புன் சிரிப்பாகிற அமுத ரஸப்பெருக்கு என்னுள் பெருகட்டும். (76)*

श्रीकामाक्षि महेश्वरे निरुपमप्रेमाङ्कुरप्रक्रमं
नित्यं यः प्रकटीकरोति सहजां उन्निद्रयन्माधुरीम् ।
तत्ताद्दक्तव मन्दहाससुषमा मातः कथं मानितां
तन्मूर्ध्ना सुरनिम्नगां च कलिकामिन्दोश्च तां निन्दति ॥ ७७ ॥

ஸ்ரீ காமாக்ஷி ! மஹேஸ்வரே நிருபம ப்ரேமாங்குரப்ரக்ரமம்
நித்யம் ய: ப்ரகடீகரோதி ஸஹஜாம் உந்நித்ரயந் மாதுரீம் ।
தத்தாத்ருக் தவ மந்தஹாஸ ஸுஷமா மாத: கதம் மாநிதாம்
தந்மூர்த்நா ஸுரநிம்நகாம் ச கலிகா மிந்தோஸ்ச தாம் நிந்ததி ॥ 77

*தாயே ! காமாக்ஷி ! இயல்பாக இனிப்பை வெளிப்படுத்துகிற உன் புன் சிரிப்பு எப்போதும் மகேசனிடத்தில் இணையற்ற அன்பின் பெருக்கை வெளிப்படுத்துகிறது. ஆனால் அந்தப் புன் சிரிப்பின் ஒளி சிவனின் தலையில் இடம் பெற்று அவரால் மதிக்கப்பெற்ற கங்கையையும் சந்திரகலையையும் ஏன் நிந்திக்கிறது ? (77)*

ये माधुर्यविहारमण्डपभुवो ये शैत्यमुद्राकरा :
ये वैशद्यदशाविशेषसुभगास्ते मन्दहासाङ्कुराः ।
कामाक्ष्याः सहजं गुणत्रयमिदं पर्यायतः कुर्वतां
वाणीगुम्भनडम्बरे च हृदये कीर्तिप्ररोहे च मे ॥ ७८ ॥

யே மாதுர்யவிஹாரமண்டபபுவோ யே ஸைத்ய முத்ரா கரா :
யே வைஸத்யதஸாவிசேஷஸுபகாஸ் தே மந்தஹாஸாங்குரா: ।
காமாக்ஷ்யா; ஸஹஜம் குணத்ரயமிதம் பர்யாயத: குர்வதாம்
வாணீகும்பநடம்பரே ச ஹ்ருதயே கீர்த்தி ப்ரரோஹே ச மே ॥ 78

*வாழ்வின் இனிமையின் விளையாட்டு மண்டபங்களும், குளிர்ச்சிக்கு எல்லையிடமும் தெளிவின் பெருமையால் மனத்தை ஈர்ப்பவையுமான காமாக்ஷியின் புன் சிரிப்புக் குருத்துக்கள் தனது இயல்பான இனிமை, குளிர்ச்சி, தூய்மை என்ற மூன்றையும் ஒன்றன் பின் ஒன்றாக, என் வாக்கின் சொல்லடுக்குப் பகட்டிலும், இதயத்திலும், புகழிலும் அமைக்கட்டும். (78)*

कामाक्ष्या मृदुलस्मितांशुनिकरा दाक्षान्तके वीक्षणे
मन्दाक्षग्रहिला हिमद्युतिमयूखाक्षेपदीक्षाङ्कुराः ।
दाक्ष्यं पक्ष्मलयन्तु माक्षिकगुडद्राक्षाभवं वाक्षु मे
सूक्ष्मं मोक्षपथं निरीक्षितुमपि प्रक्षालयेयुर्मनः ॥ ७९ ॥

காமாக்ஷ்யா ம்ருதுளஸ்மிதாம்ஶுநிகரா: தாக்ஷாந்தகே வீக்ஷணே
மந்தாக்ஷக்ரஹிலா: ஹிமத்யுதி மயூகாக்ஷேப தீக்ஷாங்குரா: ।
தாக்ஷ்யம் பக்ஷ்மளயந்து மாக்ஷிககுடத்ராக்ஷாபவம் வாக்ஷு மே
ஸூக்ஷ்மம் மோக்ஷபதம் நிரீக்ஷிதுமபி ப்ரக்ஷாளயேயுர் மந: ॥ 79

*தக்ஷனின் எதிரியான சிவன் தன்னைப்பார்க்கையில் வெட்கத்தை அடைபவையும் சந்திரனின் ஒளியைக் குறை கூறுவதில் உறுதி பூண்டவையுமான காமாக்ஷியின் மென்மை மிக்க புன்னகைக்குவியல்கள், எனது பேச்சைத் தேன் வெல்லம் திராக்ஷை இவற்றிலிருக்கிற இனிமையைக்கொள்ளச் செய்யட்டும். மேலும் மிக நுட்பமான முக்திவழியை உற்றுக்காண்பதற்காக மனத்தை அலம்பித்தூய்மை பெறச் செய்யட்டும். (79)*

जात्या शीतलशीतलानि मधुराण्येतानि पूतानि ते
गाङ्गानीव पयांसि देवि पटलान्यल्पस्मितज्योतिषाम् ।
एनःपङ्कपरम्परामलिनितां एकाम्रनाथप्रिये
श्रीकामाक्षि परं मदीयधिषणां प्रक्षालयन्तु क्षणात् ॥ ८० ॥

ஜாத்யா ஶீதளஶீதளாநி மதுராண்யேதாநி பூதாநி தே
காங்காநீவ பயாம்ஸி தேவி ! படலாந்யல்பஸ்மித ஜ்யோதிஷாம் ।
ஏந: பங்கபரம்பராமலிநிதாம் ஏகாம்ர நாதப்ரியே !
ஸ்ரீ காமாக்ஷி ! பரம் மதீய திஷணாம் ப்ரக்ஷாளயந்து க்ஷணாத் ॥ 80

*ஏகாம்ரநாதனின் இனியாளே ! ஸ்ரீ காமாக்ஷி ! கங்கை நீர்போல் இயல்பாகவே மிகக் குளிர்ந்தவையும் இனியவையும் தூய்மை பெற்றவையுமான உன் மந்த ஹாஸ ஒளிப்படலங்கள், சேறு போன்று குழம்பி ஒட்டிக்கொண்டிருக்கிற பாபவரிசைகளால் அழுக்கடைந்த என் அறிவை விரைவில் நன்கு அலம்பித்தூய தாக்கட்டும். (80)*

अश्रान्तं परतन्त्रितः पशुपतिस्त्वन्मन्दहासाङ्कुरैः
श्रीकामाक्षि तदीयवर्णसमतासङ्गेन शङ्कामहे ।
इन्दुं नाकधुनीं च शेखरयते मालां च धत्ते नवैः
वैकुण्ठैरवकुण्ठनं च कुरुते धूलीचयैर्भास्मनैः ॥ ८१ ॥

அஶ்ராந்தம் பரதந்த்ரித: பஶுபதி: த்வந்மந்தஹாஸாங்குரை:
ஸ்ரீ காமாக்ஷி ! ததீயவர்ணஸமதாஸங்கேந ஶங்காமஹே ।
இந்தும் நாகதுநீம் ச ஶேகரயதே மாலாம் ச தத்தே நவை:
வைகுண்ட்டை ரவகுண்ட்டநம் ச குருதே தூளீசயை: பாஸ்மநை: ॥ 81

*ஸ்ரீ காமாக்ஷி ! ஓய்வின்றி உன் புன் சிரிப்புத் துளிர்களால் தன் வசமிழந்த பரமேச்வரன், அந்தச் சிரிப்பின் நிற ஒற்றுமை கொண்டதில் உள்ள ஈர்ப்பால் சந்திரனேயும் கங்கையையும் தலேயில் சூடிக்கொள்கிறார். புதிய (பிரும்மாவின்) மண்டையோட்டாலான மாலேயைத் தரிக்கிறார். சாம்பல் புழுதியைப்பூசித்தன்னே மறைத்துக்கொள்கிறார். இவ்வாறு நாங்கள் ஊகம் செய்கிறோம்.*

*புன் சிரிப்பு சிவனுக்கு உவந்ததொன்று, அதன் மீதுள்ள பற்றால், சிரிப்பு போன்ற வெண்ணிற முள்ள பொருளனைத்திலும் சந்திரன் கங்கை போன்று உயர்ந்ததையும் மண்டையோடு சாம்பல் போன்ற கீழானதையும் ஈர்ப்புடன் ஏற்கிறாரோ என்று ஊகிக்கிறோம். (81)*

श्रीकामाक्षि भवप्रिये[1] मृदुवचःसौरभ्यमुद्रास्पदं
प्रौढप्रेमलतानवीनकुसुमं मन्दस्मितं तावकम् ।
मन्दं कन्दलति प्रियस्य वदनालोके समाभाषणे
श्लक्ष्णे कुड्मलति प्ररूढपुलके चाश्लेषणे फुल्लति ॥ ८२ ॥

ஸ்ரீ காமாக்ஷி ! பவப்ரியே ![2]ம்ருதுவசஸ்ஸௌரப்யமுத்ராஸ்பதம்
ப்ரௌடப்ரேமலதாநவீநகுஸுமம் மந்தஸ்மிதம் தாவகம் ।

1. श्रीकाञ्चीपुरदेवते 2. *ஸ்ரீ காஞ்சீபுரதேவதே*

மந்தம் கந்தளதி ப்ரியஸ்ய வதநாலோகே ஸமாபாஷணே
ஶ்லக்ஷ்ணே குட்மலதி ப்ரரூடபுளகே சாஶ்லேஷணே ப்புல்லதி ॥ 82

*சிவனின் இனியவளே ! ஸ்ரீ காமாக்ஷி ! மென்மை மிக்க பேச்சின் நறுமணத்திற்கு இருப்பிடமும் முதிர்ந்த அன்புக்கொடியில் பூத்த புதுப்பூவுமான உன் சிரிப்பு, கணவனின் முகத்தைக் காணும் போது துளிர்த்து, இனிது வார்த்தையாடும் போது அரும்பிட்டு, உணர்வு மிகுதியால் மயிர் கூச்செரிய அணைத்துக் கொள்ளும்போது மலர்கிறது. (82)*

किं त्रैस्रोतसमम्बिके परिणतं स्रोतश्चतुर्थं नवं
पीयूषस्य समस्ततापहरणं किं वा द्वितीयं वपुः ।
किं स्विन्नैकटिकं गिरो मधुरिमाभ्यासाय नव्यं पयः
कामाक्षि स्मरशासनप्रियतमे मन्दस्मितं तावकम् ॥ ८३ ॥

கிம் த்ரைஸ்ரோதஸம் அம்பிகே பரிணதம் ஸ்ரோதஶ் சதுர்த்தம் நவம்
பீயூஷஸ்ய ஸமஸ்ததாபஹரணம் கிம் வா த்விதீயம் வபு: ।
கிம்ஸ்விந் நைகடிகம் கிரோ மதுரிமாப்ப்யாஸாய நவ்யம் பய:
காமாக்ஷி ! ஸ்மரஶாஸநப்ரியதமே மந்தஸ்மிதம் தாவகம் ॥ 83

*அழகிய தாயே ! மன்மதனை அடக்குபவரது அன்பிற்கு மிகவும் உரியவளே ! காமாக்ஷி ! உனது புன்னகை, இதுகாறும் வானம் பூமி பாதாளம் என்று மூன்று வழிகளில் பெருகி ஓடுகிற கங்கையின் நான்காவது புதுப்பாதையோ ? அனைவரது இதயத்தாபத்தையும் நீக்குகிற அமுதத்தின் புது உருவமோ ? அல்லது உனது வாக்கின் இனிமையைப் பழக்கிக்கொள்ள அருகில் அமர்ந்த புதுப் பாலோ ?*

*கங்கை தூய்மையையும் அமுதம் தாபம் நீக்குவதையும் பால் இனிமையும் கற்க ஏற்ற புது உருவமே உன் வெண்சிரிப்பு. (83)*

भूषा वक्त्रसरोरुहस्य सहजा वाचां सखी शाश्वती
नीवी विभ्रमसन्ततेः पशुपतेः सौधी दृशां पारणा ।

जीवातुर्मदनश्रियः शशिरुचेः उच्चाटनी देवता
श्रीकामाक्षि गिरां अभूमिं अयते हासप्रभामञ्जरी ॥ ८४ ॥

பூஷா வக்த்ரஸரோருஹஸ்ய ஸஹஜா வாசாம் ஸகீ ஶாஶ்வதீ
நீவீ விப்ப்ரமஸந்ததே: பஶுபதே: ஸௌதீ த்ருஶாம் பாரணா ।
ஜீவாது: மதநஶ்ரிய: ஶஶிருசே: உச்சாடநீ தேவதா
ஸ்ரீ காமாக்ஷி ! கிராம் அபூமிம் அயதே ஹாஸப்ரபாமஞ்ஜரீ ॥ 84

*ஸ்ரீ காமாக்ஷி ! தாமரைப் பூ போன்ற முகத்திற்கு இயல்பாக அமைந்த அலங்காரமும், பேச்சிற்கு எப்போதும் நிலைத்த - விட்டுப்பிரியாத தோழியும், காமலீலையைக் கட்டுக்குள்ளாக்குகிற எக்குமுடிப்பும், பசுபதியின் கண்களுக்கு அமுதவிருந்தும், மன்மதனின் அழகுக்கு உயிர் ஊட்டுவதும், பிசாசுபோன்ற சந்திர கிரணங்களை விரட்டியடிக்கின்ற தேவதையுமான உன் புன்சிரிப்பொளிப் பூங்கொத்து வாக்குக்கு எட்டாத நிலையை அடைகிறது. (84)*

सूतिः श्वेतिमकन्दलस्य वसतिः शृङ्गारसारश्रियः
पूर्तिः सूक्तिझरीरसस्य लहरी कारुण्यपाथोनिधेः ।
वाटी काचन कौसुमी मधुरिमस्वाराज्यलक्ष्म्यास्तव
श्रीकामाक्षि ममास्तु मङ्गलकरी हासप्रभाचातुरी ॥ ८५ ॥

ஸூதி: ஶ்வேதிம கந்தளஸ்ய வஸதி: ஶ்ருங்கார ஸாரஶ்ரிய:
பூர்தி: ஸூக்திஜரீரஸஸ்ய லஹரீ காருண்யபாதோநிதே: ।
வாடீ காசந கௌஸுமீ மதுரிமஸ்வாராஜ்யலக்ஷ்ம்யாஸ் தவ
ஸ்ரீ காமாக்ஷி மமாஸ்து மங்களகரீ ஹாஸப்ரபாசாதுரீ ॥ 85

*ஸ்ரீ காமாக்ஷி ! உன் புன் சிரிப்பின் அழகு, வெண்மை துளிர்க்குமிடம், சிருங்காரஸாரமான அழகின் இருப்பிடம், அழகியபேச்சின் இனிமைக்கு நிறைவு தருமிடம், கருணைக்கடலின் அலைபாயுமிடம், இனிமையெனும் பேரரசின் லக்ஷ்மீ உலாவும் சிறந்த பூஞ்சோலை, இது எனக்கு மங்களம் அளிக்கட்டும். (85)*

उत्तुङ्गस्तनमण्डलस्य विलसल्लावण्यलीलानटी-
रङ्गस्य स्फुटमूर्ध्वसीमनि मुहुः प्राकाश्यमभ्येयुषी।
श्रीकामाक्षि तव स्मितद्युतिततिर्बिम्बोष्ठकान्त्यङ्कुरैः
चित्रां विद्रुममुद्रिकां वितनुते मौक्तीं वितानश्रियम्॥ ८६ ॥

உத்துங்கஸ்தநமண்டலஸ்ய விலஸல்லாவண்யலீலாநட-
ரங்கஸ்ய ஸ்ப்புடம் ஊர்த்த்வஸீமநி முஹு: ப்ராகாஶ்யம் அப்ப்யேயுஷீ।
ஸ்ரீ காமாக்ஷி ! தவ ஸ்மிதத்யுதிததி: பிம்போஷ்ட்ட காந்த்யங்குரை:
சித்ராம் வித்ரும முத்ரிகாம் விதநுதே மௌக்தீம் விதாநஶ்ரியம் ॥ 86

*ஸ்ரீ காமாக்ஷி ! ஒளிமிக்க அழகெனும் நர்த்தகியின் நடன அரங்கான மேடிட்ட மார்பகத்தின் மேற்பகுதியில் அடிக்கடி உலாவி அங்கு தெளிந்த ஒளியைப் பரப்புகிற உனது புன் சிரிப்பின் ஒளிஅலே, கோவைப்பழம் போன்ற உதட்டின் ஒளியுடன் இணைந்து, பவழக்கொடி ஊடுருவிய வியப்பிற்குரிய அழகிய முத்துப்பந்தல் என்ற தோற்றத்தை விளைவிக்கிறது.*

*அழகு நடனமாடுகிற மார்பகமேட்டின் மீது புன்னகை ஒளி உதட்டின் செம்மையுடன் பரவ அந்த இடம் பவழம் கலந்த முத்தாலான பந்தல் போல் காணப்படுகிறது.*

जन्तूनां जनिदुःखमृत्युलहरीसन्तापनं कृन्ततः
प्रौढानुग्रहपूर्णशीतलरुचो नित्योदयं बिभ्रतः।
श्रीकामाक्षि विसृत्वरा इव करा हासाङ्कुरास्ते हठात्
आलोकेन निहन्युरन्धतमसस्तोमस्य मे सन्ततिम्॥ ८७ ॥

ஜந்தூநாம் ஜநிது:க்க-ம்ருத்யுலஹரீ-ஸந்தாபநம் க்ருந்தத:
ப்ரௌடாநுக்ரஹபூர்ணஶீதளருசோ நித்யோதயம் பிப்ப்ரத:।
ஸ்ரீ காமாக்ஷி ! விஸ்ருத்வரா இவ கரா: ஹாஸாங்குராஸ்தே ஹடாத்
ஆலோகேந நிஹந்யுரந்ததமஸ ஸ்தோமஸ்ய மே ஸந்ததிம் ॥ 87

*ஸ்ரீ காமாக்ஷி ! உன் புன்னகைத் துளிர்கள், மக்களின் பிறப்பு துன்பம் இறப்பு என்று ஒன்றன்பின் ஒன்றாகத் துன்புறுத்துபவற்றைத் துண்டிக்கிற - முதிர்ச்சி பெற்ற -அருள் நிறைந்த - குளிர்ந்த - அழிவற்ற நிலவின் உதயத்தை எப்போதும் தாங்குபவை, நாற்புறமும் நீண்டு விரித்த கைகள் போல் எப்போதும் எங்கும் உதவுபவை. குருடாக்குகிற என் உள்ளிருட்டுத் தொடரை அவை தம் ஒளியால் வலிவில் தானே புகுந்து அழிக்கட்டும். (87)*

स्वाभाव्यात् तव वक्त्रमेव ललितं सन्तोषसम्पादनं
शम्भोः किं पुनरञ्चितस्मितरुचः पाण्डित्यपात्रीकृतम् ।
अम्भोजं स्वत एव सर्वजगतां चक्षुःप्रियम्भावुकं
कामाक्षि स्फुरिते शरद्विकसिते कीदृग्विधं भ्राजते ॥ ८८ ॥

ஸ்வாபாவ்யாத் தவ வக்த்ரமேவ லலிதம் ஸந்தோஷஸம்பாதநம்
ஶம்ப்போ: கிம்புந: அஞ்சித ஸ்மிதருச: பாண்டித்ய பாத்ரீக்ருதம் ।
அம்ப்போஜம் ஸ்வத ஏவ ஸர்வஜகதாம் சக்ஷு:ப்ரியம் பாவுகம்
காமாக்ஷி ! ஸ்புரிதே ஶரத்விகஸிதே கீத்ருக் விதம் ப்ப்ராஜதே ॥ 88

*காமாக்ஷி ! அழகும் மென்மையும் நளினமும் மிக்க உன்முகம், இயல்பாகவே சிவனுக்கு மகிழ்ச்சி தருவது. அழகிய புன் சிரிப்பின் திறமைக்கு ஆதாரம். தாமரைப்பூ இயல்பால் உலகின் கண்களுக்கு ஆனந்தம் தரும். அதுவே சரத்காலத்தில் ஒளிரும் போது எப்படி இருக்கும் என்பதை விளக்கவும் வேண்டுமா ? (88)*

पुंभिर्निर्मलमानसैर्विदधते मैत्रीरसं निर्मलं
कर्तुं कर्मलयं च निर्मलतमां कीर्तिं लभन्तेतराम् ।
सूक्तिं पक्ष्मलयन्ति निर्मलगुणां यत्तावकाः सेवकाः
तत्कामाक्षि तव स्मितस्य कलया नैर्मल्यसीमानिधेः ॥ ८९ ॥

பும்ப்பி: நிர்மலமாநஸை: விததத்தே மைத்ரீரஸம் நிர்மலம்
கர்தும் கர்மலயம் ச நிர்மலதமாம் கீர்த்திம் லபந்தேதராம் ।
ஸூக்திம் பக்ஷ்மளயந்தி நிர்மலகுணாம் யத்தாவகா: ஸேவகா:
தத்காமாக்ஷி தவ ஸ்மிதஸ்ய கலயா நைர்மல்யஸீமாநிதே: ॥ 89

*காமாக்ஷி ! உனக்குப் பணிவிடை செய்கிற அன்பர்கள், தன்வினை நீங்க, தூய மனமுள்ள நல்லோர்களுடன் தூயநட்பைக் கொள்கிறார்கள். நிர்மலமான புகழைப் பெறுகிறார்கள். தெளிந்த நல்லுரைகளை விரிவுடன் வழங்குகிறார்கள். இவையனைத்தும் நிர்மலத் தன்மையின் பேரெல்லையான உனது புன் சிரிப்பின் ஓர் அம்சத்தால் தான் நடக்கின்றன. (89)*

आकर्षन्नयनानि नाकिसदसां शैत्येन संस्तम्भयन्
इन्दुं किञ्च विमोहयन्पशुपतिं विश्वार्तिमुच्चाटयन् ।
हिंसन्संसृतिडम्बरं तव शिवे हासाह्वयो मान्त्रिकः
श्रीकामाक्षि मदार्तितापतमसो विद्वेषणे चेष्टताम् ॥ ९० ॥

ஆகர்ஷந் நயநாநி நாகிஸதஸாம் ஶைத்யேந ஸம்ஸ்தம்பயந்
இந்தும் கிஞ்ச விமோஹயந் பஶுபதிம் விச்வார்த்திம் உச்சாடயந் ।
ஹிம்ஸந் ஸம்ஸ்ருதிடம்பரம் தவ சிவே ! ஹாஸாஹ்வயோ மாந்த்ரிக:
ஸ்ரீ காமாக்ஷி ! மதார்த்திதாபதமஸோ வித்வேஷணே சேஷ்டதாம் ॥

*மங்களத்தின் உருவே ! ஸ்ரீ காமாக்ஷி ! உனது புன்னகை எனும் மாந்திரிகன் விண்ணுலகில் வாழ்பவரின் கண்களை ஈர்ப்பவன், குளிர்ச்சியால் சந்திரனையும் விறைப்படையச் செய்பவன், பரமேசுவரனையும் மோகமடையச் செய்பவன், உலகின் துயரைத் துரத்தியடிப்பவன், மற்றும் ஸம்ஸாரதாபத்தைத் துன்புறுத்துபவன், அவன் என்துயர், தாபம், அறியாமை இவற்றை அவனது வெறுப்புக்குள்ளாக்கி நீக்குவதில் ஈடுபடட்டும். (90)*

क्षेपीयः क्षपयन्तु कल्मषभयान्यस्माकम् अल्पस्मित-
ज्योतिर्मण्डलचङ्क्रमास्तव शिवे कामाक्षि रोचिष्णवः ।
पीडाकर्मठकर्म घर्म समयव्यापारतापानल-
श्रीपाता नवहर्षवर्षणसुधास्रोतस्विनीशीकराः ॥ ९१ ॥

க்ஷேபீய: க்ஷபயந்து கல்மஷபயாநி அஸ்மாகம் அல்பஸ்மித-
ஜ்யோதிர்மண்டலசங்க்ரமாஸ் தவ ஶிவே ! காமாக்ஷி ! ரோசிஷ்ணவ: ।

பீடாகர்மடகர்ம-க்கர்ம-ஸமய-வ்யாபார-தாபாநல-
ஶ்ரீபாதா: நவ வர்ஷ ஹர்ஷண ஸுதா ஸ்ரோதஸ்விநீ ஶீகரா: ॥ 91

*மங்களமானவளே ! காமாக்ஷி ! உனது மென்னகையாகிற ஒளிமண்டலப்பரப்பு, துக்கம் தருவதையே இயல்பாகக் கொண்ட வினைகளாகிற கோடைதாபாக்கினியை அழிப்பது, புதுமழை பொழிதலால் மகிழ்விக்கிற அமுத அருவியின் நீர்த்துளி, ஒளிமிக்கது, விரைவுமிக்கது. அது எனது பாபங்களின் பயமுறுத்தலைப் போக்கட்டும். (91)*

श्रीकामाक्षि तव स्मितैन्दवमहःपूरे परिस्फूर्जति
प्रौढां वारिधिचातुरीं कलयते भक्तात्मनां प्रातिभम् ।
दौर्गत्यप्रसरास्तमः पटलिकासाधर्म्यमाबिभ्रते
किं किं कैरवसाहचर्यपदवीरीत्यां न धत्ते पदम् ॥ ९२ ॥

ஶ்ரீ காமாக்ஷி ! தவ ஸ்மிதைந்தவ மஹ: பூரே பரிஸ்ப்பூர்ஜதி
ப்ரௌடாம் வாரிதிசாதுரீம் கலயதே பக்தாத்மநாம் ப்ராதிபம் ।
தௌர்கத்ய ப்ரஸரா: தம: படலிகா ஸாதர்ம்யமாபிப்ரதே
கிம் கிம் கைரவ ஸாஹசர்யபதவீ ரீத்யாம் ந தத்தே பதம் ॥ 92

*காமாக்ஷி ! உன் புன்னகையாகிற சந்திர ஒளிப்பெருக்கு நன்கு ஒளிவீசுகையில், பக்தி மிக்கவரின் மேதை ஆழ்கடலின் நிலை பெறுகிறது. கேடுகளின் பரவல் இருள்படலத்தின் நிலையை அடைகின்றது. மற்ற நன்மைகளில் எதெது அல்லிக்குத் துணைநிற்கும் முறையைப் பின்பற்றுது?*

*ஆழ்ந்த மேதையும் கேடுகளின் மறைவும் நன்மைகளின் மலர்ச்சியும் தேவியின் அருளால் ஏற்படுகின்றன. (92)*

मन्दारादिषु मन्मथारिमहिषि प्राकाश्यरीतिं निजां
कादाचित्कतया विशङ्क्य बहुशो वैशद्यमुद्रागुणः ।
श्रीकामाक्षि तदीयसङ्गमकलामन्दीभवत्कौतुकः
सातत्येन तव स्मिते वितनुते स्वैरासनावासनाम् ॥ ९३ ॥

மந்தாராதிஷு மன்மதாரி மஹிஷி ! ப்ராகாஶ்யரீதிம் நிஜாம்
காதாசித்கதயா விஶங்க்ய பஹுஶோ வைஶத்ய முத்ராகுண: ।
ஸ்ரீ காமாக்ஷி ! ததீய ஸங்கம கலா மந்தீபவத் கௌதுக:
ஸாதத்யேந தவ ஸ்மிதே விதநுதே ஸ்வைராஸநாவாஸநாம் ॥ 93

*மன்மதனின் எதிரியின் மனைவியே ! காமாக்ஷி ! அப்பழுக்கற்ற வெண்மையின் அடையாளமான சிறப்பு மந்தாரம் முதலியவைகளிலும் வெளிப்படுகிறது. ஆனால் ''ஏதோ ஒரு நேரத்தில் தான். எப்போதும் அல்ல'' என்று கருதி அவைகளோடு சேர்வதில் ஆர்வமின்றி, உன் புன் சிரிப்பில் (அந்த வெண்மை) நிலைத்து தன் விருப்பப்படி இங்கேயே தங்குவது என்ற ஆழ்ந்த பிடிப்பைக் கொள்கிறது.(93)*

इन्धाने भववीतिहोत्रनिवहे कर्मौघचण्डानिल-

प्रौढिम्ना बहुलीकृते निपतितं सन्तापचिन्ताकुलम् ।

मातर्मां परिषिञ्च किञ्चिदमलैः पीयूषवर्षैरिव

श्रीकामाक्षि तव स्मितद्युतिकणैः शैशिर्यलीलाकरैः ॥ ९४ ॥

இந்த்தாநே பவவீதிஹோத்ர நிவஹே கர்மௌக சண்டாநில-
ப்ரௌடிம்நா பஹுளீக்ருதே நிபதிதம் ஸந்தாபசிந்தா குலம் ।
மாதர் மாம் பரிஷிஞ்ச கிஞ்சிதமலை: பீயூஷ வர்ஷை ரிவ
ஸ்ரீ காமாக்ஷி தவ ஸ்மித த்யுதி கணை: ஶைஶிர்யலீலாகரை : ॥ 94

*தாயே ! காமாக்ஷி ! வினைக்கட்டாகிற பெருங்காற்றின் வேகத்தால் கொழுந்துவிட்டுப் பெரிதாய் எரிகிற ஸம்ஸாரமாகிய நெருப்புக்கனல்களில் விழுந்து தாபத்தாலும் கவலையாலும் மனம் கலங்கிய என்னை, நிர்மலமான அமுததாரைகள் போன்று தூயவையும் குளிர்ச்சியை விளையாட விடுபவையுமான உன்புன்சிரிப்பொளிக் கணங்களால் நீராட்டிக் குளிரவைப்பாய்.*

भाषाया रसनाग्रखेलनजुषः शृङ्गारमुद्रासखी -

लीलाजातरतेः सुखेन नियमस्नानाय मेनात्मजे ।

श्रीकामाक्षि सुधामयीव शिशिरा स्रोतस्विनी तावकी

गाढानन्दतरङ्गिता विजयते हासप्रभाचातुरी ॥ ९५ ॥

பாஷாயா: ரஸநாக்ர கேலந ஜுஷ: ஶ்ருங்கார முத்ராஸகீ -
லீலாஜாத ரதே: ஸுகேந நியம ஸ்நாநாய மேநாத்மஜே ।
ஸ்ரீ காமாக்ஷி ! ஸுதாமயீவ ஶிஶிரா ஸ்ரோதஸ்விநீ தாவகீ
காடாநந்த தரங்கிதா விஜயதே ஹாஸ ப்ரபா சாதுரீ ॥ 95

*மேநாதேவியின் புதல்வியே ! ஸ்ரீ காமாக்ஷி ! ஆழ்ந்த ஆனந்த அலை வீசுகிற உன் புன் சிரிப்பின் ஒளியழகாகிய குளிர்ந்த நீரோடை, நாக்கின் நுனியில் விளையாடுபவளும் சிருங்காரச்சுவையாகிற தோழியின் விளையாட்டில் ஆர்வமுள்ளவளுமான மொழி என்ற பெண்ணிற்குச் சுகமாக நியமத்துடன் நீராட ஏற்றதாக விளங்குகிறது. (95)*

सन्तापं विरलीकरोतु सकलं कामाक्षि मच्चेतना
मज्जन्ती मधुरस्मितामरधुनीकल्लोलजालेषु ते ।
नैरन्तर्यमुपेत्य मन्मथमरुल्लोलेषु येषु स्फुटं
प्रेमेन्दुः प्रतिबिम्बितो वितनुते कौतूहलं धूर्जटेः ॥ ९६ ॥

ஸந்தாபம் விரளீகரோது ஸகலம் காமாக்ஷி ! மச்சேதநா
மஜ்ஜந்தீ மதுர ஸ்மிதாமர துநீ கல்லோல ஜாலேஷு தே ।
நைரந்தர்ய முபேத்ய மந்மத மருல்லோலேஷு யேஷு ஸ்ப்புடம்
ப்ரேமேந்து: ப்ரதிபிம்பிதோ விதநுதே கௌதூஹலம் தூர்ஜடே: ॥ 96

*காமாக்ஷி ! மன்மதன் எனும் காற்று வீசுவதால் அலைகிற உன் புன்னகையாகிய கங்கையின் அலைவரிசையில் பரமசிவனது அன்பு எனும் சந்திரன் இடைவிடாமலிருப்பதை ஏற்று பிரதிபலிப்பவனாக உற்சாகத்தை வெளிப்படுத்துகிறான். என் அறிவு அதில் ஆழ்ந்து மூழ்கித் தன் தாபமனைத்தையும் போக்கிக் கொள்ளட்டும். (96)*

चेतःक्षीरपयोधिमन्थनचलद्रागाख्यमन्थाचल-
क्षोभव्यापृतिसम्भवां जननि ते मन्दस्मितश्रीसुधाम् ।
स्वादं स्वादमुदीतकौतुकरसं नेत्रत्रयी शाङ्करी
श्रीकामाक्षि निरन्तरं परिरमत्यानन्दवीचीमयी ॥ ९७ ॥

சேத: க்ஷீர பயோதி மந்தந சலத் ராகாக்ய மந்தா சல-
க்ஷோப வ்யாப்ருதி ஸம்பவாம் ஜநநி ! தே மந்தஸமித ஸ்ரீஸுதாம் ।
ஸ்வாதம் ஸ்வாதமுதீத கௌதுகரஸம் நேத்ர த்ரயீ ஶாங்கரீ
ஸ்ரீ காமாக்ஷி ! நிரந்தரம் பரிரமத்யாநந்த வீசீமயீ ॥ 97

*அன்னையே ! காமாக்ஷி ! உன் மனமெனும் பாற்கடலில் கடைவதற்காக அசைகிற ஆசையென்ற மத்தான மந்தர மலையின் கடைதலால் வெளிப்பட்ட உன் புன்னகையாகிய அமுதத்தை குறுகுறுப்பு மிகும்படி மீண்டும் பருகிய சங்கரனது மூன்று கண்களும் ஆனந்தத்தின் அலைவீச்சாக மாறிவிட்டன. (97)*

आलोके तव पञ्चसायकरिपोः उद्दामकौतूहल-
प्रेङ्खन्मारुतघट्टनप्रचलिताद् आनन्ददुग्धाम्बुधेः ।
काचिद्वीचिरुदञ्चति प्रतिनवा संवित्प्ररोहात्मिका
तां कामाक्षि कवीश्वराः स्मितं इति व्याकुर्वते सर्वदा ॥ ९८ ॥

ஆலோகே தவ பஞ்சஸாயகரிபோ: உத்தாம- கௌதூஹல-
ப்ரேங்க்கந் மாருத கட்டந ப்ரசலிதாத் ஆநந்த துக்தாம்புதே: ।
காசித் வீசிருதஞ்சதி ப்ரதிநவா ஸம்வித் ப்ரரோஹாத்மிகா
தாம் காமாக்ஷி ! கவீஶ்வரா: ஸ்மிதமிதி வ்யாகுர்வதே ஸர்வதா ॥ 98

*காமாக்ஷி ! மன்மதனது பகைவரான பரமசிவனது பார்வை விழும்போதே, கட்டுக்கடங்காத ஆர்வமெனும் காற்றால் அலை மோதுகின்ற ஆனந்தப் பாற்கடலிலிருந்து வெளியானதொரு ஞானக் கொழுந்தெனும் அலையே உன் புன்னகை என்று சிறந்த கவிகள் விளக்குகிறார்கள். (98)*

सूक्तिः शीलयते किमद्रितनये मन्दस्मितात् ते मुहुः
माधुर्यागमसंप्रदायं अथवा सूक्तेस्तु मन्दस्मितम् ।
इत्थं कामपि गाहते मम मनः सन्देहमार्गभ्रमीं
श्रीकामाक्षि न पारमार्थ्यसरणिस्फूर्तौ निधत्ते पदम् ॥ ९९ ॥

ஸூக்தி: ஶீலயதே கிமத்ரிதநயே ! மந்தஸ்மிதாத் தே முஹு:
மாதுர்யாகம ஸம்ப்ரதாயம் அதவா ஸூக்தேஸ்து மந்தஸ்மிதம் ।
இத்த்தம் காமபி காஹதே மம மநஸ்ஸந்தேஹ மார்க்க ப்ரமீம்
ஶ்ரீ காமாக்ஷி ந பாரமார்த்த்ய ஸரணி ஸ்ப்பூர்தௌ நிதத்தே பதம் ॥ 99

*மலைமகளே ! காமாக்ஷியே ! உன் நல்வாக்கானது இனிமை என்ற சாஸ்திரத்தின் உட் கருத்தை உன் புன்சிரிப்பிடமிருந்து பழக்கிக் கொள்கிறதா ? அல்லது நல்ல வாக்கிடமிருந்து அந்த இனிமையை உன் புன் சிரிப்பு பழக்கிக் கொள்கிறதா ? என்மனம் இப்படி ஓர் சந்தேகத்தால் சுற்றிச்சுற்றி வருகிறதேயல்லாமல் உண்மையை அறிய முற்படுவதில்லை.*

क्रीडालोलकृपासरोरुहमुखीसौधाङ्गणेभ्यः कवि-
श्रेणीवाक्परिपाटिकामृतझरीसूतीगृहेभ्यः शिवे ।
निर्वाणाङ्कुरसार्वभौमपदवीसिंहासनेभ्यस्तव
श्रीकामाक्षि मनोज्ञमन्दहसितज्योतिष्कणेभ्यो नमः ॥ १०० ॥

க்ரீடா லோல க்ருபா ஸரோருஹ முகீ ஸௌதாங்கணேப்ப்ய: கவி-
ஶ்ரேணீ வாக்பரிபாடிகாம்ருத ஜரீ ஸூதீ க்ருஹேப்ப்ய: ஶிவே !
நிர்வாணாங்குர ஸார்வபௌம பதவீ ஸிம்ஹாஸநேப்ப்யஸ்தவ
ஶ்ரீ காமாக்ஷி ! மநோஜ்ஞ மந்த ஹஸித ஜ்யோதிஷ்கணேப்ப்யோ
நம: ॥ 100

*மங்களமானவளே ! ஶ்ரீ காமாக்ஷி ! விளையாட்டில் ஈடுபட்ட கருணை என்ற தாமரைபோன்று அழகிய முகமுள்ள பெண் உலாவ மேல்மாடமும், கவிகளின் கூட்டத்தின் பேச்சுத் திறமை என்ற அமுத அருவிக்குத் தோற்றுவாயும் பற்றற்ற முக்தி நிலையான பேரரசின் ஸிம்ஹாஸனமுமான உன் அழகிய புன் சிரிப்பாகிற ஒளிக்கதிர்களுக்கு நமஸ்காரம். (100)*

மந்தஸ்மிதசதகம் முற்றிற்று.

श्रीगुरुभ्यो नमः

श्रीकामाक्ष्यै नमः

# मूकपञ्चशती

## ५. स्तुति शतकम् ।

# மூகபஞ்சசதீ

## 5. ஸ்துதி சதகம்.

पाण्डित्यं परमेश्वरि स्तुतिविधौ नैवाश्रयन्ते गिरां
वैरिञ्चान्यपि गुम्फनानि विगलद्गर्वाणि शर्वाणि ते ।
स्तोतुं त्वां परिफुल्लनीलनलिनश्यामाक्षि कामाक्षि मां
वाचालीकुरुते तथापि नितरां त्वत्पादसेवादरः ॥ १ ॥

பாண்டித்யம் பரமேஶ்வரி ஸ்துதி விதௌ நைவாஶ்ரயந்தே கிராம்
வைரிஞ்சாந்யபி கும்ப்பநாநி விகளத் கர்வாணி ஶர்வாணி தே ।
ஸ்தோதும் த்வாம் பரிபுல்ல நீல நளின ஶ்யாமாக்ஷி ! காமாக்ஷி மாம்
வாசாலீ குருதே ததாபி நிதராம் த்வத்பாத ஸேவாதர: ॥ 1

*பரமேச்வரி ! சர்வனெனும் சிவனின் மனைவியே ! மலர்ந்த நீலோத்பலம் போன்று கருத்த கண்கள் உள்ளவளே ! காமாக்ஷி! உன்னைத்துதிக்கிற செயலில் பிரும்மாவின் சொல்லாற்றலும் திறமையற்றுச் செறுக்கிழக்கின்றன. ஆயினும் உன் திருவடிகளை வழிபடுவதில் உள்ள ஆர்வம் உன்னைத்துதிக்க என்னை பெரும் வாயாடியாக்குகிறது. (1)*

तापिञ्छस्तबकत्विषे तनुभृतां दारिद्र्यमुद्राद्विषे
संसाराख्यतमोमुषे पुररिपोर्वामाङ्कसीमाजुषे ।

कम्पातीरमुपेयुषे कवयतां जिह्वाकुटीं जग्मुषे
विश्वत्राणपुषे नमोऽस्तु सततं तस्मै परज्योतिषे ॥ २ ॥

தாபிஞ்ச்ச ஸ்தபகத்விஷே தநுப்ப்ருதாம் தாரித்ர்ய முத்ராத்விஷே
ஸம்ஸாராக்க்ய தமோமுஷே புரரிபோ: வாமாங்கஸீமா ஜுஷே ।
கம்பாதீர முபேயுஷே கவயதாம் ஜிஹ்வாகுடீம் ஜக்முஷே
விச்வத்ராண புஷே நமோऽஸ்து ஸததம் தஸ்மை பரஜ்யோதிஷே ॥

*காசாம்பூங்கொத்தின் அழகு கொண்டதும், மாந்தரின் ஏழ்மையின் அடையாளத்தை எதிர்ப்பதும், ஸம்ஸாரம் எனும் இருளைத் திருடுவதும் திரிபுரங்களின் எதிரியான சிவபெருமானின் இடது மடியில் இடம் பெற்றதும், கம்பைக் கரையை அடைந்ததும், காவியம் இயற்றுபவர்களின் நாக்காகிற குடிலினுள் சென்றதும், உலகின் காப்பில் புஷ்டி தருவதுமானதொரு பேரொளிக்கு எப்போதும் நமஸ்காரங்கள் இருக்கட்டும். (2)*

ये संध्यारुणयन्ति शङ्करजटाकान्तारचन्द्रार्भकं
सिन्दूरन्ति च ये पुरन्दरवधूसीमन्तसीमान्तरे ।
पुण्यं ये परिपक्वयन्ति भजतां काञ्चीपुरे माममी
पायासुः परमेश्वरप्रणयिनीपादोद्भवाः पांसवः ॥ ३ ॥

யே ஸந்த்த்யாருணயந்தி மங்கரஜடா காந்தார சந்த்ரார்ப்பகம்
ஸிந்தூரந்தி ச யே புரந்தரவதூ ஸீமந்த ஸீமாந்தரே ।
புண்யம் யே பரிபக்வயந்தி பஜதாம் காஞ்சீபுரே மாமமீ
பாயாஸு: பரமேய்வர ப்ரணயிநீ பாதோத்ப்பவா: பாம்ஸவ: ॥ 3

*பரமேசுவரனின் இனிய மனைவியின் திருவடிகளிலுள்ள புழுதிப்பொடிகள் சிவபெருமானது சடையாகிற பெருங்காட்டிலுள்ள இளஞ்சந்திரனை ஸந்தியா காலத்துச் செம்மையடையச் செய்கின்றன. இந்திரனின் மனைவியான சசீதேவியின் வகிட்டிலுள்ள பிரிவின் இடையே சிந்தூரப் பொட்டாகின்றன. காஞ்சீபுரத்தில் வழிபடுகிறவரின் புண்யத்தைப்பலன் தருகிற நிலைக்குக் கொணர்கின்றன. அவை என்னைக் காக்கட்டும். (3)*

कामाडम्बरपूरया शशिरुचा कम्रस्मितानां त्विषा
कामारेरनुरागसिन्धुमधिकं कल्लोलितं तन्वती ।
कामाक्षीति समस्तसज्जननुता कल्याणदात्री नृणां
कारुण्याकुलमानसा भगवती कम्पातटे जृम्भते ॥ ४ ॥

காமாடம்பர பூரயா ஶஶிருசா கம்ரஸ்மிதாநாம் த்விஷா
காமாரேரநுராக ஸிந்த்தும் அதிகம் கல்லோலிதம் தந்வதீ ।
காமாக்ஷீதி ஸமஸ்த ஸஜ்ஜநநுதா கல்யாணதாத்ரீ ந்ருணாம்
காருண்யாகுல மானஸா பகவதீ கம்பாதடே ஜ்ரும்ம்பதே ॥ 4

*மன்மதனின் கேளிக்கைகளை வளர்க்கிற சந்திரன் போன்ற மேனியொளியாலும் அழகிய புன்சிரிப்பின் ஒளியாலும் காமனின் எதிரியின் அன்பெனும் கடலை மிகவும் பொங்கி எழச்செய்பவளும், நல்லோர்களால் துதிக்கப்பெறுபவளும், மக்களுக்கு நன்மை தருபவளும், கருணையால் பரபரப்புற்ற மனமுள்ளவளுமான காமாக்ஷி என்ற பகவதீ கம்பைக்கரையில் களிப்புடன் விளங்குகிறாள்.*

*பூர்ணமான பேராளுமை, செயலாற்றல், புகழ், செல்வச் செழிப்பு, பேரறிவு, பகுத்தறிவு இவை ஆறும் பகமாகும். பகங்கள் நிறைந்தவள் பகவதீ. (4)*

कामाक्षीणपराक्रमप्रकटनं संभावयन्ती दृशा
श्यामा क्षीरसहोदरस्मितरुचिप्रक्षालिताशान्तरा ।
वामाक्षीजनमौलिभूषणमणिर्वाचां परा देवता
कामाक्षीति विभाति कापि करुणा कम्पातटिन्यास्तटे ॥ ५ ॥

காமாக்ஷீண பராக்ரமப்ரகடநம் ஸம்ப்பாவயந்தீ த்ருஶா
ஶ்யாமா க்ஷீரஸஹோதரஸ்மிதருசி ப்ரக்ஷாளிதாஶாந்தரா ।
வாமாக்ஷீஜநமௌளி பூஷணருசி: வாசாம் பரா தேவதா
காமாக்ஷீதி விபாதி காபி கருணா கம்பா தடிந்யாஸ் தடே ॥ 5

*காமனின் குறைவற்ற பேராற்றலின் வெளியீட்டைக்கண்களால் பாராட்டுபவளும், யுவதியும், பாலின் உடன் பிறப்பு போன்ற புன்சிரிப்பின் அழகால் திசைவெளியைத் தூயதாக்குபவளும்,*

கண்ணழகுள்ள பெண்களின் தலைமை ஏற்ற ரத்தினமும், (வேதம் முதலிய) நல்வாக்குகளால் துதிக்கப்பெறுகிற மேலான தேவதையுமான காமாக்ஷீ என்றதொரு கருணை வடிவம் கம்பைநதிக்கரையில் விளங்குகிறது.

வேதம் பலதேவதைகளைத்துதிக்கிறது. அவர்களுக்குள் இவள் சிறந்தவள். (5)

श्यामा काचन चन्द्रिका त्रिभुवने पुण्यात्मनामानने
सीमाशून्यकवित्ववर्षजननी या कापि कादम्बिनी ।
माराराातिमनोविमोहनविधौ काचित्तमःकन्दली
कामाक्ष्याः करुणाकटाक्षलहरी कामाय मे कल्पताम् ॥ ६ ॥

ஶ்யாமா காசந சந்த்ரிகா த்ரிபுவநே புண்யாத்மநாம் ஆநநே
ஸீமாஶூன்ய கவித்வவர்ஷ ஜநநீ யா காபி காதம்பினீ।
மாராராதிமநோ விமோஹநவிதௌ காசித் தம: கந்தலீ
காமாக்ஷ்யா: கருணா கடாக்ஷ லஹரீ காமாய மே கல்பதாம் ॥ 6

அது, மூவுலகிற்கும் ஒளிதருகிற கருநிறமுள்ள (யௌவனப் பருவத்திற்கு வந்த) நிலவு, புண்ணியம் செய்த கவிகள் போன்றோரின் வாக்கில் எல்லையற்ற கவிதை மழைபொழியச் செய்கிற ஒருமேகவரிசை, மன்மதனின் எதிரியின் மனத்தை மயக்குகிற ஒரு பேரிருள் குவியல், அத்தகையதொரு காமாக்ஷியின் கடாக்ஷ அலை என் விருப்பம் நிறைவேற உதவட்டும். (6)

प्रौढध्वान्तकदम्बके कुमुदिनीपुण्यांकुरं दर्शयन्
ज्योत्स्नासंगमनेऽपि कोकमिथुनं मिश्रं समुद्भावयन् ।
कालिन्दीलहरीदशां प्रकटयन् कम्रां नभस्यद्भुतां
कश्चिन्नेत्रमहोत्सवो विजयते काञ्चीपुरे शूलिनः ॥ ७ ॥

ப்ரௌடத்த்வாந்த கதம்பகே குமுதிநீ புண்யாங்குரம் தர்ஶயந்
ஜ்யோத்ஸ்நா ஸங்கமநேऽபி கோக மிதுனம் மிஶ்ரம்
ஸமுத்ப்பாவயந் ।
காளிந்தீலஹரீ தஶாம் ப்ரகடயந் கம்ராம் நபஸ்யத்ப்புதாம்
கஶ்சித் நேத்ர மஹோத்ஸவோ விஜயதே காஞ்சீபுரே ஶூலிந: ॥

*காஞ்சீபுரத்தில் சூலமேந்திய பரமசிவனின் கண்களுக்குத் திருவிழா போன்று மன மகிழ்ச்சி தருவதொன்று விளங்குகிறது. அது அடர்ந்து குவிந்த இருட்டு போன்ற கூந்தலில் அல்லிப்பூவின் நல்வினைப் பயனின் குருத்தாகிய பிறைச்சந்திரனைச் சூடியது. அதனால் நிலவில் மட்டும் கூடுகிற சக்ரவாகப் பறவைத் தம்பதியை (நிலா இல்லாத போதும்) இணையச் செய்கிறது. யமுனை யலையின் அழகிய வியக்கத் தக்கதொரு கரியநிறத்தை வானில் தோற்றுவிப்பது.*

*ஸ்தனங்களை இணைந்த சக்ரவாகப்பட்சி தம்பதியாக வர்ணிப்பது கவிமரபு. காரிருள் போன்ற கூந்தலிடையே உள்ள பிறைச்சந்திரன் ஸ்தனங்களில் பரவ, பரமசிவனின் கண்களுக்கு இனிய காட்சியாகிறது. (7)*

तन्द्राहीनतमालनीलसुषमैस्तारुण्यलीलागृहैः
तारानाथकिशोरलाञ्छितकचैस्ताम्रारविन्देक्षणैः ।
मातः संश्रयतां मनो मनसिजप्रागल्भ्यनाडिन्धमैः
कम्पातीरचरैर्घनस्तनभरैः पुण्याङ्कुरैः शांकरैः ॥ ८ ॥

தந்த்ராஹீந தமால நீல ஸுஷமை: தாருண்ய லீலாக்ருஹை:
தாராநாத கிஶோர லாஞ்ச்சித கசை: தாம்ராரவிந்தேக்ஷணை: ।
மாத: ஸம்ஶ்ரயதாம் மநோ மநஸிஜ ப்ராகல்ப்ய நாடிந் தமை:
கம்பாதீர சரை: கநஸ்தநபரை: புண்யாங்குரை: ஶாங்கரை: ॥ 8

*கம்பை நதிக்கரையில் உலவுபவையும் சங்கரரது புண்யத்தில் முளைத்தெழுந்த குறுத்தானவையுமானவற்றில் என்மனம் இணையட்டும். அவை வாடாத பச்சிலை போன்று அழகிய கருநிறமுள்ளவை. யௌவனத்தின் விளையாட்டிடமானவை, கேசங்களில் இளஞ்சந்திரனை அணியாகக் கொண்டவை, செந்தாமரை போன்ற கண்களுள்ளவை, மன்மதனின் திறமையைக் குழாயால் ஊதிப்பெருக்குபவை. கனத்து இணைந்தமார்பகம் கொண்டவை. (8)*

नित्यं निश्चलतामुपेत्य मरुतां रक्षाविधिं पुष्णती
तेजःसंचयपाटवेन किरणान् उष्णद्युतेर्मुष्णती ।
काञ्चीदेशगतापि दीप्तिजननी विश्वान्तरे जृम्भते
काचिच्चित्रमहो स्मृतापि तमसां निर्वापिका दीपिका ॥ ९ ॥

நித்யம் நிஶ்சலதாம் உபேத்ய மருதாம் ரக்ஷாவிதிம் புஷ்ணதீ
தேஜஸ்ஸஞ்சய பாடவேந கிரணான் உஷ்ண த்யுதேர் முஷ்ணதீ ।
காஞ்சீ தேஶ கதாபி தீப்தி ஜநநீ விச்வாந்தரே ஜ்ரும்பதே
காசித் சித்ரமஹோ ஸ்ம்ருதாபி தமஸாம் நிர்வாபிகா தீபிகா ॥ 9

*தேவி நிகரற்றதொரு அற்புதமான சிறுதீபம். தான்எப்போதும் அசையாநிலையில் இருந்து கொண்டு மருத்துக்களை (காற்றை - தேவர்களை)க் காக்கும் முறைக்கு உதவுபவள். தன் ஒளிக்குவியலின் திறமையால் சூரியனின் கிரண வெப்பத்தைப் பறிப்பவள், காஞ்சியின் நடுவே வீற்றிருப்பவளானாலும் உலகமனைத்தின் நடுவே ஒளிவீசுபவள், நினைக்கப் பெற்றாலே இருட்டை அகற்றுபவள். அவள் ஒளியுடன் விளங்குகிறாள்.*

*தேவி ஒரு விந்தை மிக்க தீபம். தீபம் காற்றால் அசையும், அணையும். தேவி காற்றை அசைப்பவள், தேவர்களைக் காப்பவள். தீப ஒளி சூரிய ஒளியில் மங்கும். இவளது ஒளியில் சூரிய ஒளி மங்குகிறது. சுற்றிலும் மற்றதிருந்தால் தீப ஒளி தடையுறும். இவள் சிறு நகரின் இடையேயிருந்து வானிலும் பூமிக்குக்கீழும் உள்ள உலகை விளக்குகிறாள். தீபம் நேராகத் தன் ஒளிபட்டால் தான் விளக்கும். இவளோ நினைக்கப்பெற்றாலே விளக்குவாள். (9)*

कान्तैः केशरुचां चयैर्भ्रमरितं मन्दस्मितैः पुष्पितं
कान्त्या पल्लवितं पदाम्बुरुहयोर्नेत्रत्विषा पत्रितम् ।
कम्पातीरवनान्तरं विदधती कल्याणजन्मस्थली
काञ्चीमध्यमहामणिर्विजयते काचित्कृपाकन्दली ॥ १० ॥

காந்தை: கேஶருசாம் சயை: ப்ரமரிதம் மந்த ஸ்மிதை: புஷ்பிதம்
காந்த்யா பல்லவிதம் பதாம்புருஹயோ: நேத்ரத்விஷா பத்ரிதம் ।
கம்பா தீரவநாந்தரம் விதததீ கல்யாண ஜந்ம ஸ்தலீ
காஞ்சீ மத்த்ய மஹாமணி: விஜயதே காசித் க்ருபாகந்தளீ ॥ 10

*காஞ்சியின் இடையே, (ஒட்டியாணத்தின் நடுவே பதிக்கப்பெற்ற ரத்தினம் போல் ) ஒரு பெரும் ரத்தினமாக, கருணையின் குருத்தாக, மங்களத்தின் பிறப்பிடமாக ஒருவள் விளங்குகிறாள். அவள் கம்பை நதிக்கரையில் உள்ள காட்டைத் தன்*

*கேசக்கத்தையாகிற வண்டுகளுடன் கூடியதாக, புன் சிரிப்பால் பூத்ததாக, திருவடிகளின் ஒளிக்கத்தையால் துளிர்த்ததாக, கண்ணொளியால் இலைகள் நிரம்பியதாகச் செய்பவள். (10)*

राकाचन्द्रसमानकान्तिवदना नाकाधिराजस्तुता
मूकानामपि कुर्वती सुरधुनीनीकाशवाग्वैभवम् ।
श्रीकाञ्चीनगरीविहाररसिका शोकापहन्त्री सतां
एका पुण्यपरम्परा पशुपतेराकारिणी राजते ॥ ११ ॥

ராகாசந்த்ர ஸமாந காந்தி வதநா நாகாதிராஜ ஸ்துதா
மூகா நாமபி குர்வதீ ஸுரதுநீ நீகாஶ வாக்வைபவம் ।
ஶ்ரீ காஞ்சீ நகரீ விஹாரரஸிகா ஶோகாபஹந்த்ரீ ஸதாம்
ஏகா புண்ய பரம்பரா பஶுபதே: ஆகாரிணீ ராஜதே ॥ 11

*பௌர்ணமி சந்திரனையொத்த ஒளிமிக்க முகமுள்ளவள், தேவருலகத்தினரால் துதிக்கப்பெறுபவள், ஊமையருக்கும் கங்கையின் வெள்ளப்பெருக்குக்கொத்த வாக்கு வன்மை தருபவள், காஞ்சீ நகரில் விளையாடுவதில் தேர்ந்த ரஸிகை, நல்லோரின் துயரை நீக்குபவள், சிவபெருமானின் உருவெடுத்த புண்ணிய வரிசை. அப்படி ஒரு தேவி விளங்குகிறாள். (11)*

जाता शीतलशैलतः सुकृतिनां दृश्या परं देहिनां
लोकानां क्षणमात्रसंस्मरणतः संतापविच्छेदिनी ।
आश्चर्यं बहुखेलनं वितनुते नैश्चल्यमाबिभ्रती
कम्पायास्तटसीम्नि कापि तटिनी कारुण्यपाथोमयी ॥ १२ ॥

ஜாதா ஶீதலஶைலத: ஸுக்ருதிநாம் த்ருஶ்யா பரம் தேஹிநாம்
லோகாநாம் க்ஷணமாத்ர ஸம்ஸ்மரணத: ஸந்தாப விச்சேதிநீ ।
ஆஶ்சர்யம் பஹுகேலநம் விதநுதே நைஶ்சல்யமா பிப்ரதீ
கம்பாயாஸ் தடஸீம்நி காபி தடிநீ காருண்யபாதோமயீ ॥ 12

*கம்பை நதிக்கரையில் விந்தைக்குரிய மற்றொரு நதி பல விளையாட்டுகளைப் புரிகிறது. அதுவும் பனிமலையில் தோன்றியதே, புண்ணியம் செய்தவரால் மட்டும் காணத்தக்கது. நொடி நேரம்*

*தியானித்தாலே உலகின் தாபத்தைப் போக்குகிறது. (நதியாயினும்) அசையாதது. கருணையெனும் நீர் நிரம்பியது. (12)*

ऐक्यं येन विरच्यते हरतनौ दम्भावपुंभावयोः[1]
रेखा यत्कचसीम्नि शेखरदशां नैशाकरी गाहते ।
औन्नत्यं परमेति[2] येन स महान्मेनासखः सानुमान्
कम्पातीरविहारिणा सशरणास्तेनैव धाम्ना वयम् ॥ १३ ॥

ஐக்யம் யேந விரச்யதெ ஹரதநௌ தம்பாவ பும்ப்பாவயோ: [3]
ரேகா யத்கச ஸீம்நி சேகரதஶாம் நைஶாகரீ காஹதே ।
ஔந்நத்யம் பரமேதி[4] யேந ஸ மஹான் மேநாஸக: ஸாநுமான்
கம்பாதீர விஹாரிணா ஸஶரணா: தேநைவ தாம்நா வயம் ॥ 13

*கம்பை நதிக்கரையில் உலாவுகிற அந்தப் பேரொளியால் நாம் ரக்ஷிக்கப்படுகிறோம். (அதனை புகலிடமாகக் கொண்டுள்ளோம்.) அது பரமசிவனது உடலில் பெண் ஆண் என்ற இரண்டின் தன்மைகளையும் ஒன்றாக இணையச் செய்துள்ளது. அதன் கூந்தலில் சந்திரகலை தலையணியாகும் நிலை பெற்றுள்ளது. அதனால் மேனாதேவியைத் துணைவியாகக் கொண்ட அந்த (இமய) மலை பெரும் உயர்வைப் பெற்றுள்ளது. (13)*

अक्ष्णोश्च स्तनयोः श्रिया श्रवणयोर्बाह्वोश्च मूलं स्पृशन्
उत्तंसेन मुखेन च प्रतिदिनं द्रुह्यन् पयोजन्मने ।
माधुर्येण गिरां गतेन मृदुना हंसाङ्गनां ह्रेपयन्
काञ्चीसीम्नि चकास्ति कोऽपि कवितासंतानबीजाङ्कुरः ॥ १४ ॥

அக்ஷ்ணோஶ்ச ஸ்தநயோ: ஶ்ரியா ஶ்ரவணயோ: பாஹ்வோஶ்ச மூலம் ஸ்ப்ருசன்
உத்தம்ஸேன முகேந ச ப்ரதிதினம் த்ருஹ்யன் பயோஜந்மநே ।
மாதுர்யேண கிராம் கதேந ம்ருதுநா ஹம்ஸாங்கநாம் ஹ்ரேபயன்
காஞ்சீ ஸீம்நி சகாஸ்தி கோऽபி கவிதாஸந்தான பீஜாங்குர: ॥ 14

1. भाविके 2. मुहुरेति 3. பாவிகே. 4. முஹுரேதி

*கண்களின் அழகால் காதுகளின் அடியையும், ஸ்தனங்களின் அழகால்புஜங்களின்அடியையும் தொடுவதும், தலையிலணிந்துள்ள சந்திரனாலும் முகத்தாலும் தாமரையிடம் விரோதம் கொண்டதும், பேச்சினுள்ள இனிமையாலும் மென் நடையாலும் அன்னப்பேடை நாணமடையச் செய்வதுமானதொரு கவிதைத் தொடர்பின் குருத்து காஞ்சியின் எல்லையில் விளங்குகிறது. (14)*

खण्डं चान्द्रमसं वतंसमनिशं काञ्चीपुरे खेलनं
कालायश्छवितस्करीं तनुरुचिं कर्णेजपे लोचने ।
तारुण्योष्णनखंपच[1]स्तनभरं जङ्घास्पृशं कुन्तलं
भाग्यं देशिकसंचितं मम कदा संपादयेदम्बिके ॥ १५ ॥

கண்டம் சாந்த்ரமஸம் வதம்ஸம் அநிமம் காஞ்சீபுரே கேலநம்
காலாயஶ்ச்சவிதஸ்கரீம் தநுருசிம் கர்ணேஜபே லோசநே ।
தாருண்யோஷ்ண நகம்பச[2] ஸ்தநப்பரம் ஜங்க்காஸ்ப்ருமம் குந்தளம்
பாக்யம் தேமிக ஸஞ்சிதம் மம கதா ஸம்பாதயேதம்பிகே ॥ 15

*பெற்ற தாயே ! சிரஸை அலங்கரிக்கிற சந்திரனின் துண்டும், காஞ்சீபுரத்தில் விளையாட்டும், காரிரும்பின் ஒளியைத் திருடுகிற மேனி ஒளியும், காதுகளுடன் ரகசியம் பேசுகிற கண்களும், வாலிபத்தின் சூட்டைத் தாங்குகிற ஸ்தனப்பருமனும், கணைக்காலைத் தொடுகிற கூந்தலுமுள்ள (உன் ஸாரூப்ய) நிலையை குருநாதரால் சேமிக்கப்பெற்ற பாக்கியம் என்று என்னுடையதாக்கும் ? (15)*

तन्वानं निजकेलिसौधसरणिं नैसर्गिकीणां गिरां
केदारं कविमल्लसूक्तिलहरीसस्यश्रियां शाश्वतम् ।
अंहोवञ्चनचुञ्चु किञ्चन भजे काञ्चीपुरीमण्डनं
पर्यायच्छवि पाकशासनमणेः पौष्पेषवं पौरुषम् ॥ १६ ॥

தந்வாநம் நிஜகேளி ஸௌத ஸரணிம் நைஸர்கிகீணும் கிராம்
கேதாரம் கவிமல்லஸூக்தி லஹரீ ஸஸ்ய ஶ்ரியாம் மாஶ்வதம் ।

1. नखंपचं 2. நகம்பசம்

அம்ஹோ வஞ்சந சுஞ்சு கிஞ்சந பஜே காஞ்சீபுரீமண்டநம்
பர்யாயச்ச்சவி பாகஶாஸநமணே: பௌஷ்பேஷவம்
பௌருஷம் 16

*காஞ்சீ நகரின் அணியாக விளங்குகிற அந்த ஒரு ஒப்பற்ற தனிப்பொருளை வழிபடுகிறேன். அது, (பிறரால் இயற்றப்பெறுமல்) தானே தோன்றிய வேத வாக்குகளைத் தன் விளையாட்டிற்கான மேன்மாடமாகக் கொண்டது. சிறந்த கவிகளின் சொல்லருவியாகிற பயிர் செழிப்புக்கு உற்ற நிலத்த வயல், பாபத்தைப் பலன்தர இயலாதபடி ஏமாற்றுவதில் தேர்ந்தது. நீலரத்தினத்திற் கொப்பான மேனி ஒளி கொண்டது. மன்மதனின் ஆண்மையாக (வீரமாக) உள்ளது. (16)*

आलोके मुखपङ्कजे च दधती सौधाकरीं चातुरीं
चूडालंक्रियमाणपङ्कजवनीवैरागमप्रक्रिया।
मुग्धस्मेरमुखी घनस्तनतटी मूर्च्छालमध्याश्चिता
काञ्चीसीमनि कामिनी विजयते काचिज्जगन्मोहिनी ॥ १७

ஆலோகே முக பங்கஜே ச தததீ ஸௌதாகரீம் சாதுரீம்
சூடாலங்க்ரியமாணபங்கஜவநீ வைராகம ப்ரக்ரியா।
முக்த்த ஸ்மேரமுகீ கனஸ்தனதடீ மூர்ச்சால மத்த்யாஞ்சிதா
காஞ்சீ ஸீமநி காமிநீ விஜயதே காசித் ஜகந்மோஹிநீ ॥ 17

*அமுதம் பொழிகிற சந்திரனது திறமையைப் பார்வையிலும் தாமரை போன்ற முகத்திலும் கொண்டவள், தாமரை ஓடைக்கு எதிரியான சந்திரனைத் தலையில் சூடியவள், இனிய அழகிய மலர்ந்த முகமுள்ளவள். கனத்த மார்பகமுள்ளவள், இல்லையோ என்ற மயக்கம் தரும் இடையால் அழகியவள், உலகைமயக்குபவள். இத்தகைய ஒருயுவதி காஞ்சியின் எல்லையில் விளங்குகிறாள். (17)*

यस्मिन्नम्ब भवत्कटाक्षरजनी मन्देऽपि मन्दस्मित-
ज्योत्स्नासंस्नपिता भवत्यभिमुखी तं प्रत्यहो देहिनम्।
द्राक्षामाक्षिकमाधुरीमदभरव्रीडाकरी वैखरी
कामाक्षि स्वयमातनोत्यभिसृतिं वामेक्षणेव क्षणात् ॥ १८ ॥

யஸ்மிந்நம்ப ! பவத் கடாக்ஷ ரஜநீ மந்தேऽபி மந்த ஸ்மித-
ஜ்யோத்ஸ்நா ஸம்ஸ்நபிதா பவத்யபிமுகீ தம் ப்ரத்யஹோ
தேஹிநம் ।
த்ராக்ஷாமாக்ஷிக மாதுரீ மதபர வ்ரீடாகரீ வைகரீ
காமாக்ஷி ! ஸ்வயமாதநோத்யபிஸ்ருதிம் வாமேக்ஷணேவ
க்ஷணாத் ॥ 18

*தாயே ! காமாக்ஷி ! மூடனாயினும் அவனை நோக்கி உன் கடாக்ஷமாகிய இரவு, புன்சிரிப்பாகிற வெண்ணிலாவில் மூழ்கியதாகச் சென்றால், திராக்ஷை என்றும் தேனென்றும் இனிமையால் கர்வம் கொண்டவற்றை வெட்க முறும்படி செய்கிற திறமை கொண்ட வாக்கு வன்மை எனும் கண்ணழகி (காதலனைநோக்கி காதல் மேலிட்டபெண் செல்வது போல்) தானாகவே அவனிடம் நொடியில் சேர்கிறாள். (18)*

कालिन्दीजलकान्तयः स्मितरुचिस्वर्वाहिनीपाथसि
प्रौढध्वान्तरुचः स्फुटाधरमहा[1]लौहित्यसंध्योदये ।
माणिक्योपलकुण्डलांशुशिखिनि व्यामिश्रधूमश्रियः
कल्याणैकभुवः कटाक्षसुषमाः कामाक्षि राजन्ति ते ॥ १९

காளிந்தீ ஜல காந்தய: ஸ்மிதருசி ஸ்வர்வாஹிநீ பாதஸி
ப்ரௌட த்த்வாந்த ருச: ஸ்ப்புடாதர மஹா [2]லௌஹித்ய
ஸந்த்த்யோதயே ।
மாணிக்யோபல குண்டலாம்ஶுஶிகினி வ்யாமிஶ்ர தூமஶ்ரிய:
கல்யாணைக புவ: கடாக்ஷ ஸுஷமா: காமாக்ஷி ராஜந்தி தே ॥ 19

*காமாக்ஷி ! (கருநிறம் கொண்ட) உன் கடாக்ஷகாந்தி மங்களமனைத்திற்கும் பிறப்பிடம். அது (வெண்ணிற முள்ள) புன்னகையுடன் சேர, கங்கை நீருடன் கலக்கிற யமுனையொளி போலாகிறது. மாணிக்கக்கல்லாலான காதின் குண்டலத்தின் ஒளியுடன் சேர, நெருப்பின் மீது படர்கிற புகையின் காந்தியாகிறது. (பன்மை பெருமையை உணர்த்தவே.) (19)*

---

1. महो 2. மஹோ

कलकलरणत्काञ्ची काञ्चीविभूषणमालिका
कचभरलसच्चन्द्रा चन्द्रावतंससधर्मिणी ।
कविकुलगिरः श्रावं श्रावं मिलत्पुलकाङ्कुरा
विरचितशिरःकम्पा कम्पातटे जगदम्बिका [1]॥ २० ॥

கலகலரணத் காஞ்சீ காஞ்சீ விபூஷண மாலிகா
கசபர லஸத்சந்த்ரா சந்த்ராவதம்ஸ ஸதர்மிணீ।
கவிகுல கிர: ஶ்ராவம் ஶ்ராவம் மிளத்புளகாங்குரா
விரசிதஶிர: கம்பா கம்பாதடே ஜகதம்பிகா [2]॥ 20

*கம்பாநதிக்கரையில் உலகின் தாயான தேவி, கலகல என ஒலிக்கிற ஒட்டியாணம் உள்ளவளாக, காஞ்சிநகரை அலங்கரிக்கிற மாலையாக, கூந்தலில் விளங்குகிற சந்திரனுடன் கூடியவளாக, கவிகள் மொழிந்ததைக் கேட்டுக்கேட்டு மெய் சிலிர்த்து, தலையாட்டிப் பாராட்டுபவளாக விளங்குகிறாள். (20)*

सरसवचसां वीची नीचीभवन्मधुमाधुरी
भरितभुवना कीर्तिर्मूर्तिर्मनोभवजित्वरी ।
जननि मनसो योग्यं भोग्यं नृणां तव जायते
कथमिव विना काञ्चीभूषे कटाक्षतरङ्गितम् ॥ २१ ॥

ஸரஸவசஸாம் வீசீ நீசீபவந் மது மாதுரீ
பரிதபுவநா கீர்த்திர் மூர்த்தி: மனோபவ ஜித்வரீ।
ஜநநி மனஸோ யோக்யம் போக்யம் ந்ருணாம் தவ ஜாயதே
கதமிவ விநா காஞ்சீ பூஷே கடாக்ஷதரங்கிதம் ॥ 21

*காஞ்சீநகரின் அலங்காரமே (ஒட்டியாணம் அணிந்தவளே !) தாயே ! உன் கடாக்ஷமின்றி தேனின் இனிப்பைத் தாழ்த்துகிற ரஸமுள்ள மொழியழகும், உலகை நிரப்புகின்ற புகழும், மன்மதனை வெல்கிற மேனியழகும், மனத்திற்கு இனிய அனுபவம் தருகிற போகப் பொருளும் எப்படி ஏற்படும் ? (21)*

---

1. परिशोभते 2. பரிஶோபதே.

भ्रमरितसरित्कूले नीलोत्पलप्रभयाऽऽभया
नतजनतमःखण्डी तुण्डीरसीम्नि विजृम्भते ।
अचलतपसामेकः पाकः प्रसूनशरासन-
प्रतिभटमनोहारी नारीकुलैकशिखामणिः ॥ २२ ॥

ப்ரமரித ஸரித்கூலே நீலோத்பல ப்ரபயா஽஽பயா
நதஜன தம: க்கண்டீ துண்டீர ஸீம்நி விஜ்ரும்பதே ।
அசலதபஸாம் ஏக: பாக: ப்ரஸூந ஶராஸந-
ப்ரதிபட மநோஹாரீ நாரீகுலைக ஶிகாமணி: ॥ 22

*(இமய)மலை புரிந்த தவத்தின் ஒரே பயனும், மன்மதனின் எதிரியின் மனத்தைச் கவர்ந்ததும், பெண்ணினத்தின் தலையணியும் (புகழ்பெற்ற தலைவியும்) வணங்கியவரின் அறியாமையைப் போக்குவதுமானதொன்று நீலோத்பலம் போன்ற தன் மேனி ஒளியால் ஆற்றங்கரையை வண்டுகளால் மொய்க்கப்பட்டதாக்கிக் கொண்ட துண்டீரதேச எல்லையில் விளங்குகிறது.*

தேவியின் கருமேனி ஒளி ஆற்றங்கரையில் பரவியுள்ளது. வண்டு கரு நிறமுள்ளது. பிரும்மா காஞ்சியில் வேள்வி புரிந்து தேவியின் விக்ரகம் அமைத்து வழிபட்டார். அந்த வழிபாடு தொடர்ந்து நடைபெற விரும்பியவராகத் தேவியின் திருவடிகளில் ஸமர்ப்பித்த தாமரையொன்றை வானில் விட்டெறிந்தார். அது ஆகாச பூபதி என்ற அரசனாக காஞ்சியில் விழுந்தது. அவனது அரசாட்சியில் முதலில் மிகவும் சிரத்தையுடன் நடந்துவந்த தேவியின் வழிபாடு, அரசனின் கவனக்குறைவால் குறையுற்றது. நாடு பஞ்சத்தால் வரண்டது.. அரசனும் புத்திரப்பேறின்றி வருந்தினான். பிரும்மனின் தூண்டுதலால் மறுபடி ஆலயத்திற்குக் கும்பாபிஷேகம் முதலியவற்றைச் செய்து வழிபட்டான். விநாயகரே அவனது மகனாக அவதரித்தார். தேவி நாட்டில் பொன் மழையைப் பெய்விக்க, சுபிக்ஷம் தோன்றியது. துண்டீரன் என்று பெயர் பெற்ற ஆகாசபூபதியின் மகனின் ஆட்சியில் செழித்த அந்நாட்டைத் துண்டீரமண்டலம் (தொண்டைமண்டலம்) என அழைத்தனர். தண்டகன் ஆண்டதால் தண்டகாரண்யம் என்றும்

தொண்டைக் கொடி சுற்றிக் கடலில் மிதந்துவந்த தொண்டைமான் ஆண்டதால் தொண்டை மண்டலம் தொண்டை நாடு என்றும் பெயர்பெற்றது என்பர். பிரும்மா தான் வழிபட இரு விக்ரகங்களைப்படைத்தார். ஒருவள் தங்கப்பதுமை-ஹேமகாமாக்ஷி. மற்றவள், கருநிறம் படைத்தவள். அவளே இங்கு துதிக்கப்பெறுகிருள். (22)

मधुरवचनाःमन्दस्मेरा मतङ्गजगामिनः
तरुणिमजुषस्तापिञ्छाभाः तमःपरिपन्थिनः ।
कुचभरनताः कुर्युर्भद्रं कुरङ्गविलोचनाः
कलितकरुणाः काञ्चीभाजः कपालिमहोत्सवाः ॥ २३ ॥

மதுர வசநா: மந்தஸ்மேரா: மதங்கஜ காமிந:
தருணிம ஜுஷஸ் தாபிஞ்சாபா: தம: பரிபந்த்தின: ।
குசபர நதா: குர்யு: பத்ரம் குரங்க விலோசஞு:
கலித கருஞு: காஞ்சீபாஜ: கபாலி மஹோத்ஸவா: ॥ 23

*இனிக்கப் பேசுபவள். புன் சிரிப்புள்ளவள், யானைபோன்று பெருமிதத்துடன் நடப்பவள். இளமையுள்ளவள், காசாம்பூ நிறத்தவள், இருட்டின் (அறியாமையின் - தமோகுணத்தின்) எதிரி, ஸ்தனபாரத்தால் முன் குனிந்தவள், மான் விழியாள், கருணைவடிவம், காஞ்சியிலுள்ளவள், கபால மேந்திய சிவனது கொண்டாட்டமானவள். அவள் நமக்கு மங்களம் புரியட்டும்.*

*பன்மை பெருமையைக் காட்ட. (23)*

कमलसुषमाकक्ष्यारोहे विचक्षणवीक्षणाः
कुमुदसुकृतक्रीडाचूडालकुन्तलबन्धुराः ।
रुचिररुचिभिस्तापिञ्छश्रीप्रपञ्चनचुञ्चवः
पुरविजयिनः कम्पातीरे स्फुरन्ति मनोरथाः ॥ २४ ॥

கமல ஸுஷமா கக்ஷ்யாரோஹே விசக்ஷண வீக்ஷஞு:
குமுத ஸுக்ருத க்ரீடா சூடால குந்துல பந்த்துரா: ।

ருசிரருசிபி: தாபிஞ்ச்ச ஸ்ரீ ப்ரபஞ்சந சுஞ்சவ:
புரவிஜயிந: கம்பாதீரே ஸ்ப்புரந்தி மனோரதா: ॥ 24

*தாமரை அழகின் நிலையுடன் (கட்சியுடன்) சார்புகொள்வதில் தேர்ச்சி பெற்ற பார்வையழகுள்ளவையும், ஆம்பலின் புண்ணிய பலனாகிற சந்திரனின் விளையாட்டிடமான கூந்தலால் அழகானவையும், அழகுமிக்கத் தன்மேனி நிறத்தால் காசாம்பூவின் அழகை வெளிப்படுத்துவதில் தேர்ந்தவையுமான திரிபுரத்தை வென்ற சிவனின் உள்ளத்து ஆசைகள் கம்பைக்கரையில் விளங்குகின்றன. (24)*

कलितरतयः काञ्चीलीलाविधौ कविमण्डली-
वचनलहरीवासन्तीनां वसन्तविभूतयः ।
कुशलविधये भूयासुर्मे कुरङ्गविलोचनाः
कुसुमविशिखारातेरक्ष्णां कुतूहलविभ्रमाः ॥ २५ ॥

கலித ரதய: காஞ்சீ லீலா விதௌ கவி மண்டலீ-
வசந லஹரீ வாஸந்தீநாம் வஸந்த விபூதய: ।
குஶல விதயே பூயாஸுர்மே குரங்கவிலோசநா:
குஸுமவிஶிகாராதே ரக்ஷ்ணாம் குதூஹல விப்ரமா: ॥ 25

*காஞ்சியில் விளையாடுவதில் ஆர்வமுள்ளவையும், கவிகள் கூட்டத்தின் பேச்சலையாகிற வஸந்தகாலத்து மல்லிகைப்பூக்களுக்கு வஸந்தத்தின் செழிப்பைத் தருபவையும், மானைப்போன்ற விழியுள்ளவையும் மன்மதனின் எதிரியின் கண்களுக்குப் பெருங்கொண்டாட்டம் தருகிற தளதளப்புள்ளவையுமான அவை எனக்கு மங்களம் விளைவிப்பவையாகட்டும். (25)*

कबलिततमस्काण्डास्तुण्डीरमण्डलमण्डनाः
सरसिजवनीसन्तानानामरुन्तुदशेखराः ।
नयनसरणेर्नेदीयांसः कदा नु भवन्ति मे
तरुणजलदश्यामाः शंभोस्तपःफलविभ्रमाः ॥ २६ ॥

கபளித தமஸ் காண்டா: துண்டீர மண்டல மண்டனு:
ஸரஸிஜ வநீ ஸந்தாநாநாம் அருந்துத ஶேகரா: ।
நயன ஸரணே: நேதீயாம்ஸ: கதா நு பவந்தி மே
தருண ஜலத ஶ்யாமா: ஶம்போ: தப:ப்பல விப்ப்ரமா: ॥ 26

*அஜ்ஞான இருளை விழுங்குபவையும், துண்டீரமண்டலத்தை அழகுறச்செய்பவையும், தாமரைக்காட்டுவரிசைக்கு துயர் தருகிற, சந்திரனைக் கூந்தலணியாகக் கொண்டவையும் இளமைப் பூரிப்பு பெற்ற நீருண்ட மேகத்தின் கருநிறம் கொண்டவையும், சிவனின் தவப்பயனுனவையுமான அவை என் கண்களின் அருகே இருப்பவையாக எப்போது ஆகும் ? (26)*

अचरममिषुं दीनं मीनध्वजस्य मुखश्रिया
सरसिजभुवो यानं म्लानं गतेन च मञ्जुना ।
त्रिदशसदसामन्नं खिन्नं गिरा च वितन्वती
तिलकयति सा कम्पातीरं त्रिलोचनसुन्दरी ॥ २७ ॥

அசரமமிஷும் தீனம் மீனத்த்வஜஸ்ய முகஶ்ரியா
ஸரஸிஜ புவோ யாநம் ம்லாநம் கதேந ச மஞ்ஜுநா ।
த்ரிதஶ ஸதஸாமந்நம் க்கிந்நம் கிரா ச விதந்வதீ
திலகயதி ஸா கம்பா தீரம் த்ரிலோசந ஸுந்தரீ ॥ 27

*தன்முக அழகால் மன்மதனின் முதல் பாணமான தாமரையைப் பெருமையிழக்கச் செய்தவளும், தன் நடையழகால் பிரும்மாவின் வாகனமான அன்னப்பறவையை வாடச் செய்தவளும், தன் பேச்சால் தேவர் கூட்டத்தின் உணவான அமுதத்தை வேதனையுறச் செய்தவளுமான அந்த மூவுலக அழகி கம்பைக் கரையை உலகின் திலகமாக்குகிறாள். (27)*

जननि भुवने चंक्रम्येऽहं कियन्तमनेहसं
कुपुरुषकरभ्रष्टैर्दुष्टैर्धनैरुदरंभरिः ।
तरुणकरुणे तन्द्राशून्ये तरङ्गय लोचने
नमति मयि ते किञ्चित्काञ्चीपुरीमणिदीपिके ॥ २८ ॥

ஜநநி புவநே சங்க்ரம்யேஹம் கியந்தமநேஹஸம்
குபுருஷகரப்ப்ரஷ்டை: துஷ்டை: தநை: உதரம்பரி: ।
தருணகருணே தந்த்ராஶூந்யே தரங்கய லோசநே
நமதி மயி தே கிஞ்சித் காஞ்சீ புரீமணிதீபிகே ॥ 28

*காஞ்சியின் ரத்தின விளக்கே ! தாயே ! கெட்டவரது கைகளிலிருந்து நழுவிய கேடுமிக்க பணத்தால் வயிற்றை நிரப்புபவனாக நான் எத்தனை நாள் இவ்வுலகில் சுற்றிச்சுற்றி வருவேன் ? வணங்கி நிற்கிற என் மீது, முதிர்ந்த கருணை மிக்க, அயர்வு நீங்கிய உன் கண்களை அலைபாயச் செய்வாய். (28)*

मुनिजनमनः पेटीरत्नं स्फुरत्करुणानटी-
विहरणकलागेहं काञ्चीपुरी मणिभूषणम् ।
जगति महतो मोहव्याधेर्नृणां परमौषधं
पुरहरदृशां साफल्यं मे पुरः परिजृम्भताम् ॥ २९ ॥

முனிஜந மந: பேடீரத்நம் ஸ்புரத் கருணாநடீ -
விஹரணகலா கேஹம் காஞ்சீ புரீமணி பூஷணம் ।
ஜகதி மஹதோ மோஹவ்யாதே: ந்ருணாம் பரமௌஷதம்
புரஹர த்ருஶாம் ஸாபல்யம் மே புர: பரிஜ்ரும்ப்பதாம் ॥ 29

*முனிவரின் மனமாகிய பெட்டியிலுள்ள ரத்தினமும், ஒளி வீசுகிற கருணை எனும் நடிகை ஆடுகிற கலை வீடும், காஞ்சியின் ரத்தின அணியும், உலகில் மாந்தரின் மோகம் எனும் பெருநோய்க்குச் சிறந்த மருந்தும் திரிபுரஹரனின் கண்கள் பெற்ற முழுப்பயனுமானதொன்று என்முன் தோன்றி விளையாட்டும். (29)*

मुनिजनमनोधाम्ने धाम्ने वचोमयजाह्नवी-
हिमगिरितट प्राग्भारायाक्षराय परात्मने ।
विहरणजुषे काञ्चीदेशे महेश्वरलोचन-
त्रितयसरसक्रीडासौधाङ्गणाय नमो नमः ॥ ३० ॥

முனிஜந மனோதாம்நே தாம்நே வசோமய ஜாந்ஹவீ
ஹிமகிரிதட ப்ராக்பாராயாக்ஷராய பராத்மநே ।

விஹரண ஜுஷே காஞ்சீ தேஶே மஹேஶ்வர லோசன
த்ரிதய ஸரஸக்ரீடா ஸௌதாங்கணாய நமோ நம: ॥ 30

*முனிவரின் மனத்தில் குடியிருப்பதும், வாக்காகிற கங்கை இறங்க வழித்தடமான இமய மலைத்தாழ்வரையும், குன்றுததும் (ஓங்காரமானதும்) பரமாத்மாவும் காஞ்சியில் விளையாட்டைக்கொண்டதும், மகேசனின் மூன்றுகண்களும் விளையாடுவதற்கான மேல்மாடமுமானதொன்றுக்கு வணக்கம், வணக்கம். (30)*

मरकतरुचां प्रत्यादेशं महेश्वरचक्षुषां
अमृतलहरीपूरं पारं भवाख्यपयोनिधेः ।
सुचरितफलं काञ्चीभाजो जनस्य पचेलिमं
हिमशिखरिणो वंशस्यैकं वतंसमुपास्महे ॥ ३१ ॥

மரகதருசாம் ப்ரத்யாதேஶம் மஹேஶ்வர சக்ஷுஷாம்
அம்ருதலஹரீ பூரம் பாரம் பவாக்ய பயோ நிதே: ।
ஸுசரிதபலம் காஞ்சீபாஜோ ஜனஸ்ய பசேளிமம்
ஹிம ஶிகரிணோ வம்ஶஸ்ய ஏகம் வதம்ஸமுபாஸ்மஹே ॥ 31

*மரகதரத்தின ஒளிக்கு மாற்றுருவமும், மகேசனின் கண்களுக்கு அமுத அருவிப்பெருக்கும், ஸம்ஸாரக்கடலின் அக்கரையும், காஞ்சியில் வசிக்கிற மாந்தரின் பலன் தருகிற நிலையில் பழுத்துள்ள புண்ணிய பலனும், இமயமலையின் வம்சத்தின் ஒரே ஆபரணமுமானதொன்றை வழிபடுகிறோம். (31)*

प्रणमनदिनारम्भे कम्पानदीसखि तावके
सरसकवितोन्मेषः पूषा सतां समुदञ्चितः ।
प्रतिभटमहाप्रौढप्रोद्यत्कवित्वकुमुद्वतीं
नयति तरसा निद्रामुद्रां नगेश्वरकन्यके ॥ ३२ ॥

ப்ரணமன திநாரம்ப்பே கம்பா நதீஸகி தாவகே
ஸரஸ கவிதோந்மேஷ: பூஷா ஸதாம் ஸமுதஞ்சித: ।
ப்ரதிபட மஹாப்ரௌட ப்ரோத்யத் கவித்வ குமுத்வதீம்
நயதி தரஸா நித்ராமுத்ராம் நகேஶ்வர கன்யகே ॥ 32

*கம்பாநதியின் தோழியே! மலைகளரசனின் மகளே! உன்னை வணங்கத் தொடங்கிய நாளன்றே, நல்லோருக்கு ரஸமுள்ள கவிதையின் தோற்றமாகிய ஸூரியன் உதித்துவிடுகிறான். மிகச்சிறந்த எதிரியின் கவிதையான அல்லியோடையை உடன் வேகமாகத் தூங்கச் செய்கிறான். (குவியச் செய்கிறான்.) (32)*

शमितजडिमारम्भा कम्पातटीनिकटेचरी
निहतदुरितस्तोमा सोमार्धमुद्रितकुन्तला ।
फलितसुमनोवाञ्छा पाञ्चायुधी परदेवता
सफलयतु मे नेत्रे गोत्रेश्वरप्रियनन्दिनी ॥ ३३ ॥

ஶமிதஜடிமாரம்பா கம்பாதடீ நிகடேசரீ
நிஹத துரிதஸ்தோமா ஸோமார்த்த முத்ரிதகுந்தலா ।
பலித ஸுமநோ வாஞ்ச்சா பாஞ்சாயுதீ பரதேவதா
ஸபலயது மே நேத்ரே கோத்ரேஶ்வர ப்ரியநந்திநீ ॥ 33

*அறியாமையின் தொடக்கத்தை நீக்குபவளும், கம்பாநதியின் அருகே ஸஞ்சரிப்பவளும், பாபக் கூட்டத்தை அழித்தவளும், பாதிச் சந்திரனைச் சூடியவளும், நல்லோரின் விருப்பத்தை நிறைவுறச் செய்பவளும், மன்மதன் வழிபடுகிற உயர்ந்த தேவதையுமான மலையரசனின் அன்புக்குரிய மகள் என் கண்களைப் பயனுள்ளவையாக்கட்டும். (33)*

मम तु धिषणा पीड्या जाड्यातिरेक कथं त्वया
कुमुदसुषमामैत्रीपात्रीवतंसितकुन्तलाम् ।
जगति शमितस्तम्भां कम्पानदीनिलयामसौ
श्रयति हि गलत्तन्द्रा चन्द्रावतंस सधर्मिणीम् ॥ ३४ ॥

மம து திஷணா பீட்யா ஜாட்யாதிரேக கதம் த்வயா
குமுத ஸுஷமா மைத்ரீ பாத்ரீ வதம்ஸித குந்தளாம் ।
ஶமித துரிதஸ்தம்ப்பாம் கம்பாநதீ நிலயாம் அஸௌ
ஶ்ரயதி ஹி களத்தந்த்ரா சந்த்ராவதம்ஸ ஸதர்மிணீம் ॥ 34

*அளவைக்கடந்த அஜ்ஞானமே! என்னுடைய அறிவு உன்னால் எவ்வாறு துன்புறுத்தப்பட முடியும்? என் அறிவோ, ஆம்பலின்*

*அழகிற்கு உற்ற நண்பனான சந்திரனைக் கூந்தலணியாகக் கொண்டவளும், பாபத்தின் திமிரை அடக்குபவளும், கம்பாநதிக்கரையில் குடியிருப்பவளும், சந்திரனைச் சூடிய சிவனின் தர்மபத்தினியுமானவளைச் சோர்வின்றி புகலடைந்தாயிற்றே ! (34)*

परिमलपरीपाकोद्रेकं पयोमुचि काञ्चने
शिखरिणि पुनर्द्वैधीभावं शशिन्यरुणातपम् ।
अपि च जनयन्कम्बोर्लक्ष्मीं अनम्बुनि कोऽप्यसौ
कुसुमधनुषः काञ्चीदेशे चकास्ति पराक्रमः ॥ ३५ ॥

பரிமள பரீபாகோத்ரேகம் பயோமுசி காஞ்சநே
ஶிகரிணி புநர் த்வைதீ பாவம் ஶஶிந்யருணாதபம் ।
அபி ச ஜநயந் கம்போ: லக்ஷ்மீம் அனம்புநி கோऽப்யஸௌ
குஸுமதனுஷ: காஞ்சீதேஶே சகாஸ்தி பராக்ரம: ॥ 35

*காஞ்சியில் மன்மதனின் தனிச்சிறப்புள்ள ஒரு செயலாற்றல் விளங்குகிறது. அது மேகத்தில் நறு மணமும், தங்கமலையான மேருவில் இரண்டாகப்பிளப்பும், சந்திரனில் அருணனின் ஒளியும், நீரற்ற இடத்தில் சங்கின் அழகும் தோன்றும்படி செய்கிறது.*

*தேவியே மன்மதனின் சிறப்புச் செயல். அவளது கேசமே மேகம். மார்பே தங்கமலை, முகமே சந்திரன். கழுத்தே நீரற்ற நிலை. அங்கு வரிசையாக மணம், இரட்டித்த தோற்றம், அருணனின் செவ்வொளி, சங்கின் மழமழப்பு இவற்றைத் தோற்றுவிக்கிறது.*

पुरदमयितुर्वामोत्सङ्गस्थलेन रसज्ञया
सरसकविताभाजां काञ्चीपुरोदरसीमया ।
तटपरिसरैर्नीहाराद्रेर्वचोभिरकृत्रिमैः
किमिव न तुलामस्मच्चेतो महेश्वरि गाहते ॥ ३६ ॥

புரதமயிது: வாமோத்ஸங்க ஸ்த்தலேன ரஸஜ்ஞயா
ஸரஸ கவிதாபாஜாம் காஞ்சீபுரோதர ஸீமயா ।
தடபரிஸரை: நீஹாராத்ரே: வசோபிரக்ருத்ரிமை:
கிமிவ ந துலாம் அஸ்மத்சேதோ மஹேச்வரி காஹதே ॥ 36

மஹேச்வரி ! திரிபுரமடக்கிய சிவனின் இடது மடியிடத்தோடும், ரஸமுள்ள கவிதை இயற்றியவரின் நாக்குடனும், காஞ்சீபுரத்தின் எல்லே நடுவிடத்துடனும், பனி மலேயின் தாழ்வரையின் அருகிலுள்ள இடங்களுடனும் செயற்கையாகாத வாக்குகள் கொண்ட வேதத்துடனும் என் மனம் சமநிலே பெற இயலாததோ ?

அவற்றைப் போல் என் மனமும் தேவியைத் தாங்க உரியதே. (36)

नयनयुगलीं आस्माकीनां कदा नु फलेग्रहीं
विदधति गतौ व्याकुर्वाणा गजेन्द्रचमत्क्रियाम् ।
मरकतरुचो माहेशानाः घनस्तननम्रिताः
सुकृतविभवाः प्राञ्चः काञ्चीवतंसधुरंधराः ॥ ३७ ॥

நயநயுகளீம் ஆஸ்மாகீநாம் கதா நு பலேக்ரஹீம்
விதததி கதௌ வ்யாகுர்வாணா: கஜேந்த்ர சமத்க்ரியாம் ।
மரகதருசோ மாஹேமாநா: கநஸ்தன நம்ரிதா:
ஸுக்ருத விபவா: ப்ராஞ்ச: காஞ்சீவதம்ஸ துரந்தரா: ॥ 37

நடையில் பெரும் யானேயின் செயலழகை விளக்குபவையும், மரகத ஒளி கொண்டவையும் மஹேசனின் புண்யத்தின் பயனுக விளங்குபவையும், கனத்த மார்பகத்தால் குனிந்து நிற்பவையும், காஞ்சியை அலங்கரிப்பவைகளின் முன்னணியில் நிற்பவையும், மிகப்புராதனமானவையுமான அவை எமது இருகண்களுக்குப் பயனேப்பெறும் தகுதியை எப்போது உண்டாக்கும் ? (37)

मनसिजयशः पारम्पर्यं मरन्दझरीसुवां
कविकुलगिरां कन्दं कम्पानदीतटमण्डनम् ।
मधुरललितं मत्कं चक्षुर्मनीषिमनोहरं
पुरविजयिनः सर्वस्वं तत्पुरस्कुरुते कदा ॥ ३८ ॥

மனஸிஜ யமஃ: பாரம்பர்யம் மரந்த ஜரீஸுவாம்
கவிகுல கிராம் கந்தம் கம்பாநதீதட மண்டநம் ।

மதுர லலிதம் மத்கம் சக்ஷு: மநீஷி மனோஹரம்
புரவிஜயின: ஸர்வஸ்வம் தத் புரஸ்குருதே கதா ॥ 38

*மன்மதனின் புகழ்வரிசையும், தேனருவிபெருகுகிற கவிகளின் சொல்வன்மையின் வேரும், கம்பை நதியின் அணியும், இனிமையும் லலிதமும் உருவானதும், அறிஞரின் மனத்தைக் கவர்வதும், திரிபுரம் வென்றவரின் சொத்தனைத்துமானதொன்றை, என் கண் எப்போது முன் நிறுத்திக்கொள்ளும் ? (38)*

शिथिलिततमोजालां[1] नीलारविन्दविलोचनां
दहनविलसत्फालां लीलागताश्रित काञ्चिकाम् [2] ।
करधृतलसच्छूलां कालारिचित्तहरां परां
मनसिजधनुःशालां [3] एलालकां समुपास्महे ॥ ३९ ॥

ஶிதிலித தமோ ஜாலாம்[4] நீலாரவிந்த விலோசனாம்
தஹந விலஸத்ப் பாலாம் லீலா கதாஶ்ரித காஞ்சிகாம்[5]।
கரத்ருத லஸத் ஶூலாம் காலாரி சித்தஹராம் பராம்
மநஸிஜ தநுஶ்ஶாலாம் ஏலாலகாம் ஸமுபாஸ்மஹே [6] ॥ 39

*தமோகுணத்தின் (இருளின், அஜ்ஞானத்தின்) வலையை அறுத்தெறிந்தவளும், நீலோத்பலம்போன்ற கண்களுள்ளவளும், அக்னியால் அழகுற்ற நெற்றியுள்ளவளும், விளையாட்டாகக் காஞ்சியை வந்தடைந்தவளும், கையில் சூலமேந்தியவளும், காலனின் எதிரியின் சித்தத்தைக் கவர்ந்தவளும் மன்மதனின் வில்லை வைக்குமிடமானவளும், ஏலம் போல் நறுமணம் கொண்ட கூந்தலுள்ளவளுமான பரதேவதையை நன்கு வழிபடுகிறோம்.*

*மநஸிஜக்ருபாலீலாம் லோலாலகாம் அலிகேக்ஷணாம். ஸ்ரீகாம கோடிம் உபாஸ்மஹே. என்றும் பாடம் ''மன்மதனிடம் கருணையாகிய லீலை புரிபவளும் ஆடுகின்ற முன் கூந்தலுள்ளவளும் நெற்றிகண் உள்ளவளுமான ஸ்ரீகாமகோடியை வழிபடுகிறோம்.'' தவம் புரிய ஏந்திய யோகதண்டம் காஞ்சியை அடைந்ததும் திரிசூலமாயிற்று. ஏலாலகா - ஏலா ஸுகந்தி சிகுரா.*

1. लीलां 2. श्रीकामकोटिमुपास्महे 3. कृपालीलां लोलालकां अलिकेक्षणाम् *4. லீலாம், 5. ஸ்ரீகாமகோடிம் உபாஸ்மஹே. 6. க்ருபா லீலாம் லோலாலகாம் அலிகேக்ஷணாம்*

*(ல.த்ரி) தவத்தில் மகிழ்ந்த சிவனுடன் திருமணம் புரிந்த தேவி ஏலவார்க்குழலி என்ற காமாக்ஷியின் அம்சம் என்பர். (39)*

कलालीलाशाला कविकुलवचः कैरववनी-
शरज्ज्योत्स्नाधारा शशधरशिशुश्लाघ्यमुकुटी ।
पुनीते नः कम्पापुलिनतटसौहार्दतरला
कदा चक्षुर्मार्गं कनकगिरिधानुष्कमहिषी ॥ ४० ॥

கலா லீலா ஶாலா கவிகுல வச: கைரவ வநீ
ஶரத் ஜ்யோத்ஸ்நாதாரா ஶஶதரஶிஶுச்லாக்ய முகுடீ ।
புனீதே ந: கம்பா புளிந தட ஸௌஹார்த்ததரளா
கதா சக்ஷுர்மார்கம் கநக கிரிதாநுஷ்க மஹிஷீ ॥ 40

*கலைகளின் விளையாடுமிடமும், கவிகளின் வாக்காகிற அல்லிக்காட்டில் சரத்காலத்து நிலவைப் பொழிபவளும், இளஞ்சந்திரனால் பெருமை பெற்ற மகுடமுள்ளவளும், கம்பா நதியின் மணல் திட்டில் நட்புடன் உலாவுபவளும், தங்கமலையாகிற மேருவை வில்லாகக் கொண்ட சிவனின் ராணியுமானவள் எப்போது நம் கண்பாதையைப் புனிதமாக்குவாள் ? (40)*

नमः स्तान्नम्रेभ्यः स्तन कलश भारेण गुरुणा
दधानेभ्यश्चूडाभरणममृतस्यन्दि शिशिरम् ।
सदा वास्तव्येभ्यः सविधभुवि कम्पाख्यसरितो
यशोव्यापारेभ्यः सुकृतविभवेभ्यः पशुपते ः [1] ॥ ४१ ॥

நமஸ்தாத் நம்ரேப்ய: ஸ்தநகலசபாரேண குருணா
ததாநேப்ய: சூடாபரணம் அம்ருத ஸ்யந்தி ஶிஶிரம் ।
ஸதாவாஸ்தவ்யேப்ய: ஸவிதபுவி கம்பாக்ய ஸரித:
யஶோ வ்யாபாரேப்ய: ஸுக்ருதவிபவேப்ய: பசுபதே: [2] ॥ 41

*மார்பகத்தின் கனத்தால் உண்டான செறுக்கின் விளைவாக முன் குனிந்தவையும், அமுதம் கசிகின்ற குளிர்ந்ததொன்றை (சந்திரனை)*

*1.* रतिपते: *2. ரதிபதே:*

*கூந்தலணியாகக் கொண்டவையும், கம்பை நதிக்கரையின் அருகாமையில் குடியிருப்பவையும் சிவனின் (மன்மதனின்) புகழையே தன் செயல் முறையாகக் கொண்டவையும், அவரது புண்ணியப்பெருமையுமானதொன்றுக்கு நம் வணக்கம். (41)*

असूयन्ती काचिन्मरकतरुचो नाकिमुकुटी-
कदम्बं चुम्बन्ती चरणनखचन्द्रांशुपटलैः ।
तमोमुद्रां विद्रावयतु मम काञ्चीनिलयना
हरोत्सङ्गश्रीमन्मणिगृह महा दीप कलिका ॥ ४२ ॥

அஸூயந்தீ காசித் மரகத ருசோ நாகி முகுடீ-
கதம்பம் சும்பந்தீ சரணநக சந்த்ராம்ஶு படலை: ।
தமோ முத்ராம் வித்ராவயது மம காஞ்சீ நிலயநா
ஹரோத்ஸங்க ஸ்ரீமந் மணி க்ருஹ மஹா தீப கலிகா ॥ (42)

*மரகத ரத்தினத்தின் ஒளியிடம் அசூயை கொண்டவளும், தன் திருவடிகளிலுள்ள நகஒளியாகிற நிலாப்படலங்களால் தேவரின் கிரீட வரிசையை முத்தமிடுபவளும், காஞ்சியில் வசிப்பவளும், சிவனது மடியாகிற ஒளிமிக்க ரத்தின மாளிகையின் நடுவிலுள்ள பெருந்தீபச்சுடருமான தேவி என் அறியாமை அடைப்பை நீக்கட்டும். (42)*

अनाद्यन्ता काचित्सुजननयनानन्दजननी
निरुन्धाना कान्तिं निजरुचिविलासैर्जलमुचाम् ।
स्मरारेस्तारल्यं मनसि जनयन्ती स्वयमहो
गलत्कम्पा शम्पा परिलसति कम्पापरिसरे ॥ ४३ ॥

அநாத்யந்தா காசித் ஸுஜந நயநாநந்த ஜநநீ
நிருந்த்தாநா காந்திம் நிஜருசி விலாஸை: ஜலமுசாம் ।
ஸ்மராரே: தாரள்யம் மநஸி ஜநயந்தீ ஸ்வயமஹோ
கலத்கம்பா சம்பா பரிலஸதி கம்பா பரிஸரே ॥ 43

*ஆதியுமந்தமுமற்றதும், நல்லோரின் கண்களுக்கு. ஆனந்தமளிப்பதும், தன் ஒளிச் சிதறலால் மேகத்தின் ஒளியைத் தடை*

*செய்வதும், மன்மதனின் எதிரியின் மனத்தில் காமசலனத்தை உண்டாக்குவதும் தன்னளவில் அசைவற்றதுமான மின்னல் ஒன்று கம்பையின் அருகே ஒளிர்கிறது.*

*மின்னல் தோன்றும், மறையும், கண்களின் பார்வைக்குக் கேடு விளைவிக்கும். தன் ஒளிச் சிதறலால் மேகத்தில் ஒளி பரப்பும். மனத்தில் பீதிவிளைவித்து ஸ்தம்பிக்கச் செய்யும். நொடியில் பரவி மறைகிற பேரசைவு கொள்ளும். கம்பையின் அருகே நிலைத்துக் காணப்படுகிற மின்னல் (தேவி) இதற்கு மாறானது. (43)*

सुधाडिण्डीरश्रीः स्मितरुचिषु तुण्डीरविषयं
परिष्कुर्वाणासौ परिहसितनीलोत्पलरुचिः ।
स्तनाभ्यां आनम्रा स्तबकयतु मे काङ्क्षिततरुं
दृशामैशानीनां सुकृतफलपाण्डित्यगरिमा ॥ ४४ ॥

ஸுதா டிண்டீரஶ்ரீ: ஸ்மிதருசிஷு துண்டீர விஷயம்
பரிஷ்குர்வாணஸௌ பரிஹஸித நீலோத்பல ருசி: ।
ஸ்தநாப்ப்யாம் ஆநம்ரா ஸ்தபகயது மே காங்க்ஷித தரும்
த்ருஶாம் ஐஶாநீநாம் ஸுக்ருத பல பாண்டித்ய கரிமா ॥ 44

*அமுதத்தின் நுரையழகு போன்ற புன்சிரிப்பின் ஒளிகொண்டவளும், துண்டீர தேசத்தைக் சீர்படுத்துபவளும், நீலோத்பலத்தின் அழகைப் பரிகசிக்கிற மேனி ஒளிகொண்டவளும், ஸ்தனங்களால் குனிந்தவளும், பரமசிவனின் கண்களின் உயர்ந்த தேர்ந்த புண்ணிய பலனானவளுமான இந்த தேவி என் விருப்பமாகிற மரத்தைப் பூக்கச் செய்யட்டும். (44)*

कृपाधाराद्रोणी कृपणधिषणानां प्रणमतां
निहन्त्री संतापं निगममुकुटोत्तंसकलिका ।
परा काञ्चीलीलापरिचयवती पर्वतसुता
गिरां नीवी देवी गिरिशपरतन्त्रा विजयते ॥ ४५ ॥

க்ருபாதாராத்ரோணீ க்ருபண திஷணுணும் ப்ரணமதாம்
நிஹந்த்ரீ ஸந்தாபம் நிகம முகுடோத்தம்ஸ கலிகா ।
பரா காஞ்சீ லீலா பரிசயவதீ பர்வதஸுதா
கிராம் நீவீ தேவீ கிரிஶ பர தந்த்ரா விஜயதே ॥ 45

*காஞ்சியில் விளையாடுகிற பழக்கமுள்ளவளும், மலைமகளும் சிவனிடம் மனமிழந்தவளும் வாக்கின் எல்லையுமான அந்த மேலான தேவி, அறிவு குன்றியவர்களும் தன்னை வணங்குபவர்களுமானவருக்குக் கருணையின் நீர்தொட்டியாகித் தாபம் நீக்குபவளாக, உபநிடதங்களின் தலையணியான பூங்கொத்தாக, விளங்குகிறாள். (45)*

कवित्वश्रीकन्दः सुकृतपरिपाटी हिमगिरेः
विधात्री विश्वेषां विषमशरवीरध्वजपटी ।
सखी कम्पानद्याः पदहसितपाथोजयुगली
पुराणी पायान्नः पुरमथन साम्राज्यपदवी ॥ ४६ ॥

கவித்வஶ்ரீ கந்த: ஸுக்ருத பரிபாடீ ஹிமகிரே:
விதாத்ரீ விஶ்வேஷாம் விஷமஶர வீரத்த்வஜபடீ ।
ஸகீ கம்பா நத்யா: பத ஹஸிதபாதோஜயுகளீ
புராணீ பாயாந்ந: புர மதன ஸாம்ராஜ்ய பதவீ ॥ (46)

*கவிதையழகின் வேரும், இமவானின் புண்ணிய வரிசையும், உலகைப் படைத்தவளும், மன்மதனின் வீர்யத்தைப் பரப்புகிற வெற்றிக் கொடியும், கம்பை நதியின் தோழியும், தன் திருவடிகளின் அழகால் இருதாமரைகளைப் பரிகசித்தவளும் மிகப்பழையவளும், திரிபுரமடக்கியவரின் பேராட்சி நிலையுமான தேவி நம்மைக் காப்பாளாக. (46)*

दरिद्राणा मध्ये दरदलिततापिञ्छसुषमाः
स्तनाभोगक्लान्तास्तरुणहरिणाङ्काङ्कितकचाः ।
हराधीना नानाविबुधमुकुटीचुम्बितपदाः
कदा कम्पातीरे कथय विहरामो गिरिसुते ॥४७ ॥

தரித்ராணு: மத்த்யே தரதளித தாபிஞ்ச்ச ஸுஷமா:
ஸ்தநாபோக க்லாந்தா: தருணஹரிணுங்காங்கித கசா: ।
ஹராதீனு: நாநாவிபுத முகுட சும்பிதபதா:
கதா கம்பாதீரே கதய விஹராமோ கிரிஸுதே ॥ 47

*இடையில் சிறுமை பெற்று, சிறிது மலர்ந்த காசாம்பூவின் அழகுள்ளவர்களும் ஸ்தனங்களின் பருமனுல் களைத்தவர்களும் இளஞ்சந்திரனைக் கூந்தலில் சூடியவர்களும் சிவனுக்கு வசப்பட்டவர்களும் பல தேவர்களின் முகுடங்களைத் தன் திருவடிகளால் தொடுபவர்களுமாகி நாங்கள் எப்போது கம்பை நதிக்கரையில் உன்னுடன் விளையாடுவோம் ? சொல்வாய்.*

*தேவியின் அருளால் தேவியை வழிபட்டுத் தேவியின் அருகில் தேவியின் ஸாரூப்யம் என்ற வடிவ ஒற்றுமை பெற்றுத் தேவியுடன், கம்பாதீரத்தில், தன்னையொத்து இந்நிலை பெற்ற பாக்ய சாலிகளின் நல்லுறவுடன் கூடி விளையாடுவதென்பதும் தன் வழிபாட்டின் லக்ஷ்யம் என்ற பக்தனின் எதிர்பார்வை இது. ஸாரூப்யம், ஸாலோக்கியம், ஸாமீப்யம் முதலியவை முக்தி நிலைகள். (47)*

वरीवर्तु स्थेमा त्वयि मम गिरां देवि मनसो
नरीनर्तु प्रौढा वदनकमले वाक्यलहरी ।
चरीचर्तु प्रज्ञाजननि जडिमा नः परजने
सरीसर्तु स्वैरं जननि मयि कामाक्षि करुणा ॥ ४८ ॥

வரீவர்து ஸ்த்தேமா த்வயி மம கிராம் தேவி ! மநஸோ
நரீநர்து ப்ரௌடா வதந கமலே வாக்யலஹரீ।
சரீசர்து ப்ரஜ்ஞா ஜநநி ஜடிமா ந: பரஜநே
ஸரீஸர்து ஸ்வைரம் ஜநநி மயி காமாக்ஷி கருணு ॥ (48)

*தாயே ! காமாக்ஷி ! என் மனத்திற்கும் வாக்கிற்கும் உன்னிடம் நிலைத்த உறுதியான பதிவு நன்கு ஏற்படட்டும். தாமரை போன்ற வாயில் உயர்ந்தபொருளைக் கூறுகிற அறிவின் முதிர்ச்சியால் பெருகுகிற சொற்றொடர் நடனமாடட்டும். அறிவை உண்டாக்குபவளே ! உன் பக்தரல்லாதவரிடம் அறிவின்மை*

*நடமாடட்டும். என்னிடத்தில் உன் கருணை உன் விருப்பப்படி பரவட்டும். 48*

क्षणात्ते कामाक्षि भ्रमरसुषमाशिक्षणगुरुः
कटाक्षव्याक्षेपो मम भवतु मोक्षाय विपदाम् ।
नरीनर्तु स्वैरं वचनलहरी निर्जरपुरी-
सरिद्वीचीनीचीकरणपटुः आस्ये मम सदा ॥ ४९ ॥

க்ஷணாத் தே காமாக்ஷி! ப்ப்ரமர ஸுஷமாஶிக்ஷண குரு:
கடாக்ஷவ்யாக்ஷேபோ மம பவது மோக்ஷாய விபதாம் ।
நரீ நர்து ஸ்வைரம் வசநலஹரீ நிர்ஜரபுரீ-
ஸரித்வீசீ நீசீகரண படு: ஆஸ்யே மம ஸதா 49

*காமாக்ஷி! வண்டுகளுக்கு அழகைக்கற்பிப்பதில் குருவாகியுள்ள உன் கடைக்கண்பார்வையின் வீச்சு, எனக்கு நேர்கிற துன்பங்களிலிருந்து என்னை நொடியில் விடுவிப்பதாகட்டும், மூப்பற்ற தேவர்களின் நகரில் ஓடுகிற கங்கையின் பெருக்கைத் தாழ்த்துவதில் தேர்ந்த சொற்றொடர் என் வாயில் எப்போதும் பிற உதவியின்றி தானே நடனமாடட்டும். (49)*

पुरस्तान्मे भूयः प्रशमनपरः स्ताद्भवरुजां [1]
प्रचारस्ते कम्पातटविहृतिसंपादिनि दृशोः । [2]
इमां याञ्चां ऊरीकुरु सपदि दूरीकुरु तमः -
परीपाकं मत्कं सपदि बुधलोकं च नय माम् ॥ ५० ॥

புரஸ்தாந் மே பூய: ப்ரஶமந பர: ஸ்தாத் பவருஜாம் [3]
ப்ரசாரஸ்தே கம்பாதட விஹ்ருதி ஸம்பாதிநி த்ருஶோ:[4] ।
இமாம் யாச்ஞாமூரீ குரு ஜநநி தூரீகுரு தம: -
பரீபாகம் மத்கம் ஸபதி புதலோகம் ச நய மாம் ॥ 50

*கம்பா நதிக்கரையில் விளையாட வழி அமைத்துக் கொண்டவளே! (மங்களமானவளே!) உன் கண்களின் வீச்சு என்*

*1.* मम रुजां *2.* शिवे *3. மம ருஜாம் 4. ஶிவே*

*முன்பாக ஸம்ஸாரதுக்கங்களை (என் துயரங்களை) சமனப்படுத்துவதில் ஈடுபடட்டும் ! இந்த வேண்டுகோளை ஏற்பாயாக ! அஜ்ஞானத்தின் விளைவுகளை அகற்றுவாயாக ! உடன் நல்லோரிருக்குமிடத்தில் என்னைச் சேர்ப்பாயாக ! (50)*

उदञ्चन्ती काञ्चीनगरनिलये त्वत्करुणया
समृद्धा वाग्धाटी परिहसितमाध्वी कवयताम् ।
उपादत्ते मारप्रतिभट जटाजूटमुकुटी-
कुटीरोल्लासिन्याः शतमखतटिन्या जयपटीम् ॥ ५१ ॥

உதஞ்சந்தீ காஞ்சீ நகர நிலயே த்வத்கருணயா
ஸம்ருத்த்தா வாக்த்தாடீ பரிஹஸித மாத்த்வீ கவயதாம் ।
உபாதத்தே மாரப்ரதிபட ஜடாஜூட முகுடீ-
குடீரோல்லாஸின்யா: ஶதமக தடின்யா: ஜயபடீம் ॥ 51

*காஞ்சி நகரில் வசிப்பவளே ! உன் கருணையால் எழுகின்றதும் நிறைவுற்றதும் தேனை (அமுதத்தை)ப் பழிப்பதுமான கவிகளின் சொல்வன்மை, மன்மதனின் எதிரியான சிவனின் சடைமுடியாகிற குடிசையில் உல்லாஸத்துடன் வாழ்கிற கங்கையின் வெற்றிக் கொடியைப் பறிக்கிறது.*

*இனிய கவிதை உன் அருளால் அமைகிறது. வானளாவிப் பரவுகிறது. கங்கை நீர் போல் அமுதம் போல் தேன்போல் இனிக்கிறது. மனநிறைவு தருகிறது. (51)*

श्रियं विद्यां बुद्धिं जगति [1] नमतां त्वामथ यशः[2]
सुपुत्रान् प्रादत्ते तव जननि[3] कामाक्षि करुणा ।
त्रिलोक्यामाधिक्यं त्रिपुरपरिपन्थिप्रणयिनि
प्रणामस्त्वत्पादे शमितदुरिते किं न कुरुते ॥ ५२ ॥

---

*1.* दद्यात् जननि *2.* कीर्तिं अमितां *3.* झटिति

ஶ்ரியம் வித்யாம் புத்திம் ஜகதி [1]நமதாம் த்வாமத யஶ:[2]
ஸுபுத்ரான் ப்ராதத்தே தவ ஜனனி [3] காமாக்ஷி கருணா ।
த்ரிலோக்யா மாதிக்யம் த்ரிபுர பரிபந்த்தி ப்ரணயிநி !
ப்ரணாமஸ் த்வத்பாதே ஶமித துரிதே கிம் ந குருதே ॥ 52

*திரிபுர சத்ருவிடம் அன்பு பூண்டவளே ! தாயே ! காமாக்ஷி ! உன் கருணை உன்னை வணங்குபவருக்கு, செல்வம், கல்வி, அறிவு, புகழ்,. நற்புதல்வர்கள், மூவுலகில் பெருமை இவற்றைத் தருகிறது. பாபத்தை நீக்குகிற உன் திருவடிகளில் செய்கிற நமஸ்காரம் எதைச் செய்யாது ? (52)*

मनःस्तम्भं स्तम्भं गमयदुपकम्पं प्रणमतां
सदालोलं नीलं चिकुरजितलोलम्बनिकरम् ।
गिरां दूरं स्मेरं धृतशशिकिशोरं पशुपतेः
दृशां भोग्यं योग्यं तुहिनगिरिभाग्यं विजयते ॥ ५३ ॥

மனஸ்ஸ்தம்ப்பம் ஸ்தம்ப்பம் கமயத் உபகம்பம் ப்ரணமதாம்
ஸதாலோலம் நீலம் சிகுரஜித லோலம்ப நிகரம் ।
கிராம் தூரம் ஸ்மேரம் த்ருதஶஶி கிஶோரம் பஶுபதே:
த்ருஶாம் போக்யம் யோக்யம் துஹிநகிரி பாக்யம் விஜயதே ॥ 53

*தன்னை வணங்குபவரின் மனத்திலுள்ள உணர்வின்மையை (அறியாமையை, உணர்விழந்த மனத்தை) கம்பையின் அருகிலுள்ள தூணை (தூணைப் போன்ற பிடிப்பை) அடைவிப்பதும், எப்போதும் விளையாடுவதும், கருநிற முள்ளதும் தன் கூந்தலழகால் வண்டுக்கூட்டத்தின் அழகை வென்றதும் வாக்குக்கு எட்டாததும் புன்சிரிப்புள்ளதும் இளஞ்சந்திரனைத் தரித்ததும், பசுபதியின் கண்களுக்கு உகந்த அனுபவப்பொருளும் பனிமலையின் பாக்யமுமானதொன்று கம்பையின் அருகே விளங்குகிறது.*

*மனம் இயக்கமற்று ஸ்தம்பித்த நிலையில், பிடிப்புள்ள தூணருகே கொணர்ந்து, ஆறுதலளிக்கிருள். மனத்தின் இறுக்கத்தை நீக்கத் தேவி தன் லீலையைக் காட்டுகிருள். (53)*

*1. தத்யாத் ஜநநி 2. கீர்த்திம் அமிதாம் 3. ஜடிதி.*

घनश्यामान् कामान्तकमहिषि कामाक्षि मधुरान्-
दृशां पातान् एतान् अमृतजलशीतान् अनुपमान् ।
भवोत्पाते भीते मयि वितर नाथे दृढभवन्-
मनश्शोके मूके हिमगिरिपताके करुणया ॥ ५४ ॥

கனஶ்யாமான் காமாந்தக மஹிஷி காமாக்ஷி மதுரான்
த்ருஶாம்பாதான் ஏதான் அம்ருத ஜலஶீதான் அனுபமான் ।
பவோத்பாதே பீதே மயி விதர நாதே த்ருடபவந்-
மனஶ்ஶோகே மூகே ஹிமகிரிபதாகே கருணயா ॥ 54

*காமனை அழித்தவரின் ராணியே ! பனிமலை வம்சத்தின் கொடியே ! காமாக்ஷி ! நாடப்பெறுபவளே ! ஸம்ஸாரமாகிய பெரும் விபத்தில் பயந்தவனும், ஆழ்ந்த சோகம் கொண்டவனும், ஊமையுமான என்னிடம், மேகம் போல் கருத்ததும், இனியதும், அமுத நீர் போல் குளிர்ந்ததும், இணையற்றதுமான உன்கடைக்கண்பார்வையைக் கருணையால் வழங்குவாய். (54)*

नतानां मन्दानां भवनिगलबन्धाकुलधियां
महान्ध्यं रुन्धानां अभिलषितसंतानलतिकाम् ।
चरन्तीं कम्पायास्तटभुवि सवित्रीं त्रिजगतां
स्मरामस्तां नित्यं स्मरमथनजीवातुकलिकाम् ॥ ५५ ॥

நதானாம் மந்தானாம் பவநிகள பந்த்தாகுல தியாம்
மஹாந்த்த்யம் ருந்த்தானாம் அபிலஷித ஸந்தான லதிகாம் ।
சரந்தீம் கம்பாயா: தடபுவி ஸவித்ரீம் த்ரிஜகதாம்
ஸ்மராம: தாம் நித்யம் ஸ்மர மதன ஜீவாது கலிகாம் ॥ (55)

*ஸம்ஸாரமெனும் கை விலங்கின் பிணைப்பால் மனம் கலங்கித் தன்னை வணங்குகிற அறிவு குன்றிய அடியாரின் அஜ்ஞானமாகிற பேரிருளைத் தடைசெய்பவளும், விரும்பியதைத்தருவதில் ஸந்தானலதா என்ற கற்பகக் கொடியும், கம்பையின் கரையில் நடமாடுபவளும், மூவுலகையும் ஈன்றவளும், மன்மதனை அடக்கியவரின் உயிர்க்குருத்துமான அந்த தேவியை தியானம் செய்வோமாக ! (55)*

परा विद्या हृद्या श्रितमदनविद्या मरकत-
प्रभानीला लीलापरवशितशूलायुधमनाः ।
तमःपूरं दूरं चरणनतपौरंदरपुरी-
मृगाक्षी कामाक्षी कमलतरलाक्षी नयतु मे ॥ ५६ ॥

பரா வித்யா ஹ்ருத்யாஶ்ரித மதனவித்யா மரகத-
ப்ரபா நீலா லீலா பரவஶித சூலாயுத மனா: ।
தம: பூரம் தூரம் சரணநத பௌரந்தர புரீ-
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ கமல தரளாக்ஷீ நயது மே ॥ (56)

*காமாக்ஷீ தேவி எல்லா மந்திரங்களுக்கு மேலான ஸ்ரீவித்யா வடிவினள். மனத்திற்கினியவள், தன்னை அண்டிய மன்மதனின் மந்திர வித்யையாக இருப்பவள், மரகத ஒளிபோன்று கருத்தவள், பரம சிவனது மனத்தைத் தன் லீலையால் ஈர்த்தவள், இந்திரனின் நகரில் உள்ள பெண்களால் திருவடிகளில் வணங்கப்பெற்றவள், காற்றில் ஆடுகிற தாமரை போன்றகண்கள் உள்ளவள்; இவள் என்னிடமுள்ள அஜ்ஞானப்பெருக்கை வெகுதூரத்திற்கப்பால் கொண்டு செல்லட்டும்.*

*பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம் வித்யை எனப்படும். மற்ற வித்யைகளைக்குறிப்பிட அந்தந்த தேவதையின் பெயர் முன்னே சேரும். தேவியின் வித்யையை ''பரா வித்யா'' ''ஸ்ரீவித்யா'' எனக்குறிப்பிடுவர். ஸ்ரீவித்யா என்ற மந்திரங்களைக் கண்டு பிடித்தவர், சிவன், மன்மதன், அகஸ்தியர் லோபாமுத்ரை எனப்பலர் உண்டு. இவற்றினுள் மன்மதனை ருஷியாகக் கொண்டதும் மன்மதனால் உபாசிக்கப்பெற்றதுமான மந்திரம் ஹ்ருத்யா - தேவி மனமுவந்து ஏற்றது. காமவித்யை காமராஜ வித்யை என்பர். பிரம்ஹவித்யையும் பரா வித்யையே!.*

*மரகதத்தின் பச்சையும், நீலரத்னத்தின் நீலமும் மேகத்தின் கருமையும் இணைந்தது தேவியின் மேனி நிறம். ச்யாமம் என்பர். செம்மையில் இளஞ்சூரியன், செம்பரத்தம்பூ, செம்பருத்தி, மாதுளம்பூ, மாணிக்கம், தாமரை போன்ற பல சாயைகள் உள்ளன. அதுபோல் கறுப்பிலும் பல சாயல்கள் உள்ளன. அதனால் தேவியின் கருநிறத்தை, நீலோத்பலம், கார்மேகம்,*

*இந்திரநீலக்கல், மரகதம், வண்டு முதலியவற்றுடன் ஒப்பிடுவது கவியின் மரபு. (56)*

अहन्ताख्या मत्कं कबलयति हा हन्त हरिणी
हठात् संविद्रूपं हरमहिषि सस्याङ्कुरमसौ ।
कटाक्षव्याक्षेपप्रकटहरिपाषाणपटलैः
इमामुच्चैरुच्चाटय झटिति कामाक्षि कृपया ॥ ५७ ॥

அஹந்தாக்க்யா மத்கம் கபளயதி ஹா ஹந்த ஹரிணீ
ஹடாத் ஸம்வித்ரூபம் ஹரமஹிஷி ஸஸ்யாங்குரமஸௌ ।
கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரகட ஹரிபாஷாண படலை:
இமாம் உச்சைருச்சாடய ஜடிதி காமாக்ஷி க்ருபயா ॥ 57

*ஹரனின் ராணியே ! காமாக்ஷி ! அஹந்தை என்ற பெண்மான் எனது உள்ளுணர்வான மெய்ஞ்ஞானமாகிய புல்லை வலுவில் வந்து தின்கிறது. கஷ்டம் ! கஷ்டம் ! இந்தப் பெண்மானை உன் கடாக்ஷ வீச்சாகிற நீலரத்தினக் கற்களை வரிசையாக வீசி உடன் தயையுடன் விரட்டுவாயாக ! (57)*

बुधे वा मूके वा तव पतति यस्मिन् क्षणमसौ
कटाक्षः कामाक्षि प्रकटजडिमक्षोदपटिमा ।
कथंकारं नास्मै करमुकुलचूडालमुकुटाः
नमोवाकं ब्रूयुर्नमुचिपरिपन्थिप्रभृतयः ॥ ५८ ॥

புதே வா மூகே வா தவ பததி யஸ்மின் க்ஷண மஸௌ
கடாக்ஷ: காமாக்ஷி ! ப்ரகட ஜடிமக்ஷோத படிமா ।
கதங்காரம் நாஸ்மை கர முகுள சூடால முகுடா:
நமோவாகம் ப்ரூயு: நமுசி பரிபந்திப்ரப்ருதய: ॥ 58

*காமாக்ஷி ! அறியாமையைப் போக்குவதில் பலரறிய வெளிப்பட்ட திறமையுள்ள உன் கடாக்ஷம், அறிஞர் மீதோ ஊமை மீதோ எந்த நொடியில் விழுகிறதோ, அதே நொடியில், கைகளைக்குவித்துச் சிரம் மேல் வைத்தவர்களாக நமுசியின் எதிரியான*

இந்திரன் முதலானோர், அவருக்கு 'நமஸ்காரம்' என்ற சொல்லை ஏன் சொல்லமாட்டார்கள்? (58)

प्रतीचीं पश्यामः प्रकटरुचिनीवारकणिका[1]-
प्रभासध्रीचीनां प्रदलितषडाधारकमलाम्।
चरन्तीं सौषुम्ने पथि परपदेन्दुप्रविगलत्-
सुधार्द्रां कामाक्षीं परिणतपरज्योतिरुदयाम्॥ ५९॥

ப்ரதீசீம் பஶ்யாம: ப்ரகடருசி நீவார கணிகா[2]
ப்ரபா ஸத்த்ரீசீநாம் ப்ரதளித ஷடாதார கமலாம்।
சரந்தீம் ஸௌஷும்நே பதி பரபதேந்து ப்ரவிகளத்
ஸுதார்த்ராம் காமாக்ஷீம் பரிணத பரஜ்யோதிருதயாம்॥ 59

நவரை என்ற காட்டுநெல்லின் நிறத்திற்கு ஒப்பான ஒளிகொண்டதும், ஆறு ஆதாரகமலங்களையும் பிளந்து கொண்டு ஸுஷும்னை வழியே மேல் நோக்கிச் செல்வதும் பரமபதமாகிய ஸஹஸ்ராரகமலத்திலிருந்து பெருகுகிற அமுதத்தால் நனைந்ததுமான பர ஒளி உதயமாகப் பரிணாம மடைந்த குண்டலினீ சக்தியாகக் காமாக்ஷியைக் காண்கிறோம்.

குண்டலினீ சக்தி, மூலாதாரம் ஸ்வாதிஷ்ட்டானம் மணிபூரகம் அநாஹதம், விசுத்தி ஆஜ்ஞை என்ற ஆறு ஆதாரகமலங்களின் இடையே அமைந்துள்ள பிரும்ஹ - விஷ்ணு - ருத்ரக் கிரந்திகளாகிய பூட்டுகளைத் திறந்து ஸுஷும்னை வழியே ஸஹஸ்ராரசக்ரம் சென்று அங்கு பரமசிவனுடன் சேர்ந்து பர அம்ருத ஊற்றை உடல் முழுவதும் பரவச் செய்து, பிரும்மாநந்த நிலை உணரச் செய்கிறது. "மஹீம் மூலாதாரே" ஸுதாதாராஸாரை" என்ற இரண்டு ஸௌந்தரிய லஹரீ சுலோகங்கள் இதனை விளக்கும். ஸஹஸ்ராரத்திலுள்ள சிவனுடன் ஐக்யமடைந்த குண்டலினியே காமாக்ஷி. (59)

जम्भारातिप्रभृतिमुकुटीः पादयोः पीठयन्ती
गुम्फान् वाचां बुधजनकृतान् स्वैरमारामयन्ती।

1. नीवारकमणि 2. நீவாரகமணி

शम्पालक्ष्मीं मणिगणरुचा पादपान् प्रापयन्ती
कम्पातीरे कविपरिषदां जृम्भते भाग्यसीमा ॥ ६० ॥

ஜம்ப்பாராதி ப்ரப்ப்ருதி முகுடீ: பாதயோ: பீடயந்தீ
கும்ப்பாந் வாசாம் புதஜன க்ருதாந் ஸ்வைர மாராமயந்தீ ।
ஶம்பா லக்ஷ்மீம் மணிகண ருசா பாதபான் ப்ராபயந்தீ
கம்பாதீரே கவி பரிஷதாம் ஜ்ரும்ப்பதே பாக்யஸீமா ॥ 60

*ஜம்பன் என்ற அசுரனின் எதிரியான இந்திரன் முதலிய தேவர்களின் கிரீடங்களைத் தன் பாதம் வைக்கும் பீடமாக்கியவளும், அறிவாளிப்பெருமக்கள் புனைந்த காவியங்களைத் தான் உலா வரும் உத்தியானமாக்கியவளும், மரங்களின் மீது மின்னல் ஒளியைத் தன் ரத்ன ஆபரண ஒளிவீச்சால் அடைவிப்பவளும், கவிகள் கூட்டத்தின் பாக்கிய எல்லையுமான தேவி கம்பைக்கரையில் விளங்குகிறாள்.*

*தேவியின் திருவடிகளின் கீழே இந்திரன் முதலானோர் கிரீடத்தை வைத்து வணங்குகின்றனர். உயர்ந்த கவிகளின் காவியத்தைச் சுவைக்க மனத்தை அதன் பால் தேவி செலுத்துகிறாள். மரங்களினிடையே தேவி செல்லும் போது அவளது ஆபரண ஒளி மின்னல் போல் மரங்களின் மீது படிகிறது.*

चन्द्रापीडां चतुरवदनां चञ्चलापाङ्गलीलां
कुन्दस्मेरां कुचभरनतां कुन्तलोद्धूतभृङ्गाम् ।
माराराते र्मदनशिखिनं मांसलं दीपयन्तीं
कामाक्षीं तां कविकुलगिरां कल्पवल्लीमुपासे ॥ ६१ ॥

சந்த்ராபீடாம் சதுரவதனாம் சஞ்சலாபாங்கலீலாம்
குந்தஸ்மேராம் குசபரநதாம் குந்தலோத் தூதப்ப்ருங்காம் ।
மாராராதே: மதனசிகினம் மாம்ஸளம் தீபயந்தீம்
காமாக்ஷீம் தாம் கவிகுல கிராம் கல்பவல்லீமுபாஸே ॥ 61

*சந்திரனைச் சிரசில் சூடியவளும் அழகிய முகமுள்ளவளும், இங்குமங்கும் அசைந்து விளையாடுகிற கடைக்கண் உள்ளவளும், முல்லைப்பூ போல் சிரிப்பவளும், ஸ்தனங்களின் கனத்தால் முன்*

*காஞ்சியின் அழகணியும், பசுபதியின் கண்களுக்கு அழகு தருகிற அஞ்சனமையும் இனிய கடைக்கண் பார்வையுள்ளவளுமான ஒருவள் என்துயரின் பிடியைத் தளர்த்தட்டும். (65)*

व्यावृण्वाना: कुवलयदलप्रक्रियावैरमुद्रां
व्याकुर्वाणा मनसिजमहाराजसाम्राज्यलक्ष्मीम् ।
काञ्चीलीलाविहृतिरसिके काङ्क्षितं नः क्रियासुः
बन्धच्छेदे तव नियमिनां बद्धदीक्षाः कटाक्षाः ॥ ६६ ॥

வ்யாவ்ருண்வாநா: குவலய தளப்ரக்ரியா வைரமுத்ராம்
வ்யாகுர்வாணா மனஸிஜ மஹா ராஜ ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம் ।
காஞ்சீ லீலா விஹ்ருதி ரஸிகே காங்க்ஷிதம் ந: க்ரியாஸு:
பந்தச்சேதே தவ நியமிநாம் பத்த்ததீக்ஷா: கடாக்ஷா: ॥ 66

*காஞ்சியில் லீலைபுரிவதில் ரஸிகையே ! அல்லி இதழ்களின் நடைமுறையில் எதிர்ப்பைத் தெரிவிப்பவையும் மன்மதமஹாராஜனின் பேராட்சியின் அழகை விளக்குபவையும், நியமமுள்ள அடியார்களின் ஸம்ஸாரக்கட்டைப்பிளப்பதில் உறுதி பூண்டவையுமான உன்கடாக்ஷங்கள் எங்கள் விருப்பத்தை நிறைவுறச் செய்யட்டும். (66)*

कालाम्भोदे सित[1]रुचि दलं कैतकं दर्शयन्ती
मध्येसौदामिनि मधुलिहां मालिकां राजयन्ती ।
हंसारावं विकचकमले मञ्जुमुल्लासयन्ती
कम्पातीरे विलसति नवा कापि कारुण्यलक्ष्मीः ॥ ६७ ॥

காலாம்ப்போதே ஸித[2]ருசி தளம் கைதகம் தர்சயந்தீ
மத்த்யே ஸௌதாமி நி மதுலிஹாம் மாலிகாம் ராஜயந்தீ ।
ஹம்ஸாராவம் விகசகமலே மஞ்ஜும் உல்லாஸயந்தீ
கம்பாதீரே விலஸதி நவா காபி காருண்ய லக்ஷ்மீ: ॥ 67

*1. शशि 2. ஶஶி*

*கருமேகத்தில் வெண்ணொளி (சந்திரனின் ஒளி) கொண்ட தாழம்பூவின் இதழைக் காட்டிக் கொண்டும், மின்னலின் இடையே வண்டின் வரிசையை விளங்கச் செய்தும், மலர்ந்த தாமரையில் அன்னப்பறவையின் குரலை உல்லாசமாக எழுப்பியும் ஒரு புதிய கருணைலக்ஷ்மி கம்பைக் கரையில் விளங்குகிறாள்.*

*மேகத்தில் சந்திரன் போல் கூந்தலினுள் தாழைமடல்; மின்னல் போன்று மெலிந்த இடையில் வண்டாகிற உரோமவரிசை; மலர்ந்த தாமரை போன்ற திருவடியில் அன்னத்தின் ஒலிபோன்ற சதங்கையொலி என அழகானவர்ணனை. (67)*

चित्रं चित्रं निजमृदुतया भर्त्सयन् पल्लवालीं
पुंसां कामान् भुवि च नियतं पूरयन् पुण्यभाजाम् ।
जातः शैलान्न तु जलनिधेः स्वैरसंचारशीलः
काञ्चीभूषा कलयतु शिवं कोऽपि चिन्तामणिर्मे ॥ ६८ ॥

சித்ரம் சித்ரம் நிஜம்ருதுதயா பர்த்ஸயன் பல்லவாலீம்
பும்ஸாம் காமான் புவிச நியதம் பூரயன் புண்ய பாஜாம் ।
ஜாத: சைலாந்நது ஜலநிதே: ஸ்வைர ஸஞ்சாரஶீல:
காஞ்சீபூஷா கலயது ஶிவம் கோபி சிந்தாமணிர்மே ॥ 68

*அது ஒரு சிந்தாமணி எனும் ரத்தினம். விந்தையிலும் விந்தை. தன் மென்மையால் துளிர்வரிசையை மிரட்டுகிறது. புவியில் புண்யம் செய்த மாந்தர்க்கு மட்டுமே விரும்பியதை வலுவில் வந்து நிரப்புகிறது. கடலில் தோன்றிய தல்ல. மலையில் தோன்றியது. தானே எங்கும் செல்லும் பழக்கமுள்ளது. காஞ்சியின் அணி. அது எனக்கு மங்களம் தரட்டும்.*

*பாற்கடலில் தோன்றிய மென்மையற்ற அசையாப் பொருளான சிந்தாமணி இது அல்ல. எவர் எதனைவிரும்பினாலும் தரும் பழக்கமுள்ளதுமல்ல. மலையில் தோன்றியது. மென்மை மிக்கது, அலைந்து கொண்டேயிருப்பது. புண்யம் செய்பவர் நாடியதைமட்டும் தருவது. இப்படி ஒரு சிந்தாமணியா ? விந்தையே ! (68)*

ताम्राम्भोजं जलदनिकटे तत्र बन्धूकपुष्पं
तस्मिन् मल्लीकुसुमसुषमां तत्र वीणानिनादम् ।
व्यावृण्वाना सुकृतलहरी कापि काञ्चीनगर्या
ऐशानी सा कलयतितरां ऐन्द्रजालं विलासम् ॥ ६९ ॥

தாம்ராம்ப்போஜம் ஜலதநிகடே தத்ர பந்த்தூக புஷ்பம்
தஸ்மின் மல்லீ குஸுமஸுஷமாம் தத்ர வீணா நிநாதம் ।
வ்யாவ்ருண்வாநா ஸுக்ருதலஹரீ காபி காஞ்சீ நகர்யாம்
ஐஶாநீ ஸா கலயதிதராம் ஐந்த்ர ஜாலம் விலாஸம் ॥ 69

*மேகவரிசை, அதன் அருகே செந்தாமரை, அதில் ஒரு செம்பரத்தம்பூ, அதன் நடுவே மல்லிகைப்பூ, அதில் ஒரு வீணையொலி, இப்படிக் காஞ்சீநகரில் ஈசனின் புண்ணிய வரிசை ஒரு இந்திரஜாலத்தோற்றத்தைக் காட்டுகிறது.*

*கருங் கூந்தல், அருகே செம்மை நிறைந்தமுகம், அதில் செம்மை கொண்ட உதடு. அதனிடையே மல்லிகைச்சிரிப்பு, அதில் எழுகிற இனிய பேச்சு, என்று நிறமும் ஒளியும் ஒலியும் மாறிமாறித் தோன்றுகிற காட்சி இது. (69)*

आहारांशं त्रिदशसदसां आश्रये चातकानां
आकाशोपर्यपि च कलयन्नालयद्वन्द्वं[1]एषाम् ।
कम्पातीरे विहरतितरां कामधेनुः कवीनां
मन्दस्मेरो मदननिगमप्रक्रियासंप्रदायः ॥ ७० ॥

ஆஹாராம்ஶம் த்ரிதச ஸதஸாம் ஆஶ்ரயே சாதகாநாம்
ஆகாஶோபர்யபிச கலயன் ஆலயத்வந்த்வம்[2] ஏஷாம் ।
கம்பாதீரே விஹரதி தராம் காமதேனு: கவீநாம்
மந்தஸ்மேரோ மதன நிகம ப்ரக்ரியா ஸம்ப்ரதாய: ॥ 70

*சாதகப்பட்சியின் இருப்பிடத்திலும் பரவெளியிலும் தேவர் கூட்டத்திற்கு உணவு வழங்குவதற்காக இரு உயர மிக்க இல்லங்களை*

1. लयं तुङ्गं 2. லயம் துங்கம்

*அமைத்துக் கொண்டதும், கவிகளுக்கு விரும்பியதை வழங்குகிற காமதேனுவும், காமசாஸ்திர நடைமுறைகளைப் பயில்விக்கிற குருகுலமுமான தேவியின் கடாக்ஷம் கம்பைக் கரையில் நன்கு விளையாடுகிறது.*

*தேவர்களின் உணவான அமுதத்தைத் தேவர்களுக்கு சாதகபட்சி உலா வருகிற ஆகாயத்தில் சந்திரமண்டலம் என்ற நெடிதுயர்ந்த இல்லத்திலும், சிரஸில் உள்ள பரவெளியான ஸஹஸ்ரார கமலத்தில் அமைந்த ஸோம மண்டலம் என்ற நெடிதுயர்ந்த இல்லத்திலும் தேவியின் கடாக்ஷம் வழங்குகிறது. (70)*

आर्द्रीभूतैरविरलकृपैः आत्तलीलाविलासैः
आस्थापूर्णैरधिकचपलैः अञ्चिताम्भोजशिल्पैः ।
कान्तैर्लक्ष्मीललितभवनैः कान्तिकैवल्यसारैः
काश्मल्यं नः कवलयतु सा कामकोटी कटाक्षैः ॥ ७१ ॥

**ஆர்த்ரீபூதை: அவிரல க்ருபை: ஆத்த லீலா விலாஸை:**
**ஆஸ்த்தாபூர்ணை: அதிகசபலை: அஞ்சிதாம்ப்போஜ ஶில்பை: ।**
**காந்தைர் லக்ஷ்மீ லலிதபவனை: காந்தி கைவல்யஸாரை:**
**காஶ்மல்யம் ந: கபளயது ஸா காமகோடீ கடாக்ஷை: ॥ 71**

*அந்த காமகோடி, ஈரமுள்ளதும் குறையாத கருணை உள்ளதும், அலகிலா விளையாட்டுடையதும், நம்பிக்கை நிறைந்ததும், மிகவும் சஞ்சலமானதும், தாமரையின் அழகைப்பெற்றதும் அழகியதும், லக்ஷ்மி விளையாடுமிடமும் காந்தியின் தனிச்சிறப்புள்ள ஸாரமுமான கடாக்ஷத்தால் நமது அறியாமை அழுக்கை நீக்கட்டும். (71)*

आधून्वत्यै तरलनयनैराङ्गजीं वैजयन्तीं
आनन्दिन्यै निजपदजुषां आत्तकाञ्चीपुरायै ।
आस्माकीनं हृदयं अखिलैरागमानां प्रपञ्चैः
आराध्यायै स्पृहयतितरां आदिमायै जनन्यै ॥ ७२ ॥

ஆதூந்வத்யை தரள நயநை: ஆங்கஜீம் வைஜயந்தீம்
ஆனந்தின்யை நிஜபதஜுஷாம் ஆத்த காஞ்சீபுராயை ।
ஆஸ்மாகீநம் ஹ்ருதயமகிலை: ஆகமாநாம் ப்ரபஞ்சை:
ஆராத்யாயை ஸ்ப்ருஹயதிதராம் ஆதிமாயை ஜனன்யை ॥ 72

*இங்குமங்கும் நிலையற்று அசைகிறகண்களால் மன்மதனின் வெற்றிக் கொடியை ஆட்டிக் கொண்டிருப்பவளும், தன் திருவடியில் பணிந்தவர்களை மகிழ்விப்பவளும், காஞ்சீபுரத்தைத் தன்னிடமாக்கிக் கொண்டவளும், அனைத்து வேதப்பிரிவுகளாலும் வழிபடப்பெறுபவளுமான ஆதியான தாயை எமது உள்ளம் மிகவும் நாடுகிறது. (72)*

दूरं वाचां त्रिदशसदसां दुःखसिन्धोस्तरित्रं
मोहक्ष्वेलक्षितिरुहवनी क्रूरधारासिपत्रम्[1] ।
कम्पातीर[2] प्रणयि कविभिर्वर्णितोद्यच्चरित्रं
शान्त्यै सेवे सकलविपदां शांकरं तत्कलत्रम् ॥ ७३ ॥

தூரம் வாசாம் த்ரிதசஸதஸாம் து:க்கஸிந்த்தோஸ் தரித்ரம்
மோஹக்ஷ்வேளக்ஷிதிருஹவநீ க்ரூரதாராஸி பத்ரம்[3] ।
கம்பாதீர[4]ப்ரணயி கவிபிர் வர்ணிதோத்யத் சரித்திரம்
ஶாந்த்யை ஸேவே ஸகலவிபதாம் ஶாங்கரம் தத் களத்ரம் ॥ 73

*வாக்கிற்கெட்டாததும், தேவர்கூட்டம் துன்பக்கடலைத்தாண்ட உதவுகிற ஓடமும், மோகமென்ற விஷமரக்காட்டை வெட்டிச்சாய்க்கிற வெட்டறிவாளும் (கோடரியும்) கம்பைக் கரையைப் பெரிதும் விரும்புவதும், கவிகள் போற்றுகிற வரலாறு கொண்டதும் சங்கரரின் இல்லத்தாளுமானதொன்றை எல்லாவிபத்தும் நீங்க வழிபடுகிறேன். (73)*

खण्डीकृत्य प्रकृतिकुटिलं कल्मषं प्रातिभश्री-
शुण्डीरत्वं निजपदजुषां शून्यतन्द्रं दिशन्ती ।
तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री
चण्डी देवी कलयति रतिं चन्द्रचूडालचूडे ॥ ७४ ॥

---

1. वने क्रूरधारं कुठारम् 2. तीरे 3. வநே க்ரூரதாரம் குடாரம். 4. தீரே

கண்டீக்ருத்ய ப்ரக்ருதி குடிலம் கல்மஷம் ப்ராதிபஸ்ரீ-
ஶௌண்டீரத்வம் நிஜபதஜுஷாம் ஶூந்யதந்த்ரம் திஶந்தீ।
துண்டீராக்ய்யே மஹதி விஷயே ஸ்வர்ணவ்ருஷ்டி ப்ரதாத்ரீ
சண்டீதேவீ கலயதி ரதிம் சந்த்ர சூடால சூடே ॥ 74

*இயல்பால் கோணலான அறியாமையைப் போக்கித் தெளிந்த அறிவாற்றலை அயர்வின்றித் தன் அடியார்களுக்கு வழங்குகிறவளும், துண்டீரம் என்ற பெரும் நாட்டில் பொன்மழை பெய்தவளுமான ஊடலால் கோபமுற்ற தேவியான காமாக்ஷி சந்திரனைத் தலையணியாகச் சூடிய பரமசிவனிடத்தில் காதலைத் தோற்றுவிக்கிறாள்.*

*ஆகாசபூபதியின் ஆட்சியில் பஞ்சம் தோன்றத் தேவியின் அருளால் நாடெங்கும் பொன்மழை பெய்தது. (74)*

येन ख्यातो भवति स गृही पूरुषो मेरुधन्वा
यद्दृक्कोणे मदननिगमप्राभवं बोभवीति।
यत्प्रीत्यैव त्रिजगदधिपो जृम्भते किंपचानः
कम्पातीरे स जयति महान्कश्चिदोजो विशेषः ॥ ७५ ॥

யேந க்க்யாதோ பவதி ஸ க்ருஹீ பூருஷோ மேருதந்வா
யத் த்ருக்கோணே மதன நிகம ப்ராபவம் போபவீதி।
யத்ப்ரீத்யைவ த்ரிஜகததிபோ ஜ்ரும்பதே கிம்பசான:
கம்பாதீரே ஸ ஜயதி மஹான் கஶ்சிதோஜோ விசேஷ: ॥ 75

*எதனால் மேருவை வில்லாகக் கொண்ட பரமபுருஷனான சிவன் கிருஹஸ்தன் என்ற பெரும்புகழைப் பெறுகிறாரோ, எதனது கண்ணோரத்தில் காமசாஸ்திரத்தின் பேராற்றல் நிரம்பியுள்ளதோ, எதனை மகிழ்விப்பதால் அடுத்த உணவிற்கு எதனைச் சமைப்பேன் என்று ஏங்குகிற ஏழை மூவுலகத்ததிபனாவானோ, அத்தகைய பெருமை மிக்கபேராற்றல் கம்பைக்கரையில் விளங்குகிறது. (75)*

धन्या धन्या गतिरिह गिरां देवि कामाक्षि यन्मे
निन्द्यां भिन्द्यात्सपदि जडतां कल्मषादुन्मिषन्तीम्।
साध्वी माध्वीरसमधुरताभञ्जनी मञ्जुरीतिः
वाणीवेणी झटिति वृणुतात् स्वर्धुनीस्पर्धिनी माम् ॥ ७६ ॥

தன்யா தன்யா கதிரிஹ கிராம் தேவி! காமாக்ஷி! யந்மே
நிந்த்யாம் பிந்த்யாத் ஸபதி ஜடதாம் கல்மஷாதுந்மிஷந்தீம் ।
ஸாத்த்வீ மாத்த்வீரஸ மதுரதா பஞ்ஜநீ மஞ்ஜுரீதி:
வாணீ வேணீ ஜடிதி வ்ருணுதாத் ஸ்வர்துநீ ஸ்பர்த்திநீ மாம் ॥ 76

*பாபத்தின் பின்விளைவும் அவமதிப்பிற்கு உள்ளாக்குவதுமான ஜடத்தன்மையை உடன் அகற்றுகிற மிகவும் பெருமையும் ஆத்மதிருப்தியுமளிக்கிற வாக்குவன்மை எனக்கு ஏற்படவேண்டும். தேனின் (தேனுலான மதுவின்) இனிய சுவையின் கர்வத்தை அடக்குகிற அழகிய சொற்கட்டமைந்த பேச்சு, பின்னல் போல், சொல்லும் பொருளும் பாவமும் இணைந்து கங்கையுடன் போட்டியிடுவதாக, என்னைத் தனக்கு உரியவளுக ஏற்கட்டும்.*

*கங்கை, யமுனை, ஸரஸ்வதி என்ற நதிகள் ஒன்ருேடு மற்ருென்று பின்னிக் கூடுமிடம் திரிவேணி. தேவியின் அருளால் பெற்ற வாக்கு, சொல், பொருள், உள்ளக்கிடக்கை என்ற மூன்றின் பின்னல் - திரிவேணி. (76)*

यस्या वाटी हृदयकमलं कौसुमी योगभाजां
यस्याः पीठी सततशिशिरा शीकरैर्माकरन्दैः ।
यस्याः पेटी श्रुतिपरिचलन्मौलिरत्नस्य काञ्ची
सा मे सोमाभरणमहिषी साधयेत्काङ्क्षितानि ॥ ७७ ॥

யஸ்யா வாடீ ஹ்ருதயகமலம் கௌஸுமீ யோகபாஜாம்
யஸ்யா: பீடீ ஸததஶிஶிரா ஶீகரைர் மாகரந்தை: ।
யஸ்யா: பேடீ ஶ்ருதிபரிசலந் மௌளிரத்நஸ்ய காஞ்சீ
ஸா மே ஸோமாபரண மஹிஷீ ஸாதயேத் காங்க்ஷிதாநி ॥ 77

*யோகிகளின் உள்ளமே அவளுக்குப் பூந்தோட்டம். அவளது ஆஸனமான தாமரை தேன்துளிகளில் நனைந்து மிகவும் குளிர்ந்தது. காஞ்சீபுரம் உபனிடதங்களில் விளங்குகிற ரத்னமாகிய அவளைக்காக்கிற பெட்டி. சந்திரனைச் சூடியவரின் பத்தினியான அவள் நம் விருப்பங்களை நிறைவேற்றட்டும். (77)*

एका माता सकल जगतामीयुषी ध्यानमुद्रां
एकाम्राधीश्वरचरणयोरेकताना समिन्धे ।
ताटङ्कोद्यन्मणिगणरुचा ताम्रकर्णप्रदेशा
तारुण्यश्रीस्तबकिततनुः तापसी कापि बाला ॥ ७८ ॥

ஏகா மாதா ஸகல ஜகதாம் ஈயூஷீ த்த்யான முத்ராம்
ஏகாம்ராதீஶ்வர சரணயோ ரேகதாநா ஸமிந்த்தே ।
தாடங்கோத்யந் மணிகணருசா தாம்ரகர்ணப்ரதேஶா
தாருண்யஶ்ரீ ஸ்தபகித தநு: தாபஸீ காபி பாலா ॥ 78

*உலகின் ஒரே தாயான அவள் தவமியற்றுகிற சிறுமி. தியான நிலையில் அமர்ந்து, ஏகாம்ர ஈசனின் திருவடிகளில் மனம் பதித்தவளாக, தாடங்கத்திலிருந்து வெளியேறுகிற ரத்தினங்களின் ஒளியால் காதின் வெளிப்புறம் சிவந்தவளாக, வாலிப அழகின் பூங்கொத்தான மேனி கொண்டவளாக அவள் விளங்குகிறாள். (78)*

दन्तादन्तिप्रकटनकरी दन्तिभिर्मन्दयानैः
मन्दाराणां मदपरिणतिं मथ्नती मन्दहासैः ।
अङ्कूराभ्यां मनसिजतरोरङ्कितोराः कुचाभ्यां
अन्तःकाञ्चि स्फुरति जगतामादिमा कापि माता ॥ ७९

தந்தா தந்தி ப்ரகடனகரீ தந்திபிர் மந்தயாநை:
மந்தாராணாம் மதபரிணதிம் மத்த்நதீ மந்தஹாஸை: ।
அங்கூராப்யாம் மனஸிஜதரோ: அங்கிதோரா: குசாப்ப்யாம்
அந்த: காஞ்சி ஸ்ப்புரதி ஜகதாமாதிமா காபி மாதா ॥ 79

*தனது மென்மைமிக்க நடையால் யானைகளுடன் தந்தத்திற்குத் தந்தம் என்று போரில் ஈடுபட்டவளும், மந்தாரம் என்ற கற்பகமரத்தின் திமிரை உருத்தெரியாமல் செய்பவளும், மன்மதன் எனும் மரத்தின் குருத்தாகிய தன் ஸ்தனங்களால் அழகிய மார்புள்ளவளும், உலகில் ஆதியான தாயுமானவளாக காஞ்சியினுள்ளே அவள் விளங்குகிறாள். (79)*

कवीन्द्रहृदयेचरी परिगृहीतकाञ्चीपुरी
निरूढकरुणाझरी निखिललोकरक्षाकरी ।
मनःपथदवीयसी मदनशासनप्रेयसी
महागुणगरीयसी मम दृशोऽस्तु नेदीयसी ॥ ८४ ॥

கவீந்த்ர ஹ்ருதயே சரீ பரிக்ருஹீத காஞ்சீபுரீ
நிரூட கருணைஜரீ நிகில லோக ரக்ஷாகரீ।
மந: பததவீயஸீ மதன பாஸநப்ரேயஸீ
மஹாகுண கரீயஸீ மம த்ருபோऽஸ்து நேதீயஸீ ॥ 84

*உயர்ந்த கவிகளின் உள்ளத்தில் நடமாடுபவள், காஞ்சீபுரத்தை தனதிடமாக ஏற்றுக் கொண்டவள், யாவரும் ஒப்புக்கொள்கிற கருணை அருவி, உலகனைத்தையும் காப்பவள், மனவழிக்கு அப்பாற்பட்டவள், மன்மதன் எதிரிக்கு இனியவள், பெருஞ்சிறப்புகளால் உயர்ந்தவள், அவள் என் கண்களுக்கு மிக அருகில் உள்ளவளாகட்டும். (84)*

धनेन न रमामहे खलजनान्न सेवामहे
न चापलमयामहे भवभयान्न दूयामहे ।
स्थिरां तनुमहेतरां मनसि किञ्च काञ्चीरत-
स्मरान्तककुटुम्बिनीचरणपल्लवोपासनाम् ॥ ८५ ॥

தனேந ந ரமாமஹே கலஜநாந் ந ஸேவாமஹே
ந சாபலமயாமஹே பவபயாந் ந தூயாமஹே ।
ஸ்திராம் தநுமஹேதராம் மனஸி கிம் ச காஞ்சீ
ரதஸ்மராந்தக குடும்பினீ சரணபல்லவோபாஸநாம் ॥ 85

*பணத்தால் மகிழமாட்டோம். துஷ்டருக்கு பணி புரியோம். மனச்சஞ்சலமடையோம். ஸம்ஸாரதுக்கத்தால் வாடமாட்டோம். ஆனால், காஞ்சியில் பிரியம் கொண்ட மன்மதனின் எதிரியின் இல்லாளின் திருவடிவழிபாட்டை மனத்துள் திடமாகக் கொள்வோம். (85)*

सुराः परिजना वपुर्मनसिजाय वैरायते
त्रिविष्टपनितम्बिनीकुचतटी च केलीगिरिः ।
गिरः सुरभयो वयस्तरुणिमा दरिद्रस्य वा
कटाक्षसरणौ क्षणं निपतितस्य कामाक्षि ते ॥ ८६ ॥

ஸுரா: பரிஜநா வபு: மனஸிஜாய வைராயதே
த்ரிவிஷ்டபநிதம்பினீ குசதடீ ச கேளீகிரி: ।
கிர: ஸுரபயோ வய: தருணிமா தரித்ரஸ்ய வா
கடாக்ஷஸரணௌ க்ஷணம் நிபதிதஸ்ய காமாக்ஷி தே ॥ 86

*காமாக்ஷி ! ஏழையாயினும், உன் கடாக்ஷப்பாதையில் கணநேரம் விழுந்தவனுக்கும், தேவர்கள் பணியாளர். உடல் மன்மதனுடன் விரோதம் பாராட்டும். அப்ஸரஸ்பெண்களின் மார்பகம், விளையாட்டிற்கு சிறுமலை. வாக்குகள் இனிய மணமுள்ளவை. வயது வாலிபமுள்ளது. (86)*

पवित्रय जगत्त्रयीविबुधबोधजीवातुभिः
पुरत्रयविमर्दिनः पुलककञ्चुलीदायिभिः ।
भवक्षयविचक्षणैर्व्यसनमोक्षणैर्वीक्षणैः
निरक्षरशिरोमणिं करुणयैव कामाक्षि माम् ॥ ८७ ॥

பவித்ரய ஜகத்த்ரயீ விபுதபோத ஜீவாதுபி:
புரத்ரய விமர்த்தின: புளககஞ்சுளீதாயிபி: ।
பவக்ஷயவிசக்ஷணை: வ்யஸனமோக்ஷணைர் வீக்ஷணை:
நிரக்ஷர ஶிரோமணிம் கருணயைவ காமாக்ஷி மாம் ॥ 87

*காமாக்ஷி ! மூவுலகிலுமுள்ள அறிஞர்களின் (தேவர்களின்) அறிவுக்கு உயிர் ஊட்டுபவையும், முப்புரமடக்கியவனைச் சிலிர்ப்படையச் செய்பவையும், ஸம்ஸாரபயம் நீக்குவதில் தேர்ந்தவையும் துன்பம் தீர்ப்பவையுமான உன்பார்வைகளால் ஓர் அக்ஷரம் கூட அறியாதவர்களில் சிறந்த என்னைக் கருணையால் தூய்மையுள்ளவனுக்குவாய். (87)*

कदा कलितखेलनाः कथमिवाम्ब [1] काञ्चीपुरे
कलायमुकुलत्विषः शुभकदम्बदूर्वाङ्कुराः[2] ।
पयोधरभरालसाः कविजनेषु ते बन्धुराः
पचेलिमकृपारसाः मम पतन्ति मार्गे दृशोः ॥ ८८ ॥

கதா கலித கேலநா: கதமிவாம்ப [3]காஞ்சீபுரே
கலாய முகுளத்விஷ: ஶுபகதம்ப தூர்வாங்குரா: [4] ।
பயோதர பராலஸா: கவிஜநேஷு தே பந்த்துரா:
பசேளிம க்ருபாரஸா: மம பதந்தி மார்கே த்ருஶோ: ॥ 88

*தாயே ! காமாக்ஷி ! விளையாடுவதில் ஈடுபட்டவையும், காசாம்பூமொட்டுபோன்ற மேனி நிறம் கொண்டவையும், மங்களமான கடம்பு, அருகம்புல் முளை போன்றவையும், மார்பகத்தின் கனத்தால் சோர்வுற்றவையும், கவிகளிடம் இனிது பழகுபவையுமான கனிந்த கருணைரஸங்கள் காஞ்சியில் எனது கண்களின் வழியில் எப்படி விழும் ?*

*பாடபேதப்படி, கருணையால் அவை கண்களில் விழும். (88)*

अशोध्यमचलोद्भवं हृदयनन्दनं देहिनां
अनर्घमधिकाञ्चि तत्किमपि रत्नमुद्द्योतते ।
अनेन समलंकृता जयति शङ्कराङ्कस्थली
कदास्य मम मानसं व्रजति पेटिकाविभ्रमम् ॥ ८९ ॥

அஶோத்த்யம் அசலோத்பவம் ஹ்ருதய நந்தனம் தேஹிநாம்
அநர்க்கம் அதிகாஞ்சி தத்கிமபி ரத்ந முத்யோததே ।
அநேந ஸமலங்க்ருதா ஜயதி ஶங்கராங்க ஸ்த்தலீ
கதாஸ்ய மம மானஸம் வ்ரஜதி பேடிகா விப்ப்ரமம் ॥ 89

*மலையில் தோன்றியதும், சுத்தி தேவைப்படாததும் உயிரினத்தின் உள்ளத்தை மகிழ்விப்பதும், விலைமதிக்க வொண்ணாததுமான ஒரு*

1. करुणयेव 2. पूर्णाङ्कुराः 3. கருணயைவ 4. பூர்ணாங்குரா:

*ரத்தினம் காஞ்சியில் விளங்குகிறது. அதனுல் சங்கரரது மடித்தலம் அலங்கரிக்கப் பெறுகிறது. என் மனம் என்று அதற்கான பெட்டியென்ற நிலை பெறும் ? (89)*

परामृतझरीप्लुता जयति नित्यमन्तश्चरी
भुवामपि बहिश्चरी परमसंविदेकात्मिका ।
महद्भिरपरोक्षिता सततमेव काञ्चीपुरे
ममान्वहमहंमतिर्मनसि कापि [1] माहेश्वरी ॥ ९० ॥

பராம்ருத ஜரீப்லுதா ஜயதி நித்யம் அந்தஶ்சரீ
புவாமபி பஹிஶ்சரீ பரமஸம்விதேகாத்மிகா ।
மஹத்ப்பிரபரோக்ஷிதா ஸததமேவ காஞ்சீபுரே
மமாந்வஹம் அஹம்மதிர் மனஸி காபி [2] மாஹேச்வரீ ॥ 90

*(ஸஹஸ்ரார கமலத்திலிருந்து பெருகுகிற) பர அம்ருத தாரையில் நனைபவளும், எல்லாபுவனங்களுக்கும் உள்ளே (அந்தர்யாமியாக) இருப்பவளும், வெளியிலும் பரவியவளும், பேருணர்வாக ஒரே நிலையுள்ளவளும் காஞ்சீபுரத்தில் மகான்களால் நேரில் காணப்பெற்றவளும். மஹேச்வரரின் 'அஹம்' (நான்) என்ற உணர்வாக உள்ளவளுமானவள் என்மனத்தில் தினந்தோறும் தோன்றட்டும். (90)*

तमोविपिनधाविनं सततमेव काञ्चीपुरी-
विहाररसिका परा परमसंविदुर्वीरुहे ।
कटाक्षनिगलैर्दृढं हृदयदुष्टदन्तावलं
स्थिरं नयतु मामकं त्रिपुरवैरिसीमन्तिनी ॥ ९१ ॥

தமோவிபின தாவிநம் ஸததமேவ காஞ்சீபுரீ-
விஹார ரஸிகா பரா பரமஸம்விதுர்வீருஹே ।
கடாக்ஷ நிகளைர் த்ருடம் ஹ்ருதய துஷ்டதந்தாவளம்
ஸ்திரம் நயது மாமகம் த்ரிபுரவைரி ஸீமந்திநீ ॥ 91

1. भातु 2. பாது.

*காஞ்சீபுரத்தில் விளையாடுவதில் ஆர்வமுள்ள திரிபுரசத்ருவின் மனைவியான பரதேவதை, அஜ்ஞானக்காட்டில் ஓடுகிற என் இதயமென்ற துஷ்டயானையை பரஸம்வித் என்ற மரத்தில் கடாக்ஷம் என்ற விலங்குகளால் திடமாகக் கட்டி அசைவற்றிருக்கச் செய்யட்டும்.*

*சித் என்ற திரிபுடியற்ற நிலையிலிருந்து திரிபுடியுள்ள நிலைக்கு வந்த பேருணர்வு பரா ஸம்வித் எனப்படும். மற்ற சிற்றறிவுகள் அனைத்திற்கும் இது மூலமாகும். (91)*

त्वमेव सति चण्डिका त्वमथ[1] देवि चामुण्डिका
त्वमेव परमातृका त्वमसि योगिनीरूपिणी ।
त्वमेव किल शांभवी त्वमिह कामकोटी जया
त्वमेव विजया त्वयि त्रिजगदम्ब किं ब्रूमहे ॥ ९२ ॥

த்வமேவ ஸதி சண்டிகா த்வமத[2] தேவி சாமுண்டிகா
த்வமேவ பரமாத்ருகா த்வமஸி யோகிநீரூபிணீ ।
த்வமேவ கில ஶாம்ப்பவீ த்வமிஹ காமகோடீ ஜயா
த்வமேவ விஜயா த்வயி த்ரிஜகதம்ப கிம் ப்ரூமஹே ॥ 92

*ஸதீதேவியே ! மூவுலகின் தாயே ! நீயே சண்டிகா, நீயே சாமுண்டா. நீயே மாத்ருகா தேவி. நீயே யோகினி வடிவம் கொண்டவள், நீயே சாம்ப்பவி. நீயே காமகோடி. ஜயாவும் விஜயாவும் நீயே ! வேறென்ன சொல்வோம்.*

*சண்டன் முண்டன் என்ற இரு அசுரர்களை மாய்த்தவள் சண்டிகா. சாமுண்டா என்றும் அவளுக்குப்பெயர். எல்லா அக்ஷரங்களின் சக்தி பராமாத்ருகா. யோகவழியில் குண்டலினீ சக்தியை எழுப்பி த்ரைலோக்ய மோஹனம் முதல் ஸர்வானந்த மயம் வரையான ஆவரணங்களைத்தாண்டித் தேவியை அடைய, சக்கிரங்களிலும் ஆவரணங்களிலும் அமர்ந்து தேவியை அடைகிற வழியைக் காட்டி அழைத்துச் செல்பவர் யோகினிகள். இவர்களனைவரும் தேவி என்ற பேரொளியின் கிரணங்கள்.*

*1.* त्वमसि, *2. த்வமஸி*

*சாம்ப்பவி ஒரு மந்திரசக்தி. மங்களத்தின் பிறப்பிடமான சம்புவின் சக்தி. யோகவழியில் உள்நோக்கி, வெளிப்பார்வையை இழந்து, கண் இமைக்காமல் புருவத்தை நோக்கிய பார்வையால் பெறுகிற யோக சக்தி, ஜயா நேபாளத்தில் கௌசிகீ நதிக்கரையில் கோயில் கொண்டவள். விஜயா காச்மீரத்தில் கோயில் கொண்டவள். ஜயாவும் விஜயாவும் தேவியின் அந்தரங்கத் தோழிகள். (92)*

परे जननि पार्वति प्रणतपालिनि प्रातिभ-
प्रदात्रि परमेश्वरि त्रिजगदाश्रिते शाश्वते ।
त्रियम्बककुटुम्बिनि त्रिपदसङ्गिनि त्रीक्षणे
त्रिशक्तिमयि वीक्षणं मयि निधेहि कामाक्षि ते ॥ ९३ ॥

பரே ஜனனி பார்வதி ப்ரணதபாலிநி ப்ராதிப-
ப்ரதாத்ரி பரமேஸ்வரி த்ரிஜகதாஸ்ரிதே ஸாஸ்வதே ।
த்ரியம்பக குடும்பினி த்ரிபதஸங்கிநி த்ரீக்ஷணே
த்ரிசக்திமயி வீக்ஷணம் மயி நிதேஹி காமாக்ஷி தே ॥ 93

*எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட பெரு நிலை கொண்டவளே! மலைமகளே! வணங்குபவரைக் காப்பவளே! ஸமயோசித புத்தி தருபவளே! பேராளுமை பெற்றவளே! மூவுலகையும் அண்டி நிற்கச்செய்பவளே! எப்போதும் தோன்றுபவளே! முக்கண்ணரின் மனைவியே! மூன்று பதங்கள் கொண்டமந்திரம், விழிப்பு கனவு தூக்கம் என்ற மூன்று நிலைகள், பூமி வானம் ஸ்வர்கம் என்ற இடங்கள் என்றவாறுள்ள மூன்று நிலைகளில் தொடர்புள்ளவளே! மூன்று கண்கள் உள்ளவளே! இச்சா ஞானம் கிரியா என்றும் வாமா ஜ்யேஷ்டா ரௌத்திரி என்றும் விரிகிற மூன்று சக்தி வடிவினளே! காமாக்ஷி! உன் கடாக்ஷத்தை என் மீது பதியச் செய்வாய். (93)*

मनोमधुकरोत्सवं विदधती मनीषाजुषां
स्वयंप्रभववैखरीविपिनवीथिकालम्बिनी ।
अहो शिशिरिता कृपामधुरसेन कम्पातटे
चराचर विधायिनी चलति कापि चिन्मञ्जरी ॥ ९४ ॥

மஞ்ஜுமதுகரோத்ஸவம் விதததீ மநீஷாஜுஷாம்
ஸ்வயம்ப்ரபவ வைகரீ விபினவீதிகாலம்பிநீ ।
அஹோ ஶிஶிரிதா க்ருபா மதுரஸேந கம்பாதடே
சராசர விதாயிநீ சலதி காபி சின்மஞ்ஜரீ ॥ 94

*கம்பை நதிக்கரையில் ஒரு சித்சக்தியாகிய பூங்கொத்து, நடமாடுகிறது. அது அறிவாளிகளின் மனமாகிய வண்டுகளுக்குக் கொண்டாட்டத்தை ஏற்படுத்துகிறது. தானே தோன்றிய வேதவாக்காகிய காட்டுப்பாதையில் தொங்குகிறது. கிருபை என்ற தேன் சுவையால் குளிர்ந்துள்ளது. சரமும் அசரமுமான உலகைப் படைக்கிறது. (94)*

कलावति कलाभृतो मुकुटसीम्नि लीलावति
स्पृहावति महेश्वरे भुवनमोहने भास्वति ।
प्रभावति रमे सदा महितरूपशोभावति
त्वरावति परे सतां गुरु कृपाम्बुधारावति ॥ ९५ ॥

கலாவதி கலாப்ப்ருதோ முகுடஸீம்நி லீலாவதி
ஸ்ப்ருஹாவதி மஹேஶ்வரே புவந மோஹநே பாஸ்வதி ।
ப்ரபாவதி ரமே ஸதா மஹிதரூப ஶோபாவதி
த்வராவதி பரே ஸதாம் குருக்ருபாம்பு தாராவதி ॥ 95

*சந்திரனின் கலையைத் தன் சிரஸில் சூடியதும், விளையாடுவதும் சிவனிடத்தில் ஆசை கொண்டதும், உலகை மயக்குவதும் சூரியனின் சக்தியும் ஒளி மிக்கதும், எப்போதும் புகழ்பெற்ற வடிவழகு கொண்டதும் பரம்பொருளுடன் இணைவதில் வேகம் கொண்டதும் நல்லோரின் மீது கருணைமழை பொழிவதுமானதொன்றில் எப்போதும் இன்புறுகிறேன். (95)*

त्वयैव जगदम्बया भुवनमण्डलं सूयते
त्वयैव करुणार्द्रया तदथ रक्षणं नीयते ।
त्वयैव खरकोपया नयनपावके हूयते
त्वयैव सति कामया [1] जगति संततं स्थीयते ॥ ९६ ॥

1. नित्यया

த்வயைவ ஜகதம்பயா புவனமண்டலம் ஸூயதே
த்வயைவ கருணார்த்ரயா ததத ரக்ஷணம் நீயதே ।
த்வயைவ கரகோபயா நயந பாவகே ஹூயதே
த்வயைவ ஸதி காமயா [1] ஜகதி ஸந்ததம் ஸ்தீயதே ॥ 96

*உலகின் தாயான உன்னுலேயே இந்த பூமண்டலம் வெளியாகிறது. கருணையால் நனைந்த உன்னுல் தான் அது காக்கப்பெறுகிறது. கொடும்கோபம் கொண்ட உன்னுல் உன் கண் நெருப்பில் ஹோமம் செய்யப்படுகிறது. காமகோடி காமாக்ஷியான நீ தான் உலகில் எப்போதும் நிலைத்திருக்கிருய். (96)*

चराचरजगन्मयीं सकलहृन्मयीं चिन्मयीं
गुणत्रयमयीं जगत्त्रयमयीं त्रिधामामयीम् ।
परापरमयीं सदा दशदिशां निशाहर्मयीं
परां सततसन्मयीं मनसि कामकोटीं भजे ॥ ९७ ॥

சராசர ஜகந்மயீம் ஸகல ஹ்ருந்மயீம் சின்மயீம்
குணத்ரயமயீம் ஜகத்த்ரய மயீம் த்ரிதாமாமயீம் ।
பராபரமயீம் ஸதா தஶ திஶாம் நிஶாஹர்மயீம்
பராம் ஸததஸந்மயீம் மநஸி காமகோடீம் பஜே ॥ 97

*அசைவதும் அசையாததுமான உலகமானவளும், எல்லோரது இதயமானவளும், சித்தே வடிவானவளும், ஸத்வம் ரஜஸ்தமஸ் என்ற முக்குணமானவளும், பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் என்ற மூவுலகமானவளும், சந்திரன் ஸூரியன் அக்கினி அன்ற மூன்று அக்னிமண்டலங்களானவளும், பரம் அபரம் என்ற இரு பிரும்ம வடிவானவளும் (ஸகுண - நிர்குணஸ்வரூபம் பெற்றவளும்) பத்து திசைகளிலும் பகலும் இரவுமான காலவரையானவளும், ஸத் - அஸத் என்ற உலகமும் அதற்கப்பாற்பட்டதுமான இரு நிலையானவளுமான காமகோடியை மனத்தில் வழிபடுகிறேன். (97)*

सति [2] जगदम्बिके हरकुटुम्बिनि वक्त्ररुचा
जितशरदम्बुजे घनविडम्बिनि केशरुचा ।

1. *நித்யயா* 2. जय

परमवलम्बनं भव समाहृतकाञ्चिपुरे [1]

मम गतसंविदो जडिमडम्बरताण्डविनः ॥ ९८ ॥

ஸதி [2] ஜகதம்பிகே ஹர குடும்பிணி வக்த்ரருசா
ஜித ஶரதம்புஜே கன விடம்பினி கேஶருசா ।
பரமவலம்பனம் பவ ஸமாத்ருத காஞ்சிபுரே[3]
மம கத ஸம்விதோ ஜடிமடம்பர தாண்டவிந: ॥ 98

*ஸதீ தேவியே ! உலகின் தாயே ! சிவனின் மனைவியே ! முகஒளியால் சரத் காலத்துத் தாமரையை வென்றவளே ! கேசத்தின் ஒளியால் மேகம் போல் தோன்றுபவளே ! காஞ்சீபுரத்தில் ஆதரவு உள்ளவளே ! அஜ்ஞானத்தின் பகட்டால் கூத்தாடுகின்றவனும் உணர்விழந்தவனுமான எனக்கு சிறந்த பிடிப்பாக ஆவாய் ! (98)*

भुवनजननि भूषाभूतचन्द्रे नमस्ते

कलुषशमनि कम्पातीरगेहे नमस्ते ।

निखिलनिगमवेद्ये नित्यरूपे नमस्ते

परशिवमयि पाशच्छेदहस्ते नमस्ते ॥ ९९ ॥

புவனஜநநி பூஷாபூதசந்த்ரே நமஸ்தே
கலுஷஶமநி கம்பாதீரகேஹே நமஸ்தே ।
நிகில நிகமவேத்யே நித்யரூபே நமஸ்தே
பரஶிவமயி ! பாஶச்சேதஹஸ்தே நமஸ்தே ॥ 99

*உலகின் தாயே ! சந்திரனை அணிந்தவளே ! உனக்கு வணக்கம் ! பாபம் தீர்ப்பவளே ! கம்பைக்கரையில் இருப்பிடம் கொண்டவளே ! உனக்கு வணக்கம் ! எல்லாவேதங்களாலும் உணரத்தக்கவளே ! நித்யவடிவம் கொண்டவளே ! உனக்கு வணக்கம் !. பரமசிவவடிவினளே ! கைகளால் பாசங்களை வெட்டியகற்றுபவளே! உனக்கு வணக்கம். (99)*

क्वणत्काञ्ची काञ्चीपुरमणिविपञ्चीलयझरी

शिरःकम्पा कम्पावसतिरनुकम्पाजलनिधिः ।

1. सदा पररूपधरे 2. ஜய 3. ஸகா பரஜபகரே

घनश्यामा श्यामा कठिनकुचसीमा मनसि मे
मृगाक्षी कामाक्षी हरनटनसाक्षी विहरतात् ॥ १०० ॥

க்வணத்காஞ்சீ காஞ்சீபுரமணிவிபஞ்சீ லயஜுஷீ
ஶிர: கம்பா கம்பாவஸதிரநுகம்பாஜலநிதி: ।
கனஶ்யாமா ஶ்யாமா கடினகுசஸீமா மநஸி மே
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ ஹரநடநஸாக்ஷீ விஹரதாத் ॥ 100

*ஒலிக்கிற ஒட்டியாணமுள்ளவளும், காஞ்சிபுரத்தின் ரத்தின வீணைநாதத்தில் லயித்துத் தலையாட்டுபவளும், கம்பையில் வசிப்பவளும் பரிவுக்கடலும், மேகம் போல் கருத்தவளும், யுவதியும் கடின ஸ்தனங்களுள்ளவளும், மான்போல் கண் உள்ளவளும் சிவனது நடனத்தின் ஸாக்ஷியுமான காமாக்ஷீ என் மனத்தில் விளையாடட்டும். (100)*

समरविजयकोटी साधकानन्दधाटी
मृदुगुणगणपेटी मुख्यकादम्बवाटी ।
मुनिनुतपरिपाटी मोहिताजाण्डकोटी
परमशिववधूटी पातु मां कामकोटी ॥ १०१ ॥

ஸமரவிஜயகோடீ ஸாதகானந்ததாடீ
ம்ருதுகுணகணபேடீ முக்யகாதம்பவாடீ ।
முனிநுதபரிபாடீ மோஹிதாஜாண்டகோடீ
பரமசிவவதூடீ பாது மாம் காமகோடீ ॥ 101

*யுத்தத்தில் பெறுகிற இறுதி வெற்றியானவளும், உபாஸகரின் ஆனந்தப்பெருக்கும், மென்மைமிக்க சிறப்புகளுக்கான பெட்டியும் உயர்ந்த கற்பகமரமான கடம்பின் தோட்டமானவளும், கோடி பிரும்மாண்டங்களையும் மயக்கித் தன் வசம் வைத்திருப்பவளும், பரம சிவனின் இளம் மனைவியுமான காமகோடி என்னைக்காக்கட்டும். (101)*

इमं परवरप्रदं प्रकृतिपेशलं पावनं
परापराचिदाकृतिप्रकटनप्रदीपायितम् ।

स्तवं पठति नित्यदा मनसि भावयन्नंबिकां
जपैरलमलं मखैरधिकदेहसंशोषणैः ॥ १०२ ॥

இமம் பரவரப்ரதம் ப்ரக்ருதிபேஶலம் பாவனம்
பராபர சிதாக்ருதி ப்ரகடந ப்ரதீபாயிதம்।
ஸ்தவம் படதி நித்யதா மநஸி பாவயந் நம்பிகாம்
ஜபைரலம் அலம் மகை: அதிக தேஹஸம்ஶோஷணை: ॥

*சிறந்த விருப்பத்தை நிறைவுறச் செய்வதும் இயற்கையாக அழகுவாய்ந்ததும் தூய்மை தருவதும், பரசித் (நிர்குணம்) அபரசித் (ஸகுணம்) என்றிரு நிலைகளையும் விளக்குவதில் விளக்கானதுமான இந்த ஸ்தோத்திரத்தை மனத்தில் தேவியைத் தியானிப்பவனாகத் தினமும் படிக்கவேண்டும். அவனுக்கு உடலை வாட்டுகிற ஜபமும் யாகமும் வேண்டாம். (102)*

परां मनसि भावयन् प्रतिदिनं तु भट्टारिकां
पठन् स्तुतिमिमां जनः प्रचितनामपारायणः ।
सुधाकरकलाञ्चितः सुरकदम्बसंसेवितः
कलायमुकुलच्छविर्भवति कामकोटी स्वयम् ॥ १०३ ॥

பராம் மனஸி பாவயன் பிரதிதினம் து பட்டாரிகாம்
படன் ஸ்துதிமிமாம் ஜந: ப்ரசிதநாம பாராயண: ।
ஸுதாகர கலாஞ்சித: ஸுரகதம்ப ஸம்ஸேவித:
கலாய முகுளச்சவி: பவதி காமகோடீ ஸ்வயம் ॥ 103

*பராபட்டாரிகாவான தேவியை மனத்தில் தினமும் தியானம் செய்து தேவீ நாம பாராயணத்தை முடித்து இதனைப் படிப்பவன், தேவர் குழாம் சூழ்ந்துநிற்க சந்திரகலை தரித்து, காசாம்பூ நிறத்து மேனியனாக காமகோடியாகவே ஆகிவிடுவான். (103)*

आर्यामेव विभावयन्मनसि यः पादारविन्दं पुरः
पश्यन्नारभते स्तुतिं स नियतं लब्ध्वा कटाक्षच्छविम् ।
कामाक्ष्या मृदुलस्मितांशुलहरीज्योत्स्नावयस्यान्वितां
आरोहत्यपवर्गसौधवलभीं आनन्दवीचीमयीम् ॥ १०४ ॥

ஆர்யாமேவ விபாவயன் மநஸி ய: பாதாரவிந்தம் புர:
பஶ்யந் நாரபதே ஸ்துதிம் ஸநியதம் லப்ப்த்வா கடாக்ஷச்சவிம் ।
காமாக்ஷ்யா ம்ருதுலஸ்மிதாம்ஶுலஹரீ ஜ்யோத்ஸாவயஸ்யாந்
விதாம்
ஆரோஹத்யபவர்க ஸௌத வலபீம் ஆனந்த வீசீமயீம் ॥104

*ஆர்யையை மனத்தில் நினைத்து பாதாரவிந்தத்தை முன்னிருப்பதாகக் கொண்டு துதிக்கத் தொடங்குபவன், கடாக்ஷ ஒளியை நிச்சயமாகப் பெற்று, காமாக்ஷியின் மென்மை மிக்க புன்னகையின் ஒளியலையாகிய நிலவைத் தோழியாகக் கொண்டதும் ஆனந்த அலைவீச்சுமான மோக்ஷ மாளிகையின் மேல்மாடத்தில் ஏறி அமர்வான். (104)*

*ஆர்யா சதகத்தை மனத்தினுள் சொல்லி, பாதாரவிந்த சதகத்தையும் ஸ்துதி சதகத்தையும் தொடங்குபவன் கடாக்ஷசதகத்தின் பெருமையை உணர்ந்து மந்தஸ்மித சதகத்தின் துணை கொண்டு முக்தி நிலை பெற்று ஆனந்த நிலையில் நிற்பான் என்றும் பொருள் கொள்ளலாம்.*

*(இந்த சுலோகத்தை ஒட்டி ஆர்யாசதகம் பாதாரவிந்த சதகம், ஸ்துதி சதகம் கடாக்ஷ சதகம், மந்தஸ்மித சதகம் என்ற வரிசையமைப்பும் வழக்கிலுள்ளது.)*

ஸ்துதி சதகம் முற்றிற்று
மூகபஞ்சசதீ முற்றிற்று.

इमां पञ्चशतीं यस्तु नित्यं भक्तियुतः पठेत् ।
श्री कामाक्षी भवेत् तस्य प्रसन्ना च वरप्रदा ॥

இமாம் பஞ்சஶதீம் யஸ்து நித்யம் பக்தியுத: படேத் ।
ஸ்ரீ காமாக்ஷீ பவேத் தஸ்ய ப்ரஸந்நா ச வரப்ரதா ॥

श्री काञ्ची नगरी कामकोटि पीठाधिपः प्रभुः ।
जीयात् जगद्गुरुः सैषः श्री मूकेन्द्रसरस्वती ॥

ஸ்ரீ காஞ்சீ நகரீ காமகோடி பீடாதிப: ப்ரபு: ।
ஜீயாத் ஜகத்குரு: ஸைஷ: ஸ்ரீ மூகேந்த்ரஸரஸ்வதீ ॥

## ॥ श्रीमूकपञ्चशती श्लोकानुक्रमणिका ॥